598

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார் வரலாறு.

சமயங்கள் பல்வகைகளுள்ளே மேன்மையாகியு முண்மையாகியும் ஜனனமரணசாகரத்தினின்றும் முத்தியென்னுங் கரையேறுதற்குக்காரணமாயுள்ள * நல்லமரக்கலமாகியு மிராநின்றசைவசித்தாந்தத்தினதுண்மையை யுணர்த்தவல்ல உய்யவந்ததேவநாயனுரென்னுந் திருநாமத்தினையுடைய பரமகவியாணர் உத்தரபூமியினின்று தக்ஷணபூமியிலுள்ள வான்மாக்களை இரக்ஷிக்கவேண்டிச் சேதுபரியந்தஞ்சென்று மீண்டுங் காவேரிதீரத்திலெழுந்தருளியிருக்குநாளில் திருவிசலூரில்ஆளுடையதேவநாயனுர் அவரைத்தரிசிக்கப்பெற்று இந்தத்தரிசனவிசேஷத்தாற் கன்மத்திலுபேக்ஷையும் ஞானத்திலபேக்ஷையுமுண்டாயவருடைய ஸ்ரீபாதங்களிலே தண்டஞ்செய்து சுவாமி அடியேனறிதி தொடங்கியின்றளவுஞ் ஜனனமரணங்களாகிய துக்கசாகரத்திலேவிழுந்துகரைகாணுமலழுந்தாநிற்கின்றேன். அடியேனை யிந்தப்பிறவிசாகரத்தினின்று மெடுத்துத் திருவடிகளாகியகரையிற் சேர்த்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, உய்யவந்ததேவநாயனருமிவரது

* நல்லமரக்கலமென்றது (மற்றப்பழுதுபட்டமரக்கலம், மரக்கலங்களைப்போலத் தோன்றியு மதனைத் துணையாகக்கருதி செல்பவர்க்கிடையூறு விளைவிப்பதேபோல) மற்றச்சமயங்களுமுத்தியையடைவிப்பதேபோலத் தோன்றியு மதனைத்துணையாகக்கருதிச் செல்பவர்களுக்குத் துன்பம்விளைவிப்பதாகையா லங்ஙனமின்றி முத்தியிற்சேர்க்கும் உண்மைச் சமயம்போல குறித்தகரையிற்சேர்க்கும் மரக்கலத்தினை.

பக்குவவிசேஷத்தைக் கண்டருளித்தமது திருவுளங்கூர்ந்து திரு
க்கண்சாத்தித் திருவடியுஞ்சூட்டியருளி இவருக்கு ஞானவிரோ
தமாயுள்ள மலமாயாதிகன்மங்களையுங் கருவிகரணாதிகளையுந் தே
காதிப்பிரபஞ்சங்களையு முணர்த்தி இவைவிசேஷமேயாகி வினை
யுங்கன்மத்தையு மறிவித்து இவற்றில்நின்றும் விடுவித்து ஆத்ம
சொருபத்தையுஞ் சிவசொரூபத்தையுமுணர்த்திச் சிவனொருமூ
ர்த்தியானனென்னும் தன்மையுந் தெளிவித்து அநாதியே கூடி
ப்போந்தவாதனைதிரும்படி சிவரூபத்துடனேகூடி யிதிலேநிற்கு
முபாயமுங்கொடுத்து இந்தநிலை திரிந்தாற்பார்த்துக்கூடும்படி இ
ட்டமாகவொருசாத்திரம் வேண்டுமெனக்கருதி (ஆலின்விதையி
லாலினது பரிணாமமடங்கினாற்போல) சைவாகமங்களிற் சொல்
லியருளும் ஞானபாதத்திற்குரிய பொருள்களை நாற்பத்துநான்கு
திருவுந்தியாகச் சுருங்கவருளிச்செய்து முடிவிற்றம்முடையதிரு
நாமந்தோன்றும்படி ஒருதிருவுந்தியுமாக நாற்பத்தைந்து திருவுந்
தியருளிச்செய்து பின்பு உத்தரபூமிக்கெழுந்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார்

இதில்முற்பட்டகடவுளாகிய பரமாசாரியனா
அருளிச்செய்கிறார்.

அகளமா யாரு மறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் * றுந்தீபற.

இதன்பொருள்.

அகளமாயாருமறி வரிதப்பொருள்சகளமாய் வந்ததென்றுந்தீபற = அநாதியே நிர்மலமாய்த் தன்னைக் கூடினவர்களாலும்

---

* உந்தி-என்றது குழாங்கூடியமகளீரது ஓர்விளையாட்டு. பற என்றது ஒருமை பன்மை மயக்கம். இப்படியன்றிப்பறக்கவென்னும் வியங்கோளைப் பறவெனவிகாரமாக்கிக் கருதுவாரேல், உம் தீ பற எனப்பிரித்து, உம் உம்முடைய, தீ அஞ்ஞதி குற்றத்தைவிளைவிக்கிற மும்மலங்களையுங் கருவிகாரணாதிகளையுந் தேகாதிப்பிரபஞ்சங்களையும், பற விட்டுப்போம்படியிந்தஞானசாஸ்திரத்தின் கருத்தே கருத்தாகநிற்பீரெனக்கொள்க. தீ என்றது குற்றத்தைக்கெடுத்தல். இப்படியன்றிப் பறக்கவென்னு மெச்சத்தைப் பறவென விகாராமாக்கி யும்முடையதீமைகளெல்லாம் பறந்துபோம்படிக்குக் கருதி நிற்பீரெனினுமமையும். இதில் நிற்பீரென்பதை வருவித்துக்கொள்க, இவ்விதமன்றி வேறுபொருளுண்டாயினுங்கொள்க.

கூடாதவர்களாலுமறிதற்கரிய பரிபூரணமான வந்தப்பெரும்பொ
ருள் நம்பொருட்டாலொருதிருமேனிகொண்டெழுந்தருளிவந்தது
தானாகத்தந்ததென்றுந்திபற=இப்படி யெழுந்தருளிவந்த அந்த
ப்பொருள் தீட்சையிலே சஞ்சிதத்தையு மொழித்துப் பிராரத்த
ம்புசிக்கச்செய்து அதிலழுந்தாதபடியுங் காட்டி யாகாமிய மேறா
தபடி நிலையிலேநிறுத்தி மாயாபடலத்தையுமரித்து மூலமலமாகி
ய * நிகளத்தையும்விடுவித்து அருளாகிய வமுர்தத்தைப் புசிப்பி
த்துத்தன்னுடைய திருவடியிலே கூட்டி வேறறநிற்கத்தந்தது ()

இனியனாதியேகூடிப்போந்தபிரபஞ்சவாதனையைக் கூடாதபடி
இந்தப்பொருளிலே யனவரதமும் வாதனைப்படு
முறைமையையருளிச்செய்கிறார்.

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
யுழப்புவ தென் [] பெணேயுந்திபற
ஒருபொருளாலே யென்றுந்திபற.

இ-ள். பழக்கந்தவிரப் பழகுவதன்றி யுழப்புவதென்பெ
ணேயுந்திபற=உபாயகுருவாலே இரக்ஷிக்கப்பட்டவர்களுக்குப்
பிராரத்தகாரண மாயதேகநிற்கையால் அனாதிகாலந்தொடங்கி
யிந்திரியாதிகளுடனே கூடி வருகிறவாதனையை விடாதாயிருக்
கும், அதென்போலவெனில் (பிறவிக்குருடனாய்த் திரிந்தவனுக்
குக் கடாக்ஷத்தாலே கண்விழித்தாலு மனேகங்காலமந்தகாராதி
வாதனைபண்ணிப் போந்ததால் மருட்சியாய் வழியைக்குழியென்
று சந்தேகித்தும் முன்வந்தானை யாவனெனக்கேட்டு நிற்பன்) அ
துபோல பிராரத்தாலே யிந்திரியாதிவிடயங்கள் வந்தடுத்தகால

* நிகளமென்பது விலங்கினை.

[] பெண்ணே எ-து. பெணேயெனத்தொகுத்தல் விகாரம் பெற்றது.

த்தி லிவற்றினைக்கியத்தாலே ஜனனங்கூடாநிற்கும் இது கூடாத படி பிராரத்தமான கன்மமனுபவிக்கச்செய்தே யவற்றினைத்தா ண்ணுமற்கூடுகிற உபாயத்தைத் திருவருட்கண்ணாகக்கண்டு இப் படிக்காட்டுகிற கண்ணான திருவருளிலே வாதனைபண்ணும தொ ழிந்து பேய்த்தேர்போல் நிலையில்லாத பிரபஞ்சத்தைமெய்யென க்கருதிப்பெறும் பேறென்னெஞ்சமே. ஒருபொருளாலேயென்று ந்தீபற=ஒப்பில்லாத பொருட்கண்ணாகவந்தப் பொருளுடனே வாதனைபண்ணிநில்.

இதில் நெஞ்சத்தைப் பெண்ணென்றதேதெனில் தன்னிட த்தில் நாயகனான தம்பிரானே ரனுதியாயிருக்க அவருடையதிருவ டியைப் பேணுமலைம்புல வேடர்வசத்திலொழுகி நாயகனிலுமினி யப்படுமிகத் துயரமாகிய நரகசொர்க்கங்களிலே யுழன்று அழிவி ல்லாதசுகத்தை யனுபவிக்கப்பெறாது போக்குவாருடனே திரி கையால் தன்னுடையநெஞ்சத்தைப்பார்த்து என்பெண்ணே, நீ காதவற்றிற்குட்படுகின்றா யெனப்பேதமையதனுல் நெஞ்சத்தை ப்பெண்ணெனக்கூறியது. (உ)

மேலிந்த வுபாயங் கூடினவர்களுக்கு சனனமரணங் கூடா தென் றருளிச்செய்கிறார்.

கண்டத்தைக்கொண்டு கருமமுடித்தவர்
பிண்டத்தில்வாரா ரென்றுந்தீபற
பிறப்பிறப்பில்லை யென்றுந்தீபற.

இ-ள். கண்டத்தைக்கொண்டு கருமமுடித்தவர் பிண்டத்தி ல்வாராரென்றுந்தீபற=தம்முடைய பாக்கியத்தாலே தமக்குப்பி ராணனைசிவன் அகோசரமாக யிப்படி யாசாரியனாக வெழுந்த ருளி இவர்களைக்கொண்டேதீட்சையாற்சஞ்சிதமான கன்மத்தை யும்போக்கித்தேகத்துடனேபிராரத்தகன்மத்தையும் போக்கி யவ

ளிருந்தினவருட்கண்ணாலே ஆகாமியத்தையும் போக்கி இப்படி மூன்றுகன்மத்தையு முடித்துத்தீர்ந்த வாசாரியன் கைபட்டுநின்றவர்களொருக்காலுந் தேகவாதனையின்வழி நில்லார்கள். பிறப்பிறப்பில்லையென்றுந்தீபற=ஆசையாலே கன்மங்கூடாதபடி யாசாரியர்கடாக்ஷத்தாலே சிவனது திருவடியிலே நின்றவர்கட்கொதபடி நிலத்திலுஞ் சநநமரணமில்லை. (௫)

இந்நிலையிலேநின்று சிவனை யனுபவித்தலாலுண்டான
சுகம்வாக்காலுரைக்க வாராதென் றருளிச்செய்கிறார்.

எங்ஙனிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகே
னங்ஙனிருந்ததென் றுந்தீபற
அறியுமறிவதன் றுந்தீபற.

இ-ள். எங்ஙனிருந்ததென் றெவ்வண்ணஞ்சொல்லுகேனங்ஙனிருந்ததென்றுந்தீபற=தன்னுடையநிலையுஞ் சிவசொரூபத்துண்மையு மிந்தச் சிவரூபங் கண்ணாகவேயறிந்து இந்தச்சிவரூபத்துடனே வேறறநின்றனுபவிக்கத்தக்க வைக்கியமுண்டானபோது அதனால்விளைந்த பரமசுகத்தை வாக்காலுரைக்க வெண்ணுமளவில் லதுபோகமான துரைக்கப்படா தாகையாலு மனவாக்குக் காயங்கள் மாயாவிகற்பமாகையாலே யிவற்றிற்கதீதமா யிருக்கையாலு இப்பொருட்கோ ரொப்பில்லா தொழிகையாலு மிப்படி யிருந்ததென் றெப்படி யுவமித்துச் சொல்லுவேன் ஒருவனுக்குக் கன்மத்துலையொத்து மலபரிபாகமும் பிறந்துதேசிகனுடைய திருவடியைப்பெற்றுச் சிவசொரூபத்தையுமுணர்ந்து இரண்டறக்கூடிப் பரமானந்தமும்விளைந்து அந்தப்பரமசுகத்திலேயழுந்தின காலத்தவனுக்கெப்படியிருந்ததோ அப்படியேயென்னுமதொழிந்து இன்னபடியென் றளவுபடுத்தி யுரைக்குமதல்லவாதலா லப்படியேயிருந்தது. அறியுமறிவதன்றுந்தீபற=அப்படியிருந்த இப்பொருளான்மஞானத்தா லறிந்து கூடத்தக்கபொருளல்ல. (௬)

இப்படிப்படர்க்கையாய்நின்ற சொரூபந்தானே
யநாதியே நமக்குத்தன்மையுமாய் முன்னிலை
யுமாய்க் கன்மபரிபாகமும்மலபரிபாகமும்
பிறந்தபின் பாசாரியனுமாய் வந்ததென்
றருளிச்செய்கிறார்

ஏகனுமாகி யனேகனுமானவ
னாதனுமானா னென்றுந்தீபற
நம்மையேயாண்டா னென்றுந்தீபற.

இ-ள், ஏகனுமாகி யனேகனுமானவ னாதனுமானானென்று ந்தீபற=இப்படிக்கொத்தபொருள்தானே யநாதியேஆன்மாவை க்கூடிப் பிரிதற்கரியதாகையாலே யொன்றென்னும்படியுமாய் யாம்செய்த கன்மத்துக்கீடாக வுபகரிக்கவேண்டியவனவனதுவெ ன்னும்படி பலவாறாற்போல் நிற்கத்தக்கதுமா யிப்படி நின்று கன்மத்தையுந்தொலைப்பித்து மலத்தையும் பக்குவமாக்கின இந்த வவசரத்திலே நமக்காசாரியனுமாயெழுந்தருளிவந்தான். நம்மை யேயாண்டானென்னுந்தீபற=இப்படி யெழுந்தருளிவந்து அநா தியேதொடங்கி யின்றளவுந் திருவருள்கிடையாமல் நரகத்திலே யுழைத்தநம்மையே காருண்ணியத்தின் மிகுதியாலே பெறுதற்கரி யதிருவடியைத்தந் தடிமைகொண்டான். ஏகார மிழிவின்கண் வந்தது. (௫)

இப்படியெழுந்தருளிவந்து அடிமைகொண்டபோதே
தன்பாரங்கெட்டுச் சர்வமுந் தம்பிரானார்க்கே பாரமா
முறைமையை யருளிச்செய்கிறார்.

நஞ்செயலற்றிந்த நாமற்றபின்னாதன்
றன்செயலானேயென்றுந்தீபற
தன்னையேதந்தானென்றுந்தீபற.

இ-ள், நஞ்செயலற்றிந்த நாமற்றபின்னாதன்றன் செயறா
னேயென்றுந்திபற=சர்வத்தையுந் தம்பிரானார் கூடிநின்று கூட்
டுகைசெய்த இந்தமுறைமையை யறியாமற் றன்னாலேசெய்யப்ப
ட்டதென்று கருதப்பட்ட ஆன்மசுபாவமுமருளாலேவிட்டுநீங்கி
இப்படிநீங்கினேமென்கிற தன்னையுமருளிலேகொடுத்துத்தானு
ம் அருளேயாயவப்பொழுதே கர்த்தாவிவனைக்கிரகித்துக்கொண்
டிவன்செயலெல்லாந் தன்செயலேயாக்கி யிவனுந்தானாகவேநிற்
பன். தன்னையேதந்தானென்றுந்திபற=இப்படிக்கூடினவிதுவொ
ருவன்கைமாறு செய்யத்தக்கதாகத்தன்னையொழிந்தபொருளிலே
வேண்டுவதுகொடுக்கையன்றித் தன்னையேதந்தானொருவனுக்கு
ச் சிவனுமொருபதங்களைக் கொடாமற்களையற்ற பல்யாகவவனை
ப்போலத் தன்னையுமவனுக்கே கொடுப்பான். (௯)

இப்படிபெற்றபொருளானவனை ஜீவபாவம்பிறந்தொரு
நீர்மையாய் நிற்குமுபாயமெப்படியென்று
கேட்டமாணாக்கனை நோக்கி
மேலருளிச்செய்கிறார்.

உள்ளமுருகிலுடனாவதல்லது
தெள்ளவரியனென்றுந்தீபற
சிற்பரச்செல்வனென்றுந்தீபற.

இ-ள், உள்ளமுருகி லுடனாவதல்லது தெள்ளவரியனென்றுந்
தீபற=ஸ்திரீகள் தங்களுக்குரிய புருஷர்களிடத்துண்டாகியதலை
யன்பு இடையன்பு கடையன்பென்று * மூவகைப்பட்ட ஆசை

* ஸ்திரீகளுக்குரிய மூவகையன்பாவன-நாயகன்பேர் கேட்ட
காலத்திலவசமழிகை தலையன்பு, நாயகனைக்கண்டகாலத்திலவ
சமழிகையிடையன்பு, நாயகனைக்கூடினகாலத்திலவசமழிகை
கடையன்பு; இவற்றில் தலையன்புண்டு நாயகன்பேர் கேட்டகா

ஸ்ருதிக்கொப்பாக நம்பொருட்டுத் திருமேனிகொண்டெழுந்தரு ளிவந்த தம்பிரானுர் நமக்குத் திருவாயமாகிய பஞ்சாக்ஷரத்தி னு ண்மையை யொருக்காலருளிச்செய்யக்கேட்டு முன்னபடி காட்ட க்கண்டு மந்தச்சொரூபமாகியே தன்னிடத்திலேகூடி நிற்கிற மு றைமையையுணர்ந்தி யவன்கூட்டிமுறைமைகளிலே கூட்டக்கூ டியுமிப்படி மூன்றுவகையுங்கண்ட சிவஞானத் திருவிகாரியாய் (அக்கினிகலந்தமெழுகுபோல்) உருகி பேரன்புகூர்ந்து கரையழி ந்திருந்தகாலத்து (குளிகையாலே காளிதமறப் பேதித்தசெம்பி லே யுள்ளமாற்றெழுந்திருந்து செம்பெனும்பேர்கெட்டுப் பொ ன்னென்னு பேர்பெறுதல்போல) தன்மசொரூபமறைந்து சி வசொரூபமேயாய்ச் சிவனெனநிற்பன் இப்படிக்கூடுகையொழி ந்து தன்னுடையபோதத்தா லாராய்ந்துகண்டுகூடுதற்கரியர். சிற் பரச்செல்வமென்றுந்தீபற = இப்படித்தன் செயல் கூடாதேகூ டினவர்களே மேலான ஞானைசுவரியத்தையுடையவர்கள். (எ)

இந்நிலை கூடாதவர்களுக்கு வேறேயுமோருபாய
முண்டென் றருளிச்செய்கிறார்.

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல்க வுந்தீபற
விமலரிடமதென் றுந்தீபற.

இ-ள், ஆதாரத்தாலே நிராதாரத்தேசென்று மீதானத்தே செல்கவுந்தீபற=மூலாதாரஞ் சுவாதிட்டானம் மணிபூரகம் அநா கதம் விசுத்தி யாக்கினையென்று சொல்லப்படாநின்ற வாதாரங் களிலே யொவ்வொரு வாதாரந்தோறு மிந்த வாதாரங்களுக்குப்

லத்திலவசமழியத்தக்கதாயகி கேட்டுங்கண்டுங் கூடியுமுண்டான காலத்துறுதிபோல குருமொழி கேட்டுங் கண்டுங் கூடியுமொரு உவமானத்தை வருவித் துரைத்தமைகாண்க.

பொருந்தினதேவதைகளைத் தியானித்துச் சமாதியடைந்து இது
வைகவந்தவாறே நிராதாரயோகமென்று சொல்லப்பட்ட ஆன்ம
சொரூபத்தையுணர்ந் தொருபற்றறச் சமாதிபரனாய்நிற்கவந்த நி
ராதாரயோகத்துக் குபாயயோகமாகிய மேலானயோகத்திலே சா
தித்துத்தன்னுடைய செயலறநிற்கு மதைச்சாத்திரத்தின்வழிகளி
லே யாராய்ச்சிசெய்து மீதானமாகிய சிவசொரூபத்திலேகூடும்ப
டிசிரத்தைபண்ணுவாயாக. விமலற்கிடமதென்றுந்திபற=இப்படி
க்கொத்தவிடமேநின்மலனாகிய சிவனைக்கூடத்தக்கவிடமாவது.()

ஆதாரயோகத்துக்கிட்ட வுபாயமொழிந்தது சாயுச்சியத்துக்
கிலக்ஷணமான யோகமல்லவென்
றருளிச்செய்கிறார்.

ஆக்கிலங்கேயுண்டாயல்லதங்கில்லையாய்ப்
பார்க்கிற்பரமதன் றுந்திபற
பாவனைக்கெய்தாதென் றுந்திபற.

இ-ள், ஆக்கிலங்கேயுண்டாயல்ல தங்கில்லையாய்ப் பார்க்கிற்
பரமதன்றுந்திபற=தற்போதத்தாலே மூலாதாரமுதல் பிரமரந்
திரமீறாகவுள்ள வாதாரங்களிலே யொவ்வொருதேவதைகளைத்தி
யானித்தகாலத்தி லுண்டுபோலத்தோன்றியுந் தியானியாதகாலந்
தில்லையாகியு மிப்படித் தியானிக்கப்பட்ட தேவதைகளிருந்ததே
கத்தி லாதாரங்களைப்போலப் போகத்துக்குத் தானமாகியவண்ட
த்திற்கூட்டப்பட்ட பதங்களிலே யடைவிக்குமதொழிந்து பரிபூரண
மான சாயுச்சியத்தை யடைவிக்கமாட்டாது அஃதேதெனில் ஆ
ன்மபோதமானது சீவிக்குமளவி லதோமுகமாக வொழிந்துசீவி
யாதாகையா லதனாற்கற்பிக்கப்படு மவையெல்லாந் தனக்காதி
யே வாதனைபண்ணிப்போந்த மாயாரூபமேயொழியத் தன்னைவி
ட்டு நீங்காத சிவசொரூபத்தையுணர்த்தாது ஆதலின்தன்னுடை

யபோதத்தாற் கற்பிக்கப்படு மவையெல்லாம் விசாரித்துப்பார்க்கிற் சொரூபமல்ல பாவனைக் கெய்தாதென்றுந் தீபற=இவ்வித அவாங்மனோகோசரமாயுள்ள பொருளிவனுடைய கற்பனையிலகப்படாது (௬)

மேல முன்சொலலபபட்ட நிராதாரயோகத்தை
விரித்தருளிச்செய்கிறார்

அஞ்சேயஞ்சாகவறிவேயறிவாகத்
துஞ்சாதுணர்ந்திருந்துந்தீபற
துய்யாபொருளீதென் றுந்தீபற.

இ-ள், அஞ்சேயஞ்சாக வறிவேயறிவாகத் துஞ்சாதுணர்ந்திருந்துந்தீபற=பஞ்சபூதபரிணாமமாகிய தேகம் ஆன்மாவைக்கூடினலொழிந்து சேட்டியாதாகையா லிந்தத்தேகத்துடனே கூடிநின்றால் உள்ளதோஷத்தையறிந்து வேறாகக்கண்டுநீங்கிநிற்கவே இந்தத்தேகமும் பிரமாண்டமாகிய பஞ்சபூதங்கள்போல விவனுக்குவேறாகியேநிற்கும் இவற்றை யருட்கண்ணாலேகண்டுநீங்கின ஆன்மாவுக்கு நீங்கினபொழுதே யிவனுடையவிச்சாஞானகிரியைகளுந்தொலைந்து இவனுக்கநாதியே பிராணனாய் மறைந்துநின்றிரக்ஷித்த சிவனுமிவனைக் கவளீகரித்துக்கொண்டு தானான்மாவாகியே நில்லாநிற்பன் இந்நிலை தவறாமலிற்கும்படி (ஒருவனொரூர்க்குப்போகுமளவில் மற்றொருவன் காட்டிவிட்ட குறிவழிச்செல்லாமற் பக்கமேசெல்லத்தக்க கள்ளருடைய ப்பாட்டையைவழியெனக்கருதிச்சென்றார் கள்ளராலே விதனப்படாநிற்பன். இந்தவிதனங்கள்கூடாதபடி பக்கவழிகளிற்செல்லாமலொருவன் காட்டிவிட்ட குறிவழிச்சென்றாலொருவிபாகூலமுமறப் போய்க்கருதினவூரிலேசென்று தன்னுடையகோட்பாடுமுடியாநிற்பன் (அதுபோல சொரூபத்திலேசென் றிரண்டறக்கூடுகிற வழிக்கு விரோதவழியாகிய மயக்கவிகற்பங்களிலேவிழுந்து சங்மரணங்

கலை யடையாதே தன்னுடையசொரூபத்திலே வந்து கூடும்படி வழிகாட்டிநிற்கிற வுணர்வு கண்டாய்கேவலசகலத்திற் றாக்காம லிருக்கவேண்டும். துய்யபொருளிதென்றுந்தீபற=இதுவேவேதா கமங்களிற் றீர்வானபொருள். (௰)

இப்படிக்கூடுமெதொழிந்துத் தன்னுடைய போதத்தாலே
கூடும்படி விசாரிக்கி லிப்பொருள் கைகூடாதென்
லருளிச்செய்கிறார்

தாக்கியேதாக்காது நின்றதோர் ※ தற்பர
னோக்கிற்குழையுமென் றுந்தீபற
னோக்காமனோக்கெ யன் றுந்தீபற.

இ-ள், தாக்கியேதாக்காது நின்றதோர்தற்பர னோக்கிற்கு ழையுமென்றுந்தீபற=ஆன்மாவுடனேகூடி யான்மாவாய்நிற்கச் செய்து உன்றனுடையவுண்மை தோன்றாமற் பரமானந்தசொரூப மாய்நிறகிற வந்தச்சொரூபத்தைக் கூடவிசாரித்து அதுதனியே யொருபொருளுமாக உன்னி லிரண்டுபட்டுநின்றுபொருந்தவிசா ரிக்கில் உனக்கப்பொருள் கைகூடாது. னோக்காமனோக்கவென் றுந்தீபற=அடங்கியேயந்தச் சொரூபந்தன்னைத் தோற்றாமல்நீயா கின்ற முறைமைபோல் நீயுமுன்னைத்தோற்றாமலந்தச் சொரூ பத்தாலாகியே நிற்கிலப்பொழுதே பரிபூரணபரமானந்தசொரூபி யாய்விடுவை. (௰௧)

இனியிந்தவுபாயத்தை யருளிச்செய்தகுருவின்
பெருமையை யருளிச்செய்கிறார்

மூலையிருந்தாரை முற்றத்தேவிட்டவர்
சாலப்பெரியரென் றுந்தீபற
தவத்நிற்றலைவரென் றுந்தீபற.

இன், மூலவிருந்தாரை முற்றத்தேவிட்டவர் சாலப்பெரிய ரென்றுந்திபற = மாதாவினிடத் துண்டான சுரோணிதத்திலே பிதாவினிடத்துண்டாகிய சுக்கிலம்பவளப்பையில் முத்தைவைத் தாற்போலப் படிகிறநாளில் சீவனானது பிராணவாயு வாகனமா கவு மனதுவழியாகவுஞ் சிவனுடையவாஞ்சையாலே சென்று சுக் கிலசுரோணிதத்தின் தலையிலேபதிந்து கன்மத்துக்கீடாக மூன்ற ரைக்கோடி யுரோமத்துவாரமும் எழுபத்தீராயிரநாடியும் வாயு விற்பிரதானமானதசவாயுவும் நவத்துவாரமும் எண்சாணுடம்பு ம் எழுதாதுவும் ஆறாதாரமும் ஐந்துபொறியு நாலுகரணமுமூன் றுமண்டலமும் இரண்டுவினையு மெனப்பேர்பெற்று இவற்றை யொன்றைப் போர்த்த புறத்தோலுமாக ரூபிகரித்து இந்தரூப த்தையுடைய சீவனுமன்னரசத்திற்குப் பிராரத்தமளவுந் தன் னுடைய தேகத்தி லுந்தி சக்கரத்தின்மேலே கிடந்தாறுமாதமு தலுந்தி னாளத்தாலே மாதாவினி டத்திலே அன்னரசமுங்கொண் டு அந்தவன்னரசத்தின் பிருதிவாலே சுழுமுனைநாடி யடைபட்டு இடையும் பிங்கலையுந்திறந்து பிராணவாயு புகுந்துமேற்றுக்கிநா சித்துவாரங்களாலே விட்டவெழுத்தாலே நாளொன்றுக் கிருபத் தோராயிரத்தறுநூறு சுவாசவுச்சாரணந்தோன்றி முப்பத்திரண் டாயிரத்து நாற்பதினாயிர முருச்சென்றவாறே யுதரகன்மந் தொலைந்து மாதாவினிடத்துண்டான பிராணவாயுவிலே தம்பி ரானுடைய காருண்ணியத்தாலே சத்தியதிஷ்டித்துக்கொண்டு இந்தச்சத்திபலத்துடனே வாயுவானது பிரஞ்ஞையை பூமியிலே பதிவிக்கவேண்டிப் பிரஞ்ஞாபத்தியமென்னும்பேர்பெற்றிவனு டைய போதம்போல்விவனுடைய தேகமுங்கீழ்நோக்கி விழும்ப டித்தன்னுடையபலத்தாலே தலைகீழாகத்தள்ளிப் பூமியில்வந்தபி ன்பு தேகத்துக்கடுத்த கன்மங்களாலே புசிப்புகளைக்கருதி யிந்தி ரியங்களாகிய மூலைகளிலேயிருந்து விடையங்களைப் புசித்துப்புசி ப்பொழிந்தா லிவனுடையபோதமானது கீழ்நோக்கிச் சாக்கிர

முதலதீதமளவாக வவத்தை களுக்கடுத்ததானங்களாகிய மூலைகளிலேயடைந்தும் இப்படியிரவுபகலிந்த மூலைகளிலுண்டானவிருளினாலேமறைந்துவிகற்பித்துமயங்கியும் இப்படிப்பொய்ப்பிரகாசமானசுகதுக்கங் களிலழுந்தாமற்கீழ்நோக்கினபோதத்தையொழிந்து உண்மையையுணர்ந்திமேலாகியபிரகாசமானபரமாகாசவெளியிலேவிழித்துப்பரபோகத்திலழுந்தும்படிக்கூட்டிவிட்டவுபாயகுருவாகவுமளவிடப்படாதபெருமையையுடைய தம்பிரானவர். தவத்திற் றலைவனொன்றுந்தீபற=அரியதவத்திலேநின்று வழிபட்டவர்க்குவேண்டும்வரங்களைக் கொடுக்கவல்ல கர்த்தாவுமாவார். ()

இப்படி சொல்லுக்கு நினைவுக்கு மெட்டாத பொருள்
கூடுகைக்கோரிடமுண்டென் றருளிச்செய்கிறார்.

ஓட்டற்றுநின்றவுணர்வுபதிமுட்டித்
தேட்டற்றிடஞ்சிவமுந்தீபற
தேடுமிடமதன் றுந்தீபற.

இ-ள். ஓட்டற்றுநின்ற வுணர்வுபதிமுட்டித்தேட்டற்றிடஞ்சிவமுந்தீபற = தனக்கொரு போக்குவரவின்றியே யொழிவற நிறைந்து சலிப்பறநிற்கிற ஞானத்தை யான்மாவின் கண்ணுக்குக்கூடியந்தஞானமேயாய் அந்தஞானத்தி னைக்கியத்தாலே கூடினேமென்கிற விகாரமு மந்தஞானமுஞ் சேரக்கரைந்த விடந்தானே சிவரூபமாம். தேடுமிடமதன்றுந்தீபற=இந்தவிடம் போதங்கரைந்தவிடத்திலே பிரகாசிக்குமதொழிந்து ஆன்மபோதத்தாலே யாராய்ந்தறியத்தக்க விடமல்ல. (௰௩)

இந்தவிடத்தை தேசிகனாலே யறிந்தே அவனறிவித்த வுபாயத்திலே யவதிகூடாமற் கூடவே சிவம்பிரகாசிக்கு முறைமையை மேலருளிச்செய்கிறார்,

கிடந்தகிழவியைகிளப்பியெழுப்பி
யுடந்தையுடனேநின் றுந்தீபற
உன்னையேகண்டதென் றுந்தீபற.

இ - ள். கிடந்த கிழவியைக்கிள்ளியெழுப்பி யுடந்தையுட னேநின்றுந்தீபற=ஆன்மாவை யநாதியேபொருந்திப் போது கிறவருளாகிய சிவசத்தியை யாசாரியன் கடாக்ஷத்தாலே பிர காசிப்பிக்க ஞானத்துடனேகூடி யந்தஞானமேயாய் நிற்பாய். உன்னையே கண்டதென்றுந்தீபற = அப்படிநிற்கவே சிவமான துன்னையே கண்டுகிரகித்துக் கொள்ளாநிற்கும். (கக)

மலமாயா கன்மங்களைப்போக்குகிற ஞானத்தை யாசாரியன் கடாக்ஷத்தாலே யிவன் பற்றறவே அப்பொழுதே சிவ னிவனைப் பற்றினேனென்கிற நினைவையு மறந்துத் தானுக்குவனென்னு முறைமையை யருளிச்செய்கின்றார்.

பற்றறயறுப்பதோர்பற்றினைப்பற்றிலப
பற்றையறுப்பரென் றுந்தீபற
பாவிக்கவாராரென் றுந்தீபற.

இ - ள். பற்றையறுப்பதோர் பற்றினைப்பற்றிலப் பற்றை யறுப்பரென்றுந்தீபற = தேகேந்திரியாதி பிராணவாயுவந்தக் கரணங்கள் முதலாயுள்ள பற்றுகளை யறுக்கத்தக்க திருவருளை யான்மாபொருந்தி யந்த ஞான மேயாய்நிற்கி லப்பொழுதே ஞானமாய் நிற்கிறேமென்கிற பற்றையுமறுத்துச் சிவன்றானாக் கியே விடுவன். பாவிக்க வாராரென் றுந்தீபற = அவ்வகை சிவ

ளைத் தியானித்துக் கூடவேணுமென்று விசாரிக்கிலகவொரு காலமுங் கூடப்படான். (௧௫)

இப்படி கூடி நின்றவர்களொன்றிற் பற்றும ளிற்கு முறைமையை யருளிச்செய்கிறார்.

உழவாதுணர்கின்றயோகிகளொன்றேகித்
தழுவாமனிற்பரென் றுந்தீப,
தாழ்மணிநாவேபோ லுந்தீபற.

இ - ள். உழவாதுணர்கின்ற யோகிகளொன்றேகித் தழுவாமனிற்பரென்றுந்தீபற = உணர்ந்துமுறைமையினு மலத் தையினு மழுந்தாமற் சிவனது ஞானத்தாலே சிவனைத்தெரிசிக் கிற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே கன்மங் கூடிற்றாயி னுந் திருவடி ஞானங்கண்ணாக, நிற்கையாலே யொருவிடயங் களினு மிரார்கள். தாழ்மணிநாவேபோலுந்தீபற=ஓசைதாழ்ந்த மணியினது நாப்போல வசையு மாரவாரமு மற்றிருப்பார்கள்.

இப்படி கூடுங்காலத்து நடுவேயொரு குறிநிகழுமென்றும் நிகழ்ந்தாற் செய்யும் பரிகாரமு மருளிச்செய்கிறார்.

திருச்சிலம்போசையொலிவழியேசென்று
நிருத்தனைக்கும்பிடென் றுந்தீபற
கோடவங்கேநின் றுந்தீபற.

இ - ள். திருச்சிலம்போசை யொலிவழியேசென்று நிருத் தனைக்கும்பிடென்றுந்தீபற = தம்பிரானார் திருவுள்ளத்தடைத்த ஆன்மாக்கள் கருவி காரணங்களாலுள்ள ஆரவாரங்களைக் கடா க்ஷத் துணையாகவே யோட்டி வெற்றியுடனே திருவடிசேரச் செல்லுங்காலத்து (இராஜாவின் குமாரன் மறுதலையான மாந

ருணையோட்டி வெற்றியுடனே தன்னுடைய பதியைச் சேரச் செல்லுமளவி லிராஜாவி னருகுநின்ற வாச்சியங்களெதிர் கொள்ளுந் தன்மைபோல) அனவரதமும் பரமானந்த நிருத்தம் பண்ணி யருளாநின்ற தம்பிரானார் திருவடிக்குச் சிலம்போசையுமான பரவிந்து பரநாதமான தடியார்;' பிறவித் துக்கங்கெடும்படியாரவாரியாநிற்கும் இந்தப்பரநாதவழியேசென்று பரமானந்தநிருத்தம்பண்ணி யருளாநின்ற தம்பிரானையு முன்னுடைய போதங்களைவதற்குத் தொழுவாயா. நேர்படவங்கேநின் றுந்தீபற = மயக்க விகற்ப மென்று சொல்லப்பட்ட வுட்பக்கவழிகளாகிய கள்ளவடிப்பாட்டை யிற்சென்று தட்டுப்படாமல் நல்வடிக்குச் செல்லுகிற செவ்வைவழியே சென்று. கஎ)

இப்படி திருவடிக்குச்செல்லுகிறவழிக்கு விரோதமாகிய
மயக்க விகற்பங்க ளொருகாலமும் பொருந்தாதபடி
தம்பிரானார் திருவருளை மறவாதிருக்கவென்
றருளிச்செய்கிறார்.

மருளுந்தெருளுமறக்குமவன்க
ளருளைமறவாதேயுந்தீபற
அதுவேயிங்குள்ளதென் றுந்தீபற.

இ - ள். மருளுந்தெருளுமறக்குமவன்க ளருளைமறவாதேயுந்தீபற = உனக்கனுபூதிக்கு விரோதமாகிய மயக்கவிகற்பங்களொருகாலமுங்கூடாது. அஃதெதனாலென்னில் உனக்குக் கண்ணாகிய சிவனரு ளொருகாலமுங் கைவிடாமற் கூடிநிற்கில் அதுவே யிங்குள்ளதென் றுந்தீபற = இவ்விடத்திற் செய்யவேண்டுங்காரியமுமதுவே யொழிந்து வேறொன்றுமில்லை. ()

இப்படி யருளிலே யிடைவிடாமனின்றூற் சிவம் பிரகாசிக்கும் விதனை யருளிச்செய்கிறார்.

கருதுவதன்முன் கருத்தழியப்பாயு
மொருமகள்கேள்வனென் றுந்தீபற
உன்னவரியனென் றுந்தீபற.

இ - ள். கருதுவதன்முன கருத்தழியப்பாயு மொருமகள் கேள்வனென்றுந்தீபற = இப்படி யருளிலே யிடைவிடாமனின்றவனிந்த வருளிலே சிவனைக் கூடவேண்டுமென்று விசாரிக்குமளவில் இவன் கருத்துக்குக்கருத்தாய் நிற்பது திருவருளேயாகையாலு மிவனுக்குத்தனித்தொரு கருத்தில்லாதொழுகையாலும் (குகையிலுருக்கின செம்பிலே குளிகைபாய்ந்தவளவிற் செம்புங் காளிதமுமறப் பொன்னு மாற்றுமா யிருந்தாற்போல) இவன் கருதிய வப்பொழுதே யிவனையுங் கிரகித்துக்கொண்டிவனுடைய கருத்தையுமொழித்துத் தானுந் தன்னுடைய கருத்துமாய் நில்லாநிற்பன் ஒப்பில்லாத சத்தியஞான சத்தியினையனவரதமும் பொருந்திக்கொண்டிருக்கத்தக்க நாயகன். உன்னவரியனென்றுந்தீபற = ஆகையாலிப்படியொழிந்து ஆன்மபோதத்தா லெக்காலமு நினைந்துகூடவரிதா யுள்ளவர். (கக)

இப்படிக்கொத்த வுண்மைப்பொருளைப் பெற்றகாலத்
திடைவிடாதே நின்றனுபவிக்கவேண்டுமென்
றருளிச்செய்கிறார்.

இரவுபகலில்லாவின்பவெளியூடே
விரவிவிரவிநின் றுந்தீபற
விரையவிரையநின் றுந்தீபற.

இ - ள், இரவுபகலில்லாவின்பவெளியூடே விரவிவிரவி நின்றுந்தீபற = உணர்ந்தகாலத்து மாயையு மொடுங்கினகாலத்து ஆணவமுங்கூடாமல் ஞானமு மானந்தமுமே பிரகாசிக்கத்தக்க பரமாகாசத்திலே கூடிப்பொருந்திநின் றனுபவிக்க, வினையவினைய நின்றுந்தீபற = தேசிகனாலே யறிந்தோமாகிற் பின்பே சாதித்துக்கொள்ளுகிறோமென்று முன்புள்ளவாசனையின் மிகுதியாலே பேய்த்தேர்போன்ற விஷயத்தையும் விஷயாதீதமானதேகத்தையு மொருநிலையில்லாதமனாதிகளினுடைய பிசித்கென்றவைகளை மெய்யெனக்கருதி சநநமரணங்களிலே படையாமல் பரமானந்தத்திலேகூடி நின்றினைப்பாறும்படிக் கடுகெனவினைந்து கூடுவாயாக. (உஅ)

இப்படி கூடத்தக்க சிவமான்மபோதத்தா லுளதென்னும்
பொருளினுமிலதென்னும் பொருளினுமன்றியே
யுண்டானபொருளொன் றருளிச்செய்கிறார்.

சொல்லும்பொருள்களுஞ்சொல்லாதனவுமங்
கல்லனாயானென் றுந்தீபற
அம்பிகைபாகனென் றுந்தீபற.

இ - ள், சொல்லும் பொருள்களுஞ் சொல்லாதனவுமங் கல்லனாயானென்றுந்தீபற = வாக்காலளவுபடுத்தி யுரைக்கத்தக்க சொரூபாதிகளாயுள்ள பொருள்களும் வாக்காலுரைக்கப்படாத முயற்கோடுபோன்றில்லாத பொருள்களு மிவையிரண்டுமல்லாதவனுமாய் வாக்குமனாதீதத்திலேநின் றுணரத்தக்க சுபாவ சொரூபியாயுள்ளானொருவன். அம்பிகைபாகனென்றுந்தீபற = அவனே காருண்ணியசத்திக்கு நாயகனாகிய கர்த்தா. ()

இப்பொருளைக் கூடுகைக்கு வேறுமோருபாய மருளிச்செய்கிறார்.

காற்றினைமாற்றிக்கருத்தைக்கருத்தினு
ளாற்றுவதாற்றலென்றுந்திபற
அல்லாததல்லலென்றுந்திபற.

இ-ள், காற்றினைமாற்றிக் கருத்தைக்கருத்தினு ளாற்றுவதாற்றலென்றுந்திபற = இடைபிங்கலைகளாற் பிராணவாயு நின்று சலிக்குமளவு மனதுமான்மாவுமொக்கநின்று சேவிக்குமாகையா லிப்படிச்சலித்துப் புறப்படுகிற வாயு பன்னிரண்டங்கலமும் புறம்புசலியாமல் உள்ளேதானே சுவறும்படி குருவசனத்திலேநின்று சாதிக்க மனச்சலிப்புள்ளதற்றுவிடும் இப்படி சலிக்கத்தக்க விகாரமற்றபொழுதே யிவன் கருத்தான தவிகாரத்திலே செல் லுமாகையா லிந்தவிகாரத்திலும் விழாமற் றன்னுடையகருத் துக்குக் கருத்தாய்நிற்கிற தம்பிரானார் திருவடியிலேகூடியிருக் கிறைப்பாறுகிறதே பொருள். அல்லாததல்லலென்றுந்திபற = இப்படி கூடுகிறதொழிந்து வேறொரு பிரகாரங்களாற் கூடுகிற தென்று நிலைநில்லாது.

(உஉ)

இத்தவுபாயத்திலே பொருந்திநிற்கவே இவன் சுத்தனுமாய் வீடு மெளிதாகப்பெறலாமென் றருளிச்செய்கிறார்.

கள்ளரோடில்லமுடையார்கலந்திடில்
வெள்ளவெளியாமென்றுந்திபற
வீடுமெளிதாமென்றுந்திபற.

இ-ள். கள்ளரோடில்லமுடையார் கலந்திடில் வெள்ள வெளியாமென்றுந் தீபற = களவுகாண்பானொருவன் றன்னு டைய சொரூபத்தையும் பேதித்துத் தன்னுடைய சாத்திரத்தி ன்வழியிலே மிகுத்த பதார்த்தங்களுடையா னொருவனைப்பார்த்

நிவனை மந்திரத்தாலும் அவுஷதத்தாலுந் தியானத்தாலும் பேதி த்துத் தன்னுடைய வசத்திலேயாக்கி யவனகத்திலேயுள்ள பதா ர்த்தங்களை யவன்பொருந்திநின் றெடுப்பித்தாற்போலத் தம்பி ரானொரு மிவனுடைய வநாதி மலசம்பந்தத்தாலே யிவனுக்குத் தெரியாதபடி கள்ளனைப்போல மறைந்துநின்றுபகரித்துக் கன் மவொப்பு மலபரிபாகமுண்டான வவதாரத்திலே யிவனுக்குப் பொருந்தினதொரு திருமேனியிலே பிரகாசித்துத் திருநீறென் கிற வவிழ்தத்தாலுஞ் ஸ்ரீபஞ்சாக்ஷரமென்கிற மந்திரத்தாலுஞ் சொரூபமென்கிற தியானத்தாலு மிவனைபேதித்து இவனைத் தம் முடைய வசத்திலேயாக்கி இவன் சஞ்சிதமாக நெடுங்காலங்களி லே தேடியவைத்துவாக்களாகிய வறைகளைச் சோதித் தெடுப்பிக் கிறவளவில் தேகமாகிய இல்லத்தையுடைய வான்மாவு மிதற் குப்பொருந்தி யொருவழிப்பட்டா லிவனுக்கொருமுதலுமில்லை யா யிவனுடைய இருதயமும் வெளிக்கு வெளியாய்ப் பரமாகா யமாய்விடும். வீடுமெளிதாமென்றுந்தீபற = இப்படியான கால த்தைப்புலவேடராகிய கள்வர்க்கிடுபடாத வீடுமிவனுக்கு வருத் தமறக்கிடைக்கும். (உசு)

இப்படி நின்றவர்கள் பிராரத்தத்தாற் றேகத்துடனே விஷயத்திலே இருந்தார்களாயினு மவர்கள் விஷய மயக்கத்திற் படார்களென்றருளிச்செய்கிறார்.

எட்டுக் கொண்டார்தமைத் தொட்டுக்கொண் (டேநின்றார்
விட்டாருலகமென் றுந்தீபற
வீடேவீடாகுமென் றுந்தீபற.

இ - ள். எட்டுக்கொண்டார் தம்மைத்தொட்டுக்கொண்டே நின்றார் விட்டாருலகமென்றுந்தீபற = பஞ்சபூதமுஞ் சந்திரா தித்தரு மான்மாக்களுமாக வெட்டுவகையுந் திருமேனியாக வெ ழுந்தருளிநின்ற தம்பிரானொருநாதியே தன்னைவிட்டு நீங்காது

நின்ற முறைமையை யவருடைய திருவருளாலே யறிந்து தானு மவனைப்போலே சிநேகிதம்புரிந்து கூடினவர்கள் பிராரத்தந் தலைபுமளவுந் தேகவிசுவங்களிலே நின்றாரேயாயினுஞ் (சாக்காளியென்னும் புழுப்போல) கருந்து வேறே பூண்டு கிடைக்கை யாலே விசுவத்திற்படார்கள். வீடே வீடாகுமென்றுந்தீபற = இப்படி விசுவத்தை யருட்கண்ணாலே பொய்யானபடி கண்டு நீங் கிநிற்கவே யொருகாலத்திலு மழிவில்லாத திருப்பாதமே யவர் களுக்குப் புகலிடமாம். (உசு)

இப்படி ஞானைசுவரியத்துடனே நிற்கப்பெற்றவர்களே
புண்ணியபாவத் துலையொத்த வான்மாக்களென்
றருளிச்செய்கிறார்.

சித்தமுத்தியகரணமுஞ்சித்திலே
யொத்ததேயொத்ததென்றுந்தீபற
ஒவ்வாதவொவ்வாதென்றுந்தீபற.

இ - ள், சித்தமுத் தியகரணமுஞ்சித்திலே யொத்ததே யொத்ததென்றுந்தீபற = அருளாலே சீவனானது பசுத்தவநீங் கிச் சிவத்துவமாகவுங் குற்றத்தைக் குணம்போல விளைவிக்கிற வந்தக்கரணங்கள் பசுகரணபாவங்கெட்டுச் சிவகரணமாகவு மிப்படி கூடினவர்களே கன்மங்கள் பக்குவத்தையடைந்து து லையொத்தவான்மாக்கள். ஒவ்வாதவொவ்வாதென்றுந்தீபற = இப்படி வினைகள் துலையொவ்வாத வான்மாக்களுக்குத்தம்பி ரானார் திருவடிகூடகிடையாது. (உரு)

இந்நிலையிலேநின் றிரண்டறச்சாதித்தாற் பின்பு
வினையுமாறருளிச்செய்கிறார்.

உள்ளும்புறம்புநினைப்பறினுள்ளே
மொள்ளாவமுதாமென்றுந்தீபற
முளையாதுபந்தமென்றுந்தீபற.

இ - ள். உள்ளும்புறம்பு நினைப்பறினின்றுங்கோ மென்னார் வழுதாமென் றுந்திபற = கன்மயோகிகள் கருத்துப்போலத் தானிற்கிற தேகத்திலே யொருதானத்தி லவிகாரமாயிருக்குங் கிரியாபாதத்தில் நிற்கிற சமயிகளைப்போலப் புறம்பே பாவித்திருக்கும் இப்படிசெய்து வனுபூதி தரிக்கிற் பிரபஞ்சமாய் நில்லாதே தேசிகன் கடாக்ஷத்தாலே தேகாதிப் பிரபஞ்சங்களையுணர்த்து நீங்கினதன்னையுந் தெரிசிப்பித்த சொருபத்தையுமதின் கண்ணுணர்ந்து தேகாதிப்பிரபஞ்சங்களையு மில்லையாக்கித் தன்மை முன்னிலைபுமொழிந்து ஒரு நீர்மையாகப் படர்க்கையாயுள்ளென்றும் புறம்பென்றுந் தானென்று மடனென்றுங் கூடவேண்டுமென்றுங் கூடினேனென்றும் விசாரிக்கிறவுணர்வொழியினுந்தன்னுடையவிடத்திலே யொருவராலு முகந்துகொள்ளப்படாத வனுபோக விரசவான வானந்தவமிர்தமூறிப் பெருகி யுன்னையே கிரகித்துக்கொண்டு தானேயாய்விடும். முனையாதுபந்தமென்றுந்திபற = இப்படியானபின் சனனமரணங்களுக்குற் பத்தியாக வங்குரிக்கத்தக்க பசுபாசங்க ளுண்டாகாது இப்படி பொருந்தினவர்களுக்கே பசுபாசவிகற்பங்களாகிய

கிலேசத்திர்வதென்று மல்லது நீராதென்று

மருளிச்செய்கிறார்.

அவிழவிருக்குமறிவுடனின்றவர்க்
கவிழுமிவ்வல்லலென்றுந்தீபற
அன்றியவிழாதென்றுந்தீபற.

இ - ள். அவிழவிருக்குமறிவுடனின்றவர்க் கவிழுமிவ்வல்லலென்றுந்தீபற = ஆன்மபோதம்போல் வொருபொருளைப் பற்றிக்கொண்டு நின்றுவிசாரித்து மயங்காதே யநாதியே பற்றும் விகற்பமு மயக்கமுமின்றித் தன்னுடைய வாஞ்ஞையாலே சர்வ

மூ கடவாயிற்கத் தானென்றறிவு மறியாதே பரமானந்தமயமா யெல்லாவற்றினு முளனாய் நிற்கச்செய்தேயவற்றிற் படாமலனவ ரதமூநின்று பிரகாசிக்கிறசொரூபத்தை யாசாரிய னநுக்கிரகத் தாலேபெற்று அதின்கண்ணேகவிதிலே கூடி யதுவாய் நின்றவர் களுக்கு (ஆதித்தன் சந்நிதியி லான்மாக்கள் கண்ணுக்கந்தகார நினைவறவவ்வியமாய் விடுந்தன்மைபோல) ஞானாதித்தனுடையத் தெரிசன மானபோதே ஜனனமரணங்களுக் குற்பத்தியாய் வரு கிற பசுபாச விகற்பங்களாகிய பேரந்தகாரமானது இன்னவிட த்திலே போனதென்றறியாதபடி தானே யிவனைக்கைவிட்டுப் போம். அந்நிய விழாதென் றுந்திபற == இப்படி நீங்காத னவிவ்வேறுருபாயங்களாலு மித்தக்கிலேசங்கைவிடாது. ( )

இப்படி ஜனனமரணங்களுக் குற்பத்தியாகவங்குரிக்கத்தக்க
பசுபாசவிகற்பங்களைவிட்டு முத்திக்கு வித்தாகியசத்திய
ஞானத்தை யபேட்சித்தவர்கள்பெறும்பேற்றி
னுறிஇப்பாட்டை யருளிச்செய்கிறார்

வித்தினைத்தேடி முளையைக்கைவிட்டவர்
பித்தேறினாரென் றுந்திபற
பெருவதெங்கென் பேணையுந்திபற.

இ-ள். வித்தினைத்தேடி முளையைக்கைவிட்டவர் பித்தே றினாரென்றுந்திபற == முத்திக்கு வித்தாகி யபதியே தனக் குப் பிராணனாய் நின்று தோன்றாமலுபகரித்துந் தொலைப்பித் தும் வருகிறவருணைத்தேசிகன் கடாக்ஷத்தாலே சந்தேகமறப் பெற்றுச் ஜனனமரணங்களுக் குற்பத்தியாக வங்குரிக்கத்தக்க பசுபாச விகற்பங்களைவிட்ட பாக்கியவான்களே யெக்காலமுந் தொலைத்தற் கரிதாகிய தேகாதிப்பிரபஞ்சங்களாலுஞ் சுகதுக்க

வேதனைகளொடுங் கைவிட்டுமேலாகிய ஞானம் பிரகாசித்தக்க பரமானந்த சொரூபத்திலே மீளாத வழிசென்று புகுந்தவர்கள் பெறுவதங் கென்பெறேயுந்தீபற = இவ்விடத்திலே யிப்படி நின்று பெறத்தக்கப் பேறொழிந்து பசுபாச விகற்பங்களே பொருளென நின்றவிவ்விடத்துப் பெறும்பேறேது நெஞ்சமே.

இப்படி யரியபேறதைப் பெறுமளவில் பெறுகைக்

கோரவதாரமுண்டென் றருளிச்செய்கிறார்.

சொல்லுமிடமன்று சொல்லப்புகுமிட<br>
மெல்லைசிவனுக்கென் றுந்தீபற<br>
என்றனமென் செய்கோமுந்தீபற.

இ - ள். சொல்லுமிடமன்று சொல்லப்புகுமிட மெல்லை சிவனுக்கென் றுந்தீபற = இப்படி கூடவரிய சிவனைக்கூடந் தக்கவிட மான்மபோதத்தா லுணர்ந்து வாக்குகளா லின்னவிட மென்று வுரைக்கத்தக்கதொருவிடமல்ல சொல்லுகைக்குக கர்த் தாவாகிய வான்மா வொருபொருளைக் கருதி யுரைப்பதாகவுண ருமளவி லொருவனுணர்த்த வுணருமதொழிந்து தானாக வொ ன்றையுணரமாட்டாததாதலால் ஒருவனுணர்ந்த வுணருவதானப டியை யாசாரியனாலேபெற்று வுணர்த்த வுணருவதான வெல்லை யி லவனுணர்த்துகிற தன்மையை யவனாலேயுணரி னவ்விட மே சிவனைப்பெறுதற் கெல்லையானவிடம். என்றனமென்செ ய்கோமுந்தீபற = இந்தவிடத்தை யறிந்துகூடினேனென்று மெனதென்றுஞ்சொல்லி நின்றதான்மா வவ்விடத்தென்செய்த தோ வறிகின்றிலேன். (உகூ)

இந்த அவதாரத்திலேநின்று கூடுமுபாயத்தை மன்னி

விடாதே யுணரப்பெறி னெல்லாநிலையிலும்

நிற்கலாமென்றருளிச்செய்கிறார்.

வீட்டி லிருக்கிலென் னாட்டிலே போகிலென்
கூட்டில்வாட் சாத்தினன் றுந்தீபற
கூடப்படா தென்றுந்தீபற.

இ-ள். வீட்டிலிருக்கி லென்னாட்டிலே போகிலென் கூட்டில்வாட்சாத்தினன் றுந்தீபற = எல்லாவற்றையுந் தன்னாலேவிடப்பட்டுத் துறவறத்திலே யிருந்தாற் பிரயோசனமென்ன விதுவொழிந்து நாடத்தக்க வர்ச்சனாதிகளினுந் தீர்த்ததெரிசனங்களினு முழன்றாலும் பிரயோசனமென்ன (பொன்னுக்கு மாற்று நின்றாற்போல) ஆன்மாவே குறையாக வநாதியே தனக்குப் பிராணனாய் நிற்கிற திருவடிஞானத்தை தேசிகன் கடாக்ஷத்தாலேயுணர்ந்து தன்னுடை சுதந்தரவினைத்தையுங் கர்த்தாவின் செயலென்றே கண்டு தனக்குப்பொருந்தினதொரு நிலையிலே நில்லானாகில், கூடப்படாதென்றுந்தீபற = இப்படியுண்மையறிந்துநில்லாமற் றன்னாலே செய்யப்பட்டதாவாகக் கருதில் மோக்ஷங்கூடாது போதத்துக்கு விரோதமே விளையாநிற்கும் அஃதெப்படியென்னில் (கர்த்தாவையறியாமற் சகலர்க்குமிதமாக வெக்கியம்பண்ணின தக்ஷப்பிரசாபதிக்கு விரோதமே விளைந்தும் சகலரையுங் கைவிட்டுத் தன்னுடையசெயலறக் கர்த்தாவின்வசத்திலேநின்று தண்டேசநாயனார் சிவனையர்ச்சிக்கிறவளவில் சகலருக்கு மகிதமான பிரமஹத்திவிளைய இதுவுஞ் சிவனுக்கிதமாகவே பலித்துத் திருவருள்விளைந்தபடியுங் கண்டுகொள்க, ஆகவே உண்மையறிந்து சருவமுங் கர்த்தாவின் செயலென்றே

கொள்ளாமற் றன்னுடைய செயலென்றே யொவ்வொருதயத்தி லே நின்றவற்கு வினையேறாதிராது. (௰)

இத்தவுபாயத்தையுடைய சைவசித்தாந்தத் திறமொழிந்து
மற்றொருசமயிகளின் பொருளைப் பொருளெனக்
கருதவேண்டாமென் றருளிச்செய்கிறார்

சாவிபோமற்றசமயங்கள்புக்குநின்
றாவியறாதேயென் றுந்தீபற
அவ்வுரைகேளாதேயுந்தீபற.

இ-ள், சாவியோமற்றச் சமயங்கள்புக்குநின் றாவியறா தேயென்றுந்தீபற = ஆன்மாவுஞ் சிவமும் வேறறநிற்கு மனு போகவிரதமாகிய சைவசித்தாந்தத் திறமொழிந்து ஒருவன் பயி ரச்செய்த பயிரானது பயன்படுமளவும் பயிர்போலவந்து டவி க்கத்தக்க நாள்களிலே சாவியான தன்மைபோல் முடிவிலொ ன்றென்றுரைப்பார், இரண்டென்றுரைப்பார், இரண்டாய்நின் றே யொன்றுமென்பார், உடலந்தானே யுயிருமென்பார் வாயு வையுயிரென்பார், கரண நாசமேபொருளென வுரைப்பார், மோகம்க்ஷயிக்க முத்தியென்பார் இப்படி சொல்லப்பட்ட வெ குவிதமான சமயங்களிற்புகுந்து நின்று தனக்குப்பிராணனான சிவனைத்தெரிசியாமல் நரகங்களிலடைவார். அவ்வுரைகே ளாதேயுந்தீபற = இப்படிக்கொத்த சமயிகள்வார்த்தை யுஞ் சுரோத்திரத்துக்கு விடையமாகாதபடி நில். (௰௧)

இப்படி சைவசித்தாந்தத்தினுண்மையிலே நின்றவர்கள்கருவி
கரணாதிகளி லொருகாலங்களினுங்கூடாததுறவை
யுடையவர்களென் றருளிச்செய்கிறார்.

துரியங்கடந்தவித்தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய்நின்றதென் றுந்தீபற
துறந்தாரவர்களென் றுந்தீபற.

இ - ள். துரியங்கடந்தவிந் தொண்டர்க்குச் சாக்கிரந் துரியமாய் நின்றதென்றுந்தீபற = பிருதிவிமுதலாக நாதமீறான தத்துவங்களையும் பஞ்சமலங்களையு மருளாலேகண்டு நீக்கித் தன்னைத்தெரிசித்துத் தன்னையும் பொருளல்லவென்று கண்டு திருவடியிலே பொருந்திநிற்கத்தக்க திருவடியாக்குப் பிராரத்தத்தாலே சாக்கிரத்தானங்கூடிற்றாயினு மிவர்கள் திருஷ்டிக்குப் பரமதுரியமானஞானமே பிரகாசிக்குமதொழிந்து ஒருகாலங்களினும் பிரபஞ்சத்துடன் கூடார்கள், துறந்தாரவர்களென்றுந்தீபற = அவர்களே துறவையுடைய கல்லியாணர்கள்.

இதில் முற்படுந்துரியமென்றது தற்போதத்தை யிரண்டாவது துரியமென்றது பரபோதத்தையெனக்காண்க, (௩௨)

இப்படி துறவையுடைய கல்லியாணர்களுக்கும் பிராரத்த சன்மம் புசித்தே தொலைவேண்டுகையாலும் புசிக்குமளவில் கருவிகரணாதிகள் கூடவேண்டுகையாயினு மிவைக்கூடினாலு மிவற்றின் வசத்தி லழுந்தாமற் புசிக்கு முபாயமு மகாமியமே றாமல் நிற்கு முபாயமு மிப்படி யருளிலே நின்றவர்க்குப் பெத்த நிலையிற சுகந்தானே முத்திநிலையிற் சுகமாமுபாயமு

மருளிச்செய்கிறார்.

பெற்றசிற்றின்பமே பேரின்பமாயங்கே
முற்றவரும்பரிசுந்தீபற
முளையாதுமாயையென்றுந்தீபற.

இ - ள். பெற்றசிற்றின்பமே பேரின்பமா யங்கே முற்றவரும்பரிசுந்தீபற = தேசிகன் கடாக்ஷத்தாலே சொரூபத்தை யுணர்ந்தகாலத்துப் பிராரத்தமான தெடுத்தவுடலிலே நின்று புசித்தே தொலையவேண்டுகையா லந்த கன்மத்தாலே நிலைநில்லாத சுகங்கள்வந்து கூடாநிற்கும் இது கூடாநிற்கச் செய்து

பதிலமுர்த்தாம லித்தசுகதுக்கத்தையுங் கன்மத்தையுங் கருவிகாரு திகளையுந் தன்னையுங் கூட்டிப் புசிப்பிக்கிற திருவருளையது கண்டு சுகவுணர்வே சகலமு மேருமற் கன்மமும் தொலைந்து யவ்விடத்திற் கூடின வற்ப சுகமான திவன் ஞான திருஷ்டியிலே நிற்கையாலே யதுதானே பரமசுகமாம். மூளையாது மாயையென்றுந்திபற = இப்படிநிற்கவே மலமாயாதி கன்மங்களொருகாலத்திலு மக்குரியாது. (௧௧)

இப்படி யளவிடுதற் கரிதான பரமானந்த சுகத்தைக்கூடின
காலத் திவனிடத்து வேறொன்றும் வந்துகூடாதபடி
இந்தச்சுகத்தானே விவனை வேறல வடைவித்துக்
கொள்ளுமென் றருளிச்செய்கிருர்

பேரின்பமானபிரமக்கிழத்தியோ
டோரின்பத்துள்ளானென் றுந்திபற
உன்னையேயாண்டானென் றுந்தீபற.

இ - ள். பேரின்பமான பிரமக்கிழத்தியோடோரின்பத்துள்ளா னென்றுந்திபற = ஒருவனையோரின்பம் வந்தடுத்தகாலத் திவற்றினுக் கோரளவுமுண்டா யிதுநீங்கினகாலத்துச் சுகமான வந்த விரதந் துக்கமாகவும்-வந்துகூடாநிற்குமாதலால் இந்தச் சுகதுக்கங்களிரண்டும் வந்துகூடாதபடி தம்பிரானர் திருவடியிலே யடைந்தகாலத் திவனளவிடுதற் கரிதாகி விளைந்தவனு போக விரதமானது பரமானந்தமாகிய பிரமசத்தியினைக்கூடின பொழுதே யொருதன்மையான சுகசொரூபமாய்விடும். உன்னையே யாண்டதென் றுந்திபற = இப்படியே அசத்தியத்தைச் சத்தியமாகக் கொண்டொழுகின உன்னையுமேலாயுள்ள ஞானத்திலே சேர்த்தடிமைகொண்டது. (௧௪)

இந்தப்பேறைப் பெற்றவர்களுக்குந் தேகநிற்கச்செய்தேயுமான் மசெய்தி கிளையாமலொடுங்கிச் சிவனுடையசெய்தியாய் நிற்குநிலைமையை யருளிச்செய்கிறார்.

பெண்டிர்பிடிபோலவாண்மக்கள்பேய்போலக்
கண்டாரோகண்டாரொன்றுந்தீபற
காணாதார்காணாரொன்றுந்தீபற.

இ - ள், பெண்டிர்பிடிபோல வாண்மக்கள் பேய்போலக் கண்டாரோகண்டாரொன்றுந் தீபற = ஆன்மாவானது ஒருத்தியைப் பேய்பிடித்தகாலத்துத் தன்னுடைய சொரூபம் வேறாகா திருக்க மனதும் வாக்குஞ் செயலும் பேயின்வசத்தேயாய்த் தன்னை மறந்து பேயென நின்றதன்மைபோலவும் நாயகனை நம்பி நாளுர் தேகியை யாவேசித்த பிசாசமானது தன்னுடைய சொரூபமொருவர் காணநின்று தேகியினுடைய செயலை யழித்துத் தன்னுடையசெயலே பிரகாசிப்பித்துத் தானே தேகியாய்நின்ற தன்மைபோலவும் இப்படி பாவனையாற் பாவகமாகக்கூடி நின்றவரோ சிவனையுள்ளபடி கண்டு கூடினவர்கள், காணாதார் காணா ரொன்றுந்தீபற = இப்படி கண்டுகூடாதாரொக்காலமும் விழியாத கண்ணையுடையவர்கள்.

ஈறு

இந்நிலை கூடாதவர்களுக்கு வேறேயு மோருபாய முண்டென் றருளிச்செய்கிறார்.

நாலாயபூதமு நாதமுமொன்றிடி
ஞாலாநிலையாமென்றுந்தீபற
நாதற்கிடமதென்றுந்தீபற.

இ - ள், நாலாயபூதமு நாதமொன்றிடி ஞாலாநிலையாமென் றுந்தீபற = சுக்கில சுரோணிதத்தின் றலையிலே சிவன் பதி திறவளவிற் சிவனுடைய கிரியாசத்தியாலே நாலாம் பூதமாகிய வாயுவுஞ் சத்தப்பிரமமான நாதமுங் கூடப்பதிந்து சரீரம் பரி

வமிக்க வாயுவானது நாடிகடோறும் பூரணமாகப் பிரதான வாயுவான பிராணவாயுவும் பின்பு மரணமுண்டாக்குகைப்பொருட்டு நாபிச்சக்கரத்தின் கீழேசென்று பதியாநிற்குஞ் சத்தப்பிரமமான நாதாந்தந் தானந்தோறு நிற்கு மெழுத்துளாகிச் சென்று பின்பு மரணமுண்டாக்குகை காரணமாக மூலாதாரத்திலே பிரணவமாகப்பதிந்து கிடவாநிற்கும் இவற்றைத் தேசிகனருளாலே யறிந்து சத்திவீசத்தையுஞ் சிவவீசத்தையுங் கொடுத்து திருமந்திரப் பிரசாதமாக்கி மனதை யொருமைப்படுத்தி இந்தத் திருமந்திரப் பிரசாதத்தைக்கொண்டே நாதத்தையெழுப்பி இந் தநாதத்தையும் பிராணவாயுவையுங்கூட்டிச் சுழிமுனை வழியே செலுத்தி முன்புதோன்றின பிரமரந்தரத்திலேகூடித் தான் பரமாகாசத்திலழுந்தில் காலாதீதமாகிய சாயுச்சிய மப்பொழுதே கைகூடும் நாதங்கிடமதென்றுந் திபற = கர்த்தா வெழுந்தருளி யிருக்கத்தக்க விடமு மவனைக்கூடுகைக்குவிடமுமதுவே, கூகூ

இப்படியன்றி வேறுவழிகளிற்சென்று தன்போதத்தாற் கூடத்தக்கதென்று பாவித்துச்சனன மரணங்களிலே விழுந் தழுந்தாதிருக்கும்படி யருளிச்செய்கிறார்:

சென்றநெறியெல்லாஞ்சென்னெறியாம்படி
நின்றபரிசறிந்துந்திபற
நீசெயல்செய்யாதேயுந்திபற.

இ-ள், சென்றநெறியெல்லாஞ்சென்னெறியாம்படி நின்ற பரிசறிந் துந்திபற = கன்மங்களுக் கீடாகத் துணைசெய்கிறமறு திகளுடனே கூடி நச்சுவழியான விலக்கடியென்னு மைந்து பொறிவழியுஞ் சென்று விடையாதிகளிலே பொருந்தி யிதாகிதங்கள்கூடி மறுமைக்கு வித்தாகிய குற்றங்களை விளைவிக்கிற வழி தானே ஐயமற்றருக்குதான பெருவழியாம்படி தேகங் கூடினபடி

யுந் தேகத்திலே தானிற்கிற முறைமையுங் கன்மங்கள்வந்துகூடு முறைமையுந் தன்னுடைய போதமிந்தவகை தெரியாம லிந்திரியாதி கரணங்களுடனேகூடி நின்றுலவித்தமுறைமையும் (காந்தமும் பாசமும்போல) தம்பிரானார் சந்நிதியிலேகூடிச் சீவிக்குமுறைமையு மருட்கண்ணாக் கண்டு தன்செயலறநிற்கப்பிராரத்தமுந் தொலைந் தாகாமியமு மேறாமற்பின்பு தேகாந்தத்திலுந்திருவடியிலே கூடுகைக்கு காரணமுமாதலாற் பக்கநோக்காமலொருநிலையிலே நில் நீ செயல் செய்யாதே யுந்தீபற = இப்படியொழிந் துன்னுடைய செயலாலே கூடத்தக்கதென்று பாவித்துச் சனனமரணங்களிலே விழுந்தழுந்தாதே. (௩௭)

இப்படி தேசிகன் கடாட்சத்தாலே பெற்ற திருவருளைக்கொண்டு
சனனமரணங்களுக்குறுப்பத்தி தேடாம லெந்தவுபாயத்திலே
யாயினுந் திருவடியை யடைகைக்கு விரும்புவதே
பொருளென்றருளிச்செய்கிறார்,

பொற்கொழுக்கொண்டு வரகுக்குழுவதே
னக்கொழுவேயறிந்துந்தீபற
அறிந்தறியாவண்ணமுந்தீபற.

இ-ள், பொற்கொழுக்கொண்டு வரகுக்குழுவதே னக்கொழுவேயறிந்துந்தீபற=பொன்னாலே சமைத்த கொழுவைக்கொண்டு வரகுவிளைய வுழுதகாலத்திற் பலமுங்குறைந்து மிருந்த சேதமுமா யுழவு பிழைத்ததன்மைபோல தேசிகனாலே பெற்ற திருவருளைக்கொண்டு பிழைபெருக்கிச் சனனமரணங்களிலே போக்குவரவுசெய்ய வுற்பத்தியான விந்திரியாதி விடையங்களில் வீழுந்தாதே யந்ததிருவருள் முன்பு தோன்றாமல் நின்றுபகரித்தமுறைமையறிந்து தோன்றினபின்பதுகண்ணாகவதிலே கூடியழுந்தினகாலத்துச் சனனமரணங்களுஞ் சுகதுக்க வேதனைகளுநீங்கி யொருகாலத்திலு நீங்காப் பரமானந்தமே விளையுமென்னு

ம்படிய மறிந்து தன்னுடையசெயலற வதுவாய்நிற்கிறதே நிலை அறிந்தறியா வண்ணமுந் தீபற=இப்பொருளை யுணராதே யுணர்ந்துநில். (௩௮)

இப்படியுணர்த்தாநின்ற சிவனை யுணராதே யுணரக்கூடாதாகிற் சிவனைப்பாவித்து நிற்கவே யிந்தவுண்மை கூடுமென் றருளிச்செய்கிறார்.

அதுவிதுவென் றவனைத் தறிவார்கு
மதுவிதுவென் றறிந்துந் தீபற
அவிழ்ந்தசடையானென் றுந்தீபற.

இ-ள், அதுவிதுவென்று வனைத்தறிவாகு மதுவிதுவென் றறிந்தாந் தீபற=ஆன்மாவினுடைய கருத்துப்போல வநாதியே மறைத்த சகசமலத்தாலே மாயையுங் கன்மமும்பொருந்திய சனனத்தையே விளைவித்திந்திரியவியர்த்தனாய் விடயங்களிலே பொருந்துங்காலத் திரண்டுபொருளைச்சேர வறியமாட்டாம லொன்றொன்றாக வறிந்தும் அறியுங்காலத்திலே யதுவதுவென்று சுட்டிப்பற்றிநின்று சலித்து மயக்கவிகற்பங்களிலே யடைந்து பொய்யை மெய்யெனக்கருதித் தன்னுடையவுண்மை விளங்காம லிரவுபகல் அகப்பட்டவாகாசம்போல யிடைவிடாமல் நின்றழுந்தாதே தம்பிரானுடையகருத்தான தருதியேயுள்ள காருண்யத்தின் மிகுதியாலே யான்மாக்களுடைய மலமாயாதிகன்மத்தைத் தொலைப்பித்துத் திருவடியிலே கூட்டவேணுமென்கிறவிச்சையாலே யான்மாக்களுக்கனாதியே பிராணனாய் நின்றவ்வவ் கன்மங்களுக் கீடானவை திருவுளத்தடைத்துச் சர்வத்தையுமொருகாலத்திலே சேரவுணர்ந்து முணர்த்துவித்தும் புசிப்பித்தும் பிரிப்பித்து மொக்குவித்துஞ் செய்யாநிற்கத் தானொன்றையு மதுவிதுவென்று சுட்டிப்பற்றிநின்று சலியாதே தன்னுடைய வருளாலே நடக்கத் தானொழிவறநிறைந்து மயக்கவிகற்பங்களுமின்றி யசைவற நில்

லாநிற்கும் அந்தப்பொருளனாதியே யிவன்றானாய்நிற்கிற முறை
மையையருளாலேயறிந்து ஆன்மபாவனையைவிட்டுச்சிவபாவனை
யிலே நிற்கவும் அவிழ்ந்தசடையானொன்றுந் தீபற=இப்படிகூடி
நிற்கிறபொருளை யொருவராற் கட்டப்படாத திருச்சடாபாரத்
தையுடைய தம்பிரானார். (௯௯)

நின்மலனான தம்பிரானா ரான்மாவுடனேகூடி யான்மாவாய்
நிற்றலைக்குக் காரண மவனுடையகாருண்யத்தின்
மிகுதியேயென் றருளிச்செய்கிறார்.

அவனிவனான தவனருளாலல்ல
திவனவனாகா னென்றுந்தீபற
என்றுமிவனே யென்றுந்தீபற.

இ-ள். அவனிவனான தவனருளாலல்ல திவனவனாகானெ
ன்றுந்தீபற=ஸாத்ரு மனாதிமாயிருக்கத்தக்க தம்பிரானார் பிரா
ணனாயிருக்கச்செய்து மனாதியே பசுத்தவமான வாணவமல மு
ண்டாகையா லிந்தவாணவமலம் பக்குவப்பட்ட வவதரத்திலே
(செம்பிற்கிடந்த மாற்றுப் பிரகாசித்துப் பொன்னென்னும் பேர்
பெற்றாற்போல) தம்பிரானாரும் பிரகாசித்திவனைத் திருவடியி
லே கூட்டிக்கொள்ளுகை பொருட்டுத் தன்னுடையகாருண்யத்
தினாலே யிவனாகவெழுந்தருளி நின்றதொழிந்து சிவனான்மாவா
கின்றானல்லன் ஆன்மாவுந் தம்பிரானார் திருவடியிலேகூடிப்
பரமானந்தத்தை யனுபவிக்கிறதொழிந்து சிவனாலாய பஞ்சகிரு
த்தியநடத்துகையில்லை. என்றுமிவனேயென் றுந்தீபற=சிவன்ற
ன்னுடைய கருணையாலே யான்மாவாகியுஞ் சிவனாகியு நிற்கவல்
லவன் ஆன்மாவானவனென்றுந் தன்னுண்மை குன்றாமற் கூடி
னதொன்றிலே யதுவாய்நிற்க வல்லவன். (௱)

இந்தப்பொருளைக்கூடாம லனாதியே யுண்டாகத்தக்க விக்கினமு
மிதுநீருமுபாயமு மருளிச்செய்கிறார்.

முத்திமுதலுக்கே மோகக்கொடிபடர்ந்
தத்திபழுத்ததென் றுந்தீபற
அப்பழமுண்ணாதே யுந்தீபற.

இ-ள். முத்திமுதலுக்கே மோகக்கொடிபடர்ந் தத்திபழுத்ததென் றுந்தீபற = முத்தியைப்பெறுகைக்கு முதன்மையான வான்மாவிலே யனாதியேமறைக்கத்தக்க வாணவமலத்தின் காரியமான வஞ்ஞானமென்னுங்கொடி வெகுவிதமாகப்படர்ந் திதாகிதமேவிளைந்து இதுகாரணமாக மயக்கத்தைச் செய்கிறமாட்கையாலே பூதகாரியமானவுடம்பு சகசந்தோறும் பலியாகிற்கும் அப்பழ முண்ணாதேயுந்தீபற=இந்தப்பழத்தையருந்தி நரகயேதுவாகாதே யாசாரியன் கடாக்ஷத்தாலேபெற்ற அருளாகியவருளாலே யாணவமலமாகிய மூலத்தை வேரறுத்து முத்திப்பழமாகிய பரமானந்தத்தை யனுபவித்துச் சிவனுடனே யொருதன்மையாய்விடுக.  (௩௪)

இப்படியொழியப் பரிபூரணத்துவமாக நிற்கத்தக்க தோருபாயமருளிச்செய்கிறார்.

அண்டமுதலாயனைத்தையுமுட்கொண்டு
கொண்டத்தைகொள்ளாதேயுந்தீபற
குறைவற்றசெல்வமென் றுந்தீபற.

இ-ள், அண்டமுதலா யனைத்தையுமுட்கொண்டு கொண்டத்தைக்கொள்ளாதே யுந்திபற=அண்டமென்று சொல்லப்பட்ட சக்கரவாளகிரியு மகாமேருவு மண்டகோளகையு மட்டகுல பருவதங்களுந் திக்குக்கெசங்களு மட்டநாகங்களுஞ் சத்தசமுத்திரமுஞ் சத்தமேகங்களும் பதினாலுபுவனமுந் தேவர் அசுரர் சித்தவித்தியாதரர் கின்னரர் கிம்புருடர் மற்றுமுண்டான அண்டர்முதலாக வுள்ளிட்டபேதங்களுஞ் சந்திராதித்தரும் பஞ்சபூதிய யுசி

ணமங்களும் பேய்த்தேர்போன்ற வியாபாரங்களும் பொதிந்த
திரட்சியோரண்டமாக வளர்ந்த கோடியண்டங்களு மிப்படி
யொவ்வொருவண்டங்களைத் தசமடங்குபொதிந்தசலமு மந்தசல
த்தைத் தசமடங்குபொதிந்த வக்கினியுமிந்த வக்கினியைத் தசம
டங்குபொதிந்தவாயுவு மிந்தவாயுவைத் தசமடங்குபொதிந்த வா
காசமு மிவையெல்லாவற்றையுஞ் சேரப்பொதிந்த பேரண்டத்
தையு மிவை யெல்லாவற்றிற்கு மேற்பட்டு நின்மலமாய் நிற்கிற
நாதசொருபத்தையு மிதற்குமப்பாற்பட்ட நின்மலமா யெல்லை
படாதபரமாகாசமான பெருவெளியுமுனக் குடம்பாகிநின்று உ
னக்கு நிலைநின்றவாறே யுன்னை யுணர்த்தின சொருபமுடம்பாகி
நின்று வான்மபோதத்தையு மிந்தப் பரிணாமங்களையுஞ் சேர
நினைவறவிடுவாயாக குறைவற்றசெல்வமென் றுந்தீபற=அப்பொ
ழுதே நீ யகண்டபரிபூரணனாய்விடுவை. (சஉ)

இப்படிப்பெற்று மிந்த வுண்மையில் நில்லாமல் தேகத்தையும்
விசுவத்தையுமெய்யென நின்றோருடைய வுண்மையை
யருளிச்செய்கிறார்.

காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ணமாட்டா (தே
மாயக்கள்ளுண்டாரென் றுந்தீபற
வாட்டுப்பசுக்களென் றுந்தீபற.

இ-ள், காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ணமாட்டாதே
மாயக்கள்ளுண்டாரென் றுந்தீபற = தேகத்துநிற்கிற தேகியான
சிவனுடைய சத்தியஞானமான திருவடித்தாமரையி லுண்டான
பரமானந்தத்தேறலாகிய மதுவையுண்டு தேகவிசுவங்களுந் தெரி
யாமற்றன்னையும் சிவனையுமறியாதபடி சிவேசுரவத்திலே யடை
யாதே (மிகவும் பசித்தானொருவன் றன்கையில் வந்திருந்தபாற்
றிரளையைப்போட்டு நாவுக்கெட்டாத முழங்கையை நக்கிப் பசி
தீரவிசாரித்த தன்மைபோல) பேய்த்தேர்போன்ற விசுவத்தையு

மிந்திரசாலம்போன்ற வாழ்வையு மெய்யெனக்கருதி நரகவேது வான விடைய சமூகங்களினாலுண்டாகு மிதாகிதங்களாகிய மது வையுண்டார்கள். வரட்டுப்பசுக்களென்றுந் தீபற = அவர்களேஒரு காலங்களினும் பயன்படாதவான்மாக்கள், (௪௯)

இப்படியாவராலும் பெறுதற்கரியபேற்றைக் காருண்ணியத்தின்
மிகுதியாலே தந்தருளைவைத்தம்முடையசினேகத்தின்
மிகுதிப்பாட்டாலே அறிவித்தருளுகிறார்.

சிந்தையினுள்ளுமென் சென்னியினுஞ்சேர
* வந்தவர்வாழ்கவென் றுந்தீபற
மடவாளுடனேயென் றுந்தீபற.

இ-ள், சிந்தையிலுள்ளுமென் சென்னியிலுஞ்சேர வந்தவர்வாழ்கவென் றுந்தீபற=ஒழிவறநிறைந்த தம்பிரானா ரனாதியே யடியனுக்குப் பிராணனாயிருக்க வனாதியே யுண்டானமலத்தின் மிகுதிப்பாட்டாலே சநந:மரணங்களிலே யுழன்று போக்குவரவேபொருளாகத் திரிந்தவடியேனைத் தம்முடைய காருண்யத்தின் மிகுதியாலே பொருந்தின திருமேனியுடனே யெழுந்தருளி வந்து மலமாயாதிகன்மங்களும் சநநமரணங்களுங் கூடாதபடி யென்னுடைய பொல்லாப் புலாற்றலையிலே யாவராலுங் குறித்தற்கரிய சிவகந்தந்தையுடைத்தாகிய திருவடித்தாமரையைச்சேர்த்து மந்தத்திருவடியடியேனுக்கு அனாதியேபிராணனாய் நின்ற முறைமையையுமுணர்த்தியு மென்னுடைய சித்தமானதுசலியா மலந்தத்திருவடியுடனே விட்டு நீங்காம லொருவழிப்படக் கூடி

* தியானத்திலுண்டான நிஷ்களத்தைச் சிந்தையில் வந்தவனாகவும், பக்குவங்கண்டு அருளே திருமேனியாக வாசாரியமூர்த்தமாய்வந்து திருவடிசூட்டிய சகளத்தைச் சென்னியில் வந்தவனாகவுங்கூறினார்.

ணமங்களும் பேய்த்தேர்போன்ற வியாபாரங்களும் பொதிந்து திரட்சியோரண்டமாக வளர்ந்த கோடியண்டங்களு மிப்படி யொவ்வொருவண்டங்களைத் தசமடங்குபொதிந்தசலமு மந்தசலத்தைத் தசமடங்குபொதிந்த வக்கினியுமிந்த வக்கினியைத் தசமடங்குபொதிந்தவாயுவு மிந்தவாயுவைத் தசமடங்குபொதிந்த வாகாசமு மிவையெல்லாவற்றையுஞ் சேரப்பொதிந்த பேரண்டத்தையு மிவை யெல்லாவற்றிற்கு மேற்பட்டு நின்மலமாய் நிற்கிற நாதசொரூபத்தையு மிதற்குமப்பாற்பட்ட நின்மலமா யெல்லைபடாதபரமாகாசமான பெருவெளியுமனைத் தும்பாகிநின்று உனக்கு நிலைநின்றவாறே யுன்னை யுணர்த்தின சொரூபமுடம்பாகி நின்று வான்மபோதத்தையு மிந்தப் பரிணாமங்களையுஞ் சேர நினைவறவிடுவாயாக குறைவற்றசெல்வமென் றுந்தீபற=அப்பொழுதே நீ யகண்டபரிபூரணனாய்விடுவை, (சஉ)

இப்படிப்பெற்று மிந்த வுண்மையில் நில்லாமல் தேகத்தையும் விசுவத்தையுமெய்யென மன்றுருடைய வுண்மையை யருளிச்செய்கிறார்

காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ணமாட்டா (தே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வாட்டுப்பசுக்களென் றுந்தீபற.

இ-ள், காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ணமாட்டாதே மாயக்கள்ளுண்டாரென் றுந்தீபற = தேகத்துநிற்கிற தேகியான சிவனுடைய சத்தியஞானமான திருவடித்தாமரையி லுண்டான பரமானந்தத்தேனாகிய மதுவையுண்டு தேகவிசுவங்களுந் தெரியாமற்றன்னையும் சிவனையுமறியாதபடி சிவோசரவத்திலே யடையாதே (மிகவும் பசித்தாரொருவன் றன்கையில் வந்திருந்தபாற் றிரளையைப்போட்டு நாவுக்கெட்டாத முழங்கையை நக்கிப் பசி தீரவிசாரித்த தன்மைபோல) பேய்த்தேர்போன்ற விசுவத்தையு

உ

சிவமயம்.

திருக்கடவூர்

உய்யவந்ததேவநாயனார்

அருளிச்செய்த

# திருக்களிற்றுப்படியார்மூலமும்

திருவாவடுதுறையாதீனம்

தில்லைச்சிற்றம்பலவரென்னும்

சிவப்பிரகாசனார்செய்த உரையும்.

இவை,

காஞ்சிபுரம்

மகாவித்துவான்

கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

கா. சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

க். முருகேசமுதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1898௵

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்களிற்றுப்படியார் வரலாறு.

ஞானசாத்திரம் பதினான்கினுக்கு முன் னுண்டான திருவுந்தியாரை யருளிச்செய்த உய்யவந்த தேவநாயனாரது மாணாக்கர் திருவிசலூர் ஆளுடைய தேவநாயனார். அவர்மாணாக்கர் திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார்.

இவர் பெரும்பற்றப்புலியூரி லெழுந்தருளியிருக்குங் காலில் மிகுந்த பக்குவமுடையாரொருவர் தன்னைக்கண்டுதரிசிக்க அவருக்குச் சிவதீக்ஷைசெய்து அவர்சந்தேகவிபரீத மகல்வதாயும் சிவானுபூதிச்செல்வத்தை யிடைவிடாம லனுபவிப்பதாயும் தனதுபரமாசாரியார்செய்த திருவுந்தியாரின் கருத்தை விளங்கக்காட்டுவதாயும் நூறுவெண்பாவில் ஓர்சாஸ்திரஞ்செய்தனர்.

அச்சாத்திரத்தை விசுவத்துள்ளா ரங்கீகரித்துய்யும்படி திருவம்பலத்திற்சென்று நடேசரைத்தியானித்துத் தாமருளிச்செய்த திருவெண்பாவை நடேசர் முன்னிருக்கப்பெற்ற திருக்களிற்றுப்படியில் வைத்தருளினர். அத்திருக்களிறானது கைநிமிர்ந்து இச்சாத்திரம் நடேசர்திருவடியடைவோர்க் கெளிதாகிய கருவியென அங்குள்ளாருணரும்படி நடேசர் திருவடியில்வைத்தருளியது

அப்போதங்குள்ள தில்லைவாழந்தணர் மூவாயிரவரும், திருப்படைவீட் டெழுநூறுமடத்து முதலிகளும் மகேஸ்வரர் நாற்பத்தெண்ணாயிரவரும் திருக்கோயில்நிமித்தஞ்செய்யும் திருப்பே ரேழாயிரத்துத் தொளாயிரவரும், இத்திருப்படைவீட்டி லெழுந்தருளியிருக்கும் கல்வியாளர்களும் கண்டதிசயித்திந்நூலுக்குத் திருக்களிற்றுப்படியென்னும் காரணப்பெயரிட்டருளினர்.

இந்நூற்குமுன்னொருவர் திருவெண்காடுடையார் காரணமாய் உரைசெய்தனர் அவ்வுரை இச் சாத்திரக்கருத்துக் கமையாததால் திருநந்திதேவநாயனார் பரியாயத்தில் திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் திருவடியாரில் திருவாவடுதுறையில் தில்லைச்சிற்றம்பலவர் சிவப்பிரகாசர் முன்னூற்கும் இந்நூற்குமாறுபாடின்றி உரைசெய்தருளினர்.

இந்நூல் தில்லையம்பலத்தில் நடேசராலங்கீகரிக்கப்பட்டதாயும் அதிபக்குவமுடைய மானுடர்க் கெளிதிலுணரப்படுவதாயும் சைவசித்தாந்த சாஸ்திரங்களின் கருத்தைக் கரதலாமலகம்போற் சுருக்கியுணர்த்துவதாயுமிருப்பதால் இதைப்பத்தி சிரத்தையுடன்மனனஞ்செய்பவர்கள் ஜனனசாகரத்தை நீங்கி மோக்ஷமென்னுங் கரையேறுகை உண்மை! உண்மை!! உண்மை!!!

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# திருக்களிற்றுப்படியார்.

வெண்பா,

அம்மையப்பரேயுலகுக் கம்மையப்பரென்றறிக
வம்மையப்பரப்பரிசே வந்தளிப்ப-ரம்மையப்ப
ரெல்லாவுலகுக்கு மப்புறத்தாரிப்புறத்து
மல்லார்போ னிற்பாரவர்.

இ-ள், அம்மையப்பரே யுலகுக் கம்மையப்பரென்றறிக = மாணவகனே சங்காரமானகாலத்து மலசகிதரான மூன்றுவகைப்பட்ட வான்மாக்களையு மாயைகளிலேயொடுக்கி யிந்தமலமாயாதி கன்மங்களுடனே யான்மாக்களையுஞ் சிவசத்தியிடத்திலேயொடுக்கி யிந்தச்சத்தியையுந் தம்மிடத்திலே காத்துக்கொண்டு சிவமொன்றுமேயாய் நிற்கையில் பின்பு மிந்தக்காலமானதுசென்று சிருஷ்டிகாலமான வவசரத்திலே தம்முடைய காருண்யத்தின் மிகுதியாலே யிருந்த வான்மாக்களைப் பக்குவப்பட்ட கன்மமலத்தைக்கூட்டிப் புசிப்பிக்கவு மாணவமலத்தைப்பக்குவமாக்கும்பொருட்டு மந்தச்சத்தியை மீண்டும் பிரகாசிப்பித்து அந்தச்சத்தியிடத்திலே தாமும்பொருந்தி யந்தச்சத்தியி லொடுங்கிக்கிடந்த மலசகிதரான வான்மாக்களையுந் தோற்றுவித்து இவர்களுக்கு முன்புவிட்ட குறைக்கீடான தனுகரணபுவனபோகங்களையுங்கொடுத்துத் தாமும்முதல்கெடாமல்நின்றும் அவற்றிற்குமவையவராயவர்களைக் கன்மமலங்களுக் கீடாகநின்று புசிப்பித்துஇப்படிச்செய்கிற தம்மையுமிந்த வுபகாரங்களையுந் தெரியாமல்விஷயாதிகளிலேயிரோசிக்கும்படி திரோபவித்து இந்த நாலுகிருத்திய

த்தினாலுங் கன்மமுந் தலையொத்து மலபாகமுமுண்டா யிவர்க
ளுமுத்திக்கும் பிராரத்தராவா ரெப்போதென் றவராதமுந் திரு
வுள்ளத்தினா லனுக்கிரகமேபண்ணி யிப்படியுள்ள பஞ்சகிருத்திய
ங்களைத் தம்முடையவருளாலே நடத்திப்போதாநின்ற காலங்க
ளிலே பக்குவப்பட்ட ஆன்மாக்களையறிந்து அவர்க ளளவுக்கள
வான தீக்ஷைகளாலே யிரக்ஷித்து முறைமையிலேகூட்டிக்கொ
ள்ளுகையால் இந்தச்சக்தியையுடையசிவனே சர்வ லோகங்களு
க்குந் தாயுந்தந்தையுமென்றறிவாயாக பக்குவப்பட்டஆன்மாக்
களைத் தம்முடையவருளாலே நடத்திப்போதாநின்றகாலங்களி
லே யிரக்ஷிக்குமுறைமை யெப்படியெனில்?—அம்மையப்பரப்
பரிசேவந்தளிப்பர்=அந்தச்சத்தியையுடைய சிவன் பக்குவப்ப
ட்டவான்மாக்களை யறிந்து ஒருமலத்துடனேநின்ற விஞ்ஞானக
லரிற் பக்குவர்க்கு பிராணனாய்நின் றம்முறைமையிலே பிரகாசி
த்தும். இரண்டுமலத்துடனேநின்ற பிரளயாகலரிற் பக்குவற்கு
இவ்வியமான திருமேனியுடனே தோன்றி யந்தத்தரிசனத்தாலு
ம் இரக்ஷித்து மூன்றுமலத்துடனேநின்ற சகலரில் பக்குவற்குஅ
வர்களைப்போன்ற திருமேனியுடனே யெழுந்தருளிவந்து சத்தி
னிபாதத்துக்கீடாக நாலுவகைப்பட்டதீக்ஷைகளாலுங் "திருநோ
க்கால் பரிசத்தால் திகழும்வாக்கால் பாவனையால் மிகுநூலால்
யோகப்பண்பால், எனகிறபிரமாணப்படியே ஆறுவகைப்பட்ட
காருண்ணியத்தாலு மிரக்ஷித்து இப்படி இந்தமுறைமைகளிலே
யநுக்கிரகியாநிற்பார். இப்படித்திருமேனிகொள்வாராகிலவருமி
ந்த லோகங்களிலுள்ளாரிலே யொருவ ராகாரோவெனில்?—
அம்மையப்பரெல்லாவுலகுக்கு மப்புறத்தார்=அருளாலேதிருமே
னிகொண்டு இரக்ஷித்ததொழிந்து அவருண்மையறியாரறியுமிட
த்தும் பிருதிவிமுதல் நாதமீறான தத்துவங்களுக்குஅப்பாற்பட்
டுநின்றே யறியவேண்டுகையா லறியப்பட்டசத்தியுடையசிவனு
மிந்தச சர்வலோகங்களுக்கு மப்பாற்பட்டே யிராநிற்பான் சிவன்

பிரபஞ்சத்துக்குமப்பாற்பட்டே யிருப்பானாகில் பிரபஞ்சந்தா
னே நடந்ததோவென்னில்?—இப்புறத்து மல்லார்போனிற்பார
வர்=தம்முடையவருளாலே சர்வலோகங்களையு நடத்தும்பொரு
ட்டுத் தம்முடைய சொரூபந் தோன்றாதபடி யாறுவகைப்பட்ட
வத்துவாக்களை திருமேனியாகக்கொண்டு தந்தாம்பிரக்கினையா
லே பிரபஞ்சநடவாநிற்கத் தாமவையவராயவைசவின்றியே யொ
ருபணியற நில்லாநிற்பர்,

இதனாற்சொல்லியது கர்த்தாவையுஞ் சத்தியையும் மூன்று
வகைப்பட்ட ஆன்மாக்களையும், மலங்களையும், பஞ்சகிருத்தியத்
தையும், மூன்றுவகைப்பட்ட ஆசாரிய மூர்த்தியையும், தீக்ஷாக்
கிரமங்களையும், பதமுத்திகளையும், சாயுச்சியத்தையும், கத்தாவே
கதேசியுமல்ல பரிபூரணனுமல்ல பூவிற்கந்தம்போலப் பக்குவங்
களிலே பிரகாசிப்பனென்னு முறைமையையும், அவன்கிருபா
மூர்த்தியென்னு முறைமையையும், சர்வத்தையுங் கூடிநிற்சஞ்
செய்தே தானொன்றோடுந் தோய்விலனென்னு முறைமையையு
மறிவித்தது. (௪)

இப்படிச் சிவரூபத்தைத் தரிசித்துக் கூடுமுறைமையெப்ப
டியென்ற மாணவகனைநோக்கி யருளிச்செய்கிறார்,

தம்மிற் றலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மிற் றலைபடுத ருமுணரிற்-றம்மி
னிலைப்படுவ ரோரிருவர் நீக்கிநிலையாக்கித்
தலைப்படுவர் தாமத் தலை.

இ-ள், தம்மிற்றலைப்பட்டார் பாலேதலைப்பட்டு=தந்தாமி
டங்களிற் பக்குவமறிந்து எழுந்தருளிவந்த ஆசாரியனிடத்திலே
தாமுங் கூடிவழிபட்டு,—தம்மிற்றலைபடுதருமுணரில்=ஆசாரிய
னனுக்கிரகத்தாலே முன்பு தானாக உபிமானம்பண்ணி யிருந்த

தேகாதிகளைத் தமக்கு வேறென்றறிந்து நீக்கித் தம்மையுந் தரிசி
த்துத் திருமேனிகொண் டெழுந்தருளிவந் துணர்த்தின தம்பிரா
னார் தம்மிடத்திலேநின்று பிரகாசிக்கிற முறைமையுந் தாமறியப்
பட்டு,—தம்மினிலைப்படுவரோ ரிருவர்=தம்மிடத்திலே யனாதி
யே தோன்றாமல்நின்று நடத்திப் பக்குவமாக்கி யந்தப் பக்குவத்
திலே யிப்படித் தரிசிப்பித்த விர்ஞானஞேயங்களாகிய சத்திசி
வமான விரண்டுமுதலுந் தோன்றாநிற்கும்,—நீக்கிநிலையாகத்தலை
ப்படுவர் தாமத்தலை=இப்படி தரிசிக்கிறோமென்கிற தன்னுடை
ய சுட்டானபோதத்தைவிட்டு அஞ்ஞானத்திலே, பொருந்திநிற்கி
லப்பொழுதே யந்தரூபசொரூபமாகிய சிவமுங்கூடி யந்தச் சி
வமாகியே பிரகாசியாநிற்பர். (௨)

இத்தவவதாரத்தை யடியேனுக்குக் கடாக்ஷித்தருளவேணு
மென்ற மாணவகனைநோக்கி யருளிச்செய்கிறார்.

என்னறிவு சென்றளவில் யானின் றறிந்தபடி
யென்னறிவி லாரறிக வென் றொருவன்-சொன்னபடி
சொல்லக்கேளென் றொருவன் சொன்னா னெனக்கதனைச்
சொல்லக்கே ளுனக்குச் சொல்.

இ-ள், என்னறிவு—சொல்=ஆசாரிய னனுக்கிரகத்தாலே
யென்னுடைய பசுஞானம்போனவளவில் நானந்தவவதாரத்திலே
நின்றனுபவிக்கிறபடி யெப்படியெனில்? பசுஞானம்போய்ச்சிவ
ஞானத்திலே யபேக்ஷையுண்டானவர்க ளறியுங்களென்று ஒரு
பரமாசாரிய னருளிச்செய்தபடியே சொல்லக்கேளென் றெனக்
கொரு பரமாசாரிய னென்னுடைய பக்குவத்துக்கீடாகப் பாரம்
பரியம்போல வோருபாயமாக வருளிச்செய்தான், அந்த வவதா
ரத்தை யந்தமுறைமையிலே நான்சொல்லமாணவகனே நீபுத்திப
ண்ணிக்கேட்பாயாக. (௩)

பசுஞானம்போச்ச சிவஞானத்திலேநின் றநுபவித்தபடி யே தேகனென்றாசாரிய னருளிச்செய் கையா லாசாரியனுமான்மாக் களி லொருவனேயென்ற மாணவகனை நோக்கி யருளிச்செய் கிறார்.

அகளமய மாய்நின்ற வம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போலுலகிற் றங்கி - நிகளமா
மாணவ மூல மலமகல வாண்டனன்காண்
மாணவக வென்னுடைய வந்து.

இ-ள். அகளமயமா நின்ற வம்பலத்தெங்கூத்தன், சகள மயம்போலுலகிற்றங்கி = திருவம்பலத்தே ஞானமயமாயானந்த திருத்தஞ்செய்தருளுகிற வெம்முடைய சுவாமி தன்னுடைய கா ருண்ணியத்தின் மிகுதியாலே யென்னுடைய பிறவித்துன்பந் தைப்போக்கும் பொருட்டாகவெனக்கு ஞானக்கண்ணில்லாமை யினாலே யூனக்கண்ணுக்குத்தோன்ற விலங்கு சாதிகளை யுபாய மாகப்பார்வையிட்டுப் பார்வை பிடிப்பாரைப்போலச் சர்வமுந் தனக்குத் திருமேனியாகையா லென்னைப்போலச் சரீரகரித் தாற்போல விசுவத்தி லொருதேகிபோலத்தோன்றி - நிகளமா மாணவமூலமலமகலவாண்டனன்காண் மாணவகவென்னுடைய வந்து = மாணவகனே, ஆன்மாவையும் மாயாதேகத்தையுங் கூட்டிப் பிணிக்குங்காரணமான விலங்காகிய கன்ம முண்டாம் படி நிற்கிற வாணவமலமாகிய மூலமலம் விட்டுப்போம்படி யநாதியே யென்னைவிட்டு நீங்காமல்நின்று யிப்பொழுது பக்கு வப்பட்ட வவசரத்திலே யிப்படித் திருமேனிகொண்டெழுந் தருளிவந்து என்னுடைய பிறவிநோய்க்கிடாக வுபாயமாகவே அவனே சங்காரங்களிலுலே பேதித்தடிமைகொள்ளும் பொரு ட்டாகவிப்படி யருளிச்செய்ததொழிந்து வாசிருமநாதிதேசாசா மாயுள்ளனிவ னென்மாணவகவானேன். (௩)

இப்படிப்பட்டவிவன் திருமேனிகொண்டிரக்ஷிக்கவேண்டுமோ தானே யிரக்ஷிக்கமாட்டானோவென்ற மாணவகனை நோக்கி யருளிச்செய்கிறார்.

ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே - பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு.

இ-ள். ஆகமங்களெங்கே - பேசு = எனக்கநாதியே தொடங்கி விடியாமல்நின்ற பேரந்தகாரமான வாணவமலம் பக்குவப்பட்டபடியறிந்து பரமேச்சுரன் தன்னுடையவருளாலே திருமேனிகொண் டெழுந்தருளிவந்து என்னுடைய மலமாயாதி கன்மங்களையும் விடுவித்து என்னையு மென்னுடைய சுதந்தரவீனத்தையு மறிவித்துத் தன்னுடைய வடிவைகொண்டு ரூபசொரூபங்களையு மெனக்கேற்கத் தெளிவித்துத் தன்னுடைய பரமாநந்தபோகத்திலே யென்னைத் திருத்தியடைவித்து அடிமைகொண்டிலனாகில் அவனுடைய எல்லைப்படாத சொரூபத்தை யறிய வல்லார்யார், அதனை யநாதியே சொல்லப்பட்ட வாகமங்களு மதிலே வகுப்புண்டவாறு சமயங்களு மந்தச்சமயங்களில் முடிந்தபொருளின் யோகங்களு மிவற்றை யறியத்தக்க விவேகஞானங்களு மென்செய்யாநிற்று, இதனை விசாரித்துச்சொல்லாய். ()

ஆனால் சாத்திரத்தால் பிரயோசன மொன்றுமில்லையோ வென்ற மாணவகனை நோக்கி யருளிச்செய்கிறார்.

சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே - யார்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாமிதனைச் செப்பு.

இ-ள். சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின்றன் வசனமாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே = உபதேசமின்றியே சாத்திர மாத்திரமே யோதினால் திருமேனிகொண்டெழுந்தருளி வந்த ஞானாசாரியன் கருணையாலே யுபதேசிக்கத்தக்க சத்தான வார்த்தையிலே பெரிய பிரயோசன முண்டாகமாட்டாது. அதெ ன்போலவெனில், - ஆர்த்தகடற்றண்ணீர் குடித்தவர்க்குத்தாகந்தணிந்திடுமோ தெண்ணீர்மையாயிதனைச் செப்பு = ஆரவாரத்தையுடைய கடலினீர் பெரிதென்றிதனை மிகவுங்குடித்தாலு மொருசற்றுந் தாகந்தணியாது, அந்தக்கடலினீர் மேகத்தின் கைப்பட்டுவந்தபொழுதே குறைந்தசலத்திலே மிருந்தநாகந் தணியாநிற்கும் அதுபோலச் சாத்திரமுங் குருமுகத்தாலே பெற்றாலொழிந்து பிரயோசனமாகாது, தெளிந்த நீர்மையினை யுடையா யிதற்குச் சந்தேகமுண்டாயிற்சொல். (௧)

ஆசாரியனுமெமைப்போல வோருடம்பிலே நின்றதற்குத் தக்க கிருத்தியங்களுஞ்செய்து நிற்கச்செய்தேயும் ஆன்மாக்களுடைய மலங்களைப்போக்கிச் சுத்தஞானத்தைப் பிரகாசிக்கவல்ல சாமார்த்தியத்தை யுடையனேயென்று மையப்பட்ட மாணவகனைநோக்கி யிதனை யின்னமும் விளங்கவருளிச்செய்கிறார்,

இன்று பசுவின் மலமன்றே யிவ்வுலகி
னின்ற மலமனைத்து நீக்குவதிங் - கென்று
முருவுடையா னன்றோ வுருவழியப்பாயு
முருவருள வல்லா னுரை.

இ-ள். இன்று பசுவின் மலமென்றே யிவ்வுலகினின்ற மலமனைத்து நீக்குவதிங்கு = இந்தலோகத்தி லெல்லாமலங்களையு மிப்பொழுது பசுவின் மலத்தாலல்லவோ போக்கப்பட்டது,—

ளன்றுருவு டையானன்றே யுருவழியப்பாயுமுரு வருள வல்லா
னுளா = ஆறல் அநாதியே கூடிப்போதுகிற தேகாதிகளா
லது பக்குவப்பட்ட வான்மாக்களுக்கில்லை யாய்விடும்படி பொ
ருந்தப்பட்ட சுத்தரூபமான ஞானத்தைப் பிரகாசிக்கவல்ல
சாமர்த்தியத் திருமேனிகொண் டெழுந்தருளிவந்த வாசாரியனுக்
கொழிந்து வேறொருவர்க் குண்டாகிற்சொல். (எ)

இப்படிக்கொத்த ஞானசாரியன் பிரசாதத்தைப்பெற்றவர்
கள்பெருமை யருளிச்செய்கிறார்.

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
யண்டத்தி னப்புறத்த தென்றோதே - யண்டத்தி
னப்புறமு மிப்புறமு மாரறிவுந் சென்றறியு
மெப்புறமுங் கண்டவர்க ளின்று.

இ-ள், கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே =
அநாதியே பூரணராய்த் தோன்றாமல் நின்ற சிவன் காருண்ணி
யத்தினாலே நம்மைப்போலே யெழுந்தருளிவந்த வாசாரிய மூர்த்
தையு மவனாலே யிதுகாணல்லவா யிருந்ததென்றுகண்ட தன்னு
டைய வுடம்பையு மிந்தவுடம்பை யென்றறிவிக்க வுதித்த
தன்னையுமாகப் பதி - பசு - பாசமென்று சொல்லப்பட்ட இந்த
மூன்றுபொருளையுங்கண்டு வுட்கொண் டிதனாலே கன்மத்தை
முடித்தவர்களே. (இதனாற் கன்மத்தை முடித்தபடி யென்னெ
னில் கன்மமானது சஞ்சிதமென்றும் பிராரத்தமென்று மாகா
மியமென்று மூன்றுவகைப்பட் டிருக்கையாலிதனை யாசாரிய
னாலே தீக்ஷையிலே யத்துவசோதனை பண்ணுகையினாலே சஞ்
சிதமான கன்மத்தையும் தேகமுள்ளளவும் பிராரத்தமுண்டா
கையா லிந்த தேகத்துடனே கூடப்பிராரத்த மானகன்மத்தை
யும் அவனருளிச்செய்த வுபாயத்திலே தானின்று மாகாமிய
கன்மமேறாமலும் போக்கினதத்துவஞானிகள்) அண்டத்தினப்

புறத்ததென்றுதே = அந்த ஞானசொரூபத்தை யண்டத்துக் குள்ளேயென்றும் புறம்பேயென்றுஞ் சொல்லாமல் - அண்டத் தினப்புறமுமிப்புறமுமாரறிவரென்றறியும் = அந்த ஞானதத் துவாதீதமாயிருக்கிற முறைமையு மந்தத்தத்துவங்களுக்குத் தத்துவமாய் நிற்குமுறைமையு மான்மாக்களுக் கான்மாவா நிற்கு முறைமையுமுணர்ந்து தாமு மிந்தப்பரிபூரணமான ஞானமே யாய்நிற்கவே யவர்களுக்கிந்த ஞானத்தினைக்கியத்தாலே யிப்ப டியாகுமென்கிற கருத்துமறியாமனிற்கும், அப்பொழுதேயவர்கள் சிவமாயே நிற்பார்கள் —எப்புறமுங் கண்டவர்களின்று = அவர்களே இப்பொழு தெல்லாப்பொருள்களையு முணர்ந்து பரிபூரணமாய்நிற்கிற கவியாணர்கள். (அ)

அந்தச் சிவசொரூபத்தா னெப்படியிருக்குமென்ற மாணவ கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

அன்றுமுத லாரேனு மாளாயுட னாகிச்
சென்றவர்க்கு மின்னதெனச் சென்றதிலை-யின்றிதனை
யெவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகே
னவ்வா றிருந்தது.

இ - ள். அன்றுமுதலாரேனு மாளாயுடனாகிச் சென்றவர்க் குமின்னதெனச் சென்றதிலை = அநாதியே தொடங்கி யீஸ்வர னுடைய வேலையினாலே சிருஷ்டி திதிகளுக்குக் கர்த்தாவுமாய்ப் பின்பு சங்காரகாலத்திலே யீஸ்வரனிடத்திலே கடத்தக்க பிரம விஷ்ணுக்களு மவனுடைய வுண்மையான சுரூபமிப்படியே யிருக்குமென்று மின்றளவுந் தெரிந்ததில்லை.—இன்றிதனை யெவ் வாறிருந்ததென் றெவ்வண்ணஞ்சொல்லுகே னவ்வாறிருந்தது = அவர்களாலு மறிதற்கரிய விந்தப்பொருளை யிப்பொழுதெப்படி யிருக்குமென்று மெந்தரூபத்தையுவமித்துச்சொல்லுவே னந்தப்

பொருளை யாவர் சிலர்கூடி யநுபவித்தவர்களுக் கெப்படியிருந்ததோ வப்படியே யிருக்கும். (௯)

இன்னமு மிதனைவிளங்க வருளிச்செய்கிறார்.

ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்
கொன்றுங் குறியொன்றி லாமையினா - லொன்றோ
டுவமிக்க லாவதுவுந் தானில்லை யோவ்வாத்
துவமிக்கா ரேயிதற்குச் சான்று.

இ - ள். ஒன்று—சான்று = இந்தப்பொருளுக்காதியே தொடங்கித் தான்பிரிந்தனில்லாம லதுவதுவாய் நிற்கிறதே யடையாளமாதலா லிதுவொழிந் தந்தப்பொருளுக்கு வேறோ ரடையாளமுமில்லையாகையாலே யொருபொருளோடுவமித்துச் சொல்லுதற் கிதற்கொப்பபான தொருபொருளுமில்லை, ஆகலா லிப்பொருளாதியே யிரண்டறநிற்கு முறைமைபோல விடையறாதே யிரண்டறநிற்குஞ் சிவாநுபவத்தையுடைய சிவயோகிகளே யிதற்குச்சாக்ஷி. (௰)

இப்படிப்பட்ட ஞாதாக்களுக்குப் பிராரத்தந்தாலே தேகமுள்ளளவு மிந்திரியாதிகள் சீவியாதோ? இவர்களிடைவிடாமற் சிவனை யநுபவிக்கிறபடி யெப்படியென்ற மாணவகனை நோக்கி யருளிச்செய்கிறார்.

ஆற்றா லலைகடற்கே பாய்ந்தநீ ரந்நீர்மை
மாற்றியவ் வாற்றான் மறித்தாற்போற் - றேற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியு நந்த
மலங்களற மாற்றுவிக்கும் வந்து.

இ - ள். ஆற்றாலலைகடற்கே பாய்ந்தநீரந்நீர்மை மாற்றியவ் வாற்றான்மறித்தாற்போல் = ஆற்றாலேசென் றலையையுடைய

கூடவிலே கூடியநன்னீர் கடல்நீருடனே யொன்றாய்த்தன் தன்மைகெட்டு மீண்டுமெத்தவாற்றாலே நெடுந்தூரமெதிர்த்தாலு முன்புபோல நன்னீராகாம லத்தவுப்புநீரேயானாற்போல,— தோற்றிப் புலன்களெனப் போதம் புறம்பொழியும் = ஞானத்தாலே சிவனைக்கூடிச் சிவமாயிருக்கிற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே யனுபூதிகிரித்தாலுங் கண்டவர்களுக்கு மிந்திரியங்கள் சேவிப்பதுபோலத்தோன்றி யவர்களுக்குச் சுகரூபத்திலேக்கியத்தாலே பசுகரணங்கூடாமல் சிவகரணமே பிரகாசியாநிற்கும்.— நந்தமலங்களற மாற்றுவிக்கும் வந்து = இவ்வளவேயன்றியுந் தரிசனமாத்திரத்திலே யவர்கள் கருணையானது நம்முடையமலங்கள் நில்லாதபடியும்போக்கி நம்மையுமிரக்ஷியாநிற்கும். (௧௧]

இதற்குப் பிரமாணமுண்டோவென்னில், சிவகரணம் பிரகாசித்த சிவஞானிகளிடத்திலே விளைந்த விசேஷங்களை யொரு செய்யுளிலே பல பிரமாணங்களாய் மருளிச்செய்கிறார்.

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனை யன்றேவி காரங்கொண்ட - பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்.

இ-ள். பாலை—காண் = சிவனுடைய வருளாலேசிவனைப் பெற்ற நாயன்மார் பாலைநிலம் நெய்தல் நிலமாகப்பாடியதும், பாம்புகடித்துமறித்தவன் பிராணன்பெற் றெழுந்திருக்கும்படி பாடியதும், பக்குவத்திலே காலனையேவி முதலைப்பிடித்துமரித்த புதல்வனைக் காலத்தைப்போக்கி யழைப்பித்ததுவும் மாணவகனே ? யவர்களுக்கு நம்மைப்போலப் பசுகரணமாக வேசேவியாமல் சிவகரணமாகவே யிருத்தலால்காண். (௧௨

இத்தவத்தைப் பெற்றவர்களெல்லார்க்கு மிப்படி விசேஷஞ் செய்யுமோவென்ற மாணவகனைநோக்கி மிகுந்த சத்திநிபாத முடையவர்க்கே யிவையுண்டாமென் றருளிச்செய்கிறார்.

தூங்கினரைத் தூய சயனத்தே விட்டகற்றின்
றாங்களே சட்ட வுறங்குவர்க - ளாங்கதுபோ
லைய னருட்கடைக்க ணுற்றதற்பி னப்பொருளாய்ப்
பைய விளையுமெனப் பார்.

இ - ள். தூங்கி—பார் = சகதுக்கவேதனைகளிலே மிகவு மொத்துண்டுவருந்துங் கருவிகள் நீங்கி மயக்கம்வந்தநி த்திரைகாலத்திலே யாவி லன்புடையவர்கள் கொண்டுபடுத்த சயனத் திலே யவர்கள் கூடியபின் தன்னையும் பிரபஞ்சத்தையுமறக்கத் தக்க பேருறக்க மவர்கள் கூட்டவேண்டுவதன்றியே தன்னிட த்திலே யதுதானே யுண்டாகாநிற்கும். அந்த முறைமைபோ லச் சரியை கிரியா யோகங்களின் முதிர்ச்சியாலே மிகுந்த சத்திநி பாதமுண்டாயவர்கள் அந்த மூன்றுபாதத்தையு நிகழ்த்திப் பிரபஞ் சத்தையும் விட்டு ஞானத்திலே யபேக்ஷையுடையாரென்னை யிரக்ஷிக்கைக்கு ஞாநாசாரியனை யெங்கே பெறுவேனென்று மிக்கத் தேட்டத்துடனே சென்றடைய அவன்மீது ஆசாரியனு மிரக்கம் வைத்து ஞானதீக்ஷாக் கிரமங்களிலே மலமாயா திகளைப் போக்கி யாணவ விருளைமாற்றி யிவ னுடைய சுதந்தரவிருத்தியைக்காட்டி ஞானத்தைத் தரிசிப்பி த்து இதிலே யொருதன்மையாயிருக்கத் ஞானத்தி னொக்கியத் தாலே தன்னையும் பிரபஞ்சத்தையு மறப்பிப்பதான வஸ்து சொரூபத்தாலே பிரகாசித்தொரு நிர்மலமாகவே யெல்லாவிசே ஷங்களும் விளையாநிற்கும், இப்படி யிந்தத்திருஷ்டியிலே நிற் பாயாக. (௧௮)

இனியிந்த வவதாரத்திலே யிவன்நிலைநிற்கும் படியையின்னமுவிளங்க வருளிச்செய்கிறார்,

உள்ள முதலனைத்து மொன்ற வுருகவரி
னுள்ள முருகவர் தன்னுடனாக் - தெள்ளி
யுணருமவர் தாங்க ளுளராக வென்றும்
புணரவர நில்லாப் பொருள்.

இ-ள். உள்ள முதலனைத்து மொன்ற வுருகவரி னுள்ளமுருகவர் தன்னுடனும் = மாணவகனே? ஆன்மாவுக்குப் பிரபஞ்சவேதுவாயுள்ள தத்துவங்களு மலங்களுமாயுள்ளவை கடாக்ஷத்தாலே யிவை யொருவழிப்பட வில்லையாய் விடும்படி ஞானம் பிரகாசிக்கி லந்தஞானத்தி னைக்கியத்தாலே யிப்படிப் பெற்றோமென்கிற வுன்னுடைய கருத்தானதழியும்படி யப்பொழுதேசிவம் பிரகாசித் துன்னையொரு நீர்மையாக்கிக் கொள்ளா நிற்கும் தெள்ளி யுணருமவர் தாங்க ளுளராக வென்றும் புணரவர நில்லாப்பொருள் = இப்படி யொழிந்து சிவனை யாராய்ந்தறிய விசாரிக்குமவர்கள் தங்கள்பாவனை குலையாது நிற்கச் சிறிதே யறிந்துகூட விசாரிக்கி லவர்களுக் கெப்பொழுதும் பொருந்துகைக்கு முன்னில்லா தந்தப்பொருள். (௧௪)

இந்தப் பதினாலுவெண்பா உபதேசத்தின் முறைமையாகையால், இதற்குப் பிரமாணமாகத் திவ்வியாகமங்களைத் தம்பிரானாருளிச்செய்த வடைவே யான்மாக்களுக் கநாதியாய்வருகிற சநநமரணங்களுஞ் சுகதுக்கங்களும் ஞானத்தா லல்லது போகாதாகையா லிந்தஞான முண்டாகும் பொருட்டுப் பக்குவங்களுக்கீடாக வாசாரியர் கடாக்ஷத்தாலே சரிதைகிரியா யோகங்களைச்செய்து, இதின் முற்றுதலாலே ஞானசாரியனை வழிபட்டு ஞானோபதேசத்தைப் பெற்று, ஞானத்தி னைக்கியத்தாலே சிவனைப்பெற்று முத்தராம்படியும், இந்த ஞானங்கூடாமல் முற்பட்டவளவுகளிலே நின்றவர்கள் பதமுத்திப் பெறும்படியும்;

இவற்றைச் சுருங்கக்கொண்டு சரிதையையுங் கிரியையு மொரு வொருக்கிச் சிவதன்மமென்றும், யோகத்தைச் சிவயோகமென்று ம், ஞானத்தைச் சிவஞானமென்றுட் நாலுபாதத்தை யொன்ரு க்கி யிவற்றிலே சாதிக்கு முபாயங்களையும் பேறுகளையு மருளிச் செய்கிருர்.

நல்லசிவ தன்மத்தா னல்லசிவ யோகத்தா
னல்லசிவ ஞானத்தா னனழிய - வல்லதனு
லாரேனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா
ணாரேனுங் காணு வரன்.

இ-ள். நல்ல—வரன் = சிவனைக் கர்த்தாவாகக் கொள் ளாத சமயங்களுடனே நின்று சாதித்துக்கெடாத குற்றமற்றசிவ னைநோக்கின சைவசித்தாந்தத்திற் சிவதன்மத்தாலேயாதல், சி வயோகத்தாலேயாதல், சிவஞானத்தாலேயாதல், சிவனைக் கூடு ம்படி சாதிக்குமவர்கள் தங்களாலே செய்யப்பட்டதாகக்கருதா தே கர்த்தாவி னேவலென்றே யறிந்து தம்முடைய சுதந்தரத் தைவிட் டவன்கைப்பட்டு வரவல்லார் யாவர் சில ரவர்க ளந்த க்கர்த்தாவின்மேலே மிக்கவன்பைவைக்கி லவ்வவரிடங் களிலே சென்று தலைப்படாநிற்பன் மாணவகனே ? பிரம விஷ்ணுக்க ளின்றளவுங் காணப்படாத சிவன். (டுரு)

இந்தவெண்பா மூன்றுவகைக்குங்காட்டும் இந்த மூன்று வகையிலு முற்பட்ட சிவதன்மத்தையறிந்து வழிபடுவார் வழி படும்படியேநின்ற மாணவகனைநோக்கிச் சிவதன்மத்தை மெல்லி னையென்றும் வல்வினையென்று மிரண்டாக்கி யிந்தமுறைறமையி லே யருளிச்செய்கிருர்.

மெல்வினையே யென்ன வியனுலகி லாற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டுஞ் - சொல்லிற்
சிவதன்ம மாமவற்றிற் சென்றநிலே செல்வாய்
பவதன்ம நீங்கும் படி.

இ-ள், மெல்வினை—நீங்கும்படி = மெல்வினையென்று முலகத்தாரால் செய்தற்கரிய வல்வினையென்றுஞ் சிவனை வழிபடத்தக்க விந்த விரண்டுவகையுஞ் சொல்லு மிடத்துச் சிவதன்மமென்றே சொல்லப்படுமாதலால் இவை யிரண்டினு முன்னுடைய கருத்துக்குப் பொருந்தினதொன்றை வேறொரு பலன்களையுங் கருதாதே செய்வாயாக, மாணவகனே? யுன்னுடையபிறப்பாகியவினை விட்டு நீங்கும்படி இதனாற்சொல்லிய பலன்களைக்கருதிப் பதங்களையடையாமல் சாயுச்சியமே பெறுகைப் பொருட்டாக வுண்மையான சிவஞானத்தைப் பெறவேணுமென்று கருத்து. (௪௬)

இந்த விரண்டுவகையில் முற்பட்ட மெல்வினையின் முறைமை யருளிச்செய்கிறார்.

ஆதியை யர்ச்சித்தற் கங்கமா மங்கங்கே
நீதி திறம்பலவுஞ் செய்வனவும் - வேதியனே
நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை
மெல்வினையே யென்றதுநாம் வேறு.

இ-ள். ஆதியை—வேறு = வேதியனே யாகமங்களி லருளிச்செய்தபடியே சிவனை யுள்ளபடி யர்ச்சித்து வழிபடத்தக்க கிரியாவிதிக்குப் பக்குவனும்படி இவனுடைய வவயவங்களினாலே யந்தந்த வவதாரங்களிலே செய்யத்தக்க திருவலகு, திருமெழுக்கு, திருவிளக்கு, திருநந்தனவனம், திருப்பள்ளித்தாமம், திருமஞ்சனம், திருமாலை, கூத்து, பாட்டு, முதலாயுள்ள தொழில்களும், திருவேடத்தாரை வழிபடுகையும், சிவபத்தருக்கு வேண்டுவன செய்கையும், திருமந்திரம் சமிக்கையுமாக விப்படியே செய்யப்பட்ட குற்றமற்ற வழிபாடான சரிதையும், இந்தச்சரிதையின் முதிர்ச்சியாலே திருவுள்ளத் தடைத்துச் சிவனையர்ச்சித்து வழிபடுகிற கிரியாவிதியும், நல்ல செயற்பாடென்று நமக்கெளி தாகச்

செய்யலாகையாலே யிவை யிரண்டையு மெல்லினையென்று திவ்வியாகமங்களிலே சொல்லப்பட்ட படியாலே நாமு மிதனையுனக்குச்சொன்னோம். வேதியனே யென்றது இந்தச் சரிதைகிரியையிலேநின்று வழிபடுகிற வளவில் கொலை, களவு, கள், காமம், பொய்யென்கிற வைந்தையும் விட்டு நிற்கையாலும், வாக்குமனங் காயங்களால் நினைப்பன,சொல்வன, செய்வன, வெல்லாந்தெய்வ கிருத்தியத்தினாலே யாகையாலும், சுத்தத்திலே நின்றும் நீங்கிச்சுத்தனாய் நிற்கையாலும் சர்வான் மாக்களையுந் தன்னைப்போலேகாண்கையாலும், வேதாகமங்களின் முறைமைகளிலே வழுவாமல் நிற்கையாலும். இவனை வேதியனே யென்று ஆசாரியனாலேயழைக்கப்பட்டது.

இந்தச் சரிதையுங் கிரியையும் மெல்வினையாக்கி இந்தநிலைகளின் முதிர்ச்சியாலே பின்புண்டான சரதத்திலே சிவனளவிலே மிகுந்த சிநேகமா யிவனுக்கு விளைந்த வல்வினை யிருக்கும்படியே யருளிச்செய்கிறார்.

வாங்கள் தருஞ்செய்ய வயிரவர்க்குத் தங்கள்
காங்களினா லன்றுகறி யாக்க - விரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையே யென்றதுநா மற்று.

பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ் - சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
தண்டீசர் தஞ்செயலாற் றான்.

செய்யி லுகுத்த திருப்படி மாற்றதனை
யைய விதுவமுது செய்கென்று - பையவிருந்
தூட்டி யறுத்தவர்க்கே யூட்டி யறுத்தவரை
நாட்டியுரை செய்வதென்னோ நாம்.

ஆக விந்தமூன்றுதிரு வெண்பாவிலுள்ள மூலைறமைங்கள் சாத்திரங்களிற் சொன்னவழியன்றியே யளவற்றவன்பின் பெருமையாலே யுலகத்திலியற்கைவிட்டு யாவராலுஞ் செய்யவொண்ணுத செயல்களைச் செய்ததாகையா லிதனை யொருபிரமாணங்களால் சொல்ல வரிதாகையாலே வல்வினையென்று சொல்லப்பட்டது. (உம)

இப்படிக் கொடித்தான வல்வினைகளைச் செய்யுமவர்களு முத்தியைப்பெறுவார்களோவென் றறையப்பட்ட மாணவகனை நோக்கியருளிச்செய்கிருர்,

செய்யுஞ் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டா - ரையா
வுழவுந் தனிசு மொருமுகமே யாறு
விழவுண்டோ சொல்லா யிது.,

இ - ள். செய்யுஞ்செயலே செயலாகச்சென்று தமைப்பையக்கொடுத்தார் பரங்கெட்டார் = இப்படித்தான் கொடிதான வல்வினைகளைச் செய்யச்செய்தே யிந்தக் கொடியசெய்திகளா லகிதம்வாராமற் சிவனை நோக்கியேநின்று சிவனளவில் வைத்தவன்பின் பெருமையாலே யிந்தச்செயல்களையு முறைமையான செயலென்றேகொண்டு தம்மையு மெள்ளச் சிவன் கையிலே கொடுத்துப் பரங்கெட்டு விடுகையாலே யவர்கள் கர்த்தாவின் கைப்பட்டு முத்தியேபெறு நிற்பர்கள்,—ஐயா வுழவுந்தனிசுமொரு முகமேயாறு விழவுண்டோ சொல்லாயிது = ஐயனே ? யொருவனுக் குழவோரிடத்திலுந் தனிசோரிடத்திலு மாறு லொன்றுக்கொன் றுதவிகூடாது, அவை யிரண்டுமோரிடத்திலேயாறு விவன் சுத்தனுய்விடுகை சந்தேகமில்லை, அது போலச் செய்கிறசெயல்களி லகிதம் வாராமற் சிவனை நோக்கியே செய்தும் இந்தச் செயல்களுஞ் சிவன் செயலென்றேகொண்

டு தம்மையு மவன்கையிலேகொடுத்துப் பரங்கெட்டு விடுகை
யாலே யிவன் பெறுகிறமுத்திக்கு மிழவுண்டாகுமோ விதனை
விசாரித்துச்சொல்லாய். (௨௧)

இனிச் சரிதைகிரியைகளிலேநின்று சாதித்தவர்க்கும் பிற்
பட்ட சமுத்தி யிப்படிமுதிர்ந்த வல்வினைகூடாமல்யோகத்துக்
கதிகாரியானவனுக்கு யோகம் இருவிதமாகையினாலே விதனை
ச் சுருங்கக்கொண்டு ஆதாரயோகமென்றும் நிராதாரயோகமெ
ன்றும் உத்தமமானயோகங்களை யெடுத்தருளிச்செய்கிறார்.

ஆதார யோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே - யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளேயொன் றாம்.

இ-ள். ஆதாரயோக நிராதாரயோகமென மீதானத் தெய்
தும் விதியிரண்டே = ஆதாரயோகமென்று நிராதாரயோகமெ
ன்று மெல்லாவற்றிற்கு மேலானவிடமாகிய திருவடியிலே பக்
குவப்பட்ட ஆன்மாக்கள் பொருந்தும்படி சாதித்துக்கூட்டுகை
க்கு வேதாகமங்களிலே விதிக்கப்பட்ட இரண்டு பிரகாரமாயி
ருக்கும்.— ஆதாரத்தாக்கும் பொருளாலேயாக்கும் பொருளா
மொன்று = ஆதாரங்களிலே யொவ்வொரு திவ்யரூபங்களை
யாசாரியனிடத்திலேபெற்று அந்தத்தானங்களிலே தியானித்தி
ருக்கத்தக்க வாதாரயோகமொன்று.—ஆக்காப்பொருளே யொ
ன்றாம் = இந்த வாதாரயோகங் கைவந்தவாறே யாதாரங்களில்
பார்த்திருக்கும்படி கற்பித்துக்கொண்டு நிற்கிற சைதன்னிய
சொருபத்தைப்பாராதே பார்த்துநிற்கிறது நிராதாரயோகம். ()

இந்தத் திருவெண்பா வாதாரயோகத்துக்கு நிராதாரயோகத்துக்குங் காட்டாகையி லிதில் முன்னே சொல்லப்பட்ட வாதாரயோகத்தை மேல்விளங்க வருளிச்செய்கிறார்.

ஆக்கி யொருபொருளை யாதாரத் தப்பொருளை
நோக்கி யணுவி லணுநெகிழப் - பார்க்கி
லிவனுகை தானொழிந் திட்டேகமா மேகத்
தவனுகை யாதார மாம்.

இ - ள். ஆக்கியொருபொருளை யாதாரத்து = தேகத்திலே கற்பிக்கப்பட்ட வாறாதாரங்களிலே யாசாரியனருளிச்செய்த தொருதிவ்வியரூபத்தை யிதற்குப்பொருந்தின தோராதாரத்திலே தன்னுடையமனமானது விஷயங்களிற் பற்றும விதிலே பற்றும்படி கற்பித்துக்கொண்டு,—அப்பொருளைநோக்கி = அப்படி கற்பித்துக்கொண்ட ரூபங் கைவரும்படி நெடுநாள் தியானித்து,—அணுவிலணு நெகிழப்பார்க்கி லிவனுகை தானொழிந்திட்டேகமாம் = அந்தத்தியானங் கைவந்தவாறே யந்தவாதாரங்களைவிட்டுத் தன்னிலே யந்தப்பொருளைத் தியானிக்கி லந்தத் தியானத்தின் முறுகுதலாலே தியானிக்கிறோமென்கிற நினைவு கெட்டு அந்தப்பொருளொன்றுமேயாம்,— ஏகத்தவனுகையாதாரமாம் = இப்படித் தியானிப்பானுந் தியானிக்கப்படும் பொருளுமன்றியே தன்னைமறந் தந்தத் திவ்வியரூபந் தானாகநிற்கிறது தானே யாதாரயோகம். (உகூ)

இனி யிந்த வாதாரயோகந் தன்னைச் சூக்ஷுமமாகநுண்ணிதாகச்சாதிக்குமுறைமை யருளிச்செய்கிறார்.

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
கொண்டவனு மப்பரிசே கூறுபடுங் - கொண்ட
விருபொருளு மன்றியே யின்னதிது வென்று
ஒருபொருளே யாயிருக்கு முற்று.

இ - ள்' கொண்டதொருபொருளைக் கோடிபடக் கூறுசெய் யிற் கொண்டவனு மப்பரிசேகூறுபடும் = யாதொன்று தான்கை வரத்தியானித்தபொருளை நுண்ணிதாக நுணிக்கிப் பரமாணுவி லும் நுண்ணியதாகத் தியானிக்கி னிப்படித்தியானிக்கிறவனுந் தியானித்தபொருள்போலப் பரமாணுவினு நுண்ணியதாக நிற்ப ன்.—கொண்டவிருபொருளுமன்றியே யின்னதிதுவென்றவொ ருபொருளேயாயிருக்குமூற்று = இப்படி நிற்கவே தியானிப்பா னுந் தியானிக்கப்படு பொருளுமன்றியே யொருகற்பனையற வப்பொழுதேயந்த வொப்பில்லாதபொருள் தானேயா யிருக் கும். (உ௪)

இனி யிந்த நுண்ணியதான தியானமுங்கையவாதார யோகத்துக்கு முடிந்தயோகமுமா யுபாயயோகமுமா யிருக்கிற மந்திர யோகத்தை யருளிச்செய்கிறார்.

அஞ்செழுத்து மேயம்மை யப்பர்தமைக் காட்டுதலா
லஞ்செழுத்தை யாருகப் பெற்றறிந் - தஞ்செழுத்தை
யோதப்புக் குள்ள மதியுஞ் செழுவுமைகோன்
கேதமற வந்தளிக்குங் கேள்.

இ - ள். அஞ்செழுத்துமே யம்மையப்பர் தமைக்காட்டுத லால் = அகார-உகார-மகார-விந்து-நாதமென்கிற பஞ்சாக்கர மான பிரணவத்துக்குப் பிரமா - விஷ்ணு - உருத்திர - மகேஸ் வர - சதாசிவர் இவர்களை வருமதி தேவதையுமாய் - மந்திரமூர்த் திபமாய் - ஓங்காரமாயே நின்று நடத்துகையா லிந்தவைந் தெழுத்தே சத்தியையுடைய சிவன் திருமேனிகொண்டு நடத்து கிற முறைமை காட்டுதலால்,—அஞ்செழுத்தை யாருகப்பெற் றறிந்து = இந்தவைந்தெழுத்து மூலாதாரத்திலே அகாரமும் பிரமாவும் - நாபிக்கமலத்திலே உகாரமும் விஷ்ணுவும்-இருதய கமலத்திலே மகாரமும் உருத்திரனும் - கண்டத்திலே விந்து

வும் மஹேஸ்வரனும் - புருவமத்தியிலே நாதமும் சதாசிவமும்
இப்படிச்சுழிமுனைவழியாகநிற்கிற முறைமையைக் குருவுபதே
சத்தாலேபெற்று இந்தவைந்தெழுத்தையு மூலாதாரத்திலே பிர
மரந்திரத்திலே செல்லவுச்சரித்தா லிந்தப் பிரணவ சொரூப
முங்கலந்து விக்கிரங்களு மொருசீர்மையா யுனக்கு நாதரூப
மாய் நாதாந்தத்திலே யருளைப்பெறுவையென்று ஆசாரியனரு
ளிச்செய்யவறிந்து,—அஞ்செழுத்தை யோதப்புக்குள்ள மதியுங்
கெடில் = இந்த ஒங்காரமான வைந்தெழுத்து முச்சாரணையே
தத்திலே நாற்பத்தொன்பதா மெழுத்தும் பதினாலாமெழுத்துமா
றுமெழுத்து மிவை கூடினவிடத்திலே விந்துநாதமுமாகவிந்த
முறைமையிலே யைந்தெழுத்தாமென்றும் வேதாகமங்களிலே
விதிக்கையா லிந்தவைந்தெழுத்தையு முன்தத்துவமாக வுச்சரிப்
புக்கு விந்துநாதமுடிந்தவிடத்திலே கிஞ்சிஞ்ஞமான ஆன்ம போ
தமுங்கெடில்,—உமைகோன் கேதமறவந்தளிக்குங்கேள் = அப்
பொழுதே சத்திக்குக் கர்த்தாவாகிய சிவன் குற்றமறத்தோன்றியு
ண்மையானசொரூபத்திலேகூடி யிரக்ஷியாநிற்பன். இந்தவாதா
ரயோகத்தைத் தூலசூக்குமமாக மூன்றுபடியாகக் களைத்தவிது
பின்பு நிராதாரயோகத்துக்குப் பிராப்தனும்படி யெனவறிக ( )

இந்த வாதாரயோகங் கைவறச் சாதித்தவர்களுக்குமேல்
நிராதாரயோக மிருக்கும்படி யருளிச்செய்கிறார்.

ஆக்கப் படாத பொருளா யனைத்தினிலுந்
தாக்கித்தா னொன்றோடுந் தாக்காதே - நீக்கியுட
னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம்.

இ - ள். ஆக்கப்படாதபொருளாய் = ஆன்மபோதத்தாற்
கற்பிக்கக்கூடாத வர்த்தமாய்,— அனைத்தினிலுந் தாக்கித் தா
னொன்றோடுந்தாக்காதே = எல்லாப்பொருள்களிலுந் தான்கூடி

நிற்கச்செய்தே யவையொன்றோடுந்தான் தோயாமல்,— நீக்கி யுடனிற்கும் பொருளுடனே = ஆன்மாவுக்கு முத்திக்கு விரோதமாய் நீக்கத்தக்கபொருள்களையுந் தானேயறிந்து நீக்கியதாகியே யிப்படி நீங்கப்படாத வந்தஞானசொரூபத்துடனே,— நிற்கும் பொருளுடனாய்நிற்கை நிராதாரமாம் = தன்னுடையபோதத்தை யொழிந்து இதனைக்கூடித்தானு மந்தஞானசொரூபமா யொரு பற்றறநிற்கி லது நிராதாரயோகமாம். (௨௬)

இந்த ஞானத்திலே யிப்படி இரண்டறநிற்கில் சிவனை யுள்ளபடியே காணலாமென் றருளிச்செய்கிறார்.

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக்-காண்கின்றார்
காண்பானுங் காணப் படும்பொருளு மன்றியே
காண்கையினாற் கண்டனரே காண்.

இ - ள், காண்கின்ற தோர்பொருளைக்காண்கின்றயோகிகளேகாண்கின்றார் காட்சியறக் கண்ணுதலை = எல்லாவற்றையுமறிந்தறிவித்துநிற்கிற ஞானத்தை யதுகண்ணாகக்காண்கின்ற சிவயோகிகளே சிவனை யிரண்டறக்காண்கின்ற கலியாணர்கள்,— காண்கின்றார் காண்பானுங் காணப்படும் பொருளுமன்றியே காண்கையினாற் கண்டனரேகாண் = மாணவகனே, இப்படிக் காண்கின்றவர்கள் தன்னாலே காணப்படாதாகவும் காணப்பட்டபொருள் தனக்கு வேறாகவுங்காணாமலந்த ஞானமாகவே நின்று காண்கையாலே யிந்தஞான சொரூபமாகவுடைய சிவனை யப்பொழுதே பெற்று வேறற்றிருப்பார்கள். (௨௭)

இனி யிந்த நிராதாரயோகம் நிலைபெறும்படி யிதற்குபாயமான மௌனயோகத்தை யருளிச்செய்கிறார்.

பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான் - பேசாதே
யெண்ணொன்றும் வண்ண மிருக்கின்ற யோகிகள்பா
லண்ணின்றும் போகா னவன்.

இ - ள், பேசாமைபெற்றதனிற் பேசாமைகண்டனரைப் பேசாமைசெய்யும்பெருப்பெருமான் = வாக்கு மனக்காயங்கள் மூன்றினுமட்டுப்படாதது வாக்காலையாலும் மாற்றமுண்டேல் வஞ்சமுண்டென்கையாலும் பேசாமையாகிற பரமோபாயத்தை யாசாரியன் பக்கலிலேபெற்று அந்தப்பேசாமை தன்னுடைவாதனையிற்போகாமல் வாக்கு மனங் கிட்டப்படாத சிவனைத் தங்களிடத்திலே ஞானதிருஷ்டியாலேகண்டு கூடிச்செயலற்றிருக்கிற சிவயோகிகளைப் பின்பொரு சரீரங்கூடி வாக்குண்டாகாதபடி சனனத்தை வேரறுத்து விடாநிற்பன் சிவன்,—பேசாதே யென்றென்றும் வண்ணமிருக்கின்ற யோகிகள்பாலுங்கலின்றும் போகானுளன் = இப்படி யுரையிறந்து சிவனுடனே யிரண்டற்றிருக்கிற சிவயோகிகளிடத்துப் பரமேஸ்வரனெவ்விடத்திலும்வியாத்தமாயினு மவ்விடங்களிலே மறைந்தேநின்றுஇவர்களிடத்தே பிரகாசித்து இவர்க்கேயுடனுயிருப்பன்.— பேசாமையாகிற பரமோபாயத்தை யாசாரியன் பக்கலிலே பெற்றபடி யென்னெனில் தேகமுதலாயுள்ளவை யுனக்கு வேறென்று மிவற்றுடன் கூடினால் பிறப்புக்குக் காரணமான கன்மமுண்டாமென்று முனக்கு ஞானமே வடிவென்றுந் தீக்ஷையிலே நாமிசைவிக்க நீயுமிசைந்தாயென்றும் அல்லதூஉம் சரீரம் அத்தம் பிராணனிவை தத்தம் பண்ணினையென்றும் நமக்குத் தத்தம் பண்ணினபொருளை நீ விரும்பக்கடவை யல்லையேயென்று யாசாரியனருளிச்செய்ய விவனும் நமக்கில்லாதபொருள்களை விரும்பக்கடவோ மல்லவென்று அறுதியிட்டான். (௨௮)

நிராதாரயோகத்துக்குத் தூல்குக்கும பரமாகமென்று திருவெண்பா வருளிச்செய்து மேலிந்த பரமாகிய சிவனை யான்மபோத மிறந்தாலொழிந்து கூடவொண்ணாதென்று முறைமையைப் பல செய்யுட்களாலும் விளங்க வருளிச்செய்கிறார்.

ஒட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தெட்டற்று நின்ற விடஞ்சிவமா - நாட்டுற்று
நாடும் பொருளனைத்து நாலு விதமாகத்
தேடு மிடமன்று சிவம்.

இ - ள்: ஒட்டற்றுநின்ற வுணர்வுபதிமுட்டித் தேட்டற்று நின்றவிடஞ் சிவமாம் = ஒருவசைவின்றியே நின்ற பரம ஞானத்தை யதுகண்ணாகக் கண்டுகூடின ஆன்மா வந்தஞான மேயாய்த் தானுமசைவின்றியேநிற்கி லந்தஞானத்தில் நிலை யாலே தன்னுடைய வான்மபோதமொழிந் தந்த ஞானமாயே நின்ற விடந்தன்னிலே சிவமே பிரகாசித் தவனையு மொரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்கும்;—நாட்டுற்றுநாடும் பொரு ளனைத்து நாலுவிதமாகத் தேடுமிடமன்று சிவம் = இப்படி யொழிந்து சுட்டியறியத்தக்க வான்மபோதத்தாலே வெகுவித மாக வாராய்ந்தறியத்தக்கவிடம் பிரபஞ்ச வியாபாரமாகையா லவ்விடஞ் சிவரூபமாகாது, (உக)

இன்னமு மிதனை விளங்கவறியு முபாயமருளிச்செய்கிறார்.

பற்றினுட் பற்றைத் தொடப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - பற்றதனைப்
பற்றுவிட லந்நிலையே தானே பரமாகு
மற்றுமிது சொன்னேன் மதி.

இ - ள். பற்றி—மதி = ஆன்மாவுக்குக் கன்மமல்லதை வினை விக்கிறதேகங்களாகிய தனுகரண புவனபோகங்களினுள்ளே பற்றிக்கொண்டு நிற்கிற விச்சாஞானக்கிரியைகளை யொழிப்ப தான சிவபோகத்தை விளைக்கத்தக்க சிவஞானத்தை யதுகண் ணாகக்கண் டதனைக் கூடினேமென்று பிரியப்பட்டிருந்தறிகிற கருத்தையும் கைவிட லந்நிலைதன்னிலே யந்த ஞானத்துக்கு மேலான சிவந்தானே பிரகாசியாநிற்கும் அறுதியாகச் சொன்னே னிதனைப் புத்திபண்ணிக்கொள்வாய், (உஉ)

இன்னமு மித்தரிலைக்குக் குற்றம்வாராதபடி வேறுமொ ருபாய மருளிச்செய்கிறார்.

> உணராதே யாது முறங்காதே புன்னிப்
> புணராதே நீபொருவே நிற்கி - ணுணர்வரிய
> காலங்கள் சொல்லாத காலத் துடனிருத்திக்
> காலங்கள் மூன்றினையுங் கண்டு.

இ - ள். உணராதேயாது முறங்காதே யுன்னிப்புண ராதே நீ பொருவே நிற்கில் = நீ பொருளல்லவென்றறிந்து நீக்கின தேகாதிப்பிரபஞ்சங்களிலே வாதனைமிகுதியினாலே கூடிநின்று விகற்பியாதே யிந்த விகற்பங்கள் நீக்கின வவஸ்தைக ளிலுண்டான மயக்கங்களி லழுந்தாதே சுகசொரூபத்தை யுன்போதந்தாலறிந்து கூடவிசாரியாதே யிந்தக்குற்றங்கள் நீங்கும்படி யுனக்குக் கன்றுமா யுனக்கு மேலேநிற்கிற ஞானத் திற்கூடி அந்த ஞானந்தானாகவே நிற்கில், - உணர்வரிய காலங் கள்செல்லாத காலத்துடனிருத்திக் காலங்கள் மூன்றினையுங் கண்டு = யாவராலுங் குறித்தற்கரிய செல்காலம் வருகாலம் நிகழ்காலமென்று சொல்லப்பட்ட மூன்றுகாலங்களினும்படாம லிந்தக்காலங்களாலே விசேஷத்தை நடத்திக் காலசொரூபமா யிருக்கிற சிவத்துடனே நீயு மந்நக்காலங்கள் மூன்றையும் வேறாகக்கண்டுகூடி யந்தச்சிவமேயா யழிவின்றியேயிருப்பை

இந்த வத்தத்தினுண்மையு மிந்தவத்தத்தை பெறத்தக்க வர்களுண்மையும் விளங்க வருளிச்செய்கிறார்.

> அறிவறிவாய் நிறகி லறிவுபல வாமென்
> றறிவி னறிவவிழ்த்துக் கொண்டவ் - வறிவினராய்
> வாழ்ந்திருப்பார் நீத்தவர்கண் மானுடரின் மாணவகர
> தாழ்ந்தமணி நாவேபோற் றுன்.

இ-ள். அறி—தான் = மாணவகனே? ஆன்மா தன்னுடையபோதத்தையே பொருளாகக்கொண்டு நிற்கில் விகற்பிக்கிறதே சுபாவமாய் போதமும் பலவாய்ச்சிந்திந்து விடுமென்றும் இதனை யாசாரிய னநுக்கிரகத்தாலேயறிந்து தனக்குதியே பிராணனுப்பிற்கிற ஞானத்தைக்கூட்டித் தன்னுடைய ஆன்மசுபாவத்தையுமொழிந்து அந்தஞானமேயா யந்தஞானத்தி லைக்கியத்தாலே தனக்கின்றளவுங் கிடையாத பெருவாழ்வாகிய பரமானந்தசொரூபமாகிய சிவனைப்பெற்றுத் தானு மந்தப் பரமானந்தமேயா யிராநிற்பன். இந்த வாழ்வைப் பெறவுரியாரியாரென்னில்? மானுடப்பிறப்பி லுள்ளாரில் தேகாதிப் பிரபஞ்சங்களிலுள்ள ஆரவாரங்களைக் கைவிட்டு நிலத்திலேவைத்த மணியினது காவேபோலச் சலிப்பற்றிருக்கிற சீமான்கள், (௩௨)

இந்த நிராதாரயோகத்திலே நிகழ்வதொரு குறியுண்டென்று மிது நிகழ்த்தாற்செய்யு முபாயமு மருளிச்செய்கிறார்.

ஓசையெலா மற்று லொலிக்குந் திருச்சிலம்பி
னோசை வழியேசென் றொத்தொடுங்கி - யோசையினி
லத்தத்தா னத்தா னிறையுட னம்பலத்தே
வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து.

இ-ள். ஓசை—மகிழ்ந்து = இந்த நிராதாரயோகத்தைச் செய்கிற சிவயோகிகள் சிவனைப் பெறுகைப்பொருட்டாகத் தேகேந்திரியாதி யந்தக்கரணங்களாயுள்ள ஆரவாரங்களொடுங்கும்படி ஞானத்தினாலே தன்னுடைய விச்சாஞானக்கிரியைகளை யொழித்தவவதரத்திலே யானந்தநிருத்தம் பண்ணியருளாநின்ற தம்பிரானார் ஸ்ரீ பாதத்தில் பரவிந்துவென்கிற திருச்சிலம்பிற் பரநாதமென்கிற வோசைதோன்றாநிற்கும், அந்த வோசை வழியே நாடிச்சென்று கூடி யந்தவோசை முடிந்தவிடத்தே தன்னுடையபோதமு மொக்கமுடியில்தானே யப்பொழுதே

யந்தவோசை முடிந்தவிடமே யிடமாகவுடைய தம்பிரானார் காருண்ணியசத்தியுடனே யம்பலமாகிய ஞானப்பிரகாசத்திலே வத்திகனைப் பிரியத்துடனே கூடுவான். (௬௬)

இனித்தாமருளிச்செய்த நிராதாரயோகத்தினுண்மையைத் தம்மையொழியப் பிறருங்விளங்க வருளிச்செய்தபடி விளங்க வருளிச்செய்கிறார்.

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னன்றமையாற்
சார்புணர்த லேனே தியானமுமாஞ் - சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று.

இ-ள். சார்பு—பற்று = தெய்வப்புலமைத் திருவள்ளுவ தேவரும் " சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் ,, என்றமை யால் தனக்காதியே தாரகமாய்நிற்கிற திருவடிஞானத்தை யேதுகண்ணாகவறிந்து அதனுடனே யிரண்டறக்கூடிநிற்கில் மீண்டுமொரு சகமுண்டாகைக்குக் கன்மமுண்டாகாதென் றருளிச்செய்த பிரமாணப்படியே தனக்குத் தரிசனமான ஞானத்தைக்கூடி யசைவறநிற்கி லதுவே சிவத்தியானமாம். அந்த நிலையில் தியானிக்கிறோமென்கிற பாவனைகுலையி லப்பொழுதே சுகசொரூபமான சிவனைக்கூடி நன்றான சமாதி பரநாகாநிற்பன். இப்படிக்கூடின சிவயோகிகளுக்குப் பின்பு சகத்தையுண்டாக்கிற வாகாமிய கன்மமுண்டாகாது. (௬௭)

ஞானத்திலே சிவனைக் கூடவேணுமென்று சிரத்தை பண்ணுவாரை யந்தச்சிவமானது மவதிகூடாமல்வந்து கூடு முறைமை யருளிச்செய்கிறார்.

அன்றிவரு மைம்புலனு நீயு மசையாதே
நின்றபடி யேநிற்க முன்னிற்குஞ் - சென்று
கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு
மொருமகடன் கேள்வ னுனக்கு.

இ - ள். அன்றி—உனக்கு = அநாதியே யுன்னை மாறுபட்டு வருகிற விஷயங்களுள் கூடிநின்ற சலியாதே யவற்றை வேறாகக்கண்டு நீங்கின வுனக்குப் பிராணனாய்நிற்கிற ஞானமான தன்னுடனே யிரண்டறநிற்கு முறைமைபோல நீயு மதனைத் தரிசித்து அத்தஞானமாகவே இரண்டறநிற்கில், அப்பொழுதே யித்தஞானத்துக்கு முதலாகிய ஞேயசொரூபமாகிய சிவந்தோன்றுநிற்கும். இப்படித் தரிசனமானசிவனைக் கூடவென்று சிரத்தை பண்ணுமளவி லதற்குமுன்னே நம்முடைய கருத்தையு மழித்துத் தன்னுடனே யொரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்பன், ஒப்பில்லாதசத்திக்கு நாயகனான சிவன்.

ஆனா லான்மாவாலே சிவனைநினைத்துக் கூடலாமோ வென்னில்? சிவனை யான்மாவாலறியப்பட்ட பொருளல்ல வென் றருளிச்செய்கிறார்.

உண்டென்னி லுண்டாகு மில்லாமை யில்லையெனி
லுண்டாகு மானமையி லோரிரண்டா - முண்டில்லை
யென்னு மிவைதவிர்ந்த வின்பத்தை யெய்தும்வகை
யுன்னிலவ னுன்னுடனே யாம்.

இ - ள். உண்டெனிலுண்டாகு மில்லாமையில்லையெனி லுண்டாகும் = உண்டென்னி லுண்டாவதில்லை யென்றுமாம் இல்லையெனி லுண்டாவதில்லையென்றுமாம். எங்ஙனேயென்னில்? சிவனை யான்மபோதத்தாலறிந்து கூடலாமென்னில் ஆன்மபோதத்தாலறிந்து கூடத்தக்கப்பொருளாவது இந்திரஞாலம்போன்ற பிரபஞ்சமாகையாலுஞ் சிவன் வாக்குமனதீதனாகையாலு மிப்படிச்சொல்லு மவனிடத்திலுண்டாம் பொருளாவது சிவனைத் தெரியாததொன்றுமே. சிவனான்மாவாலறியப்படாத பொருளென்னில்? அவனிடத்திலு முண்டானது சிவனைத் தெரியாததொன்றுமே,—ஆனமையிலோரிரண்டாம்=

ஆனபடியினாலே யிப்படிச் சிவனைத் தெரியாதிருப்ப தொரு முறைமை யிரண்டுபிரகாரமாயிருக்கும்,—உண்டில்லையென்னு மிவைதவிர்ந்த வின்பத்தையெய்தும் வகையுன்னி லவனுன் னுடனேயாம் = இந்த பாவ அபாவமென்கிற விரண்டுவழியா லுஞ் சிவனைக் கூடிவொண்ணாதென் றறிந்து இவற்றை விட் டுத் தானாகவேநிற்கிற ஞானமாயேநின்று அளவிலாத பேரின் பத்தைப் பெறும்படி. சிவனிடத்திலே யன்பைவைக்கி லப் பொழுதேயொன்றாலும் பாவிக்கப்படாத சிவன் தன்னுடைய காருண்ணியத்தினாலே யுன்னை யிரண்டறக்கூடநிற்பன். நிரா தாரயோகமுற்றும். (௩௬)

இந்த நிராதாரயோகத்திலே மிகவும் வாதனையுண்டவர் களுக்கு ஒருபக்குவங்களிலே கூடாமைகூடினு லென்செய்வோ மென்ற மாணாக்கனை நோக்கிச் சிவஞானமாகிய தத்துவஞான மிருக்கும்படியை யருளிச்செய்கிறார்.

தூல வுடம்பாய முப்பத்தோர் தத்துவமு
மூல உடம்பா முதனான்கு - மேலைச்
சிவமாம் பரிசினையுந் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த
பவமாம் பரிசறுப்பார் பார்.

இ - ள். தூலவுடம்பாய முப்பத்தோர் தத்துவமும் = ஆன்மா கன்மபலத்தைப் புசிக்கும்பொருட்டாக அன்னமயத் தால் பரிணமித்த சரீரத்திலேநின் றிதுபரிணாமமாம்படி யிந்தச் சரீரத்துக் காரணமுமாம், ஆன்மாவிற்குத் தனுகரண புவன போகங்களுமாய்நிற்கிற வான்மதத்துவ மிருபத்துநாலும் புசி கைக்குக் காலநியதிகளுமாய், இச்சாஞானக்கிரியைகளை யேவிப் பிக்கைக்குக் கலைவித்தியாராகங்களுமாய், போகங்களிலேயழு ந்துகைக்குப் பிரகிருதியுமாய், மயக்குகைக்கு மாயையுமாய் நிற்கிற வித்தியாதத்துவமேழுமாகத் தூலவுடம்பிலேபொருந்தி

சோதிதனிற் பாதிதனைக் கூடிடலாம்பார் = உன்னைச் சகல யாணங்களிலே தன்னுடைக்கு அநாதியே ஆதரித்த விசுவத்திலே வாதனைப் படுத்திப்போதுகிற சித்தவிகாரத்தை ஞானத்தாலே யொழித்துச்சென்று ஒப்பில்லாத வந்த ஞானத்தைக்கூடி யிந்த ஞானசத்தியை யொருபாதியாகவுடைய சிவனை வாக்குமனைக் காணங்கள் கூடாதபடி யவன்திருவடியிலே யழுந்திநிற்கலாம்; இதனை விசாரித்துப்பார். (௯௪)

இந்த வுண்மையிலே கூடுமளவில் உயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றுவிடவேணுமென் றருளிச்செய்கிறார்.

சாம்பொழுது மேதுஞ் சலமில்லை செத்தாற்போ
லாம்பொழுதி லேயடைய வாசையறிற்- சோம்புதற்குச்
சொல்லுந் துணையாகுஞ் சொல்லாத தூய்நெறிக்கட்
செல்லுந் துணையாகுஞ் சென்று.

இ-ள். சாம்பொழுதுமேதுஞ் சலமில்லை செத்தாற்போலாம் பொழுதிலேயடைய வாசையறில் = இப்படிக்கொத்த சிவஞானிகளுக்குச் சரீரம்விடுவதாகிய சாக்காடு வந்தடுத்த காலத்து அந்தச் சிவரூபமாயே விடுவதொழிந்து சற்றுந் தப்புதல்களாலுள்ள வாசைவுகூடாது. இதற்குக்காரண மேதென்னில்; தேகமிற் றபொழுதே தேகமில்லாதவர்களைப்போலவாகியே வாதனைப் பட்டுப்போதுகிற வுயிர்ச்சார்பு பொருட்சார்புகளிற் பற்றடங்கலும் விடுகையால்.—சோம்பற்குச் சொல்லுந் துணையாகுஞ் சொல்லாத தூயநெறிக்கட் செல்லுந் துணையாகுஞ் சென்று = இப்படிச் சரீரநிற்கச்செய்தே யுயிர்ச்சார்பு பொருட்சார்பில் பற்றடங்கலும் விடுமாகில் விதுதானே பணியறுத்த லென்கிற நிலைக்குச் சொல்லப்பட்ட தொருதுணையாக நிற்கும்; இதுவொழிந்துவாக்காலுரைக்கப்படாத சுத்தநெறியாகிய வீட்டின்பத்திலே யழுந்துகிற வதாரத்துக்குந் துணையாகாநிற்கும்.

இந்தவவாவறுத்தலு மவனருளாலே வேண்டுமென் றருளிச்செய்கிறார்.

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது - வேண்டினது
வேண்டாமைவேண்டவரு மென்றமையால்வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால்.

இ-ள். வேண்டுங்கால் வேண்டும்பிறவாமை யென்றமையால் வேண்டினஃதொன்றுமே வேண்டுவது = தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை', என்றருளிச் செய்கையாலே தேகமுள்ளளவு மிவன் விரும்பாதொழினும் பிராரத்தத்தாலே யுள்ளது கூடுமாகையால் ஒன்றைவிரும்பவேண்டுமிடத்துப் பிறவாமை யொன்றுமே விரும்ப வேண்டுவது,—வேண்டினது வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டிடுக வேண்டாமை வேண்டுமவன்பால் = அந்தப் பிறவாமையானது தான்வேண்டாமை வேண்டவருமென்று பிரமாணமுண்டாகையாலே நாம் விருப்பந்தக்க கர்த்தாவின் பக்கலிலே பிறவாமைக் குற்பத்தியான அவாவறுத்த லொன்றுமே வேண்டிக்கொள்ள வேண்டுவது. இந்த வவாவறுத்த லுண்டாகவே யந்தப் பிறவாமைதானே யுண்டாம்.

இப்படி யுயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றற்றதே சமாதிமானாகவும் நிற்கச்செய்தே சமாதியிலேகூட விசாரித்தவர்களுக்குச் சமாதிகூடாமல் நினைவுகூடி யிதனாலே சநநங்கள் கூடுமுறைமையை யருளிச்செய்கிறார்.

அரண வுணர்வுதனி லவ்வுணர்வை மாற்றிற்
கரணமுங் காலுங் கைகூடும் - புரணமது
கூடாமை யுங்கூடுங் கூடுதலுங் கூட்டினுக்கு
வாடாமை யுங்கூடும் வந்து.

இ-ள். அரணவுணர்வுதனி லவ்வுணர்வைமாற்றிற் கரண
மூங்காலுங்கைகூடும் = இந்திரிய வேடர்சென் றிடுகொள்ளப்
படாத புகலிடமான திருவடிஞானத்திலே தன்னுடைய போத
த்தை யொழிக்க விசாரிப்பானாகில் அந்தவவஸ்தாத்திலே முன்பு
தான்பற்றிப் போந்த வுயிர்ச்சார்பு பொருட்சார்பின் வாதனையா
லே சொரூபமானது கைகூடாமல் மனாதிகளும் பிராணவாயுவு
ங்கூடி மீண்டு விடயாதிகளிலே சலிப்பினுஞ் சலிக்கும்.—பரண
மது கூடாமையுங்கூடும் = இது கூடாமற் பிரிந்து மயக்கம்வந்
து கூடினுங்கூடும்,—கூடுதலுங் கூட்டினுக்கு வாடாமையுங்கூ
டும் வந்து = இப்படிமயக்க விகற்பங்கூடிப்போதவே யெடுத்த
தேகம்போனாலு மிந்தப்பற்றுக்களாலே மீண்டுமொரு தேகம்வ
ந்து கூடாநிற்குமாதலா லிது கூடாதபடி யுயிர்ச்சார்பு பொருட்
சார்புகளில் பற்றுக்களையற்றே சுசுரூபத்திலே பொருந்தி நிற்பா
யாக. (௪௧)

சமாதிபரானவனுக்கும் பற்றுக்களாலே சமாதி கூடாமல்
சனனங்கள் கூடுமாகில் சிவதீக்ஷையும் தரிசனமில்லாத வான்மாக்
கள் மரியாதையோ விவனுக்குப் பெற்றுள்ளதென்று கேட்டமா
ணாக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்,

இன்றிங் கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுஞ்
சென்று தொடருமவன் சென்றிடத்தே-யென்றுந்தான்
றீதுறுவ னானாற் சிவபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனோ மற்று.

இ-ள். இன்றிங் கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுந்
சென்றுதொடரு மவன்சென்றிடத்தே = இப்பொழு திந்தத் தே
கத்திலே நிற்கச்செய்தே கூடின வசேதனமான புண்ணியபாவங்
களிரண்டு மிவன் பின்னொருதேகத்தை யெடுத்தபொழுதே
யொக்கச்சென்று கூடாநிற்கும்,—என்றுந்தான் றீதுறுவ னானாற்

அ.:பதிதான் கைவிடுமோ யாதொரு கூறல்லதே மற்று = ஒரு
வன் சிவநிலையையும் சிவஞானமும்பெற்றுத் தெளிந்திருக்கச்செ
ய்தேயும் முன்புபோல வுயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றுவிடா
மற் சகசங்கூடிற்றாயினுங் கர்த்தாவாகிய சிவனு மிவனைக் கைவி
டாமல் முன்புண்டானவனம் பற்றுகைக்குத் தக்கபற்றைக் கூட்
டித் தொலைப்பித்து முற்சகத்திலே சாதித்தருளையிலே வந்
தெடுத்துக்கொண்டு திட்டையிலேகூட்டிச் சாயுச்சியத்தைக்கொ
டாநிற்பன். இவன் காருண்ணிய சத்தியினை யெப்பொழுதுந்த
ன்னிடத்திலே யுடையனாதலால்.

இன்னமு மான்மாக்களுடைய பெத்தமுத்தி யிரண்டிலுமபி
வர்களைப் பாதுகாத்து நடத்துகை யநாதியே கர்த்தாவுக்குக் கட
மையான முறைமைதோன்ற வருளிச் செய்கிறார்.

அநாதி சிவனுடைமை யாலெவையு மாங்கே
யநாதியெனப் பெற்ற வனுவை - யநாதியே
யார்த்த துயரகல வம்பிகையோ டெவ்விடத்துங்
காத்த லவன்கடனே காண்.

இ-ள். அநாதி சிவனுடைமையா லெவையுமாங்கே = அ
நாதியானசிவனுக்கு எண்ணிறந்த வான்மாக்களு மடிமையாகை
யாலே யிந்த வான்மாக்களு மிப்படியே.—அநாதியெனப் பெற்
றவனுவை யநாதியே யார்த்ததுயரகல = இப்படி யநாதியான வா
ன்மாக்களை யநாதியே பெந்தித்துக்கொண்டு நிற்கிற பாசமான
து விட்டு நீங்கும்படி,—அம்பிகையோ டெவ்விடத்துங் காத்த
லவன் கடனேகாண் = விட்டு நீங்காத சத்தியுடனே பெத்தத்தி
லுங் கூடிநின்று தொலைப்பித்து முத்தியிலுமீண்டு மொருடம்பு
கூடாதபடி திருவடியிலே கூட்டிக்கொள்ளுகிற விது மானைவ
ய்னே? யவனுக்கு மநாதியே முறைமைகாண்.

தேகாதிபாச மகாதியாகில் முத்தியிலும்போகாதே யென்று சந்தேகித்தமாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

தம்மிற் சிவலிங்கங் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன் பான் மஞ்சனநீர் தாமாட்டித் - தம்மையொரு
பூவாகப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தா
லோவாமை யன்றே யுடல்.

இ - ள்: தம்மிற் சிவலிங்கங்கண்டு = ஆசாரியனாலே தனுகரணபுவனபோகங்களை விட்டுநீங்கித் தன்னைத்தரிசித்துத் தன்னிடத்திலே தனக்குயிரானானுமாய்ச் சிவனுக்கடையாளமுமாய் நிற்கிற ஞானமாகிய சிவலிங்கத்தைத் தரிசித்து,—அதனைத்தாம் வணங்கி = அந்தச்சிவலிங்கத்தைத் தம்முடைய போதம் விட்டுப்போம்படிச் சாத்தமாகிய வணக்கஞ்செய்து,—தம்மன்பான் மஞ்சனநீர்தாமாட்டி = இப்படிப்பெறுதற்கரிய பேற்றைப்பெற்றோமென்கிற சிரத்தையாகிய சலத்தாலே திருமஞ்சனம் பண்ணி,—தம்மை யொருபூவாகப் பூவழியாமற்கொடுத்து = இப்படிச்செய்கிற வான்மசொரூபத்தை யொப்பில்லாத் திருப்பள்ளித்தாமமாக மயங்காமற்சாத்தி,—பூசித்தால் = இப்படிஞானத்திற் சரிதை கிரியா யோகங்களினாலே உள்ளே சிவனைக்கண்டைக்கியஞ்செய்கிறவிது—ஓவாமையன்றேயுடல் = செம்பூறின பதத்திலேகூடின குளிகையினது ஐக்கியத்தாலே யநாதியான காளிதமும் செம்பொன்னு மூறுமூறீங்க மாற்றுப்பிரகாசித்துப் பின்பிவையென்றுங் கூடாதவாறுபோல வொருவன் தன்னுடைய சத்திநிபாதத்திலுண்டானவன்பின்மிகுதியாலே தேகேந்திரியாதிகளை நீங்கின தன்னுடைய வுண்மையான சொரூபத்தைத் தனக்கேற்பப்பெற்றுத் தன்னிடத்திலே சிவனைக் கண்டைக்கியஞ்செய்து வாதனைவிட்டால் பிராரத்தநாசம்பிறந்து தேகம் விட்டபொழுதே திருவடியிலே யிரண்டற்றுவிடுமதொழிந்து மீண்டுந் தேகமெடுக்கவல்லவே. (௪௪)

அஞ்ஞானபாசம்விட்டு நீக்குமாகில் ஸாதியென்று ஆன்மாவுக்கு வழியுண்டாமோவென்ற மாணாக்கனை நோக்கிப் பாசத்திலேவிரிந்த போதத்தைவிட்டுத் தன்னைத் தனக்கறுதியாகப் பெறுகிறதொழிந்து இவனுக்கழிவில்லையென்றும் பாசத்தை நீங்கும்பொழுதே யிவனும் வியாத்தனென்னு முறைமையுமருளிச் செய்கிறார்.

தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லைத் தானென்றுந்
தன்னைத்தான் பெற்றவன்று ரொன்னிற்-றன்றலே
யெல்லாந்தனுட்கொண்டு கொண்டதனைக்கொள்ளாதே
யெல்லாமாய் நிற்கு மிவன்.

இ - ள். தன்னைப்பெறுவதன்மேற் பேறில்லை = ஒருவன் பெறத்தக்க பேறுகளிற்றானழிந்துபோகாம லருளாலே தன்னை யுறுதியாகப்பெறுகிற பேற்றின்மேல் வேறுபேறில்லை,—தானென்றுந் தன்னைத்தான்பெற்ற வன்றுரொன்னில் = தானென்றுந் தன்னைத்தான் பெற்றவனென்று மிரண்டாக விவகிடத்திற் சொன்ன தாரையென்னில்,—தன்றலேயெல்லாந் தனுட்கொண்டு கொண்டதனைக்கொள்ளாதே யெல்லாமாய்நிற்குமிவன் = ஆன்மா தன்னையறியாமல் முன்பு பாசமேயாய்நின்ற முறைமை யொழிய வருளாலே பரத்தையுமறிந்து பாசத்தையுமறிந்து இந்தப்பாசத்தையொழிந்தது போல இதையுமொழியவிட்டுத் தன்னுடையபோதஞ் சலியாமற் பூரணமாய்நிற்கவே யெல்லாவடிவுகளும் தன்னுடைய வடிவாய்த்தானே யிந்தவண்டாண்ட பகிரண்டத்துக் கெல்லாங் கர்த்தாவாய்நிற்ப னிவன்றான். (௬ரு)

இத்தவான்மபோதந்தானே பொருளாயிற் ஞானயோகஞ் சிவயோகமென்று சொல்லவேண்டுமோ வென்ற மாணாக்கனை

யிந்தவான்மயோகந்தானே ஞானயோகமாம்படி யருளிச்செய்து இந்த ஞானயோகந்தானே சிவயோகமாம்படி யருளிச்செய்கிறார்.

துன்பமா மெல்லாம் பரவசனுய்த் தான்றுவளி
லின்பமாந் தன்வசனுய்த் தானிருக்கி - லென்பதனு
லின்வசனு யேயிருக்கி னின்னுடனு னேரிழையா
டன்வசனு யேயிருப்பன் றுன்.

இ - ள். துன்பமாமெல்லாம் பரவசனுய்த் தான்றுவளில் = ஆன்மா தானே கர்த்தனு யெல்லாவற்றையு மறிகிறுனுக நின்று விகற்பிக்கி லிம்மை மறுமை யிரண்டுக்கும் பிரயோசனமாகவுள்ளது கிலேசமொழியவேறில்லை, — இன்பமாந் தன்வசனுய்த்தானிருக்கில் = ஆன்மா கிரிவுகாரக்ஷியான பிரபஞ்சசீதியை விட்டுநீங்கித் தனக்கு உண்மையான சைதன்னிய சொரூபமா யிதிலே நிருவிகாரமாயிருக்கி லிந்தவான்மயோகந்தானே ஞானயோகமுமா யிந்தவழியிலே சுகரூபம் வந்து பிரகாசியாநிற்கும், — என்பதுனுல் = என்று வேதாகமங்களுக்குங் கருத்தாகையால், — நின்வசனுயேயிருக்க நின்னுடனுனேரிழையா டன்வசனுயே யிருப்பன்றுன். = மாணவகனே ? இந்திரிய வசனுகாமல் நீயு முன்னையொழிந்த பொருள்க ளெல்லாவற்றையு முனக்கு வேறென்றறிந்துவிட்டு நீங்கி நிருவிகாரமான ஞானமே சுகரூபமாயிருக்கி லப்பொழுதே யந்த ஞானசத்தியின் வசமாயிருக்கிற ஞேயசொரூபனுனசிவ னுன்னைக்கூடி வேற்ற நிற்பன். (௫௬)

இந்தச் சிவயோகத்திலே யிடைவிடாம லநுபவித்தலாவது இந்தக் கருவி கரணங்க ளொருகாலமும் கூடாதபடி யருளிலே நிற்க வல்லவர்களுக்கேயென்றுந் தோன்றவருளிச்செய்கிறார்.

செந்தாரோ கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனு
லொத்தாரோ யோகபா ரானவர்க - ளொத்தாலு
மாராத வக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
போராமற் செல்லாதன் பின்.

இ-ள். சேர்ந்தாரே கெட்டார் காரணங்கள் = அந்தக்கரணங்கள் கோராக வஞ்சியாதபடி ஞானத்திலேகூடி மடிந்த வான்மாக்களே சகமரணங் கெட்டவர்கள்.—சேர்ந்ததேறுமொத்தாரே யோகபரரானவர்கள் = இந்த ஞானத்தி னெழுந்தத்தினுலே பிரகாசித்த சிவரூபத்திலே பொருந்தி யதுவாய் நின்றவர்களே சிவயோகத்தில் தற்பரமானவர்கள்.—எத்தாலு மாராத வக்கரணத் தாற்புண்டிங் கல்லாதார்போராமற் செல்வரதன்பின் = இப்படிச் சிவயோகத்தில் பொருந்தப்பெறாத பாக்கியவீனரெத்தாலுந் திருந்தியடையப்பெறாத கருவி கரணங்களாலே கட்டுண்டு இவற்றின் பின்னே தப்பாமலே வரச்செய்து சனன மரணங்களிலே சென்றுழலாநிற்பர். (௬௭)

இந்தக்கருவி கரணங்க ளொருகாலமும் பொருந்தாதபடி நிற்கின்றசிவயோகிகள் பெருமையிருக்கும்படி யருளிச்செய்கிறார்.

கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங்
கண்ணுங் கருத்துங் களிகூர - நண்ணி
வடமடக்கி நிற்கும் வடவித்தே போல
வுடனடக்கி நிற்பர்கள்கா ணுற்று.

இ-ள். கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங் கண்ணுங் கருத்துங் களிகூர நண்ணி = யாவர்க்குங் கண்ணுக்குங் கருத்துக்கு மளவுபடாத தொரு பேறேயினுஞ் சிவஞானிகள் சிவனுடனே யிரண்டறக்கூடிப் பரமானந்தமே சொரூபமாயிருக்கையாலு மவர்கள் கண்ணில் விகாரமில்லையாகையாலு மொடுங்கினும் விழிப்பினும் பொருளேயாயவர்கள் கண்ணுக்குங் கருத்துக்குங் களிகூறப்பொருந்தி,—வடமடக்கி நிற்கும் வடவித்தே போல வுடனடக்கி நிற்பர்கள்கா ணுற்று = அநேக தூரம்படர்ந்ததோராலின் பரிணாமமெல்லா மொருகடுகையொத்த வித்திலேயடங்கின தன்மைபோல் அளவிடப்படாத வத்துவாயினுந் தன்

களுநீர்மை யடக்கித் தன்னொளிமைச் சுபாவத்தைவிட்டு இந்தச் சிவ மாகியே நில்லாநிற்பார்கள். (௬௮)

அளவிடப்படாத பொருளை யோருடம்பிலே நிற்பானொரு வனடக்கிக் கொண்டிருந்தபடி யெப்படி யென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
யூனகத்தே யுன்னுமதெங் கென்றனையே - லேனகத்து
வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா
மாதனமே யன்றோவ தற்கு

இ-ள், வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை யூனகத்தே யுன்னுமதெங் கென்றனையேல் = ஆகாசமுதல் பிருதிவி யீறாகவுள்ள பஞ்சபூத பரிணாமமான பிண்டப் பிரமாண்டங்களு மிவற்றிற்குக் காரணமான தத்துவங்களு மிதற்குட்பட்ட வான்மகோடிகளுந் தானேயாய்ப் பூரணமாய் நிற்கிற சொரூபத்தை யொருசரீரியானவன் தனக்குள்ளேயடக்க நினைத்தபடி யெப்படியென்னில்,—ஏனகத்து வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா மாதனமேயன்றோ வதற்கு = மாணவகனே ? பிருதிவி முதலாக முன் சொல்லப்பட்டவை யெல்லா மந்தப் பொருளுக் காதனமாத்திர மல்லவோ வாகையாலுமப் பொருளை யாசாரியனாலே கூடப்பெற்றவர்களிடத்தி லந்தப்பொருளின் வியாத்தமெல்லா நின்று பிரகாசிக்கையாலும் ஞானதிருஷ்டி யில்லாதவர்களுக்குச் சரீரிகள் போலத்தோற்றினுமவனந்தவன்மையேயாய் நிற்பானாகையாலு மென்போல்வாரிடத்து மநாதியே கூடிப் போந்த வாதனையைப் போக்குகைக்கு இந்தநிலையே காண் முறைமையாகவுள்ளது. (௬௯)

இந்தப்பொருளை யுள்ளேகண்டு வாதனை தீர்ந்திருப்பார் போல் புறம்புங்கண்டு வாதனை போக்கலாமோ வென்ற மாணாக்கனை நோக்கியருளிச்செய்கிறார்.

கல்லின் மயிரிற் கதிர்வாளிற் சாலையினில்
வல்லுப் பலகையினில் வாதனையைச் - சொல்லு
மயமார்க்கத் தாலவர்கள் மாற்றினர்கா ணையா
சகமார்க்கத் தாலன்றே தான்.

இ - ள். கல்லில்—தான்=கல்லிலும் மயிரிலு மொளியை யுடைய வாளிலுஞ் சாலைக்கல்லிலு மெத்தைப்பலகையிலுந் திருக்குறிப்புத்தொண்டர் முதலாகவுள்ள நாயன்மா ரொவ்வொ ருதொழில்களைச் செய்யச்செய்தேயு மவற்றைச் சொல்லப்பார்க் கிலவர்களுஞ் சிவனளவி லொருவழிபட்ட கருத்தினாலே யல் லோ வவர்களுக்குப் புறம்பேயும் பிரகாசித்துப் பிறப்புக்கு வித் தான வாதனையைப்போக்கினார்கள், ஐயனே? இந்த முறைமை பொய்யான வுலகநெறியல்லவே. (௫௰)

இந்த விரண்டுவகையாலு மெதிலேநின்று வாதனை போக் கலாமென்ற மாணாக்கனை நோக்கி இதனை யிரண்டுவகையாக நீ கருதவேண்டாமென்று மொருபடித்தாகக் காணவேணுமெ ன்று மருளிச்செய்கிறார்.

உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே
வள்ள லெழுந்தருளு மாதிறனுங் - தெள்ளி
யறிந்தொழிவா யன்றியே யன்புடைமை யாயிற்
செறிந்தொழிவா யேதேனுஞ் செய்.

இ - ள். உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே வள்ளலெழுந்தருளு மாதிறனும் = உள்ளேகாண வென்றும் புறம்பே காணவென்று நீ விசாரித்த விடத்து உன்னுடையபோ தத்தையுஞ் சரீரத்தையு முன்புபோலே கைவிடாததுகொண்டு இரண்டுபட்டுத் தோன்றினதொழிந்து அந்தப்பொருளுக்குத் தனித்தனி ஓரிடமா யிராதாகையால் பிண்டப் பிரமாண்டங் களையுந் தத்துவங்களையு மான்மபோதத்தையும் ரூபதரிசனசுத்தி

யாலே யருளாக்கி யொருநீர்மையான ஞானமேயா யுன்னினை யொழியநிற்கி லப்பொழுதே யுன்னிடத்திலே பரமசிவனானவர் தன்னுடைய காருண்ணிய சத்தி யுடனே கைம்மாறு கருதாமல் வந்து தோன்றி யுன்னை ஒருதன்மையாக்கிக்கொண்டு தானேபிர காசியாநிற்பன்—தெள்ளியனிற் றொழிவாய்=இதனைச் சிவயோகத்தின் கண்ணே நின்றாய்ச் சதுபவிக்கிறே மென்கிற தன் மையுங் கைவிட்டு நின்றாயாதல்,—அன்றியே யன்புடையையாவிற் செறிந்தொழிவாய் = இந்த முறைமையல்லவாகிற சிவனுடைய வுண்மையைக் கேட்குதல் நினைக்குதல் காண்குதல் செய்தபொழுதே யுன்னுடைய கருத்தை யுருக்குவதான தொரு பேரன்பு கூடுமாயி னதனாலே யுன்னுடைய கருத்தானது நேராக வழிந்து சிவனுடனேயொரு நீர்மையாய் விட்டாயாதலால்,—ஏதேனுஞ்செய்=இந்த ஞானயோகத்திலும் பத்தியோகத்திலு மிவையிரண்டினுங் கூடின தொன்றைச் செய்வாயாக. (௫௪)

இனியிந்தப் பத்தியோகந்தா னெப்படியென்ற மாணாக்கனை நோக்கிப் பத்தியிலேநின்று பெற்றவர்கள் பெருமை இப்படியென் றருளிச்செய்கிறார்.

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக் - கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றாரறிய மன்பன் றது.

அவிழ்ந்த துணியி லவிழ்ந்த வவிழை
யவிழ்ந்த மனத்தா லவிழ்க்க - வவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேர்ந்தனார் செய்த செயல்.

சாந்த திருமுலைக்கே தாய்மசிவ ஞானஞ்
சாந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்-சாந்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு.

அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழிய - வன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்.

இ - ள். இப்படிப்பட்ட பத்தியோகத்திலே விட்டகுறைகளாலே சிவனுடைய வுண்மையை நினைத்தல் கேட்டல் காண்குதல் செய்தபொழுதே கரையழிந்த வன்பினாலே யொருபலத்தையுங் கருதாமலத்து வன்புதானே தங்களுக்குச் சுரூபமாகநின்று தங்களை மறந்து பேறுபெற்ற கண்ணப்பநாயனார் முதலாயுள்ள நாயன்மா ரன்பையொழிந்து தீர்த்தங்களுந் தியானங்களு மர்ச்சனைகளு மிப்படி யவதிகொடாமல் பேறுகூட்டமாட்டா தாகையா லவையுமிந்த வுந்தமமானபத்தி கூட்டுதற்குவித்தாம் இதனைச்செய், (௫௨)

இனியாவர்க்கும் பத்திகூடுதற் கரிதென்று முறைமையிலே கூடத்தக்க ஞானயோகமே வாதனையைத் தீர்த்து முத்தியைத் தருவதென்று முன்னே பலபிரகாரங்களாகச் சொல்லப்பட்ட வுபாயங்களுந் தாற்பரிய மிதுவேயென்று மற்றுள்ள சமயிகள் தாற்பரியங்களிந்த வுண்மையைக் கூடமாட்டாதென்று மெல்லாவற்றையுந் தொடுத்து வாதனை தீர்ந்திருக்கைக்கு ஞானயோகமே பொருளென்று துணிய வருளிச்செய்கிறார்.

எல்லா ரறிவுகளின் றாற்பரிய மென்னறிவு
செல்லு மிடத்தளவுஞ் சென்றறிந்தேன் - வல்லபடி
வாதனையை மாற்றும் வகையிதுவே மற்றவற்று
ளேதமறக் கண்ட விதம்.

இ - ள். எல்லார் - விதம்=மாணவகனே? இந்த நூலிற் சொல்லப்பட்ட வுபாயமொழிந்து வேறு மறியவேண்டுவ துண் டோவென்று நீ சந்தேகிக்க வேண்டுவதில்லை, எல்லாச்சமயங்க ளினு மெல்லாச் சாத்திரங்களினு முண்டான தாற்பரியார்த்தங்க ளொன்று லாராயத்தக்கவளவு மாராய்ந்தறிந்தேன், அவையெல் லாவற்றினும் வாதனையைப் போக்கி முத்தியைக் கூட்டுகைக்கு முறைமையாகக் கண்டது சைவசித்தாந்தத்தில் சொல்லப்பட்ட விந்தஞானயோக மொன்றுமேயாதலா லிந்தவுறுதியெல்லாக் குற்றங்களுந் தீருகைக்குக் கண்டவர்த்தமாதலின் நீயுமிந்த மு றைமையிலே சாதிப்பாயாக, (௫௯)

இனியிந்த வந்தத்தைப் பெறுதற்கரிய முறைமையும் பெற் றால் நிற்கவரிதான முறைமையு மருளிச்செய்கிறார்.

வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெஞ்ஞானம்
வித்துமத னங்குரமு மெய்யுணரில் - வித்ததனிற்
சாறுமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேறுமை யாலற்றார் பேறு.

இ - ள். வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெய்ஞ்ஞா னம் = நெல்லுமுதலான பலவித்துக்களு மங்குரிக்கும்பொழுது அங்குரத்துட னிரண்டுபட னில்லாமலந்த வங்குரமுள்ளளவும் வியாத்தமாய் நின்று பரிணமித்து இந்தப் பரிணாமத்தைப் பிர யோசனங் காரணமாக வங்குரித்த நாண்முத லாசரித்துக்கொ ண்டிருந்த ஆன்மாக்களுக்குப் பரிணாம முதிர்ந்த அந்தக் காலங் களிலே வித்தானது வெகுவிதமாகப் பலித்தவர்கள் தாகங்களை க்ஷமிப்பித்துச் சந்துஷ்டிப் பிறப்பிக்க வின்பத்தையே கொடா நிற்கும் அதுபோல் வித்தான சிவமும் ஆன்மாக்களுக்குக் கன்ம வொப்பு மலபாகமு முண்டான வவசரத்திலே காருண்ணியமே திருமேனியாக வெழுந்தருளிவந்து பக்குவப்பட்டவான்மாக்களை

த்தம்முடைய ளவிலே நினைக்கும்படியுந் திருவுள்ளத் தடை
த்து இவர்களிடத்திலே யாசிரியே யெழுந்தருளிநின்ற வுண்மை
யையும் பிரகாசிப்பித்து இந்த வுண்மையான ஞான சுசுரூபத்
திலே யான்மாக்களையுங் கூட்டிநிறுத்தி யிந்த நிலையின் முதிர்ச்சி
யாலே தன்னுடைய சுசுரூபமான பேரின்பத்திலே யிவர்களநு
பவித்துச் சம்பூரணத்தை யடையும்படி வெகுபலமாகக் கொடா
நிற்கும்,—வித்துமத னங்குரமு மெய்யுணரில்=இந்த வித்தாகிய
சிவனுண்மையு மங்குரமாகிய ஞானத்தினுண்மையு முணர்வா
ருணருமிடத்து,—வித்ததற் காணாமையா லதனைக் கைவிடுவர்=
நெல்லு முதலான வங்குரங்களை யிந்தவித்தின் பரிணாமமென்று
மிந்தப் பரிணாமங்களிலே யந்தவித்துக் கலந்துநிற்குமென்று மங்
குரத்தின் பரிணாம முதிர்ந்தபொழுதே யந்தவித்தே வெகுபல
மாகப் பலிக்குமென்று மிதனை யாசரித்துக்கொண்டிருந்துபலிப்
பிக்குங் காலங்களிலே பலங்கொள்ளவறியாம லங்குரம் பரிண
மிக்கிற காலத்திலே வித்துதோன்றாததுகொண்டு இந்தப் பரிணா
மத்திலேயோர்வித்துங் கண்டிலோமென் றந்தப் பரிணாமத்தையுங்
கைவிட்டு அதினுடைய பிரயோசனமு மிழந்துபோகிற புத்தரை
ப்போலத் தரிசித்து ஞானத்திலேநின்று சாதித்து இந்த ஞான
மேயாய் இந்த ஞானத்துக்கு முதலாகிய சிவனைக்கூடிப் பே
ரின்பத்தையே பெறமாட்டாம லந்தஞானத்தைத் தரிசித்தவள
விலே யிவ்வளவே பிரயோசனமென்று சிவசுரூபத்தி னுண்மை
யை யறியாம லந்தஞானத்தையுங் கைவிட்டுப்போன பாக்கிய
ஹீனர் சிவயோகத்தை யிழந்துபோகாநிற்பர்கள்,—கண்டவர்
கள் பெறாமையாலற்றார்பேறு=அந்த நெல்லுமுதலான வங்கு
ரங்களிலே வித்துகலந்து நிற்குமென் றறிந்தவர்களும் பயன்படு
மளவு மந்தப் பரிணாமத்தை யாசரித்துக்கொண்டிருந்து பிரயோ
சனப்படுங்காலங்களிலே பிரயோசனங் கொள்ளமாட்டாமல் பரா
முகத்தாலே யதின் பிரயோசனத்தை பிறர்கொள்ள தாமிழந்து
போகிற பாக்கிய ஹீனரைப்போலச் சிவனைத்தாரமாகவொழிந்து

ஞானம்பிரகாசியாதென் றறிந்தவர்களுமந்தஞானத்தைக் கைவி
டாமனின்று விசுவத்தைக் கைவிட்டு மந்தஞானமாகவே சாதி
த்துஇந்த ஞானத்தி னைக்கியத்தாலே சிவனைப்பெற்றுப் பேரின்
பமே யநுபவித்துத் திருப்தியடையமாட்டாமல் வாதனையின்
மிகுதியாலே பராமுகமாய்த் தாம்பெற்ற ஞானத்தினைப் பின்
னுபவிக்கலாமே யென்றும் சித்ததத்துவம்பெற்று மிருப்பாரைப்
போல நெகிழ்ந்திருந்தவர்கள் தமக்குப்பேறான சிவயோகத்தை
யிழந்துபோகாநிற்பர்கள் ஆதலால்நீயுமிந்தத்தத்துவத்தைப்பெற்றோ
மென்று கர்வியாய்ப்போகாதே யிடைவிடாமல் ஞானமாய்நின்
றே சாதித்துப் பின்பிந்த ஞானத்தி னுறுதலாலே ஞானமான
துந் தலைமறையப் பலிக்கத்தக்க சிவயோகத்திலேயழுந்தி யநு
பவிப்பாயாக. இதற்குப்பிரமாணம் திருமந்திரம்—"வித்தினில
ன்றி முளையில்லையம்முளை, வித்தினிலன்றி வெளிப்படுமாறில்
லை, வித்துமுளையு முடனல்லவேறல்ல, வத்தன்மைத்தாகு மற
நெறிதானே" (௫௭)

இந்தச் சிவரூபந்தன்னை யெப்படி யறிவேனென்ற மா
ணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று - நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான்.

இ - ள். ஒன்றன்று = எல்லாப் பொருள்களுங் கலந்த
விடத்திலே யுதிப்பதொன்றாகையாலே யெல்லாப்பொருளுந்
தானா யொன்றாயிருப்பதுமன்று,—இரண்டன்று = தன்னிடத்
திலே சுட்டறிவினாகிற வத்தமாகையினாலே யிரண்டாயிருப்ப
துமன்று,—உளதன்று = வாக்குமனாதீதமா யிருப்பதொன்றாகை

யாலே பிரத்தியக்ஷமா யிருப்பதுமன்று,—இலதன்று = ஞான வான்களுக்கு ஞானயோகத்தின் முதிர்ச்சியிலே பரமானந்தத்தையளித்து நிற்கையாலே யில்லாத பொருளுமன்று,—நன்றன்றுதீதன்று=ஆன்மபோத மிறந்தால் கூடும்பொருளாகையாலே ஆன்மாக்களால் நன்று தீதன்று சுட்டப்படுவதுமன்று,—நானன்று=நானே பிரமமென் றலங்கரிக்கிற பசுஞானமன்று,—நின்றநிலையன்று=அநாதியேதொடங்கி யின்றளவும் நிலையான பாசஞானமன்று,—நீயன்று = பசுஞானத்தையும் பாசஞானத்தையுமுடைய ஆன்மாவுமன்று,—நின்னறிவுமன்று=உனக் கறிவாய்நிற்கிற ஞானமுமன்று,—நிலையன் றடியன்றுதான் = ஆதியந்தமில்லை யந்தச் சிவசொரூபத்துக்கு. (௩அ)

இப்படி நிச்சயார்த்தமா யிருப்பதொன்று கூடும்படி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

செய்யாச் செயலவன் செய்யாமை கண்டுதனைச்
செய்யாச் செயலிற் செலுத்தினு - லெய்யாதே
மாணவகவப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கு
மாணவமு மித்தா லறி.

இ - ள்: செய்யாச்செயலேயவன் செய்யாமைகண்டு தனைச் செய்யாச்செயலிற் செலுத்தினுல்—ஆன்மாவினிடத்திற் பக்குவத்திலேவிளைந்த பரமானந்தத்தை யான்மாவறிந் துண்டாக்கிக் கொண்டதுமல்ல சிவன் விகாரியாய்நின்று கொடுத்ததுமல்ல ஞானமானது கனாந்தவிடத்திலே பிரகாசிக்கிற படியையறிந்து இந்தப் பரமானந்தம் பிரகாசிக்கிறபொழுதே விதுவுந்தோன்றும லதுவே சுகரூபமாய் நிற்கும்படி யந்த நினைவானதவிழத் தானுமந்த நிராலம்பமேயாகுல்,—எய்யாதே மாணவகவப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கு மாணவமு மித்தா லறி=மாணவகனே! சகத்துக்குக் காரணமாகவுங் குறிக்கப்

டாநின்ற வாசனையாகிற கொடிகளை வளர்க்கப்படாநின்ற மூல மலமாகிய ஆணவமல மப்பொழுதே வேறற்று விடாநிற்கும் நீ யொன்றுக்கு மஞ்சாதே இப்படி யறிவாயாக. (௫௧)

இந்தப்பொருளை சாதிப்பா னொருவனுக்கொரு செயலுங் கூடவொண்ணாதபடியாலே யவனுக்கொரு நியமம் வேண்டா மென் றருளிச்செய்கிறார்.

ஏதேனுங் காலமுமா மேதேனுந் தேசமுமா
மேதேனுந் திக்கா சனமுமா - மேதேனுஞ்
செய்வா னொருவனுமாஞ் செய்யாச் செயலதனைச்
செய்யாமை செய்யும் பொழுது.

இ - ள். ஏதேனு - பொழுது=ஆன்மபோதமுள்ளளவு மிதற்கறிதாகிய வந்தரிராலம்பமான வுண்மை ஒருவன்தன்செயலன்றியே கூடுமிடத்து பின்னகாலமென்றும மெல்லாக்காலமுமா மெல்லாத் தேசமுமா மெல்லாத் திக்குகளுமா மெல்லா வாதனங்களுமா மெல்லாத் தொழில்களினு மிப்பா னொருவனுமாம்.

இனியித்தச் சிவயோகத்தை யெளிதாகச் செய்வதாயிருக்கச்செய்தே செய்யாதிருக்கும்படிய மித்தச் சிவயோகத்தின் பெருமையு மருளிச்செய்கிறார்.

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துசில
ரெய்தற் கரியதனை யெய்தினர்க - ளையோநாஞ்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு.

இ - ள். செய்தற்கரிய செயல்பலவுஞ் செய்துசில ரெய்தற்கரியதனை யெய்தினர்கள்=சிலர் சரீரத்தைநோக்கித் தங்கள் சரீரத்தையு மனத்தையும் வருத்தி யாவராலுஞ் செய்தற்கரிய

செயல்கள் பலவற்றையுஞ்செய்து பெறுதற்கரிய பேற்றினைப் பெற்ருர்கள்,—ஒருபோதுஞ் செய்யாமைசெய்து செயலறுக்கலாயிருக்கச் செய்யாமைசெய்யாதவாறு = என்னே மாணவகனே ? எல்லாவிகற்பங்களு மொழிந்து நிர்விகாரணமான சபாவத்தைப்பொருந்திச் சுகத்துக்கங்களிலே மொத்தும்படியான சமநமராவங்களை யோருந்துவிடலாயிருக்க விந்த நிர்விகாரமான வுண்மையை நான் செய்யாதிருப்பதேதான். இப்படிப் பொதுப்படச் சொன்ன விந்த வுண்மையை யிவன் நெகிழாமல் விரைந்துகூடுகைப் பொருட்டாக வுபாயமாகவே யருளிச்செய்ததெனக்கொள்க. (௯௧)

இந்த வுண்மைக ளொன்றுமறியாத விசுவத்தார் படுகிற கிலேசத்தைக் கண்டு மேல்தொ தருளிச்செய்கிருர்.

இப்பொருள்க ளியாதேனு மேதெனினு மொன்று
செய்து, லெப்பொருளுஞ் செய்யா தொழிந்திருத்தல்
மெய்ப்பொருளைக், கண்டிருந்தல் செய்யாதே கண்டே
டனிதரொலா, முண்டிருப்ப தென்றே வுரை.

இ - ள். இப்பொருள்—உரை.=மாணவகனே ? எண்ணிறந்த வான்மாக்களிற் பெருதற்கரிய மக்கள்யாக்கையைப் பெற்ற வான்மாக்கள் சிவனைநோக்கி மெல்வினையென்று சொல்லப்பட்ட சரிதையாதல் கிரியையாதல் வல்வினையாத லாதாரயோகங்களாதல் இவற்றிலே யாதொன்றைச்செய்தி லிவையொன்றையுஞ்செய்யாத நிராதார யோகத்தைச் செய்திருத்தல் இந்தவுண்மையான பொருள் நிற்கிறமுறைமை யறிந்து தானுமந்த வுண்மையிலே முறைமையாகப் பார்த்துக் கூடியிருந்த விந்தமுறைமைகளிலே யொன்றைச்செய்து பெறுதற்கரிய பேறுகளைப் பெருதே தாந்தாம் விரும்பப்பட்ட தேகங்களு மந்தங்களும் நிலையில்லாதபடி கண்டுபோதுகிற வான்மாக்க ளெல்லாருந்

தேகங்களைப் போற்றிநின்று இதாவிதங்களைப் புசித்து அஞ்ஞான மெஞ்ஞானமாய்ப் போதுகிறவிது என்னகாரணத்தால் இதனை நீ சொல்வாயாக. ஞானத்துக்குப் பக்குவரல்லாத வான்மாக்களை நோக்கி கொந்தருளிச் செய்தாராக வருளிச்செய்த விதுவும் சர்வான்மாக்களுக்குங் கிட்டாதபொரு ளுன்னுடைய பாக்கியத்தினாலே கிட்டின விதனைக் கைவிட்டு வாதனையைக் கைவிடாமல் நின்று இந்திரிய வேடர்க் கடிமையாய்ப் பேர்ழுந்து போகாதே இந்தவுண்மையிலே யிடைவிடாமல் நின்று சாதிக்கைப்பொருட்டாக வந்திய வுபதேசமாக வருளிச்செய்த தெனக்கொள்க. (௯௨)

இனிச் சிட்டனைப்பார்த் தொன்றருளிச்செய்கிறார்.

வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென்
நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென்-கூட்டில்வாட்
சாத்தியே நின்றிலையேற் றக்கனார் வேள்விசெய்த
மாத்திர மேயாங்கண்டாய் வந்து.

இ-ள். வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென் = முன்பு மருவிப்போந்த தொழில்களையும் புத்திரமித்திர களத்திராதிகளையுங் கைவிட்டுத் துறவறத்திலேபோய் நின்றாலும் பிரயோசனமென்:— நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென் = இல்லறத்திலேயிருந்து நன்றானவெக்கியாதி கன்மங்களைச் செய்தாலும் பிரயோசனமென்.—கூட்டில்வாட் சாத்தியே நின்றிலையேல் = பொருந்தினதொரு நிலையிலே நின்றாயாயினுனக்குப்பிராணனான சிவனைக்கூடி யவன்செயலாகவே கருதி யுன்னுடைய செயலற நின்றாயில்லையாகில்;— தக்கனார்வேள்வி செய்தமாத்திரமேயாங் கண்டாய்வந்து = தக்ஷப்பிரஜாபதி தன்னுடைய வகங்காரத்தின் மிகுதியாலே சர்த்தாவை யிகழ்ந்து தன்னாலே செய்யப்பட்டதாகவே நின்று எக்கியத்தைச் செய்தொ

ருபிரயோசனமுங் கைகூடாமல் நீங்காத துன்பமே பெற்றாற்போல நீயுங் கர்த்தாவைக் கைவிட்டுன்னுடைய செயலென்றே நின்றுபெறுதற்கரிய பேற்றையிழந்து போவையாகையா லிப்படிச்செய்யாம லந்தவுண்மையிலே நிற்பாயாக. இது திட்டாந்த பூர்வமாக வறிவித்தது. (௮௩)

இன்னமுமிவன் செயலறநின்று சாதிக்குமுபாயத்தை யுறுதிப்பிறக்கும் வண்ணமருளிச்செய்கிறார்.

சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்
சிவனுடைய தென்னறிவ தென்றுஞ் - சிவனவன
தென்செயல தாகின்ற தென்று மிவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான்.

இ - ள். சிவன்முதலேயன்றி முதலில்லையென்றும் = நித்தனாய்ச் சுதந்தரனாயெப்பொருட்கும் ஆதாரமாய்ச் சிருஷ்டியாதிகாரணனுமாய்க் கைவல்லிய [illegible] யனைவிட்டுநிற்கிற சிவனொருகர்த்தவை யொழிய [illegible] வொருமுதலில்லையென்றும்,— சிவனுடையதென்னறிவதென்றும் = ஆன்மாக்கள் யானே யறிந்தேனென்கிற வறிவெல்லா மவனாலொழிந்துவிடப்படாதாகையால் நீயுமிதனை யவனறிவேயென்றும்,— சிவனவனே தென்செயலதாகின்றதென்றும் = எக்காலமு மான்மாக்கள் யான் செய்தேனென்று செய்யுந்தக்க செயல்களெல்லா மந்தக் கர்த்தாவின் செயலாகையால் நீயுமிதனை யந்தக் கர்த்தாவின் செயலேயென்றும்— இவையிற்றைத் தன்செயலாக் கொள்ளாமைதான் = இப்படி நினைப்பன சொல்வன செய்வனவான விவற்றை யெப்பொழுதுந் தன்னுடைய செயலாகக் கொள்ளாமல் சகலமுங் கர்த்தாவின் செயலேயென்று யாவர் சிலர் தானறநின்றார்கள் அவர்க ளந்தப்பொருள் தானாய் விடுவார்கள். (௮௪)

இனியிந்த வத்தம்சைவ சித்தாந்தத்தி லொழிந்து வேறொ
ருசமயங்களிலு மில்லையென்றருளிச்செய்கிறார்.

இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுட
னொன்றுசொலி மன்றத்து நின்றவரா - ரின்றிங்கே
யங்குமுயிர் பெறவே பாடு மடியவரா
ரெங்குமிலைக் கண்டாயிது.

இ-ள். இன்றிச்சமயத்தி னல்லதுமற் றேழையுடனொன்று
சொலி மன்றத்து நின்றவரார் = இப்பொழுதிந்தச் சைவசித்தாந்
தத்திலொழிந்து இப்படிக்கொத்த பரமஞானத்தையு மருளிச்
செய்த ஞானசத்தியுடனே கர்த்தா திருவம்பலத்திலே யெழுந்த
ருளிநின்று ஆனந்த நிருத்தஞ்செய்தருளித் தன்னுடைய மெய்ய
டியார்க்கு எடுத்தருளிய ஸ்ரீபாதமே யிரக்ஷையென்று காட்டிய
கையுடனே மோனத்தாலேமொழிந்து திருக்கண்சாத்தியருளி
யெல்லாருங் காணவேநின்றார் வேறொரு சமயங்களிலுண்டோ,
—இன்றிங்கே யங்குமுயிர்பெறவே பாடுமடியவரார் = இன்றிந்த
லோகத்திலே ஞானமுதமாகிய திருமுலைப்பாலை யமுதுசெய்து
இந்தப்பெருமையாலே நெடுநாளாக வஸ்தியாகக்கிடந்து முன்பு
போலே பிராணன்பெற்றுப் பின்னையுமாயுள்ள வயதுஞ்சென்று
எழுந்திருக்கும்படி திருவாய்மலர்ந்தருளி இதனைப் பரசமயிகள்
தங்கள் ஞானத்தாலே சித்துக்காட்டினு மென்றுமல் (சித்தர்
சித்துகாட்டினு மின்றி மப்பொழுதே பொய்யாய் விடுமாகை
யால் இப்படியன்றியே) யிந்தப்பெண்பிள்ளை நெடுங்காலமிருந்து
முன்னே பிதாவானவன் நாயனாருக்கு வாழ்க்கைப்படுத்தவென்
றபடியாலும் அவரிதற்குப் பொருந்தாதபடியாலும் இவர்களும்
வேறொன்றுக்கும் பொருந்தாமல் தவத்திலேநின்று பின்பெல்
லாருங்காணவே திருப்பெருமணத்திலே கூடப்புகுந்திட இப்ப
டிநிறுத்தின விந்தச்சமயத்தில் சம்பந்தப்பெருமா னுயனொழி

ந்து வேறுமொரு சமயங்களிலுண்டோ, — என்றுமிலக் கண்டா யிது = இந்தமுறைமைகளிந்தச் சமயத்திலொழிந்து மாணவக னே? வேறொரு சமயங்களிலு மில்லைகாண்,

இனியிந்தச் சைவசித்தாந்தத்தி லுறுதிப்பாட்டிலே நின்ற சிவஞானிகள் பெருமையை யருளிச்செய்கிறார்.

விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்
தெரிந்துந் தெரியாது நிற்பர் - தெரிந்துந்
தெரியாது நிற்கின்ற சேயிழைபா லென்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று.

இ-ள், விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கள் = இந்தச் சிவ ரூபந் தன்னிடத்தி னிற்கிறப்போல வெவ்விடத்து நிற்கிற முறைமையைக்கண்டு பேரின்பத்தை யெய்திய மிதிலுறுதலாலே தன்னையும் பிரபஞ்சத்தையு மந்தப்பொருள் தன்னையுமறந்து சுபாவத்திலேயமுந்தி யநுபவித்துஞ்செய்யாநிற்பர்கள், — மீண்டுந் தெரிந்துந் தெரியாதுநிற்பர் = இந்த முறைமைகளிலே யநுபவியாநிற்கச்செய்தேயும் பிராரத்தத்தாலே பிரபஞ்சந் தோன்றினலுஞ் சொரூபத்தி லேக்கியத்தாலே பிரபஞ்சநியறியாமலந்த வுண்மையைக்கண்டு நில்லாநிற்பர்கள், — தெரிந்துந் தெரியாது நிற்கின்ற சேயிழைபாலென்றும் பிரியாதுநின்றவனைப்பெற்று = அநாதியே சர்வத்தையுமறிந்து மறிவித்து நடந்தாநிற்கச் செய்தேயுந் தானொரு விகாரங்களினும் படாமல் நிற்கிற ஞானசத்தியுடனே யெக்காலமும்விட்டு நீங்காத சிவனைத் தங்களிடத்திலறுதியாகப்பெற்ற சிவஞானிகள். இதுசிவஞானிகளுக் கொடுக்கத்திலும் விரிவிலும் திருவிலு மிந்தவுண்மையே யொழியப் பிரபஞ்சவாதனை கூடாதென்றறிவித்தது. (௩௩)

இன்னமுமொரு திருவெண்பாவாலே யிதனை விளங்கவருளிச்செய்கிறார்.

ஆதனமு மாதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனைக் கொண்டே தெளிவுற்றுச்-சேதனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராயிருப்ப
ரேதமறக் கண்டவர்க ளின்று.

இ-ள். ஆதன—இன்று = ஆன்மாக்களுக் கிருப்பிடமான தத்துவங்களையு மவையிடமாக நிற்கிற ஆன்மாக்களையு மநாதியே பொருந்தி யவையவரா யல்லவுமாய்நிற்கிற சைதன்னிய சொரூபனான சிவனை யவன் காருண்ணியத்தினாலே ஞானமே திருமேனியாகக் கொண்டெழுந்தருளி வந்த ஆசாரியனைக்கொண்டே தெளிந்து தானுமந்தச் சைதன்னிய சொரூபனாய் நிற்கிற தன்னையு மந்தச் சைதன்னியமானது களையும்படியந்தச் சிவன் கையிலேகொடுத்து ஞானத்துக்கு மேலாகிய வந்தச்சிவமாகியே யிராநிற்பர்கள் திரோதாயிநீங்கத் தரிசித்த கலியாணர்கள். ()

இப்படி நிற்கத்தக்க சிவஞானிகளிடத்திலுண்டான விசேஷங்க ளருளிச்செய்கிறார்.

நாமடங்க வித்தத் தலமடங்குந் தாபதர்க
டாமுணரி வித்தத் தலமுணருந் - தாமுனியிற்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலு
நாமடந்தை நில்லா ளயர்ந்து.

இ-ள். நாமடங்க வித்தத்தலமடங்குந் தாபதர்கடாமுணரி வித்தத் தலமுணரும் = இப்படி ஞானத்திலேநின்று சாதித்தவர்களந்தச் சிவனைப்பெற்று சிவனிடத்திலே யொடுங்கவே ஞானமு மொக்கவொடுங்காநிற்கும்,—இப்படிக்கொத்த சிவஞானிகள் பிராரத்தத்தாலே நிலைநின்றாலு முன்பொடுங்கின ஞானமு மொக்கவுணர்ந்து முன்பு மாயை சிவித்தாற்போல விப்பொழு

துமித்தஞானமே யிவனுக்குத் தனுகரண புவனபோகமுமாய்
நிற்கும்,—தாமுனியிற் றூமடங்கைந்தங்காள் புகழ் மடங்கைபோ
யகலு நாமடங்கைநில்லா னையந்து = இப்படிப்பட்ட சிவஞா
னிகளுக்குக் கோபப்பிரியங்க ளில்லையாயினு மிகுந்த பாவிக
ளால் அவர்கள் திரிவனங் கரிகினகாலத்து அந்தப் பாவிகளுக்கு
ண்டான ஐஸ்வரியமும்போ யவர்கள் கீர்த்தியும் விட்டுப்போ
யவர்கள் வாக்குகளுந் தம்பியாநிற்கும். சிவனைக்கூடி நின்ற
சிவஞானிகளுக்கும் பிராரத்தத்தாலே நிலைகிரிந்தாலும் விசுவங்
கூடாமல் ஞானங்கூடின காரணமேதென்னில்? ஞானத்திலே
நின்றவன் விழுந்தா லதற்குக்கீழான பிரபஞ்சத்திலே விழாநிற்
பன், ஞேயத்திலேயழுந்தினவனுக்கு நிலைகிரிந்தா லதற்குக்கீ
ழான ஞானத்திலேவிழுவன், இதனையொழிந்து விசுவங்கூடா
தெனவறிக. (௬௮)

இப்படிச் சிவனைப்பெற்றவர்கள் முத்தராய் விநவதொழி
ந்து ஒன்றையாக்குத லழிக்குதல் செய்கிறவிது ஈஸ்வரன்சிருத்
தியமாயிருக்க விவர்களுக்குண்டா[illegible]டி யெப்படியென்ற மாணு
க்கனைநோக்கி யருளிச்செய்கிறார்.

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் - துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பர்க் கவன்.

இ-ள். துரியங்கடந்த சுடர்த்தோகையுடனென்றும் பிரி
யாதே நிற்கின்ற பெம்மான் = ஆன்மபோதத்தா லறிதற்கரிய
ஞானசத்தியுடனே யெக்காலமும் விட்டு நீங்காமல்நிற்கிற பர
மேஸ்வரனானவன்,— துரியத்தைச் சாக்கிரத்தே செய்தருளித்
தான்செய்யுந் தன்மைகளுமாக்கியிடு மன்பர்க்கவன் = தன்னு
டையவளவிலே மிகுந்த வன்பைவைத்த வான்மாக்களை யான்ம

போதங்கூடாமல் விழிப்பித்த ஞானசத்தியிலேகூட்டித் தன்னு லேசெய்யப்பட்ட வநுக்கிரகநிக்கிரகங்களையு மவர்களைக்கொண்டு தான் கூடிநின்று செய்வித்து அவர்கள் செய்தார்களாம்படியே நிறுத்தாநிற்பர்கள். (கக)

இப்படிப்பட்ட சிவஞானிக ளருளாலே செய்த சாமர்த்தி யங்களை நாலுசெய்யுளாலே யருளிச்செய்கிறார்.

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்த - லேடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லிங்கிவைநா ளேறுங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்.

கொல்கரியி னீற்றறையி னஞ்சிற் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடனீந்த - னல்ல
மருவார் மறைக்காட்டில் வாச றிறப்பித்த
திருவாமூ ராளி செயல்.

மோக மறுத்திடினு முத்தி கொடுப்பதென
வாகமங்கள் சொன்ன வவர்தம்மைத் - தோகையர்பாற்
றூதாகப் போகவிடும் வன்றொண்டன் றொண்டுகளை
யேதாகச் சொல்லே னியான்.

பாய்பரியொன் றந்தப் பரமனைத் தப்பரனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன்.

இ - ள். இப்படி நாயன்மார்செய்த செயற்பாடுகளையு மறி ஞாயாக. (எஉ)

இப்படிப்பட்ட சிவயோகமே முத்தியைத் தருவதென்றும் மற்றயோகங்களெல்லாம் சனனத்தை விளைக்குமென்று மருளிச் செய்கிறார்.

அம்மையிலு மிம்மையிலு மச்சந் தவிர்த்தடியா
ரெம்மையுமா யெங்கு மியங்குதலான் - மெய்ம்மைச்
சிவயோக மேயோக மல்லாத யோக
மவயோக மென்றே யறி.

இ - ள் அம்மை—யறி=தம்பிரானார் திருவடியைப்பெற்ற சிவயோகிகள் பதமுத்திகளாலுண்டான பயன்களையும் பிராரத்தத்தாலே யிந்தலோகத்திலுண்டான பயன்களையுஞ் சொரூபத்தினைக்கியத்தாலேகெடுத்து அந்தச் சொரூபத்துக்குள்ளளவும் வியாத்தரா யொருசங்கற்ப விகற்பமின்றியே யெவ்விடத்துந் தங்கள் சுவெச்சையிலே கிரிகையால் மாணவகனே? இப்படிச் சற்காரியமான சிவயோகமே சிவனையுள்ளபடியறிந்து கூடின யோகமாவது. மற்றுமுள்ள யோகமெல்லாஞ் சிவனையுள்ளபடி யறியாதயோகமாகையா லவையெல்லாஞ் சனனத்தையுண்டாக்குமென்றே யறிவாயாக. (எச)

ஆன்மாக்க ளெல்லார்க்குங் கர்த்தா வொருவனாயிருக்கச் சிலரைப் பதமுத்திகளிலே வைத்துஞ் சிலரைத் திருவடியிலே சேர்த்துக்கொண்டுஞ் சிலரை விஸ்வத்திலேநிறுத்தியுஞ் செய்தாற் பக்ஷபாதியாகானோ வவனுடையகிருபைக்குப் போதாமையோ வென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

மன்னரு ளெவ்வண்ண மானுடர்பான் மாணவக
வன்ன வகைய தானாலு - மென்னி
லடியவரே யெய்வாரு மாங்கவர்தா மொப்பி
லடியவரே யெல்லா மறி.

இ - ள். மன்—அறி = மாணவகனே! இராஜாவானவன் தன்னுடைய வாக்கினையிறுமேல தனக்கு அடக்கு மந்தராச் சியங்களில் பிராணிகளெல்லாரையு மிரக்ஷிக்கவேணுமென்கிற கருத்தெப்பொழுது முண்டாயிருக்கச் செய்தேயும் புத்திமான்க ளுமாய்ச் சாந்தருமாய்த் தன்னுடையவளவிலே யிருந்துவிவேகங் களை யுடையவருமா யிருக்கத்தக்கவர்களைத் தானுகப் பார்த்துத் தன்னுடைய வளவிலே விசேஷமின்றியே காரியத்தைப்பெற்ற வாக்கினைக்குப் பயந்திருக்கத்தக்கவர்களை யொருவொரு முகங் காரிலேவைத்தும், குணஹீனரா யிருக்கத்தக்கவர்களை யவர் களுக்குத்தக்க தண்டங்களிலே தண்டித்து அவர்கள் குண வான்களாகும்படிசெய்கிற விசையெல்லாங் கிருபையேயானாற் போலப், பரமேஸ்வரருடைய திருவுளமெல்லா மளவிலுமொத்த வன்பாயிருப்பினு மலபாகமுண்டாமளவும் ஆன்மாக்களுக்குத் தனுகரணபுவனபோகங்களையுங் கன்மபலங்களையுங் கூட்டிச் சுக துக்க வேதனைகளிலேவைத்துஞ் சிலரைச் சத்திநிபாதத்துக் குறைதலைக்கீடாகப் பதமுத்திகளிலேவைத்தும், மிகுந்த சத்தி நிபாத முடையவர்களைத் திருவடியிலே சேர்த்துக்கொண்டு முறைமையிலே சேர்த்தருளாநிற்பனென்று சொல்லுகையா லெ ல்லாருமவருக்கடிமையா யிருக்கச்செய்தேயுந் திருவடியைப் பெற்றவடியா ரொப்பில்லாத வடியாராகையால் நீயுமிவையெல் லாவற்றையுமறிந்து திருவடியிலே பொருந்தியிருக்கிற சிவ யோகமே சகத்தை யறுக்கிறயோகமென்று மிதிலே நிலைநின் றநுபவிப்பாயாக. (௭௫)

இப்படி யொப்பில்லாத வடியார்க்குந் தேகமுள்ளளவும் பிராரத்தம் புசிக்கவேண்டுகையில் பிராரத்தம் புசிக்கச்செய்தே யாகாமியமேறுமற் புசித்தபடி யெவ்வெனென்ற மாணுக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

உடம்புடைய யோகிகடா முற்றசித் தின்ப
மடங்கத்தம் பேரின்பந் தாக்கிற் - றொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதுமொன் றில்லை
யிளைப்பதுமொன் றில்லை யிவர்.

இ - ள். உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்பமடங் கத்தம் பேரின்பந் தாக்கில் = பிராரத்தநாசம் பிறக்குமளவு முடம்பிருக்கத்தக்க சிவயோகிகள் தாம் சிற்றின்பத்தைப் பொருந்துகின்றார்களாயினு மந்தச் சிற்றின்பமானது நிலையில் வேறுபாடும் பாவனையில் வேறுபாடுமொழியப் பேரின்பத்திலே வேறுபாடில்லையாகையா லிவர்களுக்கிந்த விரண்டுவேறுபாடுமின்றிச் சொரூபத்திலே நிலைத்திருந்தாலும் ஞானத்திலொழிந்து மலமாயாதி கன்மங்களிற்படார்கள். ஆதலாலே, கூடின சிற்றின்பங்களெல்லாம் ஞானத்திநிலையாலே மீண்டு மந்தப்பேரின்பத்திலே யாக்கிக்கொள்ளாநிற்பர்கள். இப்படிச் செய்யி லிவர்களுக்கு — தொடங்கி முளைப்பது மொன்றில்லை முடிவது மொன்றில்லை யிளைப்பது மொன்றில்லை யிவர் = பிராரத்தம் புசிக்கச்செய்தேயு மறுமைக்கு வித்தான வாகாமியமங்குரிப்பது மொன்றில்லை பிராரத்தநாசம் பிறந்து தேகமானது நழுவுங் காலத்து இவ்வுடம்புடன்கூடி மரிப்பதுமில்லை; ஆகையா லிவர்களொரு கன்மங்களாலு மொருசற்றுஞ் சலியார்கள். (௨)

ஞானத்தாலே சொரூபத்தைக் கூடவேணுமாகி லந்த ஞானந்தானே யமையாதோ சொரூபமென்று ஒருபொருள்கூட வேணுமோவென்ற மாணாக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்.

பேரின்ப மான பிரமக் கிழத்தியுட
னோரின்பத் துள்ளானை யுள்ளபடி - பேரின்பங்
கண்டவரே கண்டார் கடலுயிர்த்த வின்னமுதை
யுண்டவரே யுண்டார் சுவை.

இ-ள்· பேரின்பமான பிரமசத்தியுட னேரின்பத் தின்னானையுள்ளபடி பேரின்பங்கண்டவரே கண்டார் = அள விடப்படாத பரமானந்தமான பிரமசத்தியுடனே யிடைவிடாத சுகரூபனாயிருக்கிற பரமேஸ்வரனை முன்சொன்ன முறைமையிலேகூடியக்கப் பரமானந்தமே யநுபவிக்கிற சிவயோகிகளே சிவனை யுள்ளபடி யறிவார்கள்,—கடலுயிர்த்த வின்னமுதமுண்டவரே யுண்டார் சுவை = கடலிற்பிறந்த வினியவமுதத்தைப் புசித்து அதினு ண்டான விரதத்தி லழுந்தினவர்களே யமுதத்தைப் புசித்தவர்க ளு மிதிர்பிரயோசனமான நித்தியத்துவம் பெற்றவர்களுமல் லது, அந்த வமுதத்தைத் தரிசித்தமாத்திரத்தி லதினுடைய விரதமுந்தெரியாது பேறுங்கூடாது. அதுபோல், மலமூயாதி கன்மங்களை நீங்கி ஞானத்தைத் தரிசித்தாலுஞ் சிவனைக்கூடிப் பரமானந்தத்தை யநுபவித்தாலொழிந்து ஞானமறிந்த மாத்திர த்தில் சாயுச்சியங்கூடாது. (எஎ)

இப்படிச் சுகரூபமாயிருக்கிற பரமேஸ்வரன் நானாவிதமா யிருக்கிற பிரபஞ்சத்துக்குக் கர்த்தாவாகி லவனும் விகாரியாகா னென் றன்பர்களை நோக்கி யருளிச்செய்கிறார்.

**நங்கையினு ளமனைத்துஞ் செய்தாற்போ லடனைத்து**
**நங்கையினாற் செய்தளிக்கு நாயகனு - நங்கையினு**
**நம்பியாய்த் தானங்கே நாட்டப் பெறுமினுகா**
**ணெம்பெருமா னார்த மியல்பு.**

இ-ள். நங்கை—இயல்பு = நம்முடைய வினைவின்வசத் திலேநின்று கைகள் முதலான வங்கங்களெல்லாந் தொழில்களை யுஞ் செய்துமுடியாநிற்க வந்தச் செயற்பாடுகளெல்லா நம் முடையமேல் யேறுமாப்போலச் சுகரூபியாயிருக்கிற சிவன் சாக்ஷிமாத்திரமாயிருக்கத் தன்னுடைய சத்தியாலே பிரபஞ்ச நடத்தாநிற்க வித்தச்சத்தியினு நிர்விகாரமாயிருக்கிற சிவன்

தானொன்றைச் செய்யாதிருக்கச் செய்தேயு மிந்தச் சத்திக்குப் பிராணனுமாய் நாயகனுமாகையாலே யிந்தச்சிவனையே கர்த்தாவாகச் சொல்லப்படுதலால் மாறாயகனே? இவளவே காணெம்முடைய கர்த்தாவுக்குச் செயலாயுள்ளது. (எஅ)

இப்படி வெகுவிதமான சத்தியிலே நிர்விகாரமான சிவன் பொருந்திநின்றபடி யெப்படியென்று மாணாக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்.

பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
லந்நிற மண்ணாளு மம்பிகையுஞ் - செந்நிறத்த
ளந்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறத்த னாயிருப்ப னாங்கு.

இ - ள். பொன் — ஆங்கு = பொன்னுக்கு நிறமானமாற்றானது கட்டியானபோது மாபரணங்களானபோது மாற்றுக்கு வேறுபாடில்லாதாற்போலச் சுசுரூபனான சிவனும் ஞானசொரூபியுமான சத்தியுமிந்த முறைமையேயாதலால் பிரபஞ்சநிமித்தமாகச் சத்தியானது யாதொருரூபமா யிருந்தது நம்முடைய கர்த்தாவாகிய சிவனு மந்தவிடங்கள்தோறு மந்தந்த முறைமைக் காயே யிராநிற்பன், (எகூ)

இன்னமுஞ் சிவனுடைய நிலைமையை விளங்க வருளிச்செய்கிறார்.

தாரத்தோ டொன்றுவர் தாரத்தோர் கூறுவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர் - தாரத்தி
னாதாந்தத் தேயிருப்பர் நாற்றானத் தேயிருப்பர்
வேதாந்தத் [illegible]ப்பர் வேறு.

இ - ள். தாரத்தோ டொன்றுவர் = சிருட்டிகாலத்திலே யான்மாக்கள் சூக்குமதேகத்துடனே யிச்சா ஞானக்கிரியை சேவிக்கைப்பொருட்டாகச் சிவனும் தம்முடைய சத்தியைத்

தோற்றுவித்துத் தாமு மந்தச்சத்தியுடனேகூடி யிச்சாஞானக் கிரியாசொரூபமாவர்—தாரத்தோர் கூறுவர் = அவர்களுக்குத் தூலதேகமாய் வகுப்புண்ணவேண்டித் தாமுஞ் சத்தியுமாக அர்த்த நாரீச்சுரமான விக்கிரகமாகாநிற்பர்,—தாரத்தோடெங் குந் நிலைநிற்பர் — அந்த வான்மாக்களுக்கு மலபாக முண்டா கைப்பொருட்டு அவர்கள் கன்மங்களிலே யநுபவிக்கவும் அர்ஜ் ஜிக்கவும்வேண்டி சத்தியுருவமான பிரமவிஷ்ணு உருத்திரர் மஹேஸ்வரர் சதாசிவரென்று சொல்லப்பட்ட விக்கிரகங்க ளுடனே யந்தரமூர்த்தியான பிரணவசொரூபமாய் ஆன்மாக்க ளிடங்களிலே மாயாதத்துவங்களுடனேகூடி நடத்தாநிற்பர்,— தாரத்திறுதாந்தத்தேயிருப்பர் = மீண்டு மான்மாக்களையுந் தத்து வங்களையும் பிரிக்கவேண்டி மஹாமாயாசத்தியான நாதாந்த மான நிருவிகாரத்திலேயிராநிற்பர்,—நாற்முனத்தேயிருப்பர் = இவையொன்றையுமறியாம லுபாதானங்களிலே மறைப்பட வேண்டி காலாந்தரமான திரோதானசத்தியிலேயிராநிற்பர்,— வேதாந்தத்தேயிருப்பர் = இவற்றுக்கு அநுக்கிரகமே செய்ய வேண்டி வேதத்திலே முடிந்தபொருளான பராசத்தியிலே யிரா நிற்பர்,—வேறு = இப்படி யெல்லாமாய் நிற்கச்செய்தேயு மிவற்றுக்குந் தான்வேறுமாய் தன்னுடைய சுபாவமான சொரூ பமா யிராநிற்பர். (௮௰)

இப்படி பரமேஸ்வர னெல்லாமாயல்லவுமாய் நிற்கிற முறைமையைப் பேதமென்னவோ வபேதமென்னவோ பேதா பேதமென்னவோ வென்ற மாணாக்கனைநோக்கி யருளிச்செய் கிறார்.

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்களொன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவா - லின்றுரைக்க
வென்று வியன்றிடுமோ வென்போல்வா ரேதேனுஞ்
சொன்றுற்று னேதுமோ சொல்.

இ - ள். ஒன்று—சொல் = வெகுவிதமாயுள்ள சாத்திரங்களெல்லாமொரு சற்றுந்தரித்துநின் றவனுடைய வுண்மையையறுதியிட்டுச் சொல்லமாட்டா. இப்படிப்பட்ட தொன்றையிப்பொழு தறுதியிட்டுச்சொல்ல வென்றால் முடியுமோ, வென்னையொப்பார் சிலர் சொன்னாலும் விசுவசத்திருள்ளார்க் கேறிடுமோசொல்லாய். இன்னமுமிவனுக் கித்தமுறைமை விளங்கிற்றில்லையென்று கொண்டு இப்படி யருளிச்செய்ததெனக் கொள்க. (௮க)

இதனையின்ன மிவனறியும்படி யருளிச்செய்கிறார்.

யாதேனுங் காரணத்தா லெவ்வுலகி லெத்திறமு
மாதேயும் பாக னிலச்சினையே - யாதலினாற்
பேதமே செய்வா யபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின்.

இ - ள். யாதேனும்—பின் = யாதொருகாரணத்தினாலுஞ் சர்வலோகங்க ளெல்லாப்பொருள்களுஞ் சத்தியைப்பொருந்தின சிவனுடைய வடையாளமேயாகையால் நியமிதனைப் பேதமென்பாய் அபேதமென்பாய் பேதாபேதமென்பா யிவற்றிற் பொருந்தினதொன்றைச் சொல்வாயாக. பின்னென்றது ஞானங்களுக்கு இந்த மூன்று காரியமுங் கருத்தல்லவென்றது. அடையாளமென்றது சர்வமுஞ் சைதன்னியமாக நின்றவர்கட் கன்றி நின்றிருக்கையாலெனவறிக, (௮உ)

இந்தமுறைமையைத்தத்திலமூர்த்தினவனுக்கொழிந்த கேட்டவனுக்கு விளங்காதென்று இன்னமுமிதனை விளங்க வருளிச் செய்கிறார்.

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுணின் றாடன் மகிழ்ந்தானுஞ் - சென்றுடனே
யெண்ணுருமைம் பூதமுத லெட்டுருவாய் நின்றானும்
பெண்ணுறநின் றாடும் பிரான்.

இ - ள். நின்ற—பிரான் = நீ சொல்லுகிறபேதமும் அபேதமும் பேதாபேதமுமன்று சங்காரகாலத்திலே சத்தியையுமொடுக்கிக்கொண்டு சங்காரதாண்டவஞ் செய்தருளின தம்பிரானே சிருஷ்டிகாலத்திலே தோற்றுவிக்கத்தக்க பொருள்களுடனே பொருந்திய பஞ்சபூதங்களுஞ் சந்திராதித்தரு மான்மாக்களுமாய் நின்றானும், திதிக்காலத்திலே யடியார்பிறவித்துயரங் கெடத்திருவமபலத்தி லாநந்தநிருத்தத்தை விரும்பினனுமாகையா லாதியே தன்னுடைய சொரூபந்தோன்றுமலான்மாவாய் நின்ற முறைமைபோல வான்மபோதந்தோன்றுதபடிச் சிவனேயே நின்றவர்களுக்கொழிந்து சிவனுடைய வுண்மைதெரியாது.

இனிச்சொரூபத்திலே யொருதன்மையாய் நிற்குமுறைமை யருளிச்செய்கின்றார்.

சிவமே சிவமாக யானினைந்தார் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச் - சிவமென்
றுணர்வாரு மங்கே புணர்வழியச்சென்று
புணர்வாரு முண்டோ புவி.

இ - ள். சிவமேசிவமாக யானினைந்தாற்போலச் சிவமாகியே யிருப்பதன்றி = பேதமுமபேதமும் பேதாபேதமு மறப் பக்குவந் திற்பிறகா[illegible]
விகற்பமுங்கூடாமல் நானநுபவித்தபடியே யுன்னையும் நிறுத்தநினைந்தாற்போல மாணவகனே நீயுமொருவிகற்பங்கள் கூடாமலந்தச்சொரூபமே சொரூபமாகவிருப்பதொழிந்து,—சிவமென்றுணர்வாருமங்கே வுணாவழியச்சென்று வுணர்வாருமுண்டோ புவி = தானுந்தனியே யொருமுதலென்றும் சிவனுந் தனித்தொருமுதலென்றுந் தன்னுடையபோதத்தாலே யிந்தச்சிவனை யறியவிசாரிப்பாரு மவ்விடத்தேதான்கெட்டுச் சிவத்துடனே பொருந்த விசாரிப்பாருமுண்டோ வுலகங்களில். (அச)

இன்ன மிதனை விளங்க வருளிச்செய்கிறார்.

அதுவிது வென்று மவனானே யென்று
மதுநீயே யாகின்றா யென்று - மதுவானே
னென்றுந் தமையுணர்ந்தா ரெல்லாமி ரண்டாக
வொன்றாகச் சொல்வரோ வுற்று.

இ-ள். அது—உற்று = ஆன்மாவுஞ்சிவமு மெப்பொழுது மிரண்டாயிருக்குமென்றும், சிவமென்றொருபொருளில்லை யான் மாதானே சிவமென்றும், சிவ நீயென்றும் வேறில்லை புருஷனுடைய வுபாதிகள் நீங்கினபொழுதே நீதானே சிவமாகிறா யென்றும் நான் சிவனுடனேகூடிச் சிவமாய் விட்டேனென் றும் தம்மையுள்ளபடி யறிந்திருக்கிற சிவயோகிக ளிப்படியே பேதமாகவும் அபேதமாகவும் பேதாபேதமாகவும் சொல்லுவார் களோ மாணவகனே. (அ௬)

இனி கர்த்தாவெல்லாமாய்நிற்கிற சுபாவத்தை விளங்க வருளிச்செய்கிறார்.

ஈறாகி யங்கே முதலொன்றா யீங்கிரண்டாய்
மாறாத வெண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்
யுடனா யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனா யிருக்கின்றான் காண்.

இ-ள். ஈறாகியங்கே முதலொன்றாய் = சர்வமுமுடிந்த விடத்துச் சிவமொன்றுமேயாய்,—ஈங்கிரண்டாய் = மீண்டுஞ் சிருஷ்டிகாலத்திலே சத்தியைத்தோற்றுவித்து மந்தச்சத்தியுந் தானுமாய்,—மாறாதவெண்வகையாய் = சர்வத்தையு மந்தச் சத்தியிடமாய்நின்றுந் தோற்றுவித்து அந்தச்சத்தியு மிவையுங் கூடிநின்று நடக்கும்படி யொழிவற்ற வட்டமூர்த்தியுமாய்,— மற்றிவற்றின்வேறாய் = இப்படி யிவற்றிற்பொருந்தி நிற்கச்

செய்தேயு மிவற்றுக்குத் தான்வேறுமாய்;—உடனுயிருக்கு முரு வுடைமை = இப்படி வேறாய்நிற்கச்செய்தேயு மொருமுதல் போல விவைதானேயாய் நிற்கிறவுண்மை.—என்றுங் கடனு யிருக்கின்றான்காண் = மாணவகனே? எப்பொழுது மய னுடையனு யிருக்கின்றான்காண். இது பேதமென்பார்க்கு மபேதமென்பார்க்கும் பேதாபேதமென்பார்க்கு மிவையொன்று மல்லவென்பார்க்கும் பொருந்திநிற்ப னென்னுமுறைமை யறி வித்தது. (௮௯)

சிவனுக்குச் சர்வமுந் திருமேனியாகி லுடனுறைவதெல்லா முயிருமாதோவென்ற மாணுக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்.

உன்னுதரத் தேகிடந்த கீட முருவதெல்லா
மூன்னுடைய தென்றுநீ யுற்றனையோ - மன்னுயிர்க
ளெவ்வகையே காணிற் சுழிவதுவு மாவதுவுஞ்
செவ்வகையே நின்றசிவன் பால்.

இ - ள். உன்—பால்=மாணவகனே? உன்னுடையவுதரத் திலே நானாவிதமாய்கிடக்கிற ஜந்துக்கள் வினைக்கீடாக அவை படுகிற சுகதுக்கவேதனைகளெல்லா முனக்குள்ளவினைபோல நீ கூடிநின் றநுபவித்து [illegible]
நிற்கச்செய்தேயு மவையொன்றுடனும் பற்றறநின்ற பிரகாசிக் கிற சிவனிடத்திலே யவனருளாலே நிலைபெற்றுநிற்கிற வான் மாக்க ளாக்கையுமழிகையுமாய் வருகிறவுண்மை யக்தமுறைமை போலக்காண், இது சுகதுக்கவேதனைக ளான்மாவுக்கொழிந்து சிவனுக்கில்லையென்னுமுறைமை யறிவித்தது. (௯௰)

சிவன் சுகதுக்கவேதனைகள்கூடாமல் நிற்கச்செய்தே சர்வமுந்தானாக நிற்கிறசாமர்த்திய மருளிச்செய்கிறார்.

சொரூபத்தை யிந்தத் திருவடியாலே கண்டேனென்றும்
யாவர்க்குந்தெரியாத மாயையைப்பற்று சத்தியைப் பாதியிலே
யுடையபரமேச்சுரனை மாங்கிஷதிருவடியாலே காணவல்லார்
யாவர், விடப்படாத மாயையாலே மறைக்கத்தக்க மறைப்பை
யெல்லாந்தப்பி இந்தத் திருவடிக்கேசரணாகக்கன்றி வழி
பட்டு வீட்டுப்பெறுகைக்கு நம்மைப் போலெழுந்தருளி வந்தருளுகிற
இந்த ஆசாரியமூர்த்தியையொழிந்து வேறொருதெய்வமில்லை
யென்றருளிச்செய்தது. (௫௯)

இப்படி கடாக்ஷித்த ஞானகுருவின் பெருமையை யருளிச் செய்கிறார்.

கடலலைத்தே யாடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க வாராதாற் போலப் - படியி
லருத்திசெய்த வன்பரைவர் காண்டதுவு மெல்லா
கருத்துக்குச் சேயனைக் காண்.

இ - ள். கடலிலே—காண் = மாணவகனே ? கடலின்கண்
ணெய்தி திரைகளையலைத்து நின்றுடுதற்த வல்லசாமர்த்திய
வான்களுக்குங் கடலினுடையவாழமு மகலமு நீளமுமறிய
வாராதுபோலப் பூமியின்கண்ணே சரியைகிரியையோகங்களி
லே திரவருட்டித்த பத்திமான்களுக்குஞ் சிவனுடைய ரூப
சொரூப சுபாவங்களை யறியவிசாரிக்கி லவர்கள்கருத்துக்கு
மெட்டாதாகையாலே நம்மைப்போலத் தம்பிரான் திருமேனி
கொண்டெழுந்தருளிவந்து ஞானதிக்ஷாக் கிரமங்களினாலே
மலங்களைப்போக்கி யவர்களை யடிமைகொண்டது (௬௦)

ஆகையால் நம்முடையபொருட்டாத் திருமேனிகொண்
டெழுந்தருளிவந்த வாசாரியனே யருளுஞ் சிவமுமென்
றருளிச்செய்கிறார்.

...பிங்காலங்களிலே கைம்மாறுகருதாமல் சிரத்தையுள்ளவர்களுக்குப் பலன்களைக்கொடுத்துச் சந்துஷ்டிபிறப் பியாநிற்கும், இஃதொழிந்து இந்த மரந்தாரகமாய்நிற்கிற புல்லூரிமரத்தின் பலத்தைக்கொடுக்கவற்றோ மாணவகனே சொல்லாய். இதனை=இது திருமேனிகொண் டெழுந்தருளிவந்த வாசாரியனைச் சிவன்றானென்றே தெளியவறிவித்தது, (கஉ)

அருளொப்ப தொன்றுவேண்டுமோ சிவமொன்றுமேயமையாதோவென்ற மாணாக்கனைநோக்கி யத்தச்சிவமு மருளாலொழிந்து மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாதென் றத்தவருளின் பெருமையை யருளிச்செய்கிறார்.

முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னுங் - கத்தியினான்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கு
மோகக் கொடியொழுங்கா னின்று.

இ - ள். முத்தி — இன்று = முத்தியைப்பெறுவதற்குமுதலான வான்மாவென்ப தொருகொடியிலே யநாதியே மறைக்கத்தக்க வாணவமலத்தின்காரியமான வஞ்ஞானமானகொடி யெருவிதமாகப்படர்ந்து, இதனாலே யிதாகிதம்விளைந்து, இது காரணமாக மயக்கத்தைச்செய்கிறமாயையாலே பூதகாரியமான வுடம்பு சநநந்தோறும் பலியாநிற்கும். இவை பக்குவப்பட்ட வெல்லைகளிலேயிருந்து தம்பிரானுந் திருமேனிகொண் டெழுந்தருளிவந்து அருளாலேசமைந்த வநேகதாரைப்பட்டவாளாலே யிந்தவாணவமலமான மூலத்தைவேரறுக்க, வப்பொழுதெல்லா மலங்களின்முத லடங்கலுஞ்சோர்ந்துபோய் முத்தியானது வெகுபலமாகப் பலியாநிற்கும், இந்தப்பழக்கத்தினுடைய வீரத்தினாலே சிவமென்று மான்மாவென்ற மிரண்டல்லாதபழமும்பொழுதேயொரு நீர்மையானசுபாவத்திற் [illegible]றுநிற்கும்;

இனி யிக்கருத்தைத் தமக்கருளிச்செய்து தம்மை யிர க்ஷித்தவாசாரியனையுந் தீக்ஷைமுதலாக வனுக்கிரகித்த முறை மையையுமின்ற வெழுசெய்யுளாலு மருளிச்செய்கிறார்,

அகளத்தி லானந்தத் தானந்தி யாயே
சகளத்திற் றையலுடன் றோன்றி - நிகளத்தைப்
போக்குவதுஞ் செய்தான்றன் பொன்னடியென் புன்ற
லைமே லாக்குவதுஞ் செய்தா னவன்.

இ - ள். அகள—அவன் = அடியேனை யீடேற்றுதற் பொருட்டாகச் சகளீகரமான திருமேனியிலே தன்னுடைய காருண்ணிய சத்தியுடனே தோன்றிக் குற்றமற்ற நிலத்திலுண் டாகிய வானந்தத்தி லானந்தியாய்ச் சமைந்தெழுந்தருளியிருந் ததாகியே பிணித்தவிலங்காகிய மலமாயா கன்மங்களை யநேக சங்காரங்களிலே போக்கி யிடுவதுஞ்செய்து, தன்னுடைய பொலிவினையுடைத்தாகிய திருவடியை யென்னுடைய பொல் லாத்தலையிலே வைப்பதுஞ்செய்தான். இது தீக்ஷைமுறைமை யுரைத்தது. (௧௪)

குற்றமறத் தென்னையாட் கொண்டருளித் தொலை
யற்ற ஞானந் துடனுறைவர் - முற்றவரின் [டனே
யாட்சியுமாய் நிற்பரியான் மற்றொன்றைக் கண்டிடினக்
காட்சியுமாய் நிற்பார் கலந்து.

இ - ள். குற்ற - கலந்து = இப்படித் தம்முடைய வருளா லென்னுடைய மலமாயாதி கன்மங்களைப் போக்கியேயென்னு டைய சுதந்தரத்தையுமறுத் தடிமைகொண்டெனக் காகியே பிராணனாய்நிற்கிற தம்முடைய திருவடிஞானத்தையும் பிரகா சிப்பித்து, யானென்று மதுவென்றுஞ் சொல்லுகிற வேறுபாட் டையமறுத்துத் தம்முடையவசத்திலே யாக்கிக்கொண்ட வ

ரங் கூடிக்கொண்ட முறைமையிலே நான் தியானிப்பாரும் மிற்கைக்கு வந்தத் தியானமுந் தாமேயாய் நில்லாநிற்பர். இச் சுழிலே முதிரவருகிற ஞேயத்ரயமுந்தலுந் தாமேயாகாநிற்பர். பிராரத்வத்தாலே நிலைதிரிந்து விகவந்தோன்றுங் காலத்து மச் சுவிகவந் தோன்றாமல் காண்பானுங் காணப்படும் பொருளுந் தாமேயா யிராநிற்பர். இது நிட்டைக்குப்பின்பு உண்மையிலே நிலைத்தின நிலைபிவித்த தெனக்கொள்க. (௩௩)

ஆருடையா னெந்தமு மாருடையா னென்றிருந்
தாருடையான் றொண்டர் தலைக்காவ - லாரூர
திருவிசலூ ராருஞ் சிவயோகி யின்றென்
வருவினையை மாற்றினான் வந்து.

இ - ள். ஆருடையான்=இப்படிப் பெருஞ்சிறப்பாந் தென்னையுரிதாக வடிமைகொள்ளுகையாலே யாருடையதேவனென்கிற திருநாமத்தையு முடையான்,—எந்தமுமாருடையானை=என்னைப்போலுந் தாழ்ந்தவடியாரையு மடிமைகொள்ளுமவனை,—அறிபுந்தாருடையான்=சர்வான்மாக்கள் பொருட்டாகப் பஞ்சகிருத்தியத்தையு நடத்திபிறிதிலே பக்குவப்பட்டவான்மாக்களை யறிந் திரக்ஷிக்கவல்ல திருவடியுமுடையான்,—தொண்டர் தலைக்காவல்=உரியவடியாரை மாயப்படைமேலிட்டு வினைசெய்யாது பாதுகாக்கைக்குத் தலைக்காவலாயுள்ளவன்,—ஆரூர்த்திருவிசலூ ராருஞ்சிவயோகி.=எக்காலமுந்திருவிசலூரே திருப்படை வீடாகவுடைய சிவயோகி,—இன்றென் வருவினையை மாற்றினான் வந்து=இப்பொழுது தென்னுடைய வஞ்ஞானத்தாலே கன்மபலங் காரணமாக மாயையாகிற ஆசு விலே யுழலாநிற்கிற சனன மரணங்களாகிய விச்சையையொழித்து அசைவற்றநிலமாகிய திருவடியிலே வைத்தான். இது நம்முடைய வாசாரியன் திருநாமமு மவனது மகிமையு மருளிச்செய்ததெனக் கொள்க. (௩௪)

யளிக்கைப்பொருட்டு அடியேனுக்காகத் திருமேனிகொண் டெ
ழுந்தருளிவந்த சிவயோகிகள் தம்பிரானுக்கு மவருக்கு வாக்கு
மனங் காயமாய்நின்ற ஞானசத்திக்கு நானெப்பொழுது மீளா
வடிமையா யிருப்பதொழிந்து வேறொன்றுமில்லை. இது பேற்
றினதிசயந்தா னடிமை சாதித்ததென வறிக. (௩௭)

என்னை யுடையவன்வந் தென்னுடனா யென்னாவி
லென்னையுந்தா னாகக் கொள்ளுதலா - லென்னை
யறியப்பெற் றேனறிந்த வன்பருக்கே யாளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று.

இ - ள். என்னை - சென்று = எனக்குக் கர்த்தாவாகிப் பரமே
ஸ்வர னென்னுடைய வநாதிமயக்கத்தை நீக்குதல் பொருட்
டென்னைப்போ லெழுந்தருளிவந் தெனக்குள்ளே பொருந்தி
நிற்போமென்று மென்னோடுத்தெளிய வறிவிக்குமளவி லந்தக்கரு
ணையாலே நானு மப்பொழுதே தம்முடைய வசமாயென்னையு
மப்பொழுதே தாம்விரும்பின வடிமையாகக் கொள்ளுகையா
லிப்படித் தம்பிரானார்க்கு மீளாவடிமை யானேனென்று மெ
ன்னுடைய வுண்மையு மறியப்பெற்றேன், இப்படி முன்னே
யறிந் திருக்கிற சிவயோகிகளுக்கு ஏவற்செய்து மவர்கள் திர
ட்சியிலே சென்றிருக்கவும் பெற்றேன். இனியென்னபெறவே
ணும். இது பேற்றினுண்டான திப்பல வேட்கையெனவறிக.

சிந்தையினு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை
வந்தவனை மன்னிடநாம் வாராமற் - றந்தவனே
மாதினுட னெத்திறமும் வாழ்ந்திருக்க வென்பதலா
லேதுசொலி வாழ்த்துவே னின்று.

இ - ள். சிந்தை - இன்று. = தன்னுடைய திருவடியான
தென்னுடைய தலையினு மிருதயத்திலும் பொருந்தும்படி திரு

மேனிகொண் டெழுந்தருளி வந்த தம்பிரானை. பூமியின்கண்ணே நான் பிறந்திறந்து திரியாதபடி பரமானந்தத்தை யளித்தவனை, எப்பொழுதும் வாழ்த்துமளவில் லெல்லேப்படா தாகையால் தன்னைவிட்டு நீங்காத ஞானசத்தியுடனே யெவ்விடத்தும் வாழ்கதிருக்கவென்று சொல்லுவ தல்லாலவனை யெப்படி வாழ்த்துவேன். இது சிவனைக் கூடப்பெற்றவர்க ளுணர்வுணர் விறந்து நின்றநுபவிக்கும தொழிந்து மனுடைய வுண்மை யறிந்து அறிக்கவெண்ணுமளவிலவருணையுணர்வுக் கெட்டாதவென்ற விடமறிவித்தது. (௱)

ஆதார மாகி யருளோடி ருந்தின்ப
ஞான வின்பச் சுகவடிவை - யோதாம
லுள்ளவர்கள் கூடிப் புணர்வொழிய நிற்பதலால்
தெள்ளவரா தேசிவம்.

திருக்களிற்றுப்படியார் மூலமுமுரையும் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

தனியன்.

சேடன் படிபுரக்குந் தென்கடவூ ருய்யவந்தான்
பாடுங் களிற்றுப் படிதனக்கு - நீடிமையோர்
தேடும் புகழ்ச்செஞ்சொற் சிவப்பிரகாசன் திருந்து
ஈழுரை யோடா நயந்து.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருணந்திசிவாசாரியார்

அருளிச்செய்த

# இருபாவிருபஃதுமூலமும்

திருவாவடுதுறையாதீனத்து

நமச்சிவாயத்தம்பிரான் செய்த உரையும்.

---

இவை,

காஞ்சிபுரம்

மகாவித்வான்

கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

கா - சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கன்னிகைப்பேர்

முருகேச முதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1898வரு

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபாவிருபஃது

வெண்பா.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி (நல்லூர்
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் - வெண்ணெய்
மெய்கண்டா னென்றொருகான் மேவுவரால்வேறின்மை
கைகண்டா ருள்ளத்திற் கண்.

விருத்தியுரை.

விசாக்கியானம்.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி- பூரணகர்த்தா வாக விருக்கப்பட்ட ஸ்ரீகண்ட பரமேஸ்வர னாசாரிய விக்கிரகமாகத் திருமேனிகொண் டெழுந்தருளு மவதாரத்து நெற்றியிற் றிருநயனமுந் திருமிடற்றிற் றரித்தருளின நஞ்சமாகிய கறுப்பினையு மறைவுசெய்தருளி,—மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்-பூமியின்கண்ணே வியாபரிக்கப்பட்ட ஆன்மாக்களுக்குண்டாய பாசத்தைத் திருஷ்டாக்கிரமங்களினாலே போக்குகிற,—வெண்ணெய்நல்லூர் மெய்கண்டான் - திருவெண்ணெய் நல்லூரென்கிற திருப்படை வீட்டிலே திருவவதாரஞ் செய்த மெய்கண்ட தேவனென்கிற திருநாமத்தினையுந் தரித்தருளினவனை,—என்றொருகான் மேவுவரால் - ஒருகாற்சென்று பொருந்தி நினைத்தவர்கள்,—வேறின்மை கைகண்டா ருள்ளத்திற்கண் - உயிர்க்குயிரா யிருக்கிற சிவனைத் தங்களிடத்திலே புலப்படக் கண்டவர்கள். (இதன்கருத்து) கடவுள் வணக்கமாகிய குருத்

நீங்கா நிலைமை யூங்கு முளையா
லறிவின் மைமலம் பிரிவின் மையெனி
னொராவினை யுணர்த்தும் விராய்நின் றனையேற்
றிப்பிய ங்கோ பொய்ப்பகை யாகாய்
சுத்த னமலன் சோதி நாயகன்
முத்தன் பரம்பர னெனும்பெயர் முடியா
வேறு நின் றுணர்த்தின் வியாபக மின்றாய்ப்
பேறு மின்று மெமக்கெம் பெரும
விருநிலந் தீநீ ரியமா னன்கா லெனும்
பொருநிலைத் தாண்டவம் பெருமாற் கிலாதலின்
வேறோ வுடனோ விளம்பல் வேண்டுஞ்
சீறி யருளாஞ் சிறுமை யுடைத்தா
லறிபாலு கூறிலா யடங்குட ர்குவக்
குறிபாற் குருஞானக் குருமுத லாயெனி
னடங்குவ மருளினி லமிழ்மயன் மிகந்தலும்
டக்குவம் வெளிற்றுந் பவளமே மின்றுப்
பக்குவ மநூறுந் டவளி வாய்மை
நின்னைப் பருவ நிகழ்த்தா தன்றே
துன்றுப் பாரிமி யென்பதூஉந் தகுமே
மும்மலஞ் சடமனு மூப்பின மையினி
னின்மலன் பருவ நிகழ்த்திய தியார்க்கோ
வுணர்வெழு நீக்கத்தை யோதிய தெளிவே
யினையிலி யாயினை யென்பதை யறிமேன்
யானே நீக்கினுந் தானே நீங்கினுங்
கோனே வேண்டா கூறல் வேண்டுங்
காண்டா ரியார்கொல் காட்டாக் காலெனு

மாண்புரை யுணர்த்திலை மன்றபா லன்பு யான்
கேட்பக் கிளக்கு மெய்ஞ் ஞானத்தி
னீட்டா லவர்க்கரு ளென்பதை யறியே.

பி-ம். கன்னைகன் ஞாலத்துக் கதிரவன்றுவென வெண்ணெய்த்தோன்றிய மெய்கண்டதேவ - இடமகன்ற பூமியினிடத் துண்டாகிய விருளைக் கடிந்து பொருட்டாக வாகாசமார்க்கத் திலே தோன்றப்பட்ட சூரியனைப்போல வான்மாக்களுக் குண்டாகிய வஞ்ஞானமாகிய விருளைக் கடிந்துபொருட்டாகத் திருவெண்ணெய் நல்லூராகிய திருப்பதை யிடத்திலே யிருந்தவ தாரஞ்செய்தருளின மெய்கண்டதேவனே,— காராக்கிருகக் கலியாழ் வெனைநின் பேராவின்பத் திருத்திய பெரும - அஞ்ஞான மாகிய சிறைச்சாலைப்பட்டு விலங்காகிய நோற்றிற் கிடந் தழுந்துகிற அடியேனை நின்னுடைய வசைவற்ற பேரின்பமான வநுபவத்திலே யிருத்திய தம்பிரானே,— விளைவா ருதுடையே ன் - அடியேனுக்கொருவினா தேவரீர் சந்நிதியிலேவிண்ணப்பஞ் செய்யவேணுமென்ற ஆசைவாதமு முண்டாயிருக்கிறது; அதேதெ ன்று கேட்டருளுமாகில். எனதுளநீங்க வைகிலேயுந் தமூமெயா ல்- அடியேனுள்ளத்தைவிட்டு நீங்காமல் நிற்கிற ஆணவமலமானது அநாதியே தொடங்கி மிகவுமுண்டாயிருக்குமிடத்தும்,— அறியின் மை - அடியேனுக் கறியாமை யிருவாவேனென்று கேட்கில் — மலம்பிரி வின்மையெனின் - அந்தான்மாவிலேநின்று மநாதியேகூடி வரப்பட்ட வாணவமல முன்னைவிட்டு நீங்காதபடியினுலேயா னுனக்கறியாமை யுண்டானதென்று தேவரீரருளிச்செய்யில்,— ஓராவினையுணர்த்தும் - அடியேனைவிட்டுத் தேவரீர் நீக்கமாக வொதுங்கினின் றருளுமென்கின்றதை யுண்டாக்கும்,— விராயி நின்றனையேல் அப்படிநம்மை நீக்கமாகச்சொல்லாதநாமு முன் னுடுகூடியே நிற்போமென் றருளிச்செய்யில்,— திப்பியமந்தோ அப்படித் தேவரீரருளிச்செய்தது தெய்வீகமான தோராச்சரிய

மாகவிருந்தது. அது வென்னென்று கேட்டருளுமாகில்,-பொய்
ப்பகை யாகாய் - அப்படி யஞ்ஞானத்தோடும் கூடியிருக்கப்ப
ட்ட வடியேனோடு தேவரீருங் கூடியிருக்குமாகில் பொய்யென்கி
றவஞ்ஞானத்தைச் சேதிக்கிறவனென்று தேவரீரைச் சொல்ல
வேண்டியதில்லையாம். அன்றியும்,—சுத்தனமலன் சோதிநாயகன்
முத்தன் பரம்பரனெனும் பெயர் முடியா-அநாதி சுத்தனாயிருக்
கிறவனென்றும் நின்மலனென்றும் எல்லாத்துக்கு மேலான வா
யிருந்தமில்லாத பேரொளியா யிருக்கப்பட்ட கர்த்தாவென்றும்
சர்வ வியாபி யாகியங்கெல்லாங் கழன் றப்பாற்பட்டவனென்
றும் வஸ்துவென்றுசொல்லப்பட்டாற் கெல்லா மப்பாற்பட்ட
வஸ்துவென்றும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட திருநாமங்களுந்
தேவரீருக் குண்டாகா (அதெப்படி யென்னில் மலசித்தன் மல
சம்பந்தியா யிருக்கிறவ[illegible]படி [illegible]னென்று [illegible]டன் விஞ
ை) அப்படியல்ல,— [illegible] [illegible]-நானுன்னோடுகூடி
[illegible] [illegible] [illegible] [illegible] [illegible] புக்கினையறி
வித்து [illegible] [illegible] [illegible]ச்செய்யில்,—வியாபகமின்
றாய்ப்பெறு [illegible] [illegible] - என்னுடைய பெருமா
னே அப்பொழுது [illegible] [illegible] [illegible]வியாபியென்கிறது மில்
லையா அடியேனுக்குச் சாட்சியமென்கிற பேருமில்லையாம்,
அன்றியும்,—இருநிலஞ் சீரியமானன் காலெனும் பெருநிலைத்
தாண்டவம் பெருமாற்கிலாதலின் - இருநிலனாய்த் தீயாகிநீருமாகி
யியமானனாயெறியுங் காற்றுமாகி யருநிலையதிங்களாய் ஞாயிறுமாகி
யாகாயமா யட்டமூர்த்தியாகி யென்னுந் திருத்தாண்டகத்தின்ப
டி பூரணநிலையாகிய திருக்கூத்துந் தேவரீருக் கில்லையாகவேணு
ம். ஆகையால்,-வேறேயுடனோ விளம்பல்வேண்டும் - தேவரீரடி
யேனை யறிவிக்குமிடத்து வேறாய் நின்றறிவிக்குமோ கூடியொ
ன்றாய் நின்றறிவிக்குமோ விவை யிரண்டிலுமொன்று திருவ
ுளிச் செய்தருளவேண்[illegible]...[illegible]றியருளல் - அப்படி யடியேன்

கேட்ட வினவுக்கு விடையருளாமற் றிருவுளக்கேடாக வேண்டு
வதில்லை. அதுவென்னென்று கேட்டருளுகில்,... சிறுமைய
டைந்தால் - அடியேன் றற்போதத்தையால் தோன்றினதை
விசாரியாமல் விண்ணப்பஞ்செய்ததை தற்குத்தர மருளிச்செ
ய்து தெளிவிக்கையே வேண்டுவது —அறியாது கூறினை - அப்
படி நீ கேட்ட வினவுக்குத்தரஞ் சொல்லாமற் கோபித்துக்கொ
ண்டோமென்று நினையாமற்கொள்ளுவாய். அப்படியானால் தே
வரீர் திருவுளக்கேடானதேதென்று நீ கேட்கில்,—அபக்குவ
பக்குவக் குறிபார்த்தருளினர் குருமுதலாமெனின்-அவ்வயம்
குருமுதலாய பக்குவ அபக்குவ குறிபார்த் தருளினமெனின் - நா
மாசாரியமூர்த்தமாகையாலே அபக்குவனைக்கண்டாற் கோபி
க்கிறதும் பக்குவனைக்கண்டாற் பிரியப்படுகிறது மாசாரியனுக்
கு முறைமையாந் தன்மைபோல நான்சொன்னவத்தங்களை நீ
மாறுபாடாகக் கொள்ள நாம் கோபித்துக்கொண்டதா யிருக்கு
மென்னில்; அப்படித் தேவரீர்சொன்ன வத்தங்களை யடியே
னறியுமிடத்து,—அபக்குவ மருளினுமறியேன் - அடியேனபக்
குவனாகையாலே தேவரீரருளிச்செய்கிற வத்தங்களை யறியப்
போகிறதில்லை. அதுவன்றியும்,—மிகுந்தரும் பக்குவம் வேண்
டில் - மிகுந்த சத்திநிபாதத்தாற் குறிப்பக்குவனாயிருக்க வேணு
மென் றருளிச்செய்யில்,—பயனில்லை நின்றால் - பக்குவனுக்கு ஒ
ருவர் சாதாரணமாகவந் தறிவிக்க வேண்டாதது கொண்டே
தேவரீராலொரு பிரயோசனமு மில்லையாம், அல்லது,—பக்குவ
மதனுற் பயனீவரேனே - ஆன்மாக்கள் பக்குவத்துக்குத் தக்கபய
னுகத் தேவரீரெழுந்தருளுமாகில்,—தின்னைப்பருவ நிகழ்த்தா
து - அந்தப்பக்குவமென்று சொல்லப்பட்டது சடமானபடியினு
லே அது தேவரீரை யடியேவர்க் குண்டாக்கமாட்டாது,—அன்
றேல் - அதல்ல, அந்தப்பக்குவமே யுண்டாக்குமென்கிலோ,—

தன்னொப்பாரிலி யென்பதுந்தருமே - தேவரீரையொத் தாரு மிக்காரு மில்லாதவரென்று சிவாகமங்கள் சொல்லுகிறதும் வழுக்கல்லவாம். அதன்றியும்.— மும்மலஞ் சடமணு மூப்பிளமையினின்மலன்பருவ நிகழ்த்திய தியார்க்கோ - ஆணவமாயை காமியமென்னு மூன்றுமலங்களுஞ் சடமாயிருப்பதுகொண்டு பக்குவம் வேண்டுவதில்லை, ஆன்மாவச்சமாறி யெடுத்தவுடல்தோறு மடுத்ததின் றன்மையாய் மூப்பிளமை வருதலால் மூப்பிளமை யில்லாதவனுக்குப் பக்குவங்கூடாது, தேவரீரோ வென்றால் தேக சம்பந்தமில்லாமலமலனாயிருக்கையினாலே யதுசொல்லவொண்ணாது, ஆதலாற் பக்குவ மார்க்காயதென்று வினவியவிடத்து, —உணர்வொழு நீக்கத்தைதயோதியது - உனக்கோ ரறிவுண்டாயிட்டது அந்தமலங்களை நீக்கிற வைராக்கியத்தாற் புண்ணியபாவத் துலையொப்புவந்தாண்டாய்ப் பாசநீக்கினது தானும்பக்குவமேயன்றோ,— எனின் - என்று தேவரீ ரருளிச்செய்யில், —இணையிலியாயினை யென்பதையடியேன் - தேவரீரை யொப்பாரு மிக்காரு மில்லாதவரென்றதை யடியேனின்றுவிட்டேன், அதேதென்று கேட்டருளில்,— யானே நீக்கினுந் தானே நீங்கினுங் கோனே வேண்டா - அந்த மலங்களை யடியேன் தானே நீக்கிக் கொள்ளினு மவை தானேநீங்கினுங் கோனாகிய தேவரீர் வேண்டாம். ஆகையால் தேவரீர் நீக்க வினையல்லீரென்று வினவியவிடத்து,—கூறல்வேண்டும் - அடியேன் விண்ணப்பஞ் செய்ததற்கு உத்தரமருளி யதேதென்று கேட்டருளில்,— காண்பாயவர் கொல்காட்டாக் கடலெனு மான் புணையுணர்ந்திலை - "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்கால்" என மழகிய திருச்சிற்றம்பலத்தி லுனாவைத் தேவரீரின் றிருவருளிற்றிலீரோ, — மன்ற - அறுதிப்பட்டு நிச்சயமாக அடியேனுக்கு முற்றுமையாவது,— பாண்டியன் கேட்கக் கிளக்கு

மெய்ஞ்ஞானத்தி னுட்பாலவர்க்கரு ளென்பதையறியே - பாண்டிய ராசாவானவன் கேட்கத்தக்கதாகத் திருஞானசம்பந்தசுவாமிக ளருளிச்செய்த அட்பா லவர்க்கருளென்னும் உண்மைஞானவுபதேசத் திருப்பாட்டினுரையாகிய சிவஞானத்தை யறிந்தேனில்லை, நிச்சயமாக அதுவேயறிவென்றுஅடியாராயுள்ளவர்களுக்குந் தேவரீர் நாயனென்று கண்டிருக்கிறதொழிய வேறொன்று விகற்பித்துக்கேட்க வழக்கில்லையென்கிற முறைமையே யறியாயுள்ளது என்று வினவற்றேன் - (க-து) பதியொன்றுண்டென்று மப்பதி தொழிற்படுத்தினலன்றி யாவுந் தொழிற்படாதென்பதாம் (நுட்பம்) மலம் பிரிவின்மையெனின் என்பதற்கு ஆன்மாவினோடு மநாதியேகூடி வரப்பட்ட வாணவமல முன்னைவிட்டு நீங்காதபடியினுலென்று பொருள்கூறியதற்கு பி - ம், சித்தியாரில், "அறிவிலன்மூர்த்தனித்தன்" என்னுஞ் செய்யுளில் "பிரிவிலன் மலத்தினேடும் கண்டுகொள்க. விராய்நின்றனையேல் - அப்படி நம்மை நீக்கமாகச்சொல்லாது நாமு முன்னேடுகூடியே நிற்போமென்று பொருள்கூறியதற்கு பி-ம், சிவஞானபோதத்தில், "மெய்ஞ்ஞானந்தன்னில் விளையாதசத்தாதல்" என்ற பாடத்தில் "தண்கடனீருப்புப் போற்றனேயுளமுளவாய்த்தான்" கண்டுகொள்க. வேறுநின்றுணர்த்தின் எ-கு நாமுன்னேடு கூடி நிற்பதில்லை யுன்னறிவுக் கறிவாக நாம் வேறேநின்றே யுன்னையறிவித்து நிற்போமென்று பொருள் கூறுதற்கு பி-ம், சிவஞானபோதத்தில், 'மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த, தென்னு மறையி னியன்மறந்தாய் - சொன்னசிவன், கண்ணுயுளம்விளையாற் கண்டறிந்து நிற்குங்கா, ணெண்ணுன் சிவனசத்தை யின்று' எ-து கண்டுகொள்க. சிறுமையுடைத்தால் எ-கு ஆசாரியன் மேல்வைத்து ஆன்மா வவனுக்குச் சிறுமையாமென்று பொருளுரைப்பாருமுளர் அது குருசிஷக்கிரமத்திக்குப் போதாதாகையால் பொருளாகாதென வறிக. பக்குவமதனுற் பயனீவரினே எ-கு ஆன்மாக்கள் பக்குவத்துக்குத்தக்கு

யனாகத் தேவரீ ரெழுந்தருளுமாகில் என்று பொருள் கூறிய தற்கு பி - ம். சிவப்பிரகாசத்தில், "நாடியசத்தினிபாத நாலுபாத நண்ணு மவகை யெண்ணரிய ஞானபாதங், கூடுமவர் தமக்குணர் வாய்நின்ற ஞானக்கூத்தனொரு மூர்த்தி கொடுகுறுகிமோக, நீடி யகே வலசகல நிகழாவாறு நிறுத்திமல மறக்குமிது நிலையார்சுத் தங், கேடில்புகழ் தருஞ்சரிதை கிரியாயோகக் கேண்மையரே லிவை யுணர்த்தக் கிளக்குறாவே" கண்டுகொள்க. உணர்வெழு நீக்கத்தை யோதியது உனக்கோ ரறிவுண்டாமிடத்து அந்த மலங் களிக்கிற வவதாரத்தாற் புண்ணிய பாவந் துலையொப்புவந் தனன் டாய்ப் பாசநீங்கினதுதானும் பக்குவமென்றதற்கு பி-ம், சிவப் பிரகாசத்தில், "எண்ணரிதா" என்ற விருத்தத்தில் "மலபா கம்பொருந்தியக்கா லருளாலுன்னி லவுமொளியதனு லிருளகற் றிப் பாதமுற்றிடும்." எ-து கண்டுகொள்க. பாண்டியன்கேட் பக் கிளக்குமெய்ஞ் ஞானத்தி ருட்பாலவர்க்கரு ளென்பதையறி யே எ-து பாண்டிய ராசனானவன் கேட்கத்தக்கதாகத் திருஞா னசம்பந்த சுவாமிக ளருளிச்செய்த அருட்பாலவர்க்கருள் என்னு முண்மைஞான வுபதேசப் பாட்டினாலாகிய சிவஞானத்தை யறிந்தேனில்லை நிச்சயமாக வதுவே யறிவென்று அடியார்களா யுள்ளவர்களுக்குத் தேவரீர் நாயனென்று கண்டிருக்கிறதொழிய வேறொன்று விதற்பித்துக்கேட்க வழக்கில்லையென்கிற முறை மையே யடியோர்புள்ளது என்று வினவற்றே என்றதற்கு பி-ம். திருக்கவடக்காப்பு. "அருட்பாலவர்க்கருளும் வண்ணமு மாதி பாண்புங், கேட்பான் புகிலளவில்லை கிளக்கவேண்டா" கண்டு கொள்க. (௨)

இவ்வண்ணம் பதியிலக்கணங்கேட்ட மாணவகன் பசுவிலக் கணங் கேட்டலும் விடை யேயருளிச் செய்கின்றது.

அறிவறி யாமை யிரண்டு மடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே - யறிவோ
வறியையோ யாதென்று கூறுகே ளாய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு.

வி - ம். அறிவறியாமை யிரண்டு மடியேன் செறிதலால் - ஒரவசரத்திலே யறிந்து மோரவசரத்திலே யறியாமலுமாக விந்த விரண்டு மிருந்திப்படியேன் கூடிவருகையினால்,—மெய்கண்ட தேவே - மெய்கண்டதேவனே,—அறிவோ வறியையோ யாதென் றுகூறுகேன் - அடியேனை யறிவென்று சொல்லப்பட் டிருக்குமோ அறியாதவனென்று சொல்லப்பட்டிருக்குமோ விவ்விரண்டினுள் யாதென்று விண்ணப்பஞ் செய்வேன்,—ஆய்ந்து-இவ் விரண்டு பகுதிப் திருவுள்ளத்திலேயாராய்ந்து பார்த்தருளி,—குறிமாறு கொள்ளாமற்கூறு - தேவரீரருளிச்செய்கிற வத்தத்தின் குறிப்புக் கடியேன்மறந்து விண்ணப்பஞ் செய்யாம லருளிச் செய்தருள். (க-து) ஆன்மா சத்துமல்ல அசத்துமல்ல கூடினது தானாக்தன்மையாற் சதசத்தென்னுஞ் சிறப்பினையுடைத்தாம் அதாவது அறிவித்தா லறிகிறவனென்றது. உ-ம். சித்தியாரில். "அறிவிக்கப்படுஞ் சித்துமிவன்" எ-ம். சிவஞானபோதத்தில். "அறிவிக்கவன்றி யறியாவுளங்கள்" எ-ம். திருவாசகத்தில். "அறிவிலாமை யன்றேகண்டேதாண்டேன்" எ-ம், கண்டுகொள்க

பசுவிலக்கணங் கேட்ட மாணவகன் மேற் பாசவிலக்கணங் கேட்கும் வினாவருளிச் செய்கின்றது.

கூறிய மூன்று மலத்தின் குணங்கூறி
வேறு கிளக்கின் விகற்பங் கற்பங்
குரோத மோகங் கொலைஅஞர் மதங்கை
விராயென் குணமுமா ணவமென விளம்பினை

யஞ்ஞா னம்பொய் யயர்வே மோகம்
பைசா சூந்நிய மார்ச்ச ரியம்பய
மாயவேழ் குணனு மாயைக் கருளினை
யிருத்தலுங் கிடத்தலு மிருவினை யியற்றலும்
விடுத்தலும் பரிக்கை மேவகிலன் றெடுத்த
வறுவகைக் குணனுங் கருமத் தருளினை
யாங்கவை தானு நீங்காது நின்று
தன்வழிச் செலுத்தித் தானே தானு
மென்வழி யென்பதொன் றின்று மன்னா
வூரும் பெயரு முருவுங் கொண்டென்
னூரும் பெயரு முருவுங் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற்
சைவ சிகாமணி மெய்யர் மெய்ய
மும்மலஞ் சாடுமென மொழிந்தனை யம்ம
மாறுகோள் கூறல் போலுந் தேறுஞ்
சடஞ்செய லதனைச் சார்ந்திடு மெனினே
கடம்பட மதனுட் கண்டுலம் விடப்படு
மூன்றிரள் போன்ற தாயிற் றோன்றி
யணைந்தாங் ககறல் வேண்டுங் குணங்களும்
பன்மையின் றொரு மெய்ம்மைவந் தணைதரத்
தானே மாட்டா தியானே செய்கில
னீயோ செய்யாய் நின்யல னாயிட்
டியல்பெனிற் போகா தென்று மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்
கந்தமாதி யில்லாயருளே.

வி - ம். கூறியமூன்று மலத்தின் குணத்தை வேறுகிளக்கின்—அடியேனுக்கு முன்னே யுபதேசக் கிரமமாகப் பதி பசு பாசமாகிய திரிபதார்த்தங்களையுந் தேவரீ ரருளிச்செய்கிற [illegible] தாத்து ஆணவ மாயை காமிய மென்னப்பட்ட மூன்று மலங்களினுடைய குணங்களையுஞ் சத்திகளையும் வெவ்வேறாகச் சொல்லுமிடத்து.—விகற்பஞ் சற்பங் குரோதமோகங் கொலைகுமதைகைவிரா வென்குமாறு மாணவமென விளம்பினை - ஆன்மபோதமானது யாதாமொன்றுக்குந் தன்னை விகற்பித்துத் தன்னையொழிய மற்றொருவரு மொடையாதவரென்று நிற்கிறதும், யாதொன்றினைச் சங்கற்பித்துக்கொண்டு நிற்கிறதும், யாதொன்றுக்குக் கோபம்பண்ணிக்கொண்டு நிற்கிறதும் விரோதிநினைக்கிறதும், யாதொன்றுக் காசைப்படுகிறதும், யாதோ ருயிர்களைக் கொல்லுதலும், யாதொருவன் பலங்கள் தன்னிடத்தில் வந்தாற்கு லதற்கு விதனப்படுகிறதும், யாதொன்று சொல்லுமிடத்துஞ் செய்யுமிடத்து மகங்காரமாய் நிற்கிறதும், யாதொன்றுக்குஞ் சிரித்துக்கொண்டு திரிகிறதுமாக விங்ஙனங் கூறப்பட்ட குணங்களெட்டும் ஆணவ மலத்தினுடையதென் றருளிச்செய்தாய்.; அன்றியும்,—அஞ்ஞானம் பொய்மயர்வே மோகம் பைசாசுந் நியமார்ச் சரியம்பயமாய வேழ்குணனு மாயைக்குறியினை - பொய்யை மெய்யென்று கொள்ளுதல் பொல்லாங்கு செய்தலும், பொய்சொல்லுதலும், கண்டதை மறந்து மயங்கி யிருத்து கிறதும், காமவாசையால் மூர்ச்சிக்கையும், ஆசையுண்டாயதனை யில்லையாக வொளித்தலும், ஆன்மாக்களைக் கொல்லவடிக்க வெழுநினைவும் பிறர்க் கழுக்காறுசெய்து கெடநினைக்கிறதும் பிறரோடு வயிராக்கியம் பாராட்டுகிறதும், உயிருக்கிறுதி வருமென்று அச்சப்பட்டுத் திரிகையுமாக விங்ஙனஞ் சொல்லப்பட்ட குணங்களேழும் மாயாமலத்தினுடையதென் றருளிச்செய்தனை,—இருத்தலுங் கிடத்தலு மிருவினை யியற்றலும் விடுத்தலும்பர நிந்தைமேவலென் றெடுத்த வருமைகைக் குணனுங்

கருமத்தருளினை - ஒவ்வொரு தலங்களைப்பற்றி யிருத்தலும்
நோயாய்க் கிடத்தலும், புண்ணிய பாவங்களைச் செய்தலும்—
ஒவ்வொரு பிறுக்களாய் நின்ற தொந்தனைகளை விடுதலும், சர்
வையு நிந்தித்து நடக்கிறதே தொழிலாகப் பொருந்தியிருக்
கிறதும், உடல்மாறிப் பிறத்தலு மிகழ்ந்தாருடன் பொருந்தலு
மாக விவ்வனஞ் சேர்ந்திருக்கு மறுவகைக் குணங்களையுங் கன்ம
மலத்தினுடையதென் றருளினாய்,—ஆங்கவைதானு நீங்காது
நின்று - முன்சொல்லப்பட்ட காரண மலங்களினின்றும் விரியப்
பட்ட காரியமாகிய - உக - வகையு மடியேனைவிட்டு நீங்
காம லனவரதமுநின்று,—தன்வழிச் செலுத்தி - தனக்குண்
டாகிய தொழில்களின் முறைமையிலே யடியேனையுங் காரியப்
படுத்தி,—தானேதானாய் - அடியேனென்றொரு முதலில்லையெ
னும்படி மேலிட்டு நின்றதன்றி,—என்வழியென்ப தொறி
ன்றுமன்ன - தம்பிரானே அடியே னிச்சைவழி யென்கிறது
சற்றும் வருகிறதில்லையாம்,—ஒருபெயரு முருவுங்கொண்டெ
ல் லொருபெயரு முருவுங்கெடுத்த - அடியேனுக்குண்டாயிரு
க்கப்பட்ட மலங்களை நீக்குதற்பொருட்டாக வொருபேரு
முருவுமில்லா தேவரீர் ஒருபேரு முருவுங்கொண்டு அடியே
னுக்குண்டாயிருக்கப்பட்ட பேரினையும் பேரினையு முருவத்தினை
யுங் கெடுத்தாய் என்னவே மேலொரு சகமெடாத வண்ணங்
கெடுத்துப் போட்டவனென்பது கருத்து.—பெண்ணை சூழ்ந்த
வெண்ணெயம் பதியிற் சைவசிகாமணி - பெண்ணை யாற்றுநீர்
சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளி யிருப்ப
தாய் சைவசமயத்துக்கோ ரபிஷேகரத்தினமாயுள்ளவனே,—
மெய்யர்மெய்ய - பிரபஞ்சமாகிய பொய்யைக் கடியப்பட்ட
சத்தியவான்களுக் குண்மையா யுள்ளவனே,—மும்மலஞ்சட
மெனமொழிந்தனை-அடியேனுக்கு முன்னே யுபதேசக் கிரம
மாக வருளிச்செய்கிற வைதரத்தி லாணவமாயை கன்மமென்
னப்பட்ட மூன்று மலங்களையுஞ் சடமாகிய வசேதனமென்று

ருளிச்செய்தனை,—அம்ம - அடியேன் விண்ணப்பஞ்செய்கிறதை அழகிதாகக் கேட்பாயாக,—மாறுகோள் கூறல்போலும் - முன்னே யடியேனுக் கருளிச்செய்கிற வேதாகமத்திலே யசித்தாகிய மலங்களைச் சடமென்றும் மாறுபாடாக வருளிச்செய்ததாயிருக்கும், அப்படி யல்லகாண்,—தேறுஞ்சடம் - அறுதியாகவந்த மலங்கள் சடமே தப்பாது என்று தேவரீ ரருளிச்செய்யில் அவை சேட்டைப்படுவானேன்.—செயலதனைச் சார்ந்திடும் - நீ யறிவுள்ளவனுடைய உன்னோடு கூடுகையி லந்தமலங்களுஞ் சேட்டைப்பட்டதாயிருக்கும்.—எனினே - என்று தேவரீ ரருளிச்செய்யுமாகில்,—கடம்பட மதனுட் கண்டிலம் - கடபடாதிகளாயுள்ள சால் குடம் புடைவை சீலைமுதலாயுள்ளவை யடியேனோடு கூடின வவதாரத்து அப்படிச் சேட்டைப்படக் கண்டேனில்லை, விடம்படு மூன்றிரள்போன்றது - அந்த மலங்கள் கடபடாதிகள்போலல்ல விடத்தையுடைய வசநாவிமுதலாயுள்ள நஞ்சுகள் சடமாயிருந்தாலும் அறிவாயிருந்த வான்மாக்கள் புசித்த வவசரத் தந்தவறிவை யழித்துத் தன்குண மேலிட்டு மயக்கினாற்போல வந்த மலங்களுஞ் சடமாயிருந்தாலு மறிவாயுள்ள வுன்னோடு சம்பந்தமான வவதாரத்து அவையு மப்படி மேலிட்டு மயக்கும்,—ஆயின் - அப்படி யானால்,—தோன்றியவனைத்தாங் ககறல்வேண்டும் - அந்த நஞ்சானது புசித்தவர்களை மறைத்து மேலிட்டுநின்று மீளவும் விட்டுப்போனாற்போல விந்தமலங்களு மப்படிச் செய்யவேணும் அப்படிக் கண்டோமில்லையே, அன்றியும்,—குணங்களும் பன்மையின் றாகும் - இந்த மலங்களுக் குவமையாகச் சொல்லப்பட்ட நஞ்சுகளுக்கிந்தமலங்களைபோலப் பலகுணங்கள் செய்யக்கண்டதில்லை, ஆகையாலது திருட்டாந்த விரோதமென்று கண்டுகொள்க, அன்றியுமந்த மலங்கள்தான்,—எம்மை வந் தணைதரத்தானுமாட்டாது சடமேயானு லடியேனைவந்து பொருந்துகைக்குத் தானுமாட்டாது,—யானேசெய்கிலன் - அடியேனுக்குக் குற்றமாயுள்ளது

வேணு மென்று அடியேன் தானே யுண்டாக்கிக் கொள்வது
மில்லை,—நீயோ செய்யாய் நின்மலனாயிட்டு - தேவரீர் மலரகி
தராயிருக்கையா லஞ்ஞானமாகிய மலங்களை யடியேனுக் குண்
டாக்கப்போகிறதில்லை, இவை மூன்றுவகையு மன்றி,—இயல்
பெனில் - அந்தமலங்க ளான்மாவுள்ளவன்றே சுபாவமாக வுள்
ளதென் றருளிச்செய்யில்,—போகாதென்று - பாலில் வெளுப்
புங் கரியிற் கறுப்பும்போல வியல்பாயுள்ள சுபாவத்துக் கொ
ருகாலத்திலு மழிவில்லையாம்,—மயல்கெட - அடியேனுக் கிந்
தச் சந்தேகந் தீரத்தக்கதாக,—பந்தம் வந்தவாறிங் கந்தமாதியி
ல்லாயருளே - முடிவுமுதலு மில்லாத தம்பிரானே மயக்கத்திர
விருத்தப்பாசபந்தங்க ளடியேனோடு வந்துபொருந்தின முறை
யெப்படியென் றருளிச்செய்யவேணும். (க-து.) பாசம் நெல்
லுக் குமிபோலவும், செம்பிற் காளிதம்போலவும் நின்றநிலைமை
கண்டதல்ல நீக்கங்கூட்டமில்லை என்பதாம். உ-ம். சிவஞான
போதத்தில். "செல்லிற் றுமியு நிகழ்செம்பினிற் களிம்புந்,
சொல்லிற் பதிதன்று தொன்மையே" எ-ம். சித்தியாரில்,
"மும்மல நெல்லினுக்கு முமியொடு தவிடுமிப்போல்" எ-ம்.
சிவப்பிரகாசத்தில். 'நெல்லுமுமி தவிடுமிபோ லநாதியாக
நிறுத்தி' எ-ம். சொன்னமுறைமை கண்டுகொள்க. (ரு-ம.)
தேதுஞ்சடம். எ-கு. அறுதியாகவந்த மலங்கள் சடமே தம்
பாது என்று பொருள்கூறியதற்கு பி-ம், உண்மைநெறிவிளக்
கத்தில். "மலஞ்சடமென்றல்காட்சி" எ-ம், சிவப்பிரகாசத்
தில். "மாயைதான் சித்துருவாய் மருவமாட்டாது" எ-ம்,
சித்தியாரில். "உலகத்துக்கோர் வித்துமாயசித்தாய்" எ-ம்,
கண்டுகொள்க. செயலைத்தனைச்சார்ந்திடும் எ-கு. நீயறிவுள்ளவ
னாகையா லுன்னோடு கூடுகையி லந்தமலங்களுஞ் சேட்டைப்
பட்டதாயிருக்கும் என்று பொருள்கூறியதற்கு பி-ம், சிவப்பிரகா
சத்தில். அந்நியமானவையுணர்த்தி யநந்நியமாய் நிறைந்தவறி
வியானைமயி னானு மருணிலவுங்காலம், தன்னிலவனேயாவுமா

னின்றதொன்மை தாமுணர்தல்லாலுமுயிர் தானெனவொன்றில்லதாய், மன்னியிடுமெலம்'' எ-து. கண்டுகொள்க, இவை மூன்று செய்யுளாலும் கத்தாவறிவிப்போனென்று மான்மா வறிவித்தாலறிகிறவனென்றும் பாசமறிவித்தாலு மறியாதென்றுங் கூறியவாறு காண்க. (௬)

இங்ஙனம் பதியிலக்கணம் பசுவிலக்கணம் பாசவிலக்கணஞ்சொல்லிப் பாசதரிசனஞ்சொன்னபின் ஆன்மதரிசனஞ்சொல்லவேண்டுகையாலு மலதரிசனம் வேறே சொல்லாதபடியினாலுந் தேவரீ ரருளமுன்னே பாசமில்லாது, அடியேனுக்குச் சுதந்திரமாய்க் காணு வறிவுமில்லை, இந்தமலத்தைக் கண்டமுறைமையெப்படி யென்னுர் வினு மேலருளிச்செய்கின்றது. *

அருள்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்<br>
றிருள்கண்ட வாறென்கொ லெந்தாய் - மருள்கொண்ட<br>
மாலையா வெண்ணெய்வாழ் மன்னவா வென்னுடைய<br>
மாலையா மாற்ற பதி.

வி-ம். அருள்முன்பு நில்லாது - அந்தமலங்க ளஞ்ஞானமாகையாலே தேவரீர் சந்நிதியிலே நில்லாது,—அடியேற்குக் கண்ணின்று-அடியேனுக்குச் சுதந்தரமாகக் காணுமறிவுமில்லையாம். அப்படியிருக்க,— இருள்கண்டவா றென்கொ லெந்தாய் தம்பிரானே அடியேனந்த விருண்மலமாகிய வஞ்ஞானத்தையறிந்தபடி யெப்படி,— = மருள்கொண்ட மாலையா மருளாகிய பண்ணை வண்டுகளிருந்து பாடப்பட்ட மாலையினையுடையானே,—வெண்ணெய்வாழ் மன்னவா - திருவெண்ணெய்

* இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்களடியேனுடனுந் தேவரீருங் கூடிநின் றறிவிக்கச்செய்தே யடியேனை மயக்கிறவழி யெப்படி யென்னும் வினுமே லருளிச்செய்கின்றதென்று சொல்லுவாருமுளர் அது வினுவல்ல.

= மருள், இஃது குறிஞ்சியாழ்த்திறம்.

நல்லூரிலே யெழுந்தருளியிருக்கப்பட்ட தம்பிரானே,—என்னு டையமால்-அடியேனுக் குண்டாயிருக்கப்பட்ட விந்தமயக்கத் தை,—ஐயா - அடியேனுக்குச் சுவாமியாயுள்ளவனே,—மாற்ற மதி - போக்கத்தக்கதாகத் திருவுள்ளத்திலே யடைத்தருள். (எ-று.) மலதரிசனத்தைப் பரமசுகத்திலே யழுந்துமிடத்திலவ ரையு மலசம்பந்தத்தினாலேயல்லோ சுகத்தைப் பெறுதிருந்தோ ம் என்னு மநுமானத்தினாலே யறிகவென்பதாம், உ-ம். சிவப் பிரகாசத்தில், "அந்நியமானவையுணர்த்தி யநந்நியமாய் நிறைந்த அறிவறியாமையினு மருணிலவுங்காலந், தன்னிலவனேயாவு மாயிணைந்தொன்மை தாமுணர்தலானுமுயிர் தானெனவொன் றிலதாய் மன்னியிடுமலம்" எ-து. கண்டுகொள்க. (ரு)

இங்ஙனம் பாசதரிசனஞ் சொல்லிப் பசுதரிசன மெப்படி யென்றும் வினா மேலருளிச் செய்கின்றது.

மதிநுதல் பாக னாகிக் கதிதரு
வெண்ணெய்த் தோன்றி யண்ணியுள் புகுந்தென்
னுளம்வெளி செய்துநின் னளவில் காட்சிக்
காட்டியெற் காட்டினை யெனினே நாட்டியெ
னுண்மையும் பெருமையு நவினி னண்ணல்
பாதாள சத்தி பரியந்த மாக
வோதி யுணர்ந்த யானே யேக
முழுதுநின் றனனே முதல்வ முழுதும்
புலன்களைப் பூழை அகழ்ந்தனன் கலங்கி
யாக்கைக் கவத்தையு மடைந்தன னீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் றாக்கி
யெவ்விடத் தன்மையு மிவ்விடத் தார்தலுஞ்

செல்விடத் தெய்தலுந் தெரித்த மூன்றினு
ளொன்றெனக் கருளல் வேண்டு மென்று
மில்லா திலதா யுள்ள துளதெனுஞ்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலு மிலவே சிறுத்தி
யானை யெறும்பி னனது போலெனின்
ஞான மன்றவை காய வாழ்க்கை
மற்றவை யடைந்தன வுளவெனி னற்றன்று
விட்ட குறையி னமிர்ந்து தொன்று
தொட்டு வந்தனவென வேண்டு கட்ட
பெரியதிற் பெருமையுஞ் சிறியசிற் சிறுமையு
முரியது நினக்கே யுண்மை பெரியோ
யெனக்கின் றருகு மென்று
மனக்கினி யாயினி மற்றது மொழியே.

வி - ம். மதிநுதல் பாகனுகி - சந்திரனைப்போலத் திருநெற்றியினையுடைய பரமேஸ்வரியை யொருபாகத்திலே வைத்திருக்கப்பட்ட தேவரீர்,—கநிதர வெண்ணெய்த்தோன்றி-அடியேனுக்கு மோக்ஷத்தைத்தருவது பொருட்டாகத் திருவெண்ணெய் நல்லூரிலே திருவவதாரஞ்செய்தருளி —நண்ணியுள்புகுந்து - அடியேனிடத்திலே வந்துபொருந்தி,—என்னுளம் வெளிசெய்து - அடியேனிடத் துண்டாகிய வஞ்ஞானத்தைநீக்கிச் சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து,—உன்னளவில் காட்சிக்காட்டி ஆன்மபோதத்தா லளவுபடுத்த வொண்ணாத வுன்னுடை வியல்பினையு மடியேனுக்குத் தரிசனப்படுத்தி,—எற்காட்டினை - அடியேனுடைய வியல்பினையுந் தரிசனப்படுத்தினாய்,—எனினே - அப்படி தரிசனப்படுத்தினாயாகிலும்,—காட்டியென் னுண்மை

யும் பெருமையு நுவலில் - தேவரீ ரறுதிப்படுத்தி யருளிச்செய்யப்பட்ட வடியேனுடைய நேர்மையும் பெருத்த வியாத்தத்தையும் விண்ணப்பஞ் செய்யுமிடத்து,—அண்ணல்: பாதாளசத்தி பரியந்தமாக - தம்பிரானே, பாதாளசத்தி முடிவாக,—ஓதியுணர்ந்த யானேயெ முழுத்துநின்றனனே-நூல்களைக் கற்றறிந்தடியே னறிவுசென் றறியப்பட்ட விடமெல்லா மடியேன்றானே முழுவதும் வியாத்தமாய் நின்றதுண்டே,—முதல்வ - சர்வான்மாக்களுக்கு மொருமுதல்வாக நின்றுணர்த்துகிற கத்தாவே,—முழுத்தும் - அப்படி யோதியுணர்ந்த விடமெங்கு மடியேன் வியாத்தமா யிருக்கச்செய்தேயும்,—புலன்கடைப் புழைநுழைந்தனன்-ஒன்றை யறியுமிடத்துச் சோத்திராதிகளாயுள்ள வற்பத்துவாரங்களாகிய புலன்களோடேகூடி யறிந்தேன். அன்றியும்,-கலப்பியாங் கைத்தவத்தைய மடைந்தனன் - அடியேனறிகிற வறிவையும் விட்டு மயங்கிய விடத்திலே சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந்துரியாதீத மென்னப்பட்ட வைந்தவத்தையும் பட்டுநின்றேன். அன்றியும்,—நீங்கிப் போக்குவரவு புரிந்தனன்-அப்படிக்கூடி வாதனைசெய்து நிற்கிற சரீரத்தையும்விட்டு நீங்கி யிவையொவ்வொரு சரீரத்தையும் வந்தெடுப்பதுஞ் செய்தேன்,-நாடி - இவையிற்றைத் திருவுள்ளத்திலே யாராய்ந்து பார்த்தருளி,—எவ்விடத்துண்மையும் - அடியே னோதியுணர்ந்த விடமெங்கு மடியேன் வியாத்தமாயிருக்கிறதும்,—இவ்விடத்தாலும்-இப்பொழுதிந்தச் சரீரத்தோடுங் கூடிநின்று சீவிக்கிறது மவத்தைப்படுகிறதும்,—செல்விடத் தெய்தலும் - இந்தச் சரீரத்தொந்தனைவிட்டுப் புண்ணிய பாவங்களுக் கீடானசுவர்க்க நரகங்களிலே சென்றநுபவிக்கிறதும்,—தெரிந்த மூன்றினு மொன்றெனக் கருளல்வேண்டும் - தேவரீ ரிவைமூன்று பகுதியினு மிதுவாயிருக்கு மான்மாவி னுண்மையென்று ஒன்றை யடியேனுக்குத் தெரிய வருளிச்செய்யவேணும். அப்படி யொன்றைச் சொல்லுகிறதென்ன வவை மூன்றுபகுதியு மான்மாவுக்குடைய

ஞல்லோவென்று திருவுளஞ் செய்தருளுமானால்,—என்றயில் லதிலதாயுள்ள துளதென்னுஞ்சொல்லை சொல்லாய்ச் சொல்லு ங்காலை - எக்காலத்து மொவ்வொன்றி னியல்புகளைச் சொல்லு மிடத்து இல்லதில்லாததே யுள்ளதுள்ளதேயென்று சொல்லுகிற சொல்லை யறுதிப்பட்ட சொல்லாகச் சொல்லுமிடத்து,— சிறுத்தலும் பெருத்தலுமிலவே - ஒருமுதலாயிருக்கப்பட்ட வா ன்மா வோரவதாரத்தி லணுவாகச் சிறுத்து மோரவதாரத்திலே மகத்தாகப் பெருத்தும்வர வழக்கில்லையே. அதுநிற்க,— சிறுத் தியானை யெறும்பானதுபோல் - அப்படிச் சிறுத்தும் பெருத் தும் வாரா தெப்பொழுது மொருதன்மையாகிய வியாத்தமாய் நிற்கச்செய்தேயும் யோனிசம்பந்தஞ்செய்கிறதுவதுவாயிருக்கிறது ஆனையாய்நின்ற வான்மா வெறும்பானற்போலிருக்கும்,—எனி ல் - என்று தேவரீ ரருளிச்செய்யில்,—ஞானமிவற்றவை காய வாழ்க்கை - தேவரீ ரருளிச்செய்த தடியேன்கேட்ட வறிவல்ல சரீரத்தின் வழக்கைச் சொல்லலாம்,—மற்றவை யடைந்தன வள - அதனை நாமப்படிச்சொன்னது மறிவாயுள்ள வாத் மாக்கள் கன்மத்துக்கேற்ற வொவ்வொரு சரீரங்களோடுங் கூடினு லதற்கதற்குத் தக்கதாக வறிவுசீவித்து நிற்குமென் றே சொன்னோம்,—எனில் - என்றருளிச் செய்யில்,—அற்றன் று - அஃதப்படியன்று, அதென்னென்று கேட்டருளுமாகில், விட்டகுறையினதிந்து தொன்றுதொட்டு வருவனவேண்டும் - அப்படிக்கூடின யோனிக்குத்தக்க வறிவாயிருக்குமேயானல் முன்னேயெடுத்து விட்டுவந்த யோனிகளை யின்னவின்ன தல் லவோவென் றடியேனறியவேணும்· அப்படியல்ல கூடின யோனிக்குத் தக்கதாக வான்மா வறிந்து சீவிக்குமென்று நான்சொன்னது அந்தந்த வவதாரந்தோறு மெடுக்கப்பட்ட சிறியயோனிக்கும் பெரியயோனிக்குந்தக்க வறிவாக வறிந்து சீவிக்கிறதா யிருக்குமென்று தேவரீ ரருளிச்செய்யில்,—நட்ட

பெரியதிற் பெருமையுஞ் சிறியதிற் சிறுமையு முரியது நினக்கே யுண்மை-தேவரீர் கூடினதின் றன்மையென்று நாட்டப்பட்ட பெரியயோனிக்குத் தக்கதாகப் பெருத்தவறிவுஞ் சிறியயோனிக் குத் தக்கதாகச் சிறுத்தவறிவு மப்படிவருகிற சுதந்தரமணுவுக் கணுவு மகத்துக்கு மகத்துமாயிருக்கிற தேவரீருக்கேயுள்ளது,— பெரியோய் - மகத்தாயிருக்கப்பட்ட தம்பிரானே,— எனக்கின் னருளும் - அந்தவழக் கடியேனுக் கில்லையாம்,—என்றுமனக்கினி யாய்-எக்காலத்து மென்மனத்துக் கினியையாக விருக்கப்பட்ட தம்பிரானே,—இனி மற்றது மொழியே-இன்னந் தானுமிவ் வடி யேன் முன்னே கேட்ட வினாவுக்கு விடையருளிச் செய்யவேண் டும். (கஅ.) ஆன்மாவினிய லெப்படியென்னிற் படிகம்போல வடுத்ததின் றன்மையாக விருக்குமென்றும் வசிப்பைப்பற்றின வியாபகமென்று மதுவதுவாய் நிற்பதென்றுஞ் சொல்லப்படும் உ-ம். சிவப்பிரகாசத்தில், "இடத்துணருமுண்மை யொளிதருமு பலம்போலும்" எ-ம் சித்தியாரில், "வசித்திடமதுரும்வியாபி யெ னும்பழக்குடையனாகி" எ-ம். வருவது கண்டுகொள்க. (ரு-ம்.) அவை மூன்றுபகுதியு மான்மாவுக் குடையதல்லோவென்றுதிரு வுளம் பற்றினதுக்கு. பி-ம். சித்தியாரில். "சூக்கும தேகியாகித் தூலருபத்தின் மன்னிச், சாக்கிரமுதலாயுள்ள வவத்தையுட் டங் கியெங்கும், போக்கொடுவரவுமெல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவ, மாக்கியும் பலன்களெல்லா மருந்தியு நிற்குமான்மா. எ-து கண்டுகொள்க, சிறுத்தலும் பெருத்தலு மிலவே. எ-கு. ஒரு முதலாயிருக்கப்பட்ட வான்மா வோரவதாரத்தி லணுவாகச் சிறு த்துமோரவதாரத்திலே மகத்தாகப் பெருத்தும்வர வழக்கில்லை. என்று பொருள்கூறியதற்கு. பி-ம், சிவஞானபோதத்தில். "மா யாதனுவிளக்காய் மற்றுள்ளங்காணுதே, லாயாதாமொன்றைய துவதுவாய்" எ-து. கண்டுகொள்க. மற்றவை யடைந்தனவுள. எ-கு. நாமப்படிச் சொன்னது மறிவாயுள்ள வான்மாக்கள் கன்

யத்துக்கேற்ப வெவ்வொரு சரீரங்களோடுகூடி-ஞலத்தற்கதற்கு த்தக்கதாகவறிவு செலித்து நிற்குமென்று பொருட்கூறியதற்கு பி-ம். சிவப்பிரகாசத்தில். "செறிந்திடு முடலுண்மன்னிச் சேர்பு லன் வாயில்பற்றி, யறிந்ததில்மூழ்ந்தும்" எ-து. கண்டுகொள்க,

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வான்மா வவத்தைப்படுமிட த்து ஓரவத்தையைக் கண்டதொழிய மற்றுள்ளவவத்தைகாலு மடியேறு லறியப்பட்ட தில்லையேயென்னும் விறுமேலருளிச் செய்கின்றது.

> மொழிந்த வவத்தை முதலடியே னின்றுங்
> கொழிந்தன நான்கு முணர - விழிந்தறிந் [வே
> தேறிற்றிங் கில்லை யெழில்வெண்ணெய்மெய்த்தே
> தேறிற்றென் கொண்டு தெரிந்து.

பி-ம், மொழிந்த வவத்தை-சொல்லப்பட்ட வவத்தைகளி லும்;—முதலடியேனின்று- முதலவத்தையாகிய சாக்கிரத்திலே யடியேனின்றதுண்டு,—ஆங்கொழிந்தன நான்கும் அந்தச் சாக் கிரத்தைத்தவிர மற்றுண்டான சொப்பன சுழுத்திதுரியந் துரி யாதீத மென்னப்பட்ட நான்கவத்தையும்,—உணரவிழிந் தறிந் தேறிற்றிங்கில்லை - அடியேனறிவுக்கு நினைவுண்டாம்படி யொவ் வொன்றாக விறங்கினதுமில்லை யறிந்தேனது மிவ்விடத்தில் கண் ட தில்லை,—எழில்வெண்ணெய் மெய்த்தேவே - அழகினையுடைய திருவெண்ணெய்நல்லூரிலே யெழுந்தருளியிருக்கப்பட்ட மெய் கண்ட நாதனே,—தேறிற்றென்கொண்டு தெரிந்து - அந்தவவத் தை நாலு முண்டென்று அடியேனுக் கறுதிப்பட்டு வாக்கறுதிவந் தது எந்தப்பிரமாணங்கொண்டறிந்தது. (க-து.) பிறிந்திட வை ந்தவத்தைப் பெருகிய மலத்தாற் பேணியுறு மாகையாலே சுத்த தத்துவங்க ளிங்கினவிடத்திலே யைந்தவைத்தையும் படுமென் றநுமானப் பிரமாணத்தினுலே யறிகவென்றது. (௭)

இவ்வணஞ் சொல்லப்பட்ட வான்மா வொன்றுண்டேல் அதனைத் தரிசித்த வழியேதென்னும் வினா மேலருளிச் செய்கின்றது.

தெரிந்த தென்கொண்டெனை யுருத்திர பசுபதி
செழுமிய னேனையு மடிமை செய்யப்
படிவங் கொண்டு வடிவு காட்டில்லாய்ப்
பெண்ணினை யாளும் வெண்ணெய் மெய்ய
வவத்தையிற் றெரித்தனை யாயி னவத்தை
தெரிந்தாங் கிருத்தலு மிலனே திருத்துங்
கால முதலிய கருவி யாயினை
மாலும் பிரமனும் வந்தெனை யடையா
ரோதுங் காலை யொன்றையொன் றுணரார்
சேதன மன்றவை பேதைச் செயலிச்
சேதன வாணுற் செயல்கொள வேண்டுநற்
போதனை யிவற்றைப் புணர்வதை யறியேன்
கருவித் திரளினுங் காண்பதோ ரொன்று
மொருவுவ தறியே னுணர்வில னாதலி
னிற்கொடு கண்டனை யாயினெற் குக்
கருவி யாயினை பெருமையு மிலவே
யானை பிரமங் கோனே வேண்டா
வின்னுங் கேண்மோ மன்ன நின்னின்
முன்னே மென்ற வுணர்வில னாதலி
னென்னைக் காண்பினுங் காண்பல காணு
மன்னைக் காண்பினுங் காண்பல வன்றே
டொருங்கு காண்பினுங் காண்பல வருக்கனை

கண்டவாறே தெனது கண்ணே
யண்ட வாணா வருட்பெருங் கடலே.

வி - ம். தெரித்ததென் கொண்டெனை யுருத்திரபசுபதி செடியனேனையு மடிமைசெய்யப் படிவங்கொண்டு வடிவுகாட்டில்லாப் பெண்ணையாளும் வெண்ணெய்மெய்ய. அநுவயம். உருத்திரபசுபதி - உருத்திரமூர்த்தியுமா யான்மாக்களுக் கெல்லாமுயிர்க்குயிராய் நின்றிரக்ஷித்தருளுகிற கத்தாவாயிருக்கப்பட்டவனே,—செடியனேனை-முடலை யாக்கைபோடுங்கூடிச் சநநமரண துக்கத்திலே கிடந்தழுந்துகிற பாவியாயிருக்கப்பட்ட வென்னையும்,—அடிமைசெய்யப் படிவங்கொண்டு - தேவரீர் திருவடிக் குரித்தாக்கிக் கொள்ளவேண்டி யடியேனைப்போல வடிவை யெடுத்துக்கொண்டு,—வடிவுகாட்டில்லாப் * பெண்ணையாளும் வெண்ணெய்மெய்ய - தேவரீருக் குண்டாயிருக்கப்பட்ட வுண்மைவடிவை யொருவருக்குங் காட்டாத நீபெண்ணையாற்றை யாட்சியாகவுடைய திருவெண்ணெய்நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட மெய்கண்ட நாதனே,—தெரித்ததென்கொண்டெனை - அடியேனென் றொருமுதலுண் டென்கிறதை யறியப்பட்டதேது பிரகாரமென் றருளிச்செய்யவேணும்—அவத்தையிற் றெரித்தனனாயின் - அடியேன் சாக்கிராதி பஞ்சவத்தைப்பட்டு வருகையிலே யதுகொண்டே யடியேனென்றொரு முதலை யறியப்பட்டதென் றருளிச் செய்யுமாயில்,—அவத்தைத் தெரிந்தாங் கிருந்தது மிலனே - அடியே னப்படியவத்தைப்பட்டு வருகிறதேயுண்டாமாகி லப்படி மறைக்கப்பட்டுவருகிற வந்த வவத்தையு மின்னதின்னதென்று கண்டு அவ்விடங்களிலே யவற்றை யடியேனறிந்து நீக்கிக்கொண்டேனு

* பெண்ணையாளும் என்றதைப் பண்ணையாள எனப்பாடமோதி பண்ணையாளாக நின்றவடியேனை யேவற்பணி கொள்ளப்பட்டவனே என்று பொருள் கூறுவாருமுளர்.

மில்லை,—திருந்தாங் காலமுதலிய கருவியாயின் - அப்படி யச்
சவத்தைதயின் மறைப்பை நீக்குகிறது காலநியதி முதலிய
கருவிகளென் றருளிச்செய்யுமாகில்,— மாலும் பிரமனும் வந்
தெனையடையார் - அப்பொழுது சிருட்டிக்குந் திதிக்குங் கர்
த்தாவாயிருக்கப்பட்ட பிரமனும் விஷ்ணுவு மடியேனைக்கூடி
நின் றுணர்த்துகிறதில்லையாம். அன்றியும்,—ஓதுங்காலை யொ
ன்றையொன்றுணரா - அந்தக் கருவிகளியல்பைச் சொல்லுமி
டத்து ஒருகருவியை யொருகருவி யறியாது. அன்றியும்,—
சேதனமன்றவை பேதைச்செயல் - அந்தக் கருவிகளறிவுள்ள
தல்ல வறியாமையாயிருப்பதோர்செயல் அப்படியல்ல ஆன்மா
வறியா•யிருப்பதுகொண்டு அந்தக் கருவிகளோடுங்கூடி லவை,
சேட்டைப்படுமென் றருளிச் செய்யில்,—இச்சேதனவாறு
செயல்கொளவேண்டு நற்போத மிவற்றைப் புணர்வதை யறி
யேன் - அப்படி யடியேனறியும் பகுதிக்குரியவனுமா யந்தக்
கருவிகளின் பயனைக் கொள்ளத்தக்கவனுமாயிருக்கி லடியேனு
டைய வறிவு அந்தக்கருவிகளைக் கூட்டுகிறதை யறிகின்றேனி
ல்லை. அன்றியும்,—கருவித்திரளினுங் காண்பதோரென்றாய் -
அந்தக் கருவிகளெல்லாங்கூடின சாக்கிரத்தானத்திலுஞ் சத்தா
தி விடயங்களை யறியுமிடத்து ஒவ்வொன்றாக வறிகிறதொழிந்
தைத்தையு மொக்கவறிகின்றதில்லை. அன்றியும்,—ஒருவுவதறி
யே னுணர்விலனாதலின் - அப்படி நின்று நீக்கிறவவதரத்து
அந்தக் கருவிக ணீங்குகிறதையு மறிகின்றேனில்லை. அறிவில்
லாதவனாகையாலே யெப்படி யோரொன்றினை யறியுமிடத்து
மீயாகத் தனித்தொன்றையு மறியமாட்டாய் நாமறிவித்தா லறி
வையென் றருளிச்செய்யில்,—நிற்கொடுகண்டனை யெனெற்
குக் கருவியாயினை பெருமையுமிலவே - அப்படி யடியேனறி
கிறதெல்லாந் தேவரீ ரறிவித்தா லறிவேனாகி லப்பொழுது
தேவரீரை யடியேனுக்குக் கருவியென்று சொல்லப்படுங் கர்
த்தாவென்கிற பெருமையுந் தேவரீருக்கில்லையாம் ஆகையாலே

யானேபிரமங் கோனேவேண்டா - அடியேன்றனை கத்தாவெ
ன்று சொல்லப்படும், தேவரீரையடியேனுக்குக் கத்தாவென்ன
வேண்டுவது மில்லை. அதுவன்றியும்,—இன்னுங் கேண்மோ
மன்ன - தம்பிரானே யடியேன் விண்ணப்பஞ் செய்யத்தக்க
இன்னமு மொன்றுண்டு அதுவேதென்று தேவரீர் கேட்டரு
ளுமாகில்;—நின்னின் முன்னமென்ற வுணர்வில வுதவின் -
அப்படித் தேவரீரறிவிக்க வடியே னறிந்தேனுமாகில் அங்ஙன
நின்றறிவிக்கிற தேவரீரை யெதிர்பட்டுநின்று இதுவல்லோ
நம்மை யறிவிக்கிற முதலென்று அறியமாட்டுகிறே னில்லை
அடியே னறிவில்லாதவ னாகையினாலே, என்னவே யிரண்டாய்
நிற்கலாகாதென்பது கருத்து,—என்னைக் காண்பினுங் காண்ப
லகாளை தன்னைக்காண்பினுங் காண்பலவுன்றோ டொருங்கு
காண்பினுங் காண்பல-இரண்டாயிப்படி நின்றடியேனை யறிய
வென்றாலு மறியப்படும் பகுதியுமில்லை. அது வன்றியுந் தேவ
ரீரை யறியவென்றாலு மறியப்படும் பகுதியுமில்லை. தேவரீ
ரோடு மடியேனுங்கூடி யறியவேணு மென்றாலு மறியப்படும்
பகுதியுமில்லை,— அருந்துணைக்கண்ட வாறேதெனது கண்
ணேயண்டவாண வருட்பெருங்கடலே. என்பதனைப் பொரு
ளுக்கேற்க மாறிக்கொள்க. பொருளாவது. அடியேனுக் கரிய
துணையா யிருக்கப்பட்டவனே, அடியேனுக் கறிவாகிய கண்
ணாயிருக்கப்பட்டவனே, தேவர்களுக்கும் கத்தாவா யிருக்கப்
பட்டவனே, அருளமுத வெள்ளத்தை நின் னடியவர்க்குக்
கொடுத்தருளுகிற சமுத்திரமா யிருக்கப்பட்டவனே, யடியே
னென்னைத் தரிசிக்கப்பட்டது எது பிரகாரங்கொண்டு. (க-து.)
இப்படி கிருபை தாத்பரியமாய்த் திருமேனிகொண்டு ஆன்
மா தனக்குச் சுதந்தரமில்லை யென்கிறதை யறிந்து தானந்த
ஞானமாய் நிற்கவே தன்னைத் தரிசிக்கலாமென்று அருளிய
- விடத்தன்றி யானறியும் பகுதி யொன்றுமில்லை யென்பதாம்.
ஆன்மா தனக்குச் சுதந்தரமில்லை யென்கிறதையறிந்து தானந்த

ஞான்மாய் நிற்கவே தன்னைத் தரிசிக்கலாமென் றதற்கு. உ-ம்
சிவப்பிரகாசத்தில். " தன்னறிவதனாலேதுந் தனக்கறிவில்லை
யெனுந் , தன்னறிவாகவெல்லாந் தனித்தனிப்பயனருந்துந் தன்
னறிவறியுந்தன்மைதன்னாலேதனையறிந்தாற், றன்னையுந்தானே
காணுந் தானதுவாகின்றே", எ-ம். பட்டணத்துப் பிள்ளை
யார் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில். " மாயப்பட
லக்கிழித்தாய. ஞானநாட்டம் பெற்றனன் பெற்றபின், னின்
பெருந்தன்மையுங் கண்டேன்காண்டலு, மென்னையுங் கண்
டேன் பிறரையுங்கண்டேன், னின்னிலையனைத்திலுங் கண்டே
னென்னை", எ-ம். சித்தியாரில் " அடிஞானமான்மாவிற் றோ
ன்றுந்தோன்றத் தூரியனுஞ்சிவந்தோன்றத்தானுந்தோன்றும்"
எ-ம், கண்டுகொள்க. (ரு-ம்) அவத்தையிற் றெரித்தனனாயின்.
எ - து. சாக்கிராதி பஞ்சவத்தைப்பட்டு வருகையினாலே யது
கொண்டே யடியேனென்றொரு முதலே யறியப்பட்டதென்று
பொருள்கூறியதற்கு. பி - ம், சித்தியாரில். படையொடுபவனி
போதும் பார்மன்னன் புகும்போதில்லிற், கடைதொறும் விட்
டுவிட்டுக் காவலுமிட்டுப்பின்னை, யடைதருந்தனியேயந்தப் பர
ந்திரிபவதுபோலான்மா, வுடலினிலவத்தையைந்து முறுமுயிர்
க்காவலாக" எ-து. கண்டுகொள்க. திருத்துங்கால முதலிய
கருவியாயின், எ-து அப்படி யந்தவவத்தையின் மறைப்பை
நீக்குகிறது காலநியதி முதலிய கருவிகளென்று பொருட்கூறி
யதற்கு. பி - ம். சிவப்பிரகாசத்தில். " இத்தகைமையிறையரு
ளா லுயிரறியுமறிவுந் தோகவொடாதே யீரிரண்டாலுரைத்த, வித்
தைமுதலைவராள் விளங்குஞான மேவியிடுமெனவுரைப்ப ரசுத்
தமாயை, வைத்தகலைதான்மூல மலஞ்சிறிதேநீக்கி மருவும்வ
கைதெரிவிக்கும் வாயில்களின் பயனைப், புத்திதாவித்தையி
னட னின்றறிவையுயிர்க்குப் பொருந்தியிடும் வகைபுணரும்
புனிதசத்தி புணர்ந்தே" எ-து கண்டுகொள்க. ஆன்மா வறி
வாயிருப்பதுகொண்டு அந்தக் கருவிகளோடுங்கூடி லவைசே

டைப்படுமென் றருளியதற்கு. பி-ம். சிவப்பிரகாசத்தில்.
"தனக்கெனவறிவிலாதான் றத்துவகன்ம ரூபன், றனக்கெனவ
றிவானுவிச் சகலமுநுகருந்தானே" எ-ம். கண்டுகொள்க. அ
றிவில்லாதவ ளுனைகயாலே யப்படியொரு வன் றினை யறியுமிட
த்து நீயாகத் தனித்தொன்றையு மறியமாட்டாய் காமறிவித்தால
றிவையென் றருளிச்செய்தற்கு. பி-ம். சிவப்பிரகாசத்தில்
"இருணனியிரவிதான்வக் திரிந்துமிரவிலென்றும் பொருணி
லைகண்டமாந்தர் பொருக்கிமொருபோல, மருணிலையென்றுநீங்க
மகிழ்ந்துயிர்தன்னுண்மன்று. மருளொடுமெய்யறிவு தந்த
வாறறியுமன்றே. எ-று. கண்டுகொள்க. (௨)

இங்ஙனஞ் சொல்லப்பட்டு வருகிறவான்மா மூலாதாரத்தி
லேயொதுங்கி யதிதப்பட்டுக் கிடக்கு மவதரத்துணரு முறைமை
யெப்படியென்னும் வினுமே லருளிச்செய்கின்றது.

கடலமுதே செங்கனைய்க் கரும்பேயென் கண்ணே
யுடலகத்து மூலத் தொடுங்கச் - சடலக்
கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதா னென்னை
மருவியா தென்றுரைக்க மன்.

வி-ம். கடலமுதேசெங்னெய்க் கரும்பே - சமுத்திரத்தி
லுண்டாக்கப்பட்ட வமுதம்போலவுந் திருவெண்ணெல் கல்லூரி
லே யுண்டாயிருக்கப்பட்ட கரும்புபோலவு மினியவனே,—என்
கண்ணே - அடியேனுக்குக் காட்டாயிருக்கப்பட்ட கண்போலவு
ரியவனே அடியே னைத்தைப்படு மவதரத்து,—உடலகத்துமூல
த்தொடுங்க - சரீரத்துக்குள்ளே மூலாதாரத்திலே யொருகருவிக
ளுங் கூடாம லதிதப்பட்டுக் கிடக்கிற வவதரத்தடியே னுனரு
கைக்கு,—சடலக்கருவியா தாங்குணர்த்த - சரீரக்கூட்டமாகி
ன்றுணர்த்தின கருவியெது சடக்கென விரைவிலேயுணர,—கா
ண்பதுதா னென்னைமருவி - அடியேனறிகிறது தானெதுடன்

கூடி,—யாதென்றுரைக்கமன் " தேவரீரடியேன் விண்ணப்பஞ்
செய்தற்கிது வென்றுவிளங்கவருளிச்செய்தருளவேண்டும் (க-து)
ஆன்மதத்துவம்-உச, வித்தியாதத்துவம்-எ, சிவதத்துவம்-ரு, இ
வற்றிற்குமுறையே போககாண்ட மென்றும் போக்கிய காண்ட
மென்றும் பிரேரகாண்டமென்றும் பெயர். இவற்றுள் ஆன்மதத்
துவம்-உச-ம், உட்கருவியும் புறக்கருவியுமாய்த் தேகமாய்ப்பொ
ருந்திச் சிவதத்துவங்கள் கலாதிகளைப்பிரேரித்து அறிவிக்குமென்
பதாம். உ-ர், சித்தியாரில் "வாயாதிசோத்திராதி புறத்துவா
ழ்கருவியாகு, மேயாதமனாதிகாயத் துணைருமுட்கருவியாகு, மாய்
வார்கட்கராகமாதி யவற்றினுட்கருவியென்பர்; மாயாடன்வயிற்றி
வற்றூற் றுடக்குண்டோருமான்மா" எ-ம், போற்றிப்பஃறொ
டையில், "அலவருங்கட்டி லுயிர் மூடமாயுட்கிடப்பக், காலநிய
தியதுகாட்டி - யேலோங்கு, முத்தியன்கட்டி லுயிர்சேர்த்துக்
கலைவித்தை, யந்தவராக மவைமுன்பு-தந்த, தொழிலறிவிச்சை
துணையாகமானி, னெழிலுடைய முக்குணமுமெய்தி - மருளோ
டு, மன்னுமிதயத்துச் சித்தத்தாற் கண்டபொரு, ளின்னபொரு
ளென் றியம்பவொண்ணா - வந்நிலைபோய்க்; கண்டவியன்கட்டிற்
கருவிகளீரைந்தொழியக், கொண்டுயிதத்தற்றை நாட்கொடுப்
பப்-பண்டை, யிருவினையான்முன்புள்ள வின்பதுன்பங்கண், ம
ருவும்வகையங்கே மருவி", எ-ம், சொன்ன முறைமைகளைக்
கண்டுகொள்க. (௯)

இங்ஙனஞ் சரீரதொந்தனைப்பட்டு நிற்கிற வடியேனுக்குத்
தேவரீர் தீக்ஷாக்கிரமங்களிலே பாசமோசனம் பண்ணியிருக்கவு
மடியேன் மீளவு மலமாயாதி கன்மங்களோடு தொந்தித்து நிற்
கைக்கு வழியேதென்றும் வினமே லருளிச்செய்கின்றது.

மன்னிய கன்பச் சமத்திடை மலங்களை
யந்திய மாக்கி யருள்வழி யதனு

லென்னுள் புகுந்தனை யெனினே முன்னைத்
திரிமலந் தீர்த்த தேசிக னின்றே
யொருவுத லின்றி யுடந்தையே யாகும்
பெருகிலை யாகல் வேண்டு மருவிடு
மும்மல மதனா லெம்முனின் றிலையெனி
னம்மலத் திரிவுஞ் செம்மலர்த் தாணிழற்
சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
பெயர்வில னாகும் பெரும திர்வின்
றமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன விலவெனச் சாற்றின னமைந்த
மாயேயங் கன்ம மாமல மூன்று
மாயா தாகவே யார்ச்சன மாயையி
னுற்பவந் தீரா தொரூஉமொன் றின்றி
னிற்சம மாயி னல்லது நிற்பெற
லில்லென மொழிந்த தொல்லறந் தனக்கு
மேயா தாகு மாயே னுளத்து
நின்றனை யென்பனே நின்றிலை யென்பனே
பொன்றிய பொன்றிற் றிலமல மென்பனே
யொன்றினை யுரைத்தருண் மன்றற் குன்றுப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க் கதிபதி
கைகண் டலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேறப் பறித்த
மெய்கண்ட தேவே வினையிலி
மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே.

வி-ம். மன்னியகன்மச் சமத்திடை மலங்களை யங்கியமாக் அநாதியே யுடையேனோடுங்கூடி நிலைபெற்றுவருகிற கன்மமாகி

உபுண்ணியபாவங்கள் தன்னிற்சமமாகத் தலையொத்த வலத்ரத்து
அடியேனோடுங் கூடியிருக்கப்பட்ட மலங்களைத் தேவரீர் திக்ஷா
க்கிரமங்களினாலே வேறுபடுத்தி,—அருள்வழியதனா லென்னுள்
புகுந்தனையெனினே - தேவரீரநுக்கிரகத்தின் முறைமையாலே
யடியேனுள்ளத்திலே யெழுந்தருளினதே யுண்டாமாகில்,—மூன்
னைத் திரிமலந் தீர்த்ததேசிக நின்னோடுருவத லின்றியுடந்தையே
யாகும் பெருநிலை யாகல்வேண்டும் - குருமூர்த்தியாயிருக்கப்பட்
ட தம்பிரானே யடியேனுக் கநாதியாயிருக்கப்பட்ட மூன்றுமலங்
களையுநீக்கின தேவரீரை யடியேன்விட்டு நீங்காமலுடந்தை
யாய்க் கலந்து நிற்கும்பேரின்பமாகிய திருவருட்பிரகாசமுண்
டாகவேண்டும், அது நிற்க, முன்னே யென்னிடத்தில் தேவ
ரீரில்லையாம்,—மருவிடுமும்மல மதனாலெம்மு னின்றிலையெனில்
அடியேனோடு கூடிவருகிற வாணவமாயை காமியமென்னு மூ
ன்று மலங்களினோடும் வாதனைசெய்து நிற்கையினாலே யடியே
னுள்ளத்திலே தேவரீரெழுந்தருளி நின்றதில்லையாமாகில்,—அம்
மலத்திரிவுஞ் செம்மலர்த்தாணிழல் சேர்தலுமிலவாய்ச் சார்ப
னைபற்றிப் பெயர்விலனாகும் பெருமதிர்வு - அந்தமலங்களைத்
தேவரீர் போக்கினது மில்லையா? யடியேனுஞ் சிவந்த தாமரை
மலர்போன்ற ஸ்ரீபாதத்திலே வந்துபொருந்தினது மில்லையாய்ப்
பிரபஞ்சவாதனையாலே வந்துபொருந்தின கன்மங்களைப்புசித்து
அதனாலே புண்ணிய பாவங்களிற் கட்டுப்பட்டுச் சநநமரண
துக்கத்தைவிட்டு நீங்குதலுக்கு வழியில்லாதவனாகும். தம்பி
ரானே யிதுநிச்சயம் தப்பாது. அப்படியல்ல,—இன்றமைந்த
கருமத் தியைந்தவை யல்லது சமைந்தன வில்லெனச்சாற்றின் -
இப்பொழு தடியேனெடுத்தவுடலுக் கடுத்த பிராரத்துவ மநுப
விக்கிறதொழிய மேலுடலெடுக்கைக்குள்ள வாகாமியகன்மமேறு
தென்றருளிச்செய்யில்.—அமைந்த மாயேயங்கன்ம மாமலமூன்
று 'மயாது - அடியேனுக்கமைந்த பிராரத்துவத்துக்கிடாகவெ
டுத்த மாயமேயென்னப்பட்ட காரியமாகியுடலுள்ளளவு மதன்

காரணமாகிய மாயைபோகாது, மாயையுண்டாகவே கன்மமும்
போகாது, அப்படி மாயையுங் கன்மமு முண்டாகவே யாண
வமலமுண்டெனப்படும்,—ஆகவே யார்ச்சகமாயையி னுற்பவந்
திராதொழுகும் - ஆக விங்ஙன மூன்று மலங்களுமுண்டாகவே
யாகாமியங்களை யார்ச்சித்து மாயையின்றோற்றமாயுள்ள சரீர
தொந்தனை விடாமல் மென்மேலுந் தொன்றுதொட்டு வரும்.
அன்றியும்.—ஒன்றொன்றினிற் சமமாயினல்லது நிற்பெறலின்
றென வொழித்த தொல்லறந் தனக்குயேயாதாகும் - இருவினை
யாகிய புண்ணிய பாவங்களொன்றுக்கொன்று தம்மிற் சமமாகத்
துலையொத்தாலொழியத் தேவரீரை யடியார் பெறுகிறதில்லையெ
ன்று சொல்லப்பட்ட பழையதாகிய சிவசாத்திரத்துத் தன்மமா
கிய திருவாக்கும் பொருந்தாது, ஆகையால்,—காயே னுளத்
துநின்றனை யென்பனோ நின்றிலையென்பனோ பொன்றியபொ
ன்றிற் றிலமல மென்பனோ வொன்றினை யுரைத்தருண் மன்ற -
அடியேனுள்ளத்துத் தேவரீர் கூடிநின்றதென்று விண்ணப்பஞ்
செய்வனோ அந்த மலங்கள் கெட்டுப்போனதென்று விண்ணப்ப
ஞ்செய்வனோ கெடாமல் நின்றதென்று விண்ணப்பஞ் செய்வ
னோ யிவை யிற்றிலொன்றை யருளிச்செய்தருள் அடியேனுக்
கறுதிப்பட,—குன்றாப்பெண்ணைப் புனல் வயல்வெண்ணெய்க்
கதிபதி - வளப்பங்கள் குறைவுபடாத பெண்ணையாற்றுநீர் பா
யப்பட்ட வயல்களையுடைய திருவெண்ணெய்நல்லூருக்குக் கர்த்
தாவாயிருக்கப்பட்டவனே,—கைகண் டலைவாய்க்கால் செவிமூ
க்குயர் மெய்கொண் டென்வினை வேரறப்பறித்த மெய்கண்ட
தேவே - கரசரணாதியாயுள்ள வவயவங்களோடுங்கூடி யிருக்கப்
பட்ட திருமேனி யெடுத்துக்கொண்டு அடியேனுக்குண்டாகிய
கன்மங்களைக்கிளைப்பறப் பறித்துப்போட்ட மெய்கண்டதேவ
னே,—வினையிலி - அப்படி ரூபீகரித்திருக்கச்செய்தேயுங் கன்ம
தொந்தனை யில்லாதவனே,—மைகொண்டகண்ட - கறுப்பாகிய
[illegible] கண்டத்திற்றரித்தருளின கறைமிடற்றனே,—வழு

விலென்மடியே - அடியேனுக்குக் குற்றமற்ற அறிவாயிருக்கப் பட்ட தம்பிரானை யிவ்விதத்தன்மை யெனக்கருள்வாய். (க-ரை.) பெருந்திருவாழிப்பகுதி தோன்றினவிடத்துச் செல்வா ரைக்குத் தோயப்பண்டாரும் போலக் கன்மந் தலையெடுப்பிலே சாதித்துத்திரைகப்புவரும், அதுபோல சத்தி தன்தொழில் செலுத் தாநிற்குமளவும். அவ்வாறறாத் தேவரீரிவதல்லது யாவரறிவ ரென்பதாம், (ஏ-ம்.) அடியேனொடு கூடியிருக்கப்பட்ட மலங் களைத் திருவாக்கிரமங்களினாலே வேறுபடுத்தித் தேவரீர் ஞானக்கிர மத்தின் முறைமையாலே யடியேனுள்ளத்திலே யெழுந்தருளி னதே புண்டாமாகில் என்பதற்கு. பி-ம். சித்தியாரில் "சக லர்க்குக் கன்மவொப்பில் தலையிலாசான் மூர்த்தி யாதாரமா கித் தரித்தொழிப்பன்மலஞ் சதுர்த்தாசத்திநிபாதந்தால்." எ-ம். "திருந்துவதோர் குணமில்லான்றன்னை யொருவருக்கும் நினைப் பரியானென்று மிலானோர்படவந்துள்ளே, பொருப்பரிய பே ரன்பை யருளிட தன்வழியே புகுத்திவெனக்குமிலாப் போகத் தைப்புரிந்தே." எ-ம். கண்டுகொள்க. மருவிடுமும்மலமதனு லெம்முணர்ந்திடுமெனில் - அடியேனொடுகூடிவருகிற ஆணவ மாயை காமியமென்னு மூன்றுமலங்களினொடும்வாதனைசெய்து நிற்கையினுலே யடியேனுள்ளத்திலே தேவரீரெழுந்தருளி நின் றநிலையாம் என்று பொருள்கூறியதற்கு. பி-ம். சிவஞானபோதத் திலே. "அருக்கனேர் நிற்பினுமல்லிருளே காணுர்க், கிருட்கண் ணே பாகந்தார்க்கீசன்" எ-ம். "தன்னுணர்வு, நேசத்தர் தம் பாலிகழ்ந்துசெய்போற், பாசத்தார்க்கின்றும்பதி." எ - ம். போற்றிப் பஃறொடையில், "என்னுள்ளமென்று நீங்காதொ ளித்திருந்து." எ-ம். கண்டுகொள்க. இன்றமைந்த கருமத் தினைக்தனையல்லது சமைந்தன விலவெனச்சாற்றின். எ-கு இப்பொழு தடியேனெடுத்த வுடலுக்கெடுத்த பிராரத்துவமநுபவி க்கிற தொழியமேலுடலெடுக்கைக்குள்ள வாகாமியகன்மமேறு தென்றருளிச்செய்யில் என்றுபொருள்கூறியதற்கு - திருவருட்பு

ட்ஙளில். "என்றவினையுடலோடேகு மிடையேறுவினை, தோன்றி
வருமே சுடும்," எ-ம், சிவப்பிரகாசத்தில். "தொல்லையிலொரு
தல்போலத் தோன்றிரு வினையுதுண்டேல், அல்லொளிடுவாயு
ஞானத்தழுந்துற வழிந்துபோமே," எ-ம். சித்தியாரில். "என்ற
வுடல்கன்மமநுபவத்தி னொழிந்திவ்வினிச் செய்கன்ம மூலமல
ஞானத்தாலிடிப்பன்." எ-ம். சிவஞானபோதத்தில். 'பின்
செய்வினைமாயை யடைவில்லாது." எ-ம். கண்டுகொள்க.
அமைப்தமாயையுங் கன்மமாமல மென்றமையாது. எ-று. அழி
யேனுக்கமைந்த பிராரத்துவச் சேடகமென்த மடேய மென
னப்பட்ட காரியமாகி யுடலுள்ளளவு மதனகாரணமாகிய மாயை
போகாது ; மாயையுண்டாகவே கன்மமும்போகாது அப்படி
மாயையும் கன்மமும் உண்டாகவே யாணவமல முண்டெனப்
படும் என்று பொருள்கூறியதற்கு. பி-ம். சித்தியாரில், "அங்
கித்தம்பனை வல்லார்க் கனல்சுடாதாகு மௌடதமந்திர முடை
யார்க் கருவிடங்களேறு, வெங்கிர்தைக் கன்மமெல்லாஞ் செய்
தாலு ஞானிக்கிருவினைகள் சென்றணையா முற்செய்வினையிங்
குந். தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன் வினைதவிர்ந்த சக்க
ரமுங் கந்தித்துச் சுழலுமாபோல், மங்கிப்போய் வாதனையா
லுழல்விக்கு மெல்லா மலங்களும் பின்காயமொடுமாகி மாயு
மன்றே." எ-ம். வாதனைதோஷத்தினாலே யக்கினியைச் சேர்ந்த
வித்தைப்போலவு மாயன் வெட்டின மரம்போலவும் புடம்
பண்ணின பணம்போலவும் வெந்த படம்போலவும் உருவ
மாத்திரமல்லாமல் பெத்தமில்லையாகையால் காரணமலங்களுஞ்
சரீரத்தோடு தேய்ந்தறுமென்றது கருத்து. தேவரீரையடியார்
பெறுகிறதில்லையென்று சொல்லப்பட்ட பழையதாகிய சிவசாத்
திரத்துந் தன்மமாகிய திருவாக்கும்பொருந்தாது. எ-சு. கருத்
தாவது புண்ணியபாவமொன்று சமத்துவமானாலல்லோ தேவ
ரீரைப்பெறுவதென்று சொன்ன பழைய திருவாக்கு புண்ணிய
பாவத்துக்கேற்ற தேகத்திற்கவே வினையொத்த தெப்படியென்று

...கன் விளைவதற்கு இருவினையொப்புக்குச் சரீரமுன்னிலை யல்ல புண்ணியத்திலேயும் பாவத்திலேயு மிரண்டிலேயுஞ் சமமாகவெறுப்புவந்ததே யிருவினையொப்பு அப்போதாசாரிய மூர்த்தமாகவந்து சிவனிரக்ஷிப்பன். இதற்கு. பி-ம். போற்றிப் பஃறொடையில். "எல்லையிரண்டி னிடையொப்பிற் - பல்பிறவி, யத்தமதிலன்றே வாவென்று பார்த்திருந்து, சத்தியதிக்குந்த ம்போற்றி." எ-று. கண்டுகொள்க. நாயே னுள்ளத்து நின் றனை யென்பதோ நின்றிலையென்பதோ எ-கு. அடியேனுள்ளத் துத் தேவரீர்கூடிநின்ற தென்று விண்ணப்பஞ் செய்வதோ கூடிநின்ற தில்லையென்று விண்ணப்பஞ்செய்வதோ என்று பொருள் கூறியதற்கு. பி-ம். சித்தியாரில். "எங்குத்தானொ ன்னிறு மெய்தவேண்டா வெங்குமிலனென்னில் வேறிறையு மல்ல, னங்கஞ்சேருயிர்போல்வ னெங்குமங்கத் தவயவங்க ளன்போலக்காணு மான்மா, விங்கு நாமியம்புந் தத்துவங்களின் வைத்தறிவதிறைஞானந் தந்துதாளீதல் சுடரிழந்த, துங்க விழிச் சோதியு முட்சோதியும் பெற்றாற்போற் சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுமன்காணே." எ-று. கண்டுகொள்க. பொன்றியபொன்றிற் றிலமலமென்பதோ. எ-கு. அந்தமலங்கள் கெட்டுப்போனதென்று விண்ணப்பஞ் செய்வதோ கெடாமல் நின்றதென்று விண்ணப்பஞ்செய்வதோ என்றுபொருள் கூறி யதற்கு. பி-ம். சித்தியாரில். நெல்லினுக்குத் தவிடுமிகளநாதி யாயு நெல்லைவிட்டு நீங்கியவை நின்றநிலைகண்டீர், சொல்லி யிடுஞ்செம்பிற்களிம்புவாசியின் பாலில்லைத் தொக்கிருந்து மற்றொரு நெற்றோற்றிடாவா, மெல்லவினைவிடுமறவே யவைபோல வழுவை மேவுமலமுடன் கன்மமநாதிவிட்டேநீங்கு, நல்லசிவ முத்தியின் கட்பெத்தான்மாவை நணுகிநிற்கு மாதலிறுறைசமு மின்றாமே." எ-ம். சிவப்பிரகாசத்தில் "அழிந்திடும் பாசமென் னினித்தமென் றுரைத்தல்வேண்டா, வழிந்திடா தென்னின் ஞானமடைவது கருதவேண்டா, வழிந்திடு சத்திநித்த மழிந்திடா வொளியின்முன்ன, மழிந்திடுமிருளு நாசமடைந்திடாமிடைந்தி டாதே." எ-று. கண்டுகொள்க. (௰)

அடியேனறிவிப்பட்டதெல்லாந் தேவரீர் கூடிநின் றறிவிக்கி
றதாக விருக்கவு மடியேனிந்த மலத்தானத்தோடுங் கூடிமயங்கி
நிற்கைக்கு வழியேதென்னும் விண்ணப்பஞ் செய்கின்றது.

பதிநின்பா லித்த மலத்தின்பா லிற்க
விதியென்கொல் வெண்ணெய்வாழ் மெய்ய-பதிநின்பால்
வந்தா லிதில்வரத் தில்லை வந்திரண்டும் பற்றுகிலேன்
எந்தா யிரண்டாமா றென்.

வி - ம். பதிநின்பால் - அடியேனுக்குண்டாயிருக்கப்பட்
டவறிவு தேவரீர் பக்கலிலே யுண்டானது. அப்படியிருக்கவும்,
—இந்த மலத்தின்பா லிற்க விதியென்கொல் - அடியேனிந்த
மலத்தின் பகுதியிலேகூடி மயங்கி நிற்கைக்கு முறைமையேது,
—வெண்ணெய்வாழ் மெய்ய - திருவெண்ணெய் நல்லூரிலே
யெழுந்தருளியிருக்கப்பட்ட மெய்கண்டநாதனே,—பதிநின்பா
ல் வந்தால் - கர்த்தாவாயிருக்கப்பட்ட தேவரீரையடியேன் வந்து
கூடினால்,—இதில் வரத்தில் - இந்தமலத்திலே மீளவருகைக்கு
வழக்கில்லை.—வந்திரண்டும் பற்றுகிலேன் - தேவரீரை வந்துகூ
டினாலந்தவருளோடு மிந்த மலத்தோடுமொக்க நிற்கிற தடியே
னுக்குண்டாகாது,—எந்தாயிரண்டா மாறென். அடியேனுக்
குச் சுவாமியாயிருக்கப்பட்டவனே அடியேனொருத்தன் தேவரீ
ரோடுங் கூடியறிந்து மிந்தமலத்தோடுங் கூடிய யறியாமையுமா
யிரண்டோடுங்கூடி யதுவதுவாய் நிற்கைக்கு வழக்கேது. (க து.)
அறிவுமிருந்தவனு மாகாமலறிவில்லாத மூடனுமாகாமல் கதி
பெறவேண்டுமென்கிற நடுவாந்தன்மையாகியவன் தான்பாசத்
திடத்தும் பரத்தினிடத்து மாசைப்பற்றிய பொழுதிரண்டிலு
மன்றிப்பற்றிய ததுவாய்நிற்பன். (உ-ம்.) சித்தியாரில், "பாசி
படுகுட்டத்திற் கல்லினை விட்டெறியப்படும் பொழுது நீங்கியது
விடும்பொழுதுபரக்கு, மாசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்
து மானடியை யுணரும்போதகலும் பின்னையுநேசமொடுந்

திருவடி சேர்க்கத் தேர்ந்து நினைவுடையோர் நின்றிவர் நிலைமை தெரிய, மாயையொடு மருவியின்று மாலயம் வருவோரும் பாசமறுக்கும் வகையருளின் வழிபுரைப்பாம்." எ-று. கண்டுகொள்க. (ரு-ம்.) மதியில் பாவித்த மலத்தின்பாலிற் கவிதியென்சொல். எ-று, அடியேனுக்குண்டாயிருக்கப்பட்டவறிவு, தேகாதி பகுதியிலே யுண்டாயிருந்து அடியேனிந்த மலத்தின் பகுதியிலேகூடி மயங்கி நிற்கைக்கு முறைமையேதென்னும் வினாவுக்குக் கர்த்தா கன்மத்தின்வழி நடத்துவனென்பது கருத்து. சி-ம். சிவஞானபோதத்தில். "அவையே தானேயா யிருவினையிற், போக்குவரவு புரியவாணையி, னீக்கமின்றி." எ-து. கண்டுகொள்க. (கக)

தேகாதிகளை யானும் முயிர்க்குயிராய்நின் றறிவிக்குமென்றிருக்கையிலே யடியேனுடனே யொருகாற்கூடியு மொருகாலிங்கியும் வருகைக்கு வழியேதென்று மாணவகன் கேட்கும் வினாமேலருளிச்செய்கின்றது.

என்றிசை விளங்க விருட்படாம் போக்கி
முன்பட மலர்த்தி மூதறிவருளே
மேதினி புகழ மெய்கண்ட தேவ
கோதிலமுது குணப்பெருங் குன்ற
வென்னி னறிதலு மகறலு மென்னனைகொ
லுன்னிற் றுன்னி யுறவிடிற் பெயர்குவ
மென்னு மதுவே நின்னியல் பெனினே
வியங்கோ ளாளனு மாகி யியங்கலு
முன்டெனப் படுவை யென்றோண் முக்கண்
யாங்கணும் பிரியா தோங்கு நின்னிலையின்
யான் வந்தணைந்து மீள்குவ னாயி
னாற்றத் துயருற் றோணி நிழனசை இ

விற்று விற்றெழுதா வேண்டலும் வெறுத்தலு
மின்றிச் சாபைக்கு நன்று மன் னியல்பே
மனையை யாருநை நினைவருங் காலை
யிந்நிலை யதனி னேழையேற் கிரங்கி
யென்னை வெளிப்படுத் தொளிப்பை நீயே
லருண்மா முருக பெருங்கஃதன்றியு
நிற்பெற் றவர்க்கு முற்பவ முண்டேனுஞ்
சொற்பெறு மஃதித் தொல்லுல கில்லை
யவ்வவ் வமைவுஞ் சோர்வு மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே.

வி - ம், எண்டிசைவிளங்க விருட்படாம்போக்கி முண்
டகமலர்த்தி யெழுதறிவருளும் - எட்டுத்திக்கிலுமுள்ள வந்தகா
ரங்களைநீக்கித் தாமரைமுகிழையுமலர்த்து மாதித்தனைப்போல
வடியேன் தேவரீரைப்பெற வேண்டுகைக்கு விசாரித்தறியவே
ண்டும் புத்திக்கெல்லாம் விளக்கஞ் செய்யத்தக்கதாக வடி
யேனை மறைக்கப்பட்ட வஞ்ஞானமாகிய போர்வையைநீக்கி
யடியேனிருதயகமலத்தையு மலர்த்துவித்தசாதி யாயிருக்கப்ப
ட்ட திருவருளையு மடியேனுக்குக் கடாக்ஷித்தருளிய,—மேதி
னியுதய - பூமியிலே தோன்றியருளின ஞானாதித்தனே,—
மெய்கண்டதேவ - மெய்கண்டதேவனென்கிற திருநாமத்தினை
யுடையவனே,—கோதிலமுத - குற்றமற்ற வமுதமாயிருக்கப்ப
ட்டவனே,—குணப்பெருங்குன்ற - நற்குணங்களெல்லா முடைய
ய பெரியமலையே, என்னவே மலைபோலும் பெருமையை யுடை
யவனே,—என்னிறைந்தலு மகறலு மென்னைகொல் - எங்கும் பூ
ரணமாயிருக்கிற தேவரீரடியேனோடு மோரவதாரத்திலே கூடியு
மோரவதாரத்திலே நீங்கியு நிற்கிறதேது பிரகாரமென் றருளிச்

யக் கிருபைபஜநித் தடியேனிடத்திலே யெழுந்தருளி மீளவுமென்னைத்
து நிற்குமாயின்—அருண்மாறும் பெரும -தம்பிரானே தேவரீ
ரநுக்கிரகவா னென்கிறதற்கு மாறுபாடுண்டாம்—அஃதன்றியும்
- அப்படியன்றியும்—நிற்பெற்றவர்க்கு முற்பவமுண்டெனுஞ்
சொற்பெறும் - அப்படி யநுக்கிரகவானல்லவென்கிற தன்றியுந்
தேவரீர் திருவடியை யடைந்தவர்களுக்கு மீளவும் ஜநநமுண்டெ
ன்கிற சொல்லையுமுடைத்தாயிருக்கும்—அஃதித்தொல்லுலகில்
லை - அப்படி யாதொரு தொடக்கித் தேவரீர் திருவடியைப்பெ
ற்ற பெரியோரொன்று சில ருண்டாகப்போகிறதுமில்லை ; ஆகை
யால்—அவ்வண்மையும்-அடியேன் விண்ணப்பஞ்செய்ய மந்த
நந்த நிறைவுடம்—சோர்வுமயர்வற - அடியேனுக்கு மயக்கமுந் தி
ரத்தக்கதாக—சொல்லில் - தேவரீரருளிச்செய்யில்—சொல்லெ
ழிர் சொல்லாச் சொல்லேசொல்லுக - அடியேன் மறுத் தெதிரு
த்தரம் விண்ணப்பஞ் செய்யாதபடியருளிச்செய்யல்வேண்டும்—
சொல்லிறந்தோயே - வாக்கினாலுச் சரிதற்கு மப்பாற்பட்ட தம்
பிரானே. (க - து.) அவ்வவ்விடத்திலே சிவ னிறைந்திருக்கி
றது மான்மா பொருந்தி யிருக்கிறதுமெப்படியென்னில். க-வது.
உடலு முயிரும்போலுங் கண்ணுமாதித்தன்போலும் மான்மாவு
மான்மக் கியானமும்போலும் விட்டு நீங்காமற் பொருந்தியிருக்
கும் அப்படியிருக்க விட்டும் பற்றியும் வருவானேனென்னில் அ
நாதியே மலசம்பந்த முள்ளவையாலே நீ நினைத்த விடத்திலே பிரகா
சிப்போம் நினையாதவிடத்திலே நீங்கி நிற்போமென்று திருவுள
ம்பற்றினது. உ-வது. விட்டுநீங்காத பரிபூரண நிலையிலே யான்
மாவந்து பொருந்தி நிற்குவனென்று சொன்னது மல்போத நீங்
கினவிடத்திலே சிவனைப் பொருந்துவனென்றும் போத மேலிட்
டகாலத்திலே சிவனையிழந்துநிற்பனென்றுஞ் சொன்னது. ௩-வது.
ஏழையாயுள்ள வடிமைக்கிரங்கி யனுக்கிரகம்பண்ணி நிற்போமெ
ன்றது பத்தியினாலே வழிபடுகிறவடியார்களுக்கு மதனைவிட்டுப்
பிரிந்து நீங்கிநிற்போமென்று திருவுளம்பற்றினது, ஆகையாலே

இவ்வணந் தந்தவனாகத் தானாயிருக்கிற தேவரீரடியேனுக்கெ
நமாயா கருவிகளையுண்டாக்கி யடியேனைதனோடிங் கூடியிருந்து
ங்கூடாமல் நின்றும் வருகைக்கு விஞமே லருளிச்செய்கின்றது;

இறந்தோய் கரணங்க ளெல்லா மெனக்குச்
சிறந்தோ யெனினுமெய்த் தேவே - பிறந்துடனாங்
காயங் கொளவுங் கொளாமலுங் கண்டதுநீ
யாயன்கொல் பாதவத்தற்று.

வி-ம். இறந்தோய் கரணங்களெல்லாம் - கருவிகளாலறிதலை
க்கொண்டறியுமறிவுங் கெட்டாம லகன்றுநிற்கிறாய்,—எனக்கு
ச் சிறந்தோய் - அவையிற்றை யெனக்குண்டாக்கினாய்,—எனி
னும் - அப்படியுண்டாக்கவும்,— மெய்த்தேவே பிறந்துடனா
ங்காயங்கொளவுங் கொளாமலுங் கண்டதுநீ - மெய்கண்ட தேவ
னே பிறந்துடனாய் மெய்போலப் பொருந்தியிருக்கிற சரீரமிது
பொய்யென்று பொருந்தாமலும் பண்ணினது தேவரீர்,—ஆயன்
கொல்பாதவத்தற்று - இடையன்வெட்டின மரம்போலப் பாதி
பச்சையும் பாதியுலர்ந்ததும்போல மெய்யாயிருந்த சரீரம் பொ
ய்யென்றறிவித்து நீங்கியுநீங்காமலிருந்தது. (நு-ம்.) சரீரத்திலே
பொருந்தியிருக்கையிலே காயநீக்க மெப்படியென்னில் சரீரம்
பொய்யென்னறிவித்துத் திக்ஷாக்கிரமங்களினாலே மலங்களைப்
போக்கினபடியினாலேயு மருளிலே பொருந்தினபடியினாலேயுஞ்
சிவனிடத்திலே சம்பந்தமில்லாமல் காயத்திலே சம்பந்தமில்லை.
இதற்கு பி-ம். சித்தியாரில், "தெரிவரியமெய்ஞ்ஞானம் சேர்ந்
தவாறே சிவம்பிரகாசிக்குமிங்கே சீவன்முத்தனாகு, மூரியமல
மௌடதத்தாற் றடைப்புண்ட விடமுமொள்ளொளியினொளி முன்ன
ிருளுந்தேற்றின், வருபரல்சேர் நீர்மருவுகலங்களும் போலாகி
மாயாதே தன்சத்தியுமாய்ந்துகாயந், திரியுமளவும் மூளதாய்ப் பி
ன்புகாயஞ்சேராத வகைதானுந்தேயுமன்றே." எ-து. கண்டு
கொள்க. மெய்போலிருந்த சரீரம் பொய்யென்றதற்கு, பி-ம் இ

திரியார் "மண்டனில்வாழ்வும்வானத்தரசயன்மாலார்வாழ்வு, மெ
ண்டருபூதபேத யோனிகள்யாவுமெல்லாம், கண்டவிந்திரமாசா
லங் கனாக்கழுதிரதங்காட்டி, புண்டபோலின்றும்பண்பி னுலகி
னையசத்தமென்பர்." எ-ம். "கனாத்திடைத்தோன்றிநின்று கழி
யுமென்றறிந்தொருக்காய், உனக்குயிராயினவென்றும் வானவர்
வணங்கவைப்பன்" எ-ம். தேவாரத்தில். "வாழ்வாவதுமாயமி
துமண்ணாவது திண்ணம்," எ-ம். "இன்றுளோர்நாளையில்லை யென்
செய்வான் றோன்றினனே" எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொ
ள்க. (௧௩)

அடியேனுக்குப் புண்ணியபாவங்க ளுண்டென்கைக்கு வழி
யே தென்னும் வினாமே லருளிச்செய்கின்றது.

அற்றதென் பாச முற்றநுன் கழலே
யருட்டுறை புறையும்பொ ருட்சுவை நாது
வேறென் றிருந்த வென்னை யான்பெற
வேதின்மை கண்ட மெய்கண்ட தேவ
விருவினை யென்ப தென்னைகொ லருளிய
மனமே காயம் வாக்கெனு மூன்றி
னிதமே யகித மெனுமிவை யாயிற்
கனாத்திடை யழியுந் தினைத்துணை யாகா
காரணஞ் சடமதன் காரிய மஃதா
லாரணங் காம்வழி யடியேற் கென்னைகொல்
செயலெனா தாயினுஞ் செயலே வாரா
தியமன் செய்திய தற்கெனி னமையும்
பின்னையின் றுகு மன்னது யிங்குச்
செய்திக் குள்ள செயலவை யருத்தின்
மையறிரி யமற்கு வழக்கில்லை மன்ன
வொருவரோ யனைய மொருவா வொருவற்

இருவரும் வேண்டா விறைவனு மின்றனை
யின்னது கருணை சொல்லா யின்றே
யமைத்தது தப்பி னெமக்கவை யின்று
முள்ளது போகா தில்லது வாரா
துள்ளதே யுள்ள தெனும்புரை யதனாற்
கொள்ளும் வகையாற் கொடுத்திடு மாயின்
வள்ளன் மையேவா முன்னிட வினையு
மீய வேண்டு மெனும்விதி யின்று
மாயினு மென்னை யருந்துயர்ப் படுத்த
நாயி னேற்கு நன்றுமன் றாயக்
கருமமுங் கரும பந்தமுந்
தெருள வருளுஞ் சிவபெருமானே.

வி-ம். அற்றதென்பாச முற்றுங்கழிவே - தேவரீரநுக்கி ரகத்தினாலே யடியேனுக் குண்டாயிருக்கப்பட்ட பாசபந்தங்களை நீக்கினதுந் தப்பாது. உன்னுடைய திருவடியிலே கூடினதுந் தப்பாது— அருட்டுறை யுறையும் பொருட்சுவைநாத - திருவருட்டுறையாகிய திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட வடியேனுக் கினிமைப் பயனாயிருந்தவன்ன தம்பிரானே, — வேறன்றிருந்த வென்னையான் பெற வேறின்மைகண்ட மெய்கண்டதேவ-தேவரீரைவிட் டந்நியமாயிருப்பனென்று கண்டிருந்தவடியேனை யடிமையென்கிற முதலுங்கெடாமற் றேவரீரைவிட்டந்நியமாகாத முறைமையுங் கடாக்ஷித்தருளின மெய்கண்டநாதனே,—இருவினையென்ப தென்னைகொல் அடியேனுக்குப் புண்ணிய பாவ முண்டென்ற தெது காரணங்கொண்டு,— கொல்-ஐயம்—அருளியமனமேகாயம் வாக்கெனுமூன்றி னிதமே யகிதமெனு மிவையாயில்-தேவரீ ரருளிச்செய்யப்பட்ட மனத்தினினைவாலும் வாக்கின்சொல்லாலுங் காயத்தின் றொழிலாலு மு

ண்டாகப்பட்ட விருப்பு வெறுப்பினாலே யிருவினையாகிய புண்ணி
யபாவங்க ளுண்டாமாகில்,—கணத்திடையழியுந் தினைத்துணை
யாகா-அப்படி யுண்டாகப்பட்ட நினைவுஞ் சொல்லுந் தொழிலுந்
தோன்றினவுடனே யழிந்துபோமவையிற்றுக் கொருதினையளவு
கண்டிப்புமில்லையாம். அன்றியும்—காரணஞ்சடமதன் காரியமஃ
தால்-அந்த மனவாக்குக்காயங்களாகிய கன்மத்தின்காரணஞ்சட
மாயிருப்பதொன்று; அதன்காரியங்களு மப்படிச் சடமேயாதல்
ஆரணங்காம்வழி யடியேற்கென்னைகொல்-அப்படிச் சடமாயிரு
க்கப்பட்ட கன்மகாரியங்க ளடியேன்மேலெடுக்கிற ஜநநங்களி
லேவந்துபொருந்தி வருந்துகைக்குச் செயலுண்டாம் வழியெது
தான். கொல். ஐயம். அப்படி யந்தக்கன்மங்கள் சடமாயிருந்தா
லு நீயறிவாயுள்ளவனாகையாலே யுன்னோடுங்கூடி மயதாரத்திற்செ
யலுண்டாயிருக்கும்—சடமெனதாயினுஞ் செயலே வாராது-அ
ப்படி யடியேனுக்குச் செயலுண்டென்று சொல்லுகைக்குவழியி
ல்லை. அப்படியறிவுண்டாமாகி லடியே னிச்சைப்படியேமுடியக்
கண்டதுமில்லை. அன்றியும்—இயமன்செய்தியதற்கென்-அடியே
னுக்கப்படி வேண்டின காரியங்கள் செய்துக்கொள்ளுகிறதுக்குச்
செயலுண்டாமாகிலடியேனுக்கியமதண்டமுண்டாக்கத்தக்கபொ
ல்லாங்குகள் செய்துக்கொள்வதில்லை. அதுவுமன்றியும்,—தின்ன
மையும் பின்னையின்றும்-அப்படி யடியேனுக்குவேண்டுங் கா
ரியஞ்செய்துகொள்ளத்தக்க செயலுண்டாமாகில் தேவரீர்செய்வி
க்கிறதுமில்லையாய்முடியும்—அன்னதுமிங்குச் செய்திக்குள்ளசெ
யலவையருத்தின்-அப்படித் தேவரீர்செய்விக்கிறது மிப்பொழுத
டியேன்செய்த கன்மத்துக்குத்தக்கது மேலைக்குப்புசிப்புமாகில்—
மையறியமற்கு வழக்கில்லையன்ன-தம்பிரானே மயக்கமற்றவிய
மனடியேனைத் தண்டப்படுத்துகைக்கு வழக்கில்லையாம். அப்படி
யானாலு நீசெய்ததற்குத்தக்கது நாமுஞ்செய்விப்போ மியமனுந்த
ண்டப்படுத்துவன் என்னில்,—ஒருவரேயமையு மொருவரொ
ருவற் கிருவரும்வேண்டா. அநுவயம், ஒருவரொருவற் கொரு

வேயனையு மிருவரும்வேண்டா-ஒப்பற்றதனிமுதலாயுள்ளவனே
யடியேனொருத்தனுக் கொருத்தரேயமையும் தேவரீரு மியமனுங்
கூடித்தண்டிக்கவேண்டுவதில்லை; ஆகையால்,—இறைவனுநின்
றனை-சர்வமுந்தேவரீர் செயற்பாடென் றிருக்குமிடத்துவேறேயு
மொருவனைக்கூடித் தேவரீர் செயற்பித்துகில் தேவரீர்சர்வகர்த்
தாவென்கிறதுமின்றே யின்றது. அதுவேனென்று கேட்டருளு
கில்—நின்னதுகருணைசொல்லவின்றே-தேவரீர்காருண்ணியத்
தின் பகுதியை யடியேனால் விண்ணப்பஞ்செய் தளவுபடுத்தத்
க்கதல்லவே. அப்படியிருக்க—அமைந்ததுதப்பி னெமக்கினை
யின்று முள்ளதுபோகா தில்லதுவாரா துள்ளதேயுள்ள தென்றுமு
றையதனால் அமைந்ததுதப்பி னெமக்கினையின்றும் - அடியே
னுக்குண்டாகிய கன்மம்யாதொன்றுண்டு அதுபோகாது இல்லா
தகன்மங்கள்வாராது ஆகையால் யாதொன் றூழிலே யுண்டாக்க
ப்பட்டதுவே யிப்பொழுதுண்டாமென்று தேவரீரருளிச்செய்த
திருவாக்கினு லடியேனுக்குண்டான பிராரத்தம்புசிக்கிறதொழிய
மேலைக்குற்பத்தியாக வாகாமியமுண்டாகைக்குவழக்கில்லையே—
கொள்ளும்வகையாற் கொளுத்திடுமாயின்-பிராரத்தம்புசிக்குமி
டத் தாகாமியமுண்டாமென் றருளிச்செய்யில்—வள்ளன்மையெ
வா முன்னிடவமையும் - தேவரீருக்குண்டாகிய வளப்பாடுகளெ
ல்லா நினைந்திருந்தாற்போதும், அன்றியும்—ஈயவேண்டுமெனும்
விதியின்றும்-அப்படிப் பிராரத்தம்புசிக்குமிடத் தாகாமியமேறு
மாகில் கொடுத்துப் புண்ணியம்பெறவேணுமென்றநூல்களை விதி
க்கவேண்டுவதில்லையாம்—ஆயினும்-அடியேன் கேட்ட வினாவுக்
குத் தேவரீர் புலப்பட வருளிச்செய்ததில்லையாகிலுமின்னமுந்தே
வரீரருளிச்செய்யாம லடியே னறியும் பகுதியில்லை—என்னை யரு
ந்துயர்ப்படுத்த நாயினேற்கு நன்றுமன்மாயக் கருமமுங் கருமபந்
தமுந் தெருளவருளுசிவபெருமானே. அநுவயம். என்னையருந்து
யர்ப்படுத்த கருமமுங் கருமபந்தமு நாயினேற்குநன்றுமன்மாயத்
தெருளவருளு சிவபெருமானே - அடியேனுக்கரிய துக்கங்களையு

கூட்டி முடியாதபொழுது — அமலனுமின்னருடான் றேவனே யாதுக்கோ தேர்-பின்மலஞ்சிய வன்னுடையவருளானது தானே தாக்குண்டானதென்று திருவுளத்திலே விசாரித்தருளிச்செய்தருள் (க-து.) கன்மமுமநாதி யான்மாவுமநாதி சிவமுமநாதியானமையினு லே யநாதியாக்சித்த கன்மத்தைக் கர்த்தா கூட்டி முடிப்பனென் பதாம். உ-ம், சிவஞானபோதத்தில். அவ்வினையைச்செய்வதனில வ்வினைஞர் தாஞ்சென்றுங், கவ்வினையைக் காத்தபாசம்போ-வ வ்வினையைப், போகமூட்டும் பிராணிநுகராரோ, வார்ந்தமறிந்த வினைப்பா ராங்கு எ-து. கண்டுகொள்க. (௩௫)

இங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மங்கள் தே...சி ...ணைக்க ளினுலே சந்திப்பன்னாமிருக்கவு மினவும் புசிக்கைக்கு முதி யேதெ ன்றார் விறுமே யருளிச்செய்கின்றது.

தோரா தூனைப்பன் றொருமை துணைத்தொடு
போரா தருஞ்ஞம் பெரியோர் கடனே
தின்னினைக் கலப்பதென் றுண்மை யெனின்
தின்னது நேர்மை சொல்பனத் தின்றே
யெழுவகைத் தாதுவி னெழுதூலே யிரண்டும்
பெருமுறைக் குரம்பையிற் பெய்தசுத் தடக்கி
நீக்கி யென்றுனைப் போக்கற நிறுத்தி
யிச்சை முதலிய வெழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது சிறக
வாக்கு மனமும் போக்குள தாவுஞ்
சொல்லு நினைவுஞ் செய்யுஞ் செயலு
நல்லவுந் தீயவு மெல்லா மதித்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றாய்க்
காலமுந் தேசமு மளவு வகுத்து
நடுவுநின் றருந்தலி னடுவனுங் குறியே

சான்றோர் செய்தி மான்றிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
யத்துவா மெத்தி யடங்கா வினைகளுஞ்
சத்திசெய் தனையே யொத்தகன் பத்திமை
சிங்கன வென்னை யூக்கும் வினைகளு
மாங்கவை யருத்துவ தானா லொருவரும்
கருமப் பெருத்துக் கடனாது வின்றுக்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுண் மணிய கருத்தினுட் கருத்த
வெண்ணெய் வேந்த வெய்கண்ட தேவ
விடர்ப்பவ குரம்பையு ணிருத்தித்
துடைப்பதெவ் வாவரு டோன்றிடச் சொல்லே.

வி-ம். தொரா துரைப்பன் றெருமராவனத்தொடு-தேவரீர்சந்நிதியிலொருவிரு விசாரியாமல் விண்ணப்பஞ்செய்கிறேன் அடியேன் விதனத்தையுற்றவனாகையினாலே, அன்றியும்,—பொறாதகுறைதல் பெரியோர்கட்டனே-பேதையாயிருக்கப்பட்டவர்கள் தங்கள் தாகத்தின் மிகுதியாலே தங்களுக்கு வேண்டின தொன்றையெழுந்து புத்தியாக விண்ணப்பஞ்செய்தாலு மவர்கள் தாகங்கண்டிடனே கொடாநின்றதது பெரியோர்களுக்கு முறைமையாகையாலும் விசாரியாமல் விண்ணப்பஞ்செய்தேன். அது வேதென்று கேட்டருளுகில்,— நின்னைக்கலப்ப தென்னுண்மையெனின்-தேவரீரைக் கூடி யநுபவிக்கிறது அடியேனுடைய வற்பபோதமாமென்று தேவரீர் திருவுளம்பற்றுகில்,—நின்னதுசோர்மைசொன் மனத்தின்றே-தேவரீருடைய நட்பத்தை விசாரிக்குமிடத்து வாக்கு மனத்துக்கு மெட்டப்பட்டதல்லவே, அப்படியிருக்கிற தேவரீருக்குள்ளே யடங்கியிருக்கப்பட்ட வடியேனைத் தேவரீர்—வழுவமைத்தாலுவி னெழுதிவிரண்டும் பெருமழைக்குத

யொன்பதாம். ௨-ம். போற்றிப்பஃறொடையில். "உள்ளமென்னு
நீங்கா தொளித்திருந்து தோன்றுகின்ற, கள்ளமின்று காட்டுங்க
ழல்போற்றி" எ-து. கண்டுகொள்க. (௫-ம்.) எழுவகைத்தோற்றங்
களினாலும் நவத்துவாரங்களினுடைய மிந்தச் சரீரத்திலே பொருந்
தவைத்து மூலமலமும் பற்றி யடியேனுக் குண்டாயிருக்கப்
பட்ட விச்சாஞானக்கிரியைகளையும் பிரிப்பித்து நடப்பித்ததைக்
கொண்டாட்டமாயிருந்ததென்று சொல்லுவானேனென்னில்சிவ
னைப்பொருத்தியுஞ் சரீரபெந்தத்திலே வைப்பானேனென்பது
கருத்து. அது மலசம்பந்தமாகையாலே மலத்துடனுக்கு மலநீ
ங்கவேண்டி மாயையாகிய கோல் கொடுத்ததென வறிக. பி-ம்.
போற்றிப் பஃறொடையில். "கட்டறுணர்வார் தங் கைக்கொடு
த்த கோலேபோற் பொற்புடையமாயைப் புணர்ப்பின்கண்"
எ-து. கண்டுகொள்க. மனோவாக்குக் காயங்களினாலே யார்ச்சிக்க
ப்பட்ட புண்ணியபாவங்களைத் தேவரீர் திருவுள்ளத்தடைத்தருளி-
க்கன்மங்களை நடுவனாக நின்று புசிப்பிக்கையினாலே நடுவனென்று
சொல்லப்பட்டிருக்கவும் பெரியோர்களியல்புக்கு மயக்கமுமுண்
டாகாதே யுறக்குவதுவுந் திருப்பண்ணினதுண்டே. * கன்மசம
த்துவத்திலே போனதென்னவெனில், கன்மசமத்துவம்வந்தவி
டத்துச் சத்திநிபாதமுண்டாயதினாலே கர்த்தா வாசாரியமூர்த்தி
மாகத் திருமேனிகொண்டுவந்து தீக்ஷாக்கிரமங்களினாலே யந்து
வாசத்திபண்ணி மலத்தைப்போக்கி யிரக்ஷிப்பன். பி-ம். சித்தி
யாரில், "அநாதிமுத்தனைப் பரனையசலனையெல்லா வறிவுதொழி
லனுக்கிரகமுடையவனாங்கன்ம, நூனாதிகமற் றொத்தவிடத்தேசத்
திபாத நுழைவித்துமலங்களெலா நீக்கநோக்கி, மனாதிகரணங்
களெல்லாமடக்கித் தன்னை யறிவிப்பதெல்லாமருளிமாக்கருணைக்கை
யா, லினாதுபிறப்பினின்று மெடுத்துமாளு மின்பமுத்திக்கே

---

* கன்மசமத்துவமாவது புண்ணியபாவங்க ளிரண்டிலேயு
மொவ்வாப்புவந்தது.

டைப்பனெனக்கன் முத்தியிதுவே'' எ-ம். போற்றிப்பஃறொடை
யில் ''காடும்வினை, யெல்லையிரண்டு மிடையொப்பிற்-பல்பிறவி,
யத்தமதிலன்றே வளவென்றுபார்த்திருந்து, சத்திபதிக்குந் தரம்
போற்றி - முத்திதரு, நன்னெறியிற் ஞானகலர் நாடுமலமொன்றி
னோயு, மன்னிலையே யுண்ணின் றருட்தருளிப்-பின்னன்பு, மேவாவி
ளங்கும் பிரளயாகலருக்குந், தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்-
புவலயத், தன்னின்றுஞ்சகலர்க்கேபோல,முன்னின்றும்
மலத்தீர்த்தாட் கொள்கை.'' எ-ம், கண்டுகொள்க. இப்படிச்சத்
திபண்ணி யிருக்குமிடத்தும் பிராரத்தமாகிய வினை புசிக்கவேண்டு
மோ ? சத்திபண்ணின ஆன்மாக்களை. அதெப்படியென்னில்
சற்சித மாசாரியர் ஞானதிருஷ்டியினாலு மாகாமியமாசாரியர்கை
த்தஞானத்தினாலும் பிராரத்தம்சரீரத்தோடேயுந்நீங்கும். பி-ம்.
சிவப்பிரகாசத்தில், ''நிற்குமாலய போசனைவினை திரிவிதத்
தால் நீங்கிட'' எ-ம், திருவாதவூரருக்கு அனுக்கிரகம்பண்ணினதி
ல், ''விரிந்த சஞ்சிதவினைகளென்புறும் விழிக்கவெந்தது விருப்பு
மிப்பிறப்பிற், புரிந்தவல்வினை யுடலுடனகலும் புந்திசேரருள் வ
ருவினைபோக்கு'' எ-ம், திருவருட்பயனில், என்றவினையுடலோ
டேகுமிடை யேறுவினை தோன்றி லருளேகும். எ-ம். சித்தியா
ரில். ''அரும்பருவ மடைதலுமே யாசானாகித், தோன்றிஞானாதல
னை முற்செய்கன்மத் தகளறுத்தங் கத்துவாதொடக்கறவே சோ
தித், தேன்றவுடற் கன்மமநுபவத்தினாலறுத்திங்கினிச்செய்கன்ம
மூலமலஞானத்தாலிடப்பன். எ-ம். சொன்னது கண்டுகொள்க.
ஆகையாலே யாசாரியர் கடாக்ஷத்தினாலே மோக்ஷத்தையடைந்
தாலும் பிராரத்தம் புசிக்குமளவும் சரீர நிற்குமென்றது. ஆனால்
ஞானவான்கள் புசிக்கிறது பிராரத்தமுமாயவர்கள்தேகமும்பிரா
ரத்ததேகமானு லவர்களை யர்ச்சனைபண்ணினதினாலேயு நிவேதித்
ததினாலேயு மான்மாக்கள் கதியடைவார்களென்றுசொல்லவேண்
டாதில்லையென்னில் அவர்கள் போகத்தி லவனே யேற்றுக்கொள்
ளுகையினாலே சிவபோகமாச்சுது, மாயாப்தார்த்தத் சிவபோக

மாமோ வென்மாயா பதார்த்தஞ் சுத்திபட்டு மந்திரமயமாய்மந்தி
ரமூ ஞானதிருஷ்டியினுலே பார்க்கப்பட்டு ஆன்மாவைச்சிவனு
டலாக்கொண்டு புசிக்கையினுலே சிவபோகமாச்சுது. பி-ம். உ
ண்மைநெறி விளக்கத்தில். "பாதகங்கள்செய்திடினுங்கொலைகளை
வுகள்ளுப்பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றிவரினுஞ், சாதி
நெறிதப்பிடினுந் தவறுகள்செய்திடினுந் தக்கெனவேவார் செய
லற்றுந் தானதுவாய்நிற்கி, ஞாதனிவனுடலுயிரா யுண்டுறங்கி நட
ந்து நாநாபோகங்களையுந் தானாகச்செய்து, பேதமற நின்றிவனை
த்தானாக்கிவிடுவன் பெருகுசிவயோகமெனப் பேசுநெறியிதுவே.
எ-து. கண்டுகொள்க. அவர்கள்திருமேனிபிராரத்ததேகமல்லவெ
ன்றதற்குத்திருஷ்டாந்தம்; திருஞானசம்மந்தமூர்த்திகடாக்ஷம்பெ
ற்ற கலியாணத்துக்குவந்த ஞாதாக்கள் திருமேனியடங்கலுஞ்ஞா
னத்திலே பொருந்துகையினுலும் அப்பர்சுவாமிகள் திருமேனி
சர்வான்மாக்களுங்காண ஞானப்பிழம்பாகிய மகாலிங்கத்திலே
யடைதலினுலும் பட்டணத்துப்பிள்ளை ஞானமாகிய லிங்கமாய்
முளைக்கையினுலேயும் திருவாதவூரர் சர்வான்மாக்களுங் காணத்
திருவாசகத்துக்கு உண்மைப்பொருளைக்கேட்கப் பொருளிதுவெ
ன்ற ஞானாகாசத்திலே பொருந்தினபடியினுலேயும் பிராரத்ததே
கமாகிய மாயாதேகத்துக்கும் ஞானத்துக்குஞ் சம்பந்தமில்லாதப
டியினுலே அவர்கள் திருமேனியுஞ்ஞானமென்றே கண்டுகொள்க.

சர்வான்மாக்களுந் தேவரீருக்கடிமையாக விருக்கையிலேயு
ஞ் சிலர்க்குத் திருவருள்கடாக்ஷித்தும் சிலர்க்குக் கடாக்ஷியாமலு
மிருப்பானேனென்றுகேட்கும் வினுமே லருளிச்செய்கிறது.

சொற்பெருமம்பு கொள்ளாநீ சூழ்ந்ததுவு நிற்செயல்கண்
மற்றவர்க ணின்னோக்கின் மாய்ந்தவுயிர்க்-குற்றங்
கொளுத்தியாங் கைய வுயர்வெண்ணெய் நல்லூர்க்
குளித்தமுக் கொன்றையங் கோ.

வி-ம். சொற்றெழும்பு கொள்ளீ சூழ்ந்ததுவும்-சர்வான்மாக்களுந் தேவரீருக்கடிமையாக விருக்கவுஞ் சிலர் தேவரீர்திருவருளைப் பெறத்தக்கதான வடிமைத்திறங்கள் செய்துவரு முபாயங் கொடுத்தருளிநும்,—நிற்செயல்கண் மற்றவர்கள் - மற்றுள்ளபெத்தான்மாக்களையுந் தேவரீர் சேட்டைப்படுத்துகையினுலே செயற்பட்டுவருகிறவர்கள் இங்ஙனமிரண்டுவகையிலுள்ள ஆன்மாக்களுந் தேவரீராலே செயற்பட்டு வருமிடத்தும்,—நின் ஞெக்கின் மாய்ந்தவுயிர்க்குற்றங்கு - தேவரீர் திருக்கண்சாத்தினுலே செயலறுகைவந்த வான்மாக்களிடத்திலே யநுக்கிரகஞ்செய்து பிரகாசித்துநின்றும்,—ஒளித்தியாங்கு-மற்றுள்ளபெத்தரிடத்திலே கூடிநிற்குமிடத்து மறைந்துநின்றும். இங்ஙனம் வருகிறமுறைறமையை ஐய - அடியேனுக்குச் சுவாமியாயுள்ளவனே.—உயர்வெண்ணெய் நல்லூர்க் குனித்தமதுக் கொன்றையெங்கோ - சிறப்பினு லுயர்ந்திருக்கப்பட்ட திருவெண்ணெய்நல்லூரிலே மதுக்களினுல் முழுகப்பட்ட கொன்றைமாலையைச்சாத்தி யெழுந்தருளியிருக்கப்பட்ட கர்த்தாவாயுள்ளவனே,—சொல் - அடியேன் விண்ணப்பஞ்செய்த காரியமிரண்டையு மருளிச்செய்தருள் (க-து.) சிவன் கத்தாவென்கிறதும் ஆன்மாக்க ளடிமையென்கிறதும் பொது. இனிச் சிறப்பாவது கத்தாவை யாண்டவனென்றறிந்து இரண்டற்றவன்பினுலே வழிபடுகின்ற ஞானவான்களுக்குத் தயிரினெய்போற் றோன்றியிருப்பன். ஆண்டவனடிமையென்றறியாத பெத்தான்மாக்களிடத்திலே பாலினெய்போலத் தோன்றாதுநிற்பன், உ-ம், சிவஞானபோதத்தில், "தன்னுணரு நேசத்தர்தம்பானிகழுந்தநெய்போற் பாசத்தார்க் கின்றும்பதி" எ - ம். திருவாசகத்தில், "அரசேபொன்னம்பலத்தாடும்" என்னும் செய்யுளில் "பிறைசேர் பாலினெய்போலப் பேசாதிருந்தா லேசாரோ." எ-ம். தேவாரம். "விரகிற்றீயினன் பாலிற்படுநெய்போல், மறைய நின்றுளன் மாமணிச்சோதியான்,எ-ம். வருமேதுக்களை கண்டுகொள்க.

இங்ஙன முயிர்க்குயிராய் நின்று காரியப்படுத்துகிற சிவன் பெத்தத்தில் மறைந்துநின்று காரியப்படுத்துகிற முறைமையு முத்தியிற் பிரகாசித்துத்தான் மேலிட்டுநின் றுபகரிக்குமுறைமையு மேலருளிச்செய்கின்றது.

கோலங்கொண்ட வாறுணராதே
ஞாலங்காவல னியானெனக்கொளீஇப்
பொய்யைமெய்யெனப் புகன்றுழையத்
தோடாப்பூட்கை நாடிநாட
வென்னுட்கரந்தென் பின்வந்தருளி
யென்னையுந்தன்னையு மறிவின்றியற்று
மென்னதியானென்று மகந்தையுங்கண்
டியாவரியாவையு மியாங்கணுஞ்சென்று
புக்குழிப்புக்குப் பெயர்த்துழிப்பெயர்த்து
மிக்கபோகம் விதியால்விளைத்திட்
டெற்பணியாளா யெனைப்பிரியாதே
யோடிமீள்கென வாடல்பார்த்திட்
டென்வழிநின்றனை னெந்தையன்றே
வருண்மிகவுடைமையி னருட்டுறைவந்து
பொருண்மிகவருடலும் பொய்ப்பகையாதலுங்
கைகண்டுகொள்ளெனக் கடலுலகறிய
மெய்கண்டதேவனெனப் பெயர்விரீஇத்
தன்னுட்கரந்து தான்முன்னாகித்
தன்னதுந்தானுமா யென்னையின்றாக்கித்
தன்னையுமென்னையுந் தந்துதனது
செய்யாமையுமென்னது செயலின்மையு

பெம்மான்காட்டி யெய்த
லம்மாவெனக்கே யதிசயந்தருமே.

வி-ம். சோலங்கொண்டவாறுணராதே ஞாலங்காவலனியா
னெனக் கொளீஇ-தூக்கத்துக் கேதுவாயிருக்கப்பட்ட சரீரத்தை
யெடுத்தோமே யென்கிறதை விசாரியாமல் பூமிக்கிராசாவாயிருக்
கிறவ னல்லோவென்று கருதிக்கொண்டு,—பொய்யைமெய்யெ
னப்புகன்று-அசத்தியமா யிருக்கப்பட்ட தேகாதிப்பிரபஞ்சத்தை
சத்தியமென்று சொல்லிக்கொண்டு,—வையத்தோடாப் பூட்கை
நாடகாடா வென்னுட்கரந்து-பிரபஞ்ச வியாத்தி பண்ணுகிறதே
மேற்கொளாகவிருப்பதைச் செய்து நமக்கொருகத்தாவுண்டென்
றுவிசாரியாதபடி யெனக்குள்ளே மறைந்துநின்று,—என்பின் வந்
தருளி - நான்செய்யுஞ் செயலுக்கெல்லா மொத்தொழுகிநின்று,
—என்னையுந்தன்னையு மறிவின்றியற்று மென்னறியாதெனு மகந்
தையுங்கண்டு நாமோரடிமையையென்றுந் தாமொருநாயனென்னு ம
றியாமற் செய்கிற யானெனதென்னு மகந்தையுங்கண்டு,—யாவரி
யாவையு மியாங்கணுஞ்சென்று-உயர்திணை யஃறிணையாகியயோ
னிபேதங்களினும் பூமியந்தர சுவர்க்கமென்கிற வுலகங்களினுமெ
ன்னோ டொக்கச்சென்று,—புக்குழிப்புக்கு-நான்சென்று ஜனிக்கி
றவிடங்களிலேதானு மொக்கப்புகுந்து,—பெயர்த்துழிப்பெயர்த்
து-நான் விட்டுப்போருமிடத்துத் தானுமொக்கப்போந்து,—மிக்
கபோகம் விதியால்விளைந்து - வெகுவிதபோகங்களையு மெனக்
குள்ள முறைமையின்படியேயுண்டாக்கி —இங்கெற்பணியாளாய்
இவ்விடத்தென்னையூட்டி யுறக்கிநிற்கிற பண்ணையாளுமாய்,—எ
னைப்பிரியாதே-என்னைவிட்டு நீங்குவதுஞ் செய்யாமல்,—ஓடிமீ
ள்கெனவாடல் பார்த்திட் டென்வழிநின்றன னெந்தையன்றே-
நான் சநநமரணப்பட்டுப் போக்குவரவுசெய்கிற நாடகத்தையும்
பார்த்துத் தன்முதன்மையும்விட் டென்வசத்திலேநின்று னெம்
முடைய சுவாமியாயுள்ளான். இஃதாச்சரியம், இந்தநிலைபெத்தம்

மேல்முத்தி. அருண்மிகவுடைமையின் - தனக்குக்கிருபைமிகுந்த திருக்கைலையினாலே,—அருட்டுறைவந்து - திருவெண்ணெய்நல்லூராகிய திருப்படைவீட்டிலே திருவவதாரஞ் செய்தருளி,—பெருண்மிகவருடலும் சிவாநுபவமாகிய பொருளானது மிகுதியாக நின்று அநுக்கிரகிக்கிறதையும்,—பொய்ப்பகை யாதலும் - அந்தப்பொருள் பிரபஞ்சமாகிய பொய்யைக்கடிந்து நீக்கிறவழக்கையுங்,—கைகண்டுகொள்ளென பிரத்தியக்ஷமாகக்கண்டுகொள்ளெனக் காட்டியருளி,—கடலுலகறிய மெய்கண்டதேவனெனப் பெயர்வீஇ - சமுத்திரஞ்சூழ்ந்த வையகத்தா ரறியத்தக்கதாக மெய்கண்டநாதனென்கிற திருநாமத்தினையும் பரப்பியருளி,—தன்னுட்கரந்து தான்முன்னாகி - தன்னுடைய பேரறிவினுள்ளேயென்னுடைய சிற்றறிவை யடக்கிக்கொண்டுதன் செயலேமேலீடாக—தன்னதுந்தானுமா யென்னையின்றாக்கி தன்னுடையவருளுந்தானுமா யென்னையு மென்னுடைய ஞானத்தோற்றத்தையு மடக்கி தன்னையு மென்னையுந்தந்து தானொருமுதலுண்டென்கிறதுங்கெடாமல் யானொருமுதலுண்டென்கிறதுங் கெடாமலெனக்குப்புலப்படவறிவித்து,—தனது செய்யாமையுமெனது செயலின்மையும் தான் சர்வமுங் காரியப்படுத்தி நிற்குமிடத்துந் தானொன்றிலுஞ்சுட்டியறியாமற் றோய்வறநிற்கிற முறைமையினையு நான்சர்வமுஞ் செய்து நிற்குமிடத்து மென்றாலொன்று முடியாதென்கிற செயலறுதியையும்,—எம்மான் காட்டியெய்தல்-எம்முடைய சுவாமியாயிருக்கிறவ னெனக்குத் தரிசனப்பட்டுநின்ற முறைமையைப்பார்த்தவிடத்து,—அம்மா வெனக்கேயதிசயந் தருமே-மிகவுங் கொண்டாடப்பட்டு எனக்குத்தானே யாச்சரியத்தையுந் தாராநிற்கும்.()

இங்ஙனம் பாசக்ஷயம்பண்ணின வாச்சரியத்தை மேலருளிச் செய்கின்றது.

தருமாதருமத் தலைநின்றாழ்வேனைக்
கருமாகடல்விடமுண் கண்டப்-பெருமான்

திருவெண்ணெய்நல்லூர்ச் சுவேதவனத்தா
னுருவென்னவந்தெடுத்தா னுற்று.

வி-ம். தருமாதருமத் தலைநின்றுழ்வேனை - தன்மமாகிய பசு புண்ணியத்தையு மதன்மமாகிய பாவத்தையுஞ்செய்து துக்கசாகரத்திலே கிடந்தழுந்துகிற வென்னை, — கருமாகடல் விடமுண்கண்டப்பெருமான் - கருமைபொருந்தின மகத்தானசமுத்திரத்திலே யுண்டாகப்பட்ட நஞ்சினை யமுதுசெய்தடக்கப்பட்ட கண்டத்தினையுடைய கத்தாவாயுள்ளவனே, திருவெண்ணெய்நல்லூர்ச் சுவேதவனத்தான் - திருவெண்ணெய்நல்லூராகிய திருப்படைவீட்டிலே யெழுந்தருளியிருக்கப்பட்ட சுவேதவனப்பெருமானென்னும் பிள்ளைத்திருநாமத்தையுடையவன், உருவென்ன வந்தெடுத்தானுற்று - சரீரதொந்தனைப்பட்டு நிற்கிற வென்னைப்போலே யுருப்பட்டுவந்து நான் நரகக்குழியிலழுந்தாமலெடுத்துத்தனது திருவடியிலே கூட்டிக்கொண்டருளினன். (௧௧)

கத்தா விங்ஙன மாசாரியமூர்த்தியாகத் திருமேனிகொண்டெழுந்தருளிப் பாசச்சேதனம்பண்ணித் தனது காருண்ணியமாகியவுண்மைஞானத்தைக் கடாக்ஷித்த முறைமையை வியந்துரையாகப் புகழ்ந்தமுறைமை மேலருளிச்செய்கின்றது.

உற்றவர்பெற்றவ ரற்றவர்முற்று
மற்றவர்க்கற்றவ னல்லவர்க்கல்லவ
னந்தமாதி யில்லவன்வந்து
குரக்குமனத்துக் கொடியேன்பரக்கும்
பாரப்பைக்குவித்து நிறுத்திப்பிடித்திட்
டருள்வெளியாகு மருளினையறுத்து
வந்துபுகுதலுஞ் சென்றுநீங்கலு
மின்றியொன்றாய் நின்றவந்நிலையி
லொன்றாகாம லிரண்டாகாம

லொன்றுமிரண்டு மின்றாகாமற்
றன்னதுபெருமை தாக்காணாயினு
மென்னதுபெருமை யெல்லாமெய்தித்
தன்னையெனக்குத் தருவதையன்றியு
மென்னையுமெனக்கே தந்துதன்னது
போகந்தப் பெருங்கடலதனு
ளாராவின்ப மளித்துத்தீரா
வுள்ளும்புறம்பு மொழிவின்றிநின்ற
வள்ளன்மைகாட்டி மலரடியருளிய
மன்னனெங்கோன் வார்புனற்பெண்ணை
வெண்ணெய்க்காவலன் மெய்கண்டதேவ
னண்ணலருளா லயத்தனண்ணிய
மலமுத லாயினமாய்க்கு
மூலசவுயிர்க்கெல் லாமொருகண்ணே.

வி-ம். உற்றவர்பெற்றவ ரற்றவர்முற்று மற்றவர்க்கற்றவன் - தனதுறவின் முறையாராயுள்ளவர்கள் மாதாபிதாக்கள் தனக்கு வேற்றுமையற்றிருக்கப்பட்ட ஸ்ரீ மற்றுமுண்டான தனதான்னிய க்ஷேத்திரங்கள் முதலாயுள்ள சர்வவுபாதியாயிருக்கப்பட்ட தேகாதிபிரபஞ்சத்தை நீங்கினவர்களுக் கிரண்டற்றுப் பிறிவறநிற்கப்பட்டவன், அல்லவர்க்கல்லவன் - அப்படிச் சர்வவுபாதிகளையுநீங்காதவர்களுக்கு வேருய்நிற்கப்பட்டவன், அந்தமாதியில்லவன் - தனக்குமுடிவுமுதலுமில்லாதவன், வந்து-ஆசாரியமூர்த்தமாகத்திருமேனிகொண்டெழுந்தருளிவந்து - குரக்குமனத்துக் கொடியேன்பரக்கும் பரப்பைக்குவித்து - குரக்குப்போதம்போல வொன்றிலுந் தரிப்பில்லாமலெழுந்தது புத்தியாகத்திரிகிற பாவியாயிருக்கிறவென்னைப் பிரபஞ்சப்பரப்பில் திரிகிறவியாத்தியை யொடுக்குவித்து, நிறுத்திப்பிடித்திட் டிருள்வெளி யாகுமருளினையறுத்து

தனது திருவடி ஞானத்திலே நிறுத்திப் பழைய பிரபஞ்சவாதனையி
லேபோகாமற் பிடித்துக்கொண்டு கேவலசகலமென்கிற மயக்கத்
தையுநீக்கி, வந்துபுகுதலுஞ்சென்று நீங்கலுமின்றிதான்வந்தென்
னுள்ளத்திற் புகுதுகிறதும் நான்சென்று தன்னோடேகூடி யெனை
க்குண்டானபாசங்களை நீக்குகிறதுமில்லாமல், ஒன்றாய்நின்றவந்நி
லையில் - அநாதியேதானு நானுநீங்காமல் நின்றநிலையிலே, ஒன்றா
காம லிரண்டாகாமல் - தானுநானு மொன்றுபடுவதுஞ்செய்யாம
லிரண்டுபடுவதுஞ் செய்யாமல், * ஒன்றுமிரண்டு மின்றாகாமல்
தானும்யானும் ஒன்றுபட்டு நிற்கிறதும் பெறுவானும்பேறுமாயிர
ண்டுபட்டு நிற்கிறது மில்லையாகாமல், தன்னதுபெருமை தாக்கா
ளுயினுமென்னது பெருமை யெல்லாமெய்தி - தனக்குண்டான
சர்வஞ்ஞமும் பஞ்சகிருத்தியமுமெனக் குண்டாக்கினனில்லையாயி
னுமெனக் குண்டாயிருக்கப்பட்ட விச்சாஞானக்கிரியைகளையும் வி
யாத்திவியாபகங்களாகிய பெருமையு மிவைகளெல்லாந் தன்னு
டைய பூரணத்திலே யடக்கிக்கொண்டு, தன்னையெனக்குத்தருவ
தையன்றியு மென்னையு மெனக்கேதந்து - தன்னுடைய வாநந்த
சொரூபத்தை யெனக்குக் கடாக்ஷித்ததுமன்றியேயந்தப்பேரின்
பத்தோடுங்கூடி யநுபவித்திருக்கிற வான்மபோதமாகியசிற்றறிவு
கெடாமற் கெட்டுநிற்கிற முறைமையுமெனக்குக்கடாக்ஷித்தருளி
—தன்னதுபேரானந்தப் பெருங்கடலதனு ளாராவின்பமளித்து
தன்னுடையபரிபூரணமாகிய வாநந்தவெள்ளமான பெரிய வருட்
சமுத்திரத்திலே விளையப்பட்டிருப்பதாய் வொருகாலத்தினுமுவ
ட்டாத வின்பத்தை யெனக்குக் கடாக்ஷித்தருளி,—நீராவுள்ளும்
புறம்புமொழி வின்றிநின்ற வள்ளன்மைகாட்டி ஒருகாலத்திலும்
விடப்படாம லகம்புறமெங்கும் பூரணமாய்நின் றனவரதமு மறி

---

* ஒன்றாகாமலிரண்டாகாம லொன்றுமிரண்டுமின்றாகாமல் என்பதற்கு, பேதமுமபேதமும் பேதாபேதமுமாகாமல் என்று பொருளுரைப்பினுமாம்.

வித்துயிர்க்கிற வளப்பாட்டையுந் தரிசிப்பித்து,—மலரடியருளிய
மன்ன-தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதத்தைக் கடாக்ஷித்தருளின
தம்பிரானே,—எங்கோன்-எமக்குக் கத்தாவா யுள்ளவன,—வார்
புனற்பெண்ணை வெண்ணெய்க்காவலன் - மென்மேலும் வருகி
றபுனலினாலே பெருகப்பட்ட பெண்ணையாற்றையுடைய திரு
வெண்ணெய்நல்லூருக்குக் கத்தாவா யிருக்கப்பட்டவன்,—மெய்
கண்டதேவன்-மெய்கண்டதேவனென்கிற திருநாமத்தினை யுடை
யவன்,—அண்ணல் - எனக்குச் சுவாமியா யிருக்கிறவன்,—அரு
ளாலயத்தன் - தனதருளே கோயிலாக வெழுந்தருளி யிருக்கப்ப
ட்டவன்,—நண்ணிய - என்னைவந்து பொருந்திய,—மலமுதலா
யினமாய்க்கு மூலகவுயிர்க்கெல்லா மொருகண்ணே-ஆணவமலமு
தலாயுள்ள மலங்களையெல்லாஞ் சேதனம்பண்ணினவன் சர்வ
லோகங்களினுமுள்ள வான்மாக்களுக்கெல்லா மோரறிவாகநின்
றநுக்கிரகஞ்செய் தருளுகிறவன்(நு-ம்.)அற்றவர்க்கற்றவன்-எ-து
தேகாதிபிரபஞ்சங்களை நீக்கப்பட்ட தபோதனர்க்குக் கத்தாவிரா
ண்டற்று நிற்பனென்று பொருள்கூறியதற்கு. பி-ம். தேவாரம்.
"உலகினிலியற்கையையொழித்திட், டற்றவரகத்துச்சிவனுறைகி
ன்றவாலவாயாவதுமிதுவே." எ-ம். தேகாதியென்றது உடம்பு
முதலானவற்றைநீங்கவே தவமாமென்பது கருத்தாகையாலென
வறிக. இதற்கு பி-ம். திருவாசகம்."பாவியேற்குமுண்டாங்கொல்
பரமானந்தப்பழங்கடல்சேர்ந், தாவியாக்கையானெனதென்யாது
மின்றியறுதலே." எ-ம். திருவள்ளுவப்பயன். மற்றுந் தொடர்ப்
பாடெவன்கொல் பிறப்பறுக்க லுற்றார்க்குடம்புமிகை, எ-ம்.கண்
டுகொள்க, அந்தமாதியில்லவன். எ-து முடிவுமுதலுமில்லாதவ
னென்று பொருள்கூறியதேதென்னில் சிவன்றோற்றமு மீறுமில்
லாதவனாகையாலே யப்படிச்சொன்னதென வறிக. இதற்கு.பி-ம்
திருவெம்பாவையில். "ஆதியுமந்தமுமில்லா வரும்பெருஞ்சோதி
யை." என்பதுகண்டுகொள்க. இனிவந்து. எ-து. ஆசாரிய விக்
கிரகமாக வெழுந்தருளியென்று பொருள்கூறியதற்கு. பி-ம். திரு

வெம்பாவையில் ''இங்குநம்மில்லங்கடோறுமெழுந்தருளிச் செங்கமலப்பொற்பாதந்தந்தருளுஞ்சேவகனை,, எ-து. கண்டுகொள்க. குரக்குமனத்துக்கொடியேன் பரக்கும்பரப்பைக் குவித்து. எ-கு பிரபஞ்சவியாத்தியையொடுக்குவித்து என்று பொருள் கூறியதற்கு. பி-ம், சிவஞானபோதத்தில்'' சிறைவீட், டலைகடலிற்சென் றடங்குமாறுபோன்மீளா, தலைவிலரன்பாதத்தையுற்று. எ- து. கண்டுகொள்க, இருள்வெளியாகு மருளினையறுத்து” எ-கு. கேவலசகல மிரண்டினையுநீங்கியென்றுபொருள்கூறியதேதென்னில் கேவலத்திலாணவத்தால் மறைப்புண்டுகிடக்கையா லிருளென்றதெனவறிக. சகலத்திற்கலையாதி தத்துவங்களோடுங்கூடி ஜீவிக்கையா லொளியென்றதெனவறிக. இதற்கு பி-ம். சிவப்பிரகாசத்தில்'' புகலுமல மொழித்தற்கு என்னுஞ்செய்யுளில் இகலிவருமிவையுணரி லிருள்வெளியாந் தன்மையெய்தும் எ-து. கண்டுகொள்க. இனிவந்து புகுதலுஞ்சென்று நீங்கலுமின்றி யொன்றாய்நின்ற வந்நிலையில். எ-கு. சிவஞன்மாவை வந்து கூடவுமில்லை, ஆன்மாசென்று சிவனைக் கூடவுமில்லையென்று பொருள்கூறியதற்கு பி-ம். போற்றிப்பஃறொடையில். உள்ளமென்றுநீங்காதொளித்திருந்து தோன்றிநின்ற,கள்ளமின்றுகாட்டுங் கழல்போற்றி, எ-து. கண்டுகொள்க. ஒன்றாகாம லிரண்டாகாம லொன்று மிரண்டுமின்றாகாமல் எ-கு. ஆன்மாவுஞ் சிவனுமிரண்டுமுதலா யிருக்குமிடத்து ஒன்றுபட்டு நில்லாதென்று மிரண்டுபட்டுநில்லாதென்று மொன்றுமிரண்டுமில்லாமலிராதென்றும் பொருள்கூறியதற்கு. பி-ம். சிவப்பிரகாசத்தில் உடலுயிர்க்கண்ணருக்கனறிவொளிபோற்பிறிவருமத்துவிதமாகும் எ-ம். திருக்காளத்தியந்தாதியில் உரையும்பொருளுமுயிருமுடலும் விரையுமலரும்போல்விம்மிச் - சிதைவின்றிச் சென்றவாறெங்ஙன் திருக்கயிலையெம்பெருமானின்றவாறெங்குநிறைந்து,, எ-ம், கண்டுகொள்க. இனிதன்னதுபெருமைத் தாக்காறுமிலாம், எ-கு. தனக்குப் பெரிய சத்து

ளுத்துவமும் பஞ்சகிருத்தியமு மெனக்குண்டாக்கிற னில்லையாயி
னுமென்று பொருள்கூறியதேதென்னில் ஆன்மா முத்தியைப்பெ
ற்றவிடத்துஞ் சிவனுக்குண்டான தன்மை யுண்டாகாதென்பது
கருத்து. இதற்கு பி-ம். சிவப்பிரகாசத்தில் இன்றுநோக்குநெறி
நடக்குமிடல்பிலோர்க்கினையவாய்ந்து, நின்றதோரலகைநேர்ந்தா
னிகழ்வதெனதுபோலுள்ளந் தோன்றியவுணர்வு தம்பாலுள்ளது
நிகழ்த்துமீசன், றன்னெழினடத்துமேனிதனக் கெனக்கொண்டு
தானே. எ-ம். சித்தியாரில்" உயிர்தானுஞ்சிவானுபவமொன்றினுக்
குரித்தே. எ-ம். சங்கற்பநிராகரணத்தில்"நாழிகொள்ளாதாழி
யினலை புனலதனுற்கருத்து முதலுளதாகவேண்டும் எ-ம், கண்டு
கொள்க, என்னதுபெருமையெல்லாமெய்தி எ-கு. ஆன்மாவுக்கு
ள்ள விச்சாஞானக்கிரியைகளையும் வியாத்திவியாபகங்களையுஞ்சிவ
னுள்ளே யடக்கிகொள்ளுவனென்று பொருள்கூறியதற்கு பி-ம்.
சித்தியாரில்."விருட்பிப்பொன்னினைக்குளிகையொளிப்பதுபோ
லடக்கி. எ-து, கண்டுகொள்க. இனிதன்னையெனக்குத்தருவதை
யன்றியும் எ-கு. பி-ம். சித்தியாரில்."இந்தனத்தினெரிபாலிரெய்
என்னுஞ்செய்யுளிலே," தாமுகிந்தன்னுருவப்பரப்பையெல்லாங்
கொடுபுகுந்துபதிப்பனிவன்பாலே" எ-ம். திருவாசகத்தில்."தந்த
துன் றன்னைக்கொண்ட தென்றன்னைச்சங்கரா வார்கோலோசது
ர்த்த நந்தமொன்றில்லா வாநந்தம்பெற்றேன் யாதுநீபெற்றதொ
ன்றென்பால், எ-ம். கண்டுகொள்க என்னையு மெனக்குத் தந்து.
எ-கு. அந்தச் சிவானுபவத்தை யநுபவிக்கின்றசிற்றறிவுங்கெடா
மலென்றுபொருட் கூறியதேதென்னில் சிற்றறிவுகெட்டாலநுப
விப்பாரில்லாதாகையா லப்படிச்சொன்னதெனவறிக. முத்தியி
லான்மா நின்றனுபவிக்குமென்பதற்கு பி-ம். உண்மை விளக்கத்
தில் முந்திதனில்மூன்றுமுதலுமொழியக் கேள். என்ற பாட்டும்.
சித்தியாரில் உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்குமுரித்தே.
எ-ம். சொன்னதிப் பொருள் பற்றியெனவறிக. தன்னது பேரா
நந்தப் பெருங்கடலுதனுளாராவின்பமளித்து, எ-கு. அருட்சமு

த்திரத்திலே விளையப்பட்ட வின்பத்தையெனக்குக்கடாக்ஷித்தெ
ன்று பொருள்கூறியதற்கு வி-ம். சித்தியாரில் சித்தாந்தத்தே சிவ
ன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்சகமொன்றிலே சீவன்முத்
தராக வைத்தாண்டுமலங்கழுவி ஞானவாரிமடுத்தானந்தம்பொழி
ந்து. எ-து. கண்டுகொள்க. நீராவுள்ளும் புறம்பு மொழிவின்றி
நின்ற வள்ளன்மைகாட்டி. எ-கு. ஒருகாலத்திலும் விடப்படா
மல் சிவனுள்ளும் புறம்புமாய்நிறைந்து நிற்பனென்றுபொருள்கூ
றியதற்கு. பி-ம். திருவாசகத்தில் உம்பர்கட்கரசேயொழிவற
நிறைந்தயோகமே. எ-து. கண்டுகொள்க. மலரடியருளிய மன்
னனெங்கோன். எ-கு. தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதத்தைக்
கடாக்ஷித்தருளினவனென்று பொருள்கூறியதற்கு பி-ம். திருவெ
ம்பாவையில்.[உ] செங்கமலப்பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை.
எ-து. கண்டுகொள்க, அருளாலயத்தன் எ-கு. அருள்கோயிலாக
வெழுந்தருளியிருக்கப்பட்டவனென்று பொருள்கூறியதேதென்
னில் சிவன் றனதருளாகிய சத்தியுடம்பாக வெழுந்தருளியிருக்
கையாலெனவறிக. இதற்கு. பி-ம். சிவப்பிரகாசத்தில் நீடுபராசத்
திநிகழிச்சாஞானநிறைகிரியைத் தரவதனைநிமலன்மேவி நாடரிய
கருணைதிருவுருவமாகி. எ-ம். சித்தியாரில். காயமோமாயையன்
றுகாண்பதுசத்திதன்னால். எ-ம். திருவாசகத்தில் உடையாணடுவு
ணீயிருத்தி எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனிமலமுதலா
யினமாய்க்கும். எ-கு. ஆணவமலமுதலாயினவெல்லாவற்றையுஞ்
சேதனம்பண்ணினவனென்று பொருள்கூறியதற்கு, பி-ம். போற்
றிப்பஃறொடையில். முன்னின்று மும்மலந்தீர்த்தாட்கொள்கை.
எ-ம். தத்துவவிளக்கத்தில் கதிதருகாழி மன்கட்டிடும்பாசங்கண்
மூன்றவைதாம், புதிதருமாணவம்போகஞ்செய்தகன்மமுமாயை
யுமா, முதியதுதானென்று முன்பினில்வந்தது சேதனங்க, ணதி
கமறைப்பனவாயிரகோடிவிருத்திகளே, எ-ம். கண்டுகொள்க.
உலகவுயிர்க்கெல்லாமொருகண்ணே. எ-கு. சர்வான்மாக்களுக்
கும் ஓரறிவாகநின் றறிவிக்கிறவனென்ற தேதென்னில் ஆதித்த

ளொன்றாயிருந்தும் பலகண்களுக்குங் காட்டாநின்றதுபோ லெ
னவறிக. இதற்கு பி-ம், சித்தியாரில் கண்கட்கிருளினையொளியா
லோட்டுமிரவியைப்போலவீசன். எ-து. கண்டுகொள்க.

இங்ஙனம் வியாக்கியைச்செய்யப்பட்ட விந்த இருபாவிரு
பஃதுஎன்னும் நூலுக்குச் செய்யுட்கடோறு மாசாரியரைச்சீஷன்
கேட்டும் வினவுக்குவிடையமாக வாசாரிய ரருளிச்செய்யப்பட்ட
சொற்களையெல்லா மீளவுஞ் சீஷன் மறுத்தமொழியாகவருகையா
லாசாரிய ரருளிச்செய்ததெல்லாங் கீழ்ப்பட்டுச் சீஷன்சொல்லே
மேற்பட்டு வருமதைப் பொருளெனக்கொள்வாருமுளர். அதுசித்
தாந்தப்பொருளுக்கு விரோதமெனவறிக அப்படியானால் வேறு
பொருள் கொள்ளுமிடத்து மற்றுமுண்டான நூல்களையோதியறி
ந்து குருமுகாந்தரமாகக் கேட்டறிந்து சம்பிரதாயம்வந்த சித்தா
ந்திகளுக்கொழிய தற்போதங்கொண்டறிவார்க் கறியப்படாதெ
னவறிக அப்படியாசாரியர் சத்தியமுஞ் சீஷன்சொல் லசத்தியு
மென்னுங்கருத்தைப்பற்றி யிந்நூலுக்கு வியாக்கியை யெழுதின
தேதென்னில் கண்ணகன்ஞாலத்து என்னுமுதல்கவிலே சிறிய
ருளல் சிறுமையுடைத்தாலென்று சீஷன் கூறியதற்குத்தரமாக
வாசாரியர் அபக்குவ பக்குவகுறிப்பார்த்தருளினங் குருமுதலாய்
எ-ரு. பொருள் நாம்சொன்னவத்தங்களை மாறுபாடாகக் கொள்
ளுகையாலே நாங்கோபித்துக்கொண்டோமென் றாசாரியர் திரு
வுளம்பற்றுகையாலே யாசாரியர் திருவுளம்பற்றினதே சத்தியம்.
அந்தவாசாரியர் வாக்கியத்துக்குச் சாத்திரசம்மதி யெழுதினதினா
லும் ஆசாரியர் திருவுளம்பற்றினது சத்தியமென்கிறதைக் குருமு
காந்தரமாகக் கேட்டு அநுபவத்தாற் கண்டுகொள்க.

திருச்சிற்றம்பலம்.

இருபாவிருபஃது மூலமும் உரையும்

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவதிகை மனவாசகங்கடந்தார்

அருளிச்செய்த

# உண்மைவிளக்கமூலமும்,

## உரையும்.



இஃது,

காஞ்சிபுரம்

மகாவித்வான்

கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

கா-சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கன்னிகைப்பேர்

முருகேசமுதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



1898வரு.

உ

சிவமயம்.

# தனியன்.

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழ்விலுறு மெய்கண்டான் - பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
யுண்மைவிளக் கஞ்செய்தா னுற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உண்மைவிளக்கம்.

---

வெண்பா.

வண்மைதரு மாகநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மை விளக்க முரைசெய்யத்-திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள் வைப்பாம்.

இ-ள், வண்மைதருமாகமநூல் - வளப்பத்தைத்தாநின்ற வாகமநூலிலே,—வைத்தபொருள்வழுவாவுண்மைவிளக்கமுரைசெய்ய-பரமேஸ்வர னருளிச்செய்துவைத்த பதியி னுண்மையும் பசுவினுண்மையும் பாசத்தினுண்மையும் வழுவாமலிந்தநூலிலே விளங்கச்செய்வது பொருட்டாக,—திண்மதஞ்சேர் - திண்ணிய மூன்றுமதமும் பொருந்தப்பட்ட,—அந்திநிறத்து - செக்கர்வானம்போன்ற சிவந்த திருமேனியினையும்,—தந்திமுகத்து - யானைமுகத்தினையும்,—தொந்திவயிற்று - பண்டியுண்டான திருவுந்தியினையும்,—ஐங்கரனை - ஐந்து ஸ்ரீஅத்தத்தினையுமுடைய விக்கினேஸ்வரப் பிள்ளையாரை,—பந்தமற-பாசபந்தங்களெல்லாநீங்க, புந்தியுள் வைப்பாம்-அடியேனுடையமனதிலே தியானம்பண்ணுகின்றேன்.

பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாந் தப்பொருளா
மெய்காட்டுமெய்கண்டாய் விண்ணப்பம்-பொய்காட்டா

மெய்யா திருவெண்ணெய் விந்தகா சுத்தவினை
வையாநீ தான்கேட் டருள்.

இ-ள். பொய்காட்டி-தேகாதி பிரபஞ்சத்தைப்பொய்யெனக்காட்டி, பொய்யகற்றி-பொய்யைநீக்கி, போதாதீதப்பொருளாமெய்காட்டு மெய்கண்டாய் விண்ணப்பம்-அறிவிலே யாநந்தசொரூபமாயிருக்கிற வுண்மையைக் காட்டுகிற மெய்கண்டநாதனேயொருவிண்ணப்பம், பொய்காட்டாமெய்யா-பொய்யைக்காட்டாதமெய்ச்சத்தியத்தை யுடையவனே, திருவெண்ணெய்விந்தகா-திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட ஞானசாரியனே, சுத்தவினை வையாநீதான்கேட்டருள்-சுத்தமாகிய வினாவினைச் சுவாமீ தேவரீர் திருச்செவிசாற்றியருளவேண்டும். (உ)

ஆறாறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாறா வினையேது மற்றிவற்றின்-வேறாக
நானேது நீயேது நாதனடமஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று.

இ-ள். ஆறாறுதத்துவமேது-முப்பத்தாறுதத்துவங்களாவதேது. ஆணவமேது - ஆணவமலமாவதேது. அன்றேதான்மாறாவினையேது-அநாதியிலேவிட்டு நீங்காதிருக்கிற வினையாவதேது, மற்றிவற்றின் வேறாகநானேது - இந்த மலங்களுக்கு வேறாகாமலொன்றுபட்டிருக்கிற வென்னுடைய சொரூபமாவதேது, நீயேது-தேவரீருடைய சொரூபமாவதேது, நாதனடம்-பரமேஸ்வரனுடைய திருநடமாவதேது, அஞ்செழுத்துத் தானேது-பஞ்சாக்கரத்தி னுண்மையாவதேது, தேசிகனேசாற்று-சுவாமீ திருவுளம்பற்றியருளவேண்டும். (௩)

உள்ளபடி யித்தை யுணர்க்கக்கே ளுன்றனக்கு
வள்ளலரு ளாலன்று வாய்மலர்ந்து-தெள்ளியசீ

ராகமங்கள் சொன்னவடைவிலே யாநந்த
யோக நிகழ்புதல்வா வுற்று.

இ-ள். உள்ளபடியித்தை யுரைக்கக்கேளென்றனக்கு-உண்டா னபடியே நீ கேட்டவினாவைச் சொல்லுகிறோங்கேள், வள்ளலரு ளாலன்று வாய்மலர்ந்து - பரமேஸ்வரன் றனது காருண்ணியத்தி னாலே யநாதியிலே திருவாய்மலர்ந்து, தெள்ளியசிராகமங்கள் சொன்னவடைவிலே தெளிவாயிருக்கிற வாகமங்கள்சொன்னமு றைமையிலே, ஆநந்தயோகநிகழ் புதல்வாவுற்று-ஆநந்தயோகத்தி லே யடங்கிநிற்கிற பிள்ளாயுற்றுப்பொருந்திக்கேள். (௪)

நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி
யேற்குமனல் முக்கோண மெப்போது-மார்க்கு
மறுகோணங் கால்வட்ட மாகாய மான்மா
வுறுகாய மாமிவற்றி லுற்று.

இ-ள். நாற்கோணம்பூமி - பிருதிவி நாலுகோணமா யிருக் கும், புனல்நண்ணுமதியின்பாதி-அப்புவானது அர்த்தசந்திரனை ப்போன்றதாயிருக்கும்; ஏற்குமனல்முக்கோணம்-பொருந்தப்பட் டதேயுவானது மூன்று கோணமாயிருக்கும், எப்போது மார்க்கு மறுகோணங்கால் - பொருந்தப்பட்டவாயுவானது எந்தக்காலமு மறுகோணமாயிருக்கும், வட்டமாகாயம்-ஆகாயமானது வட்டமா யிருக்கும், ஆன்மா வுறுகாயமா மிவற்றிலுற்று - ஆன்மாவுக்குப் பஞ்சபூதம் பரிணாமமாயிருக்கிறதேகமாய்வந்துபொருந்தும். (௫)

பொன்பார் புனல்வெண்மை பொங்கு மனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்றூமம்-பொன்பார்
எழுத்து லவரமய வாகாரத் தென்று
[illegible]

இ-ள். பொன்பார்-பிருதிவியானது பொன்னிறமாயிருக்கும் புனல்வெண்மை - அப்புவானது வெள்ளைநிறமாயிருக்கும், பொங்குமனல்சிவப்பு-மிகுந்து வாராநின்ற தேயுவானது சிவந்தநிறமாயிருக்கும், வன்கால் கருமை-வளப்பத்தைத் தாராநின்ற வாயுவானது கருமைநிறமாயிருக்கும், வளர்வான்றூமம் - மிகுந்தவாகாசமானதுபுகைநிறமாயிருக்கும், என்பார் - என்றிப்படிப் பெரியோர்கள்சொல்லுவார்கள், எழுத்துலவரயவப் பாராதிக்கென்றும்-பிருதிவிக்கு லகாரமும் அப்புவுக்கு வகாரமும் தேயுவுக்கு ரகாரமும் வாயுவுக்கு யகாரமும் ஆகாயத்துக்கு அகாரமும், அழுத்தமதாய் நிற்குமது-இப்படிப் பலமாய்ப் பொருந்திநிற்கும். (அ)

குறிகுலிசங் கோகனகங் கொள்சுவத்தி குன்று
வறுபுள்ளி யாரமுத விந்துப்-பிறிவினறி
மண்புனறீக் கால்வான் மன்னு மடைவேயென்
றெண்புதல்வா வாகமமோ தும்.

இ-ள். குறிகுலிசங் கோகனகங் கொள்சுவத்தி குன்றுவறுபுள்ளியாரமுத விந்துப் பிறிவின்றி மண்புனறீக் கால்வானம்-பிருதிவிக்கு வச்சிரமும் அப்புவிக்குத் தாமரைப்பூவும் தேயுவிக்குச் சுவத்திகமும் வாயுவுக்கு அறுபுள்ளியும் ஆகாயத்துக்கு வமுதவிந்துவும் விட்டுநீங்காமல், மன்னுமடைவேயென்றெண்புதல்வாவாகமமோதும்-இந்தவடையாளங்களிலே நிலைபெற்றிடுமென்று ஒள்ளியபிள்ளாய் ஆகமங்களிலே சொல்லும். (எ)

பாராதி யைந்துக்கும் பன்னுமதி தெய்வங்க
ளாரா ரயனரி யைவரா-மோரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்காற் றோற்றமுத லைந்தும்
பழுதறவே பண்ணுவர்காண் பார்.

இ-ள். பாராதி யைந்துக்கும் பன்னுமதி தெய்வங்களாரார்-பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் ஐந்துக்குஞ் சொல்லப்பட்ட

வதிதேவதைகளாரரென்று கேட்கிறாயானால், அயனரியைவ ராம்-பிருதிவிக்குப்பிரமாவும் அப்புவிக்குவிஷ்ணுவும் தேயுவிக்கு ருத்திரரும் வாயுவுக்கு மகேஸ்வரரும் ஆகாயத்துக்குச் சதாசிவரு மென ஐந்துபேராம், ஓரோர்தொழி லவர்க்குச் சொல்லுங்கால்-ஒவ்வொருத்தர் கிருத்தியங்களைச் சொல்லுமிடத்து, தோற்றமுத லைந்தும் பழுதறவே பண்ணுவர்காண் பார்-சிருஷ்டி திதி சங்கா ரந் திரோபவ மநுக்கிரக மைந்தும் குற்றமறச்செய்வார்களென் று விசாரித்தறிவாயாக. (அ)

படைப்ப னயனளிப்பன் பங்கயக்கண் மாயன்
றுடைப்ப னுருத்திரனுஞ் சொல்லில்-திடப்பெறவே
யென்றுந் திரோபவிப்ப ரீசர் சதாசிவரு
மன்றே யநுக்கிரக ராம்.

இ-ள். படைப்பனயன் - பிரமாசிருஷ்டிப்பன், அளிப்பன் பங்கயக்கண்மாயன்-செந்தாமரைக் கண்ணையுடையமகாவிஷ்ணு இரக்ஷிப்பன், துடைப்ப னுருத்திரனுஞ்சொல்லில்-சொல்லுமி டத்து ருத்திரமூர்த்தியானவர் சங்கரிப்பர், திடப்பெறவே-நிச்சய மாகவே, என்றுந் திரோவிப்பரீசர் - மகேஸ்வரமூர்த்தியானவ ரெந்தக்காலமுந் திரோபவம்பண்ணுவர், சதாசிவருமன்றே யநு க்கிரகராம்-சதாசிவமூர்த்தியானவ ரநாதியிலே யநுக்கிரகம்பண் ணுவார். (க)

மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமா
மொண்கனல்சுட் டொன்றுவிக்கு மோவாமல்-வண்கால்
பரந்துசலித் தந்திரட்டும் பார்க்கிலா காயம்
நிரந்தரமாய் நிற்கு நிறைந்து.

இ-ள். மண்கடினமாய்த்தரிக்கும்-பிருதிவியானது விடயங்க ளிலே கடினகுணத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும், வாரிகுளி ர்ந்தேபதமாம்-அப்புவானது விடயங்களிலேகுளிர்ந்தகுணத்தை

க்கொடுத்துக்கொண்டு நிற்கும், ஒண்கனலுட் டொன்றுவிக்கும்
தேயுவானது விடயங்களிலே சுட்டொன்று தலைப்பண்ணிக்கொ
ண்டு நிற்கும். ஓவாமல்-விட்டு நீங்காமல், வண்காலுபரந்து சலித்
துத்திரட்டும்-வளப்பத்தையுடைய வாயுவானது விடயங்களிலே
திரட்டிக்கூடாநிற்கும், பார்க்கிலாகாயம்பிரந்தரமாய்நிற்குமென்று
ந்து-விசாரிக்குமிடத்து ஆகாயம் விடயங்களுக்கெல்லா மிரந்தர
மா யிடங்கொடுத்துக்கொண்டுநிற்கும். (௯)

உள்ளபடி மாபூத மோதினோமுன்றனக்குக்
கள்ளமிருமைம்புலனுங் கட்டுரைக்கில்-மெள்ளவே
யோசைபரிச முருவஞ்சுவைநாற்ற
மாசைதருமைம்புலனே யாம்.

இ-ள். உள்ளபடி மாபூத மோதினோமுன்றனக்கு-உண்டான
படியே மகத்தாகிய பஞ்சபூதங்களுஞ் சொன்னோம், கள்ளமிரு
மைம்புலனுங் கட்டுரைக்கில் - கள்ளமிருந்து வரப்படாநின்ற சத்
தாதிவிடயங்களைச்சொல்லுமிடத்து, மெள்ளவே-மையமே, ஓசை
பரிசமுருவஞ் சுவைநாற்ற மாசைதருமைம்புலனேயாம் - ஆசை
யைக்கொடாநின்ற சத்த பரிச ரூப ரச கந்தமென்றறிவாயாக. (௰)

ஞானேந்திரியங்கள் நன்றாயுரைக்கக்கே
ளூனமிருபூத முற்றிடமா-மீனமாஞ்
சத்தாதியையறியுந் தானஞ்செவிதோல்கண்
ணாந்நாவு மூக்கென் றறி.

இ-ள். ஞானேந்திரியங்கணன்றாயுரைக்கக்கேள் - ஞானேந்
திரியங்கள் நன்றாய்ச் சொல்லுகிறோங்கேள், ஊனமிரு பூதமுற்றி
டமாம்-ஊனமிருந்துவரப்படாநின்ற பஞ்சபூதங்களிடமாக, ஈன
மாஞ் சத்தாதியையறியுந் தானஞ்செவிதோல் கண்ணாந்நாவுமூக்
கென்றறி-ஈனத்துவமாயிருக்கிற சத்தாதிவிடயங்களை யறிகிறவிட

மேதென்று கேட்கிறாயானால் சுரோத்திரந் துவக்கு சக்ஷு சிங்கு வை யாக்கிராணமென் றறிவாயாக. (௰௨)

வானிடமாய்நின்று செவி மன்னுமொலியதனை
யூனமிருக் தோல்கா லிடமாக-வூனப்
பரிசத்தனையறியும் பார்வையிற்கண்ணங்கி
விரவியுருவங் காணுமே.

இ-ள். வானிடமாய்நின்று செவிமன்னுமொலியதனை - ஆகாயத்தினிடமாகநின்று சுரோத்திரஞ் சத்தத்தையறியும், ஊனமிருக் தோல் காலிடமாக ஊனப்பரிசத்தனையறியும் - வாயுவினிடமாக நின்று ஊனத்துவமாயிருக்கிற தொக்குபரிசத்தையறியும், பார்வையிற்கண்ணங்கி விரவியுருவங்காணுமே - தேயுவினிடமாக நின்று சக்ஷுருபத்தையறியும். (௰௩)

நன்றுசுகநீரிடமாய் நாவிரதந் தானறியும்
பொன்றுமணமூக்குப் பூவிடமாய்-நின்றறியு
மென்றேநுமன்றே யிறையாகமமிதனை
வென்றார்சென்றாரின்ப வீடு.

இ-ள். நன்றுசுக நீரிடமாய் நாவிரதந்தானறியும் - நல்லஅப்பு வினிடமாகநின்று சிங்குவை ரசத்தையறியும், பொன்றுமணமூக் குப் பூவிடமாய்நின்றறியும் - பிருதிவியினிடமாகநின்று கெடாத வாக்கிராணங் கந்தத்தையறியும், என்றேநுமன்றே யிறையாக மம் - பரமேஸ்வரன் றிருவுளம்பற்றிநின்ற வேதாகமங்களிலே யநாதியிலேயென் றிப்படிச்சொல்லும், இதனைவென்றார் சென் றாரின்பவீடு - இந்தப் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம்பண்ணின பெயர்களே மோக்ஷவீடடைந்தவர்கள். (௰௪)

கண்ணுதனாலோதியிடுங் கன்மேந்திரியங்க
ளெண்ணும்வசனாதிக் கிடமாக-நண்ணியிடு

வாக்குப்பாதப்பாணி மன்னுகுதமுபத்த
மாய்க்கருதுநாளு மது.

இ-ள், வாக்குக்கு வசனமும் பாதத்துக்குக்கமனமும் பாணிக்குத் தானமும் பாயுருவுக்குவிசர்க்கமும் உபத்தத்துக்கு ஆனந்தமும் நாள்தோறு மிந்தமுறைமையிலேபொருந்தியிடுமென்றுநெற்றிக்கண்ணை யுடைய பரமேஸ்வர னருளிய வேதாகமங்களிலே சொல்லும். (௰௫)

வாக்காகாயம்மிடமாய் வந்துவசனிக்குங்கால்
போக்காருங்காற்றிடமாய்ப் புல்கியன-லேற்கு
மிடுங்கைகுதநீ ரிடமாய்மலாதி
விடும்பாரிடமுபத்தம் விந்து.

இ-ள், வாக்காகாயம்மிடமாய் வந்துவசனிக்கும்-ஆகாயமிடமாய்நின்று வாக்குவசனத்தைச்சொல்லும், கால்போக்காருங்காற்றிடமாய்-வாயுவினிடமாகநின்று பாதம் கமனம்பண்ணும், புல்கியனலேற்குமிடுங்கை-தேயுவினிடமாகநின்று பாணியிடுதலுமேற்றலுஞ்செய்யும், குதநீரிடமாய் மலாதிவிடும் - அப்புவினிடமாகநின்று பாயுரு மலசலத்தைப்பிரிவிக்கும், பாரிடமுபத்தம்விந்து-பிருதிவியினிடமாகநின்று உபத்தமானந்தத்தைவிடும். (௰௬)

அந்தக்கரண மடைவேயுரைக்கக்கே
ளந்தமனம்புத்தியுட னாங்காரஞ்-சிந்தையிவை
பற்றியதுநிச்சயித்துப் பல்காலெழுந்திருந்தங்
குற்றதுசிந்திக்கு முணர்.

இ-ள், அந்தக்கரணமடைவே யுரைக்கக்கேள்-அந்தக்கரணங்களுடைய வடைவைச் சொல்லுகிறோங்கேள், அந்தமனம்புத்தியுட னாங்காரஞ் சிந்தை யிவைபற்றியது நிச்சயித்துப் பல்காலெழுந்திருந் தங்குற்றது சிந்திக்கும் - மனம்பற்றும் புத்திநிச்ச

யிக்கும் அங்காரமெழுந்திருக்கும் சித்தஞ்சிந்திக்கும், உணர்-அறி வாயாக. (௪௭)

ஓதியிடுகோலாறு முற்றான்மதத்துவமென்
றாதியருணூ லறையுங்காண்-டீதறவே
வித்தியாதத்துவங்க டன்னைவிளம்பக்கே
ளுத்தமனே நன்றா யுனக்கு.

இ-ள். ஓதியிடுகோலாறு முற்றான்மகத்துவமென்றாதியருணூலறையுங்காண் - சொல்லப்பட்ட விருபத்துநாலும் பொருந்தப்பட்டஆன்மதத்துவமென்று பரமேஸ்வரனுடைய வேதாகமங்களிலேசொல்லும், தீதறவே-குற்றமறவேவித்தியாதத்துவங்கடன்னை விளம்பக்கே ளுத்தமனே நன்றாயுனக்கு - உத்தமனாகிய பிள்ளாய் வித்தியாதத்துவங்களேழையுஞ்சொல்லுகிறோங்கேள். (௪௮)

காலநியதி கருதுங்கலைவித்தை
யேலவிராகம்புருட னேமாயை-மாலறவே
சொன்னோமடைவாகச் சொன்னவிவைதன்னுண்மை
யுன்னியுரைக்கநா முற்று.

இ-ள். காலநியதி கருதுங்கலைவித்தை யேலவிராகம் புருடனேமாயை மாலறவே - காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் மாயை மயக்கமறவே, சொன்னோமடைவாக - இந்தமுறைமையிலே சொன்னோம், சொன்னவிவை தன்னுண்மையுன்னியுரைக்கநாமுற்று-இதனுடைய சுபாவத்தைச் சொல்லுகிறோம் உற்றுப்பொருந்திக்கேள். (௪௯)

எல்லைபலம்புதுவை யெப்போதுநிச்சயித்தல்
அல்லறருங்கிரியை யான்மாவுக்-கொல்லை
யறிவாசையைம்புலனு மாலவருங்காலங்
குறியாய்மயக்கென்று கொள்.

இ-ள். எல்லைப்பலப்புதுமை-காலதத்துவமானது கழிகாலத்தெல்லையும் நிகழ்காலத்துப்பலத்தையும் எதிர்காலத்துப்புதுமையும் பொருந்துவிக்கும், எப்போதுநிச்சயித்தல் - நியதிதத்துவமானது எந்தக் காலமும் கன்மத்தையிவ்வளவென்றுநிச்சயப்பண்ணி நிறுத்தும், அல்லறுங்கிரியை-கலையானது ஆணவத்தைச் சிறிது நீக்கி யான்மாவுக்குக்கிரியையையெழுப்பும், ஆன்மாவுக்கொல்லை யறிவு - வித்தியாதத்துவமான தான்மாவுக்குச் சீக்கிரத்திலே யறிவையெழுப்பும், ஆசை-இராகதத்துவமானது பெற்றபதார்த்தங்களைச் சிறிதாக்கிப்பெறுதலிலே யிச்சையுண்டாக்கும், ஐம்புலனுமாரவருங்காலம்-ஆன்மா பஞ்சேந்திரியங்களிடமாகச் சத்தாதிவிடயங்களைப் புசிக்கவருகிற வவசரத்தில் புருடதத்துவமானதுவிடயத்திலே யழுந்துவிக்கும், குறியாய்மயக்கென்றுகொள்-மாயையானது ஒன்றைநிலைக்கவொட்டாமல் மயக்கத்தைச் செய்யுமென்றறிவாயாக. (௨௰)

வித்தியா தத்துவங்க ளேழும் விளம்பினோம்
சுத்தமாந் தத்துவங்கள் சொல்லக்கேள் - சித்தமாஞ்
சுத்தவித்தை யீசரம்பின் சொல்லுஞ் சதாசிவஞ்
சத்திசிவங் காணவைக டாம்.

இ-ள். வித்தியாதத்துவங்க ளேழும் விளம்பினோம்-வித்தியாதத்துவங்களேழுஞ் சொன்னோம், சுத்தமாந்தத்துவங்கள் சொல்லக்கேள்-சுத்தமாயிருக்கிற சிவதத்துவங்களைந்தையுஞ் சொல்லுகிறோங்கேள், சித்தமாஞ்சுத்தவித்தை யீசரம்பின்சொல்லும் சதாசிவஞ்சத்தி சிவங்காணவைகடாம்-நித்தியமாயிருக்கிற சுத்தவித்தை யீசுரம் சாதாக்கியம் சத்திசிவம் என்றறிவாயாக. (௨௧)

சுத்தவித்தை ஞானமிகுங் [illegible]
[illegible]

* சாதாக் கியமென்றுஞ் சத்தி சிவங்கிரியை
யாதார ஞானவுரு வாம்.

இ-ள். சுத்தவித்தை ஞானமிகும்-சுத்தவித்தை ஞானமேறிக் கிரியை குறைந்திருக்கும், தொன்மையா மீசுரந்தானத்தன்றே ழிலதிகமாக்கியிடும்-பழமையாக வரப்படாநின்ற ஈஸ்வரதத்துவ மானது ஞானங்குறைந்து கிரியையேறியிருக்கும், ஒத்தவிவைசா தாக்கியமென்னும்-சாதாக்கிய தத்துவம் ஞானமுங்கிரியையுமொ த்திருக்கும், சத்திசிவங்கிரியை யாதாரஞானவுருவாம் - சத்தி தத் துவம் கிரியையாயிருக்கும் சிவதத்துவம்ஞானமாயிருக்கும். (உஉ.)

ஆறாறு தத்துவமுஞ் சொன்னோ மடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக் - கூறி
லறியாமை யாணவநீ யானசுக துக்கங்
குறியா வினையென்று கொள்.

இ-ள். ஆறாறுதத்துவமுஞ் சொன்னோமடைவாக-முப்பத் தாறு தத்துவங்களுடைய முறைமையுஞ்சொன்னோம், மாறாமல மிரண்டும்வாசொல்ல - விட்டுநீங்காமலிருக்கிற வாணவமலத்தை யுங் கன்மமலத்தையுஞ் சொல்லுகிறோங்கேள், கூறில்-சொல்லுமி டத்து, அறியாமையாணவம்-அறியாமையைப் பண்ணிக்கொண் டுநிற்கிற தாணவமலம், நீயான சுகதுக்கங் குறியாவினை யென்று கொள்-சுகதுக்கமொன்றையு நினையாமல் நீதானேயிருக்கிறது தா னே கன்மமலமென்றறிவாயாக. (உ௩)

ஆறாறு தத்துவமு மாணவமும் வல்வினையு
மாறா வருளால் வகுத்துரைத்தீர் - வேறாக
வென்னை யெனக்கறியக் காட்டி நிலைகண்டே
னுன்னரிய தேசிகனே யுற்று.

* சாதாக்கியத்தின் விரிவைச் சதாசிவரூபமென்னு நூலிற்காண்க.

இ-ள். ஆறாறுதத்துவமும்-முப்பத்தாறுதத்துவமும், ஆணவமும்-ஆணவமலத்தையும், வல்வினையும்-கன்மமலத்தையும், மாறாவருளால் வகுத்துரைத்தீர்-விட்டுநீங்காத பெருமையினாலே பகுத்தருளிச்செய்தீர், வேறாகவென்னை யெனக்கறியக்காட்டீர்-இந்த மலங்களுக்கு வேறாகாமலொன்றுபட்டிருக்கிற வென்னுடைய சொரூபத்தையு மருளிச்செய்யவேணும், இவைகண்டேன்-இந்த மூன்றுமலங்களையுந் தரிசித்தேன், உன்னரியதேசிகனேயுற்று-நினைத்தற்கரிதாகிய தேசிகனே யுற்றுப்பொருந்தத்தக்கதாக. (௨௮)

**நன்றா யுரைக்கக்கேள் நல்லசித்தின் முன்னசித்திங்**
**கொன்றாது சித்தசித்தை யோராது - நின்றிவற்றை**
**யன்றே பகுத்தறிவ தான்மாவே யென்றுமறை**
**குன்றாம லோதுங் குறித்து.**

இ-ள். நன்றாயுரைக்கக்கேள் - நீகேட்டவான்மதரிசனத்தை நன்றாகச் சொல்லுகிறோங் கேள், நல்லசித்தின் முன்னசித்திங் கொன்றாது-நல்லசித்தாகிய சிவத்தின்முன்னே யசித்தாகியபாசமில்லாது, சித்தசித்தையோராது-நல்லசித்தாகிய சிவத்துக்கு அசித்தாகிய பாசத்தையறியவேண்டுவதில்லை, நின்றிவற்றையன்றே பகுத்தறிவதான்மாவே-சித்தாகியசிவத்தையும் அசித்தாகியபாசத்தையும்அநாதியிலே பொருந்தி விசாரித்தறிந்து அறிகிறதான்மாவே, என்றுமறை குன்றாமலோதுங் குறித்து-பரமேஸ்வரனுடைய வேதாகமங்களிலே குறையாமற் சொல்லும். (௨௯)

தத்துவங்க ளாறாறுந் தன்னைத்தா னென்றறியா
தெத்தன்மை யென்னி லியம்பக்கேள் - சுத்தமா
மாறு சுவையு மறியாது தன்னைத்தான்
கூறி லவைபிறவைபோற் கொள்.

இ-ள். தத்துவங்களாறாறுந்தன்னைத்தானென்றறியாது-முப்பத்தாறுதத்துவங்களும் ஜடமாகையினாலே தன்னுடைய சொரூ

பத்தைத் தானறியச்செய்யாது, எத்தன்மையென்னி லியம்பக்கே ள்-அந்நமுறைநன்மையென்று கேட்கிறுயானல் சொல்லுகிறேங்கே ள், சுத்தமா மாறுசுவையுமறியாமலு தன்னைத்தான்-சுத்தமாயிரு க்கிற வறுவகைச்சுவையும் தன்னுடைய சொரூபத்தைத் தானறி யச்செய்யாது, கூறின்-சொல்லுமிடத்து, அவையிவைபோற்கொ ள்-முப்பத்தாறுதத்துவங்களுஞ் சுவைகளைப்போலத் தன்னுடை யசொரூபத்தைத் தானறியச்செய்யாது. (உ௬)

ஆறு சுவையு மருந்தி யவைதன்னை
வேறொருவன் கூறியிடு மேன்மைபோ - லாறு
மொன்றொன்றாய் நாடியுணர்ந் தே தியதி லுற்றறிவாய்
நின்றபொரு டானேகா ணீ.

இ-ள். ஆறுசுவையு மருந்தியவைதன்னை வேறொருவன்கூறி யிடுமேன்மைபோல் - ஆறுவகைச்சுவையும் புளித்துக்கைக்கிறது கார்க்கிறது * கூர்க்கிறது துவர்க்கிறது புளிக்கிறதுஇனிக்கிறதெ னக் கண்டுணர்ந்தொருவன் சொல்லுகிறமுறைமைபோல, ஆறு மொன்றொன்றாய் நாடியுணர்ந்து-முப்பத்தாறு தத்துவங்களையு மொன்றொன்றாக விசாரித்தறிந்து, ஓதில்-சொல்லுமிடத்து, அதி லுற்றறிவாய் நின்றபொருடானேகாணீ - முப்பத்தாறுதத்துவங்க ளையும் பொருந்தியறிந்துவருகிறவறிவுகாணியாகியவான்மா. (உ௭)

குன்றா வருளாலே கூறினீ ரென்வடிவு
பொன்றாத நம்முருவம் போயிர் - நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமா போலே யுணர்தறிவில்
நண்ணியறி வித்திடுவோ நாம்.

இ-ள், குன்றாவருளாலே கூறினீரென்வடிவு - கெடாதகிரு பையினாலே அடியேனுடையசொரூபத்தையருளிச்செய்தீர்,பொ ன்றாத நம்முருவம்போதியீர்-கெடாததேவரீருடைய சொரூபத்

* கூர்க்கிறது-உவர்க்கிறது.

தையு மடியேனுக்கருளிச்செய்யவேண்டும், நின்றருக்கண் கண்ணுக்குக் காட்டுமாபோல் - ஆதித்தப்பிரகாசமானது கண்ணுக்குப்பதார்த்தங்களைக் காட்டிக்கொண்டு நிறகிறதுபோல், உனதறிவினுண்ணிபறிவித்திடுவோநாம்-உனதறிவிலே பொருந்திநின் றறிவித்துவருவோம்நாம். (உஅ)

அன்றியுங்கே ளான்மாவா லாய்ந்தறியு மைம்பொறிக
ளின்றி யறியா திவையென்ன - நின்றதுபோ
லோவாம லுன்னை யுணர்த்துவோ முன்னறிவின்
மேவாமன் மேவிநா மே.

இ-ள், அன்றியுங்கேள்-அறிவில்லாமலுஞ் சொல்லுகிறேன் கேள், ஆன்மாவாலாய்ந்தறியு மைம்பொறிகளின்றியறியாதிவையென்ன-ஆன்மாவிலேயறிந்து காரியப்பட்டுவருகிற பஞ்சேந்திரியங்களும் ஆன்மாவினுலேயறிந்துகாரியப்பட்டுவருகிறேமென்றறியச்செய்யாது, நின்றதுபோல்-அந்தப் பஞ்சேந்திரியங்களைப்போல், ஓவாமலுன்னையுணர்த்துவோம்-விட்டுநீங்காமனின்றுனக்கறிவிப்போம், உன்னறிவின் மேவாமன் மேவிநாமே-உன்னறிவிலே பொருந்தாமற் பொருந்திநின் றறிவித்துவரச்செய்தேயு நீயறியாமலிருந்தது மப்படிபோல. (உ௯)

அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றற்போல்
மிக்க வுயிர்க்குயிராய் மேவினே - மெக்கண்ணு
மில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமமோது நாடு.

இ-ள். அக்கரங்கட்கெல்லா மகரவுயிர் நின்றற்போல்-ஐம்பத்தோரக்ஷரத்துக்கும் அகரமாகிய வக்ஷரமுயிராய் நின்றதுபோல், மிக்கவுயிர்க்குயிராய் மேவினேம்-சர்வான்மாக்களிடத்திலேயும் அறிவுக்கறிவாய்ப் பொருந்திநின்றும், எக்கண்ணுமில்லாவிடத்துயிர்க்கு நில்லாதறிவென்று-ஜடசித்துகளெல்லாம் கர்த்தா

னிறைந்து நின்றறிவித்தாலல்ல தறியச்செய்யாதென்று, நல்லாகம மோதுநாடு-நல்லவேதாகமங்களிலே சொல்லுமென்று விசாரித் தறிவாயாக. (௯௰)

நற்றவத்தோர் தான்காண நாதாந்தத் தஞ்செழுத்தா
லுற்றுருவாய் நின்றாட லுள்ளபடி - பெற்றிடநான்
விண்ணார் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணா ரருளாலே சாற்று.

இ-ள். நற்றவத்தோர் தான்காண-நல்லதவத்தையுடையவான்மாக்கள் தரிசிக்கத்தக்கதாக, நாதாந்தத்தஞ்செழுத்தாலுற்றுருவாய் நின்றாடல்-நாதாந்தத்தின்முடிவிலே பஞ்சாக்கரமேதிருமேனியாகக்கொண்டு நிருத்தஞ்செய்கிற முறைமை, உள்ளபடிபெற்றிடநான்-உண்டானபடியே யடியேன் தரிசிக்கத்தக்கதாக, விண்ணார்பொழில் வெண்ணெய் மெய்கண்டநாதனே - ஆகாயத்தையளாவியிருக்காநின்ற சோலைகள்சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரே திருப்பதியாகவெழுந்தருளியிருக்கிற மெய்கண்டசுவாமி, தண்ணாரருளாலேசாற்று - குளிர்ந்தகிருபையினாலே திருவுளம்பற்றியருளவேண்டும். (௯௧)

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெ ழுத்தஞ் சாலே
யவாயமற நின்றாடு வான்.

இ-ள். எட்டுமிரண்டு முருவானலிங்கத்தேநட்டம்-எட்டுமிரண்டுமுருவாயிருக்கிறயகாரமாகிய வான்மாவினிடத்திலேநடனம், புதல்வாநவிலக்கேள்-பிள்ளாய் சொல்லக்கேள், சிட்டன் - பரமசிவன், சிவாயநமவென்னும் திருவெழுத்தஞ்சாலே யவாயமறநின்றாடுவான்-பஞ்சாக்கரமே திருமேனியாகக்கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத்தக்கதாக நிருத்தஞ்செய்வன். (௯௨)

ஆடும் படிகேணல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடு
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

இ-ள். ஆடும்படிகேணல்லம்பலத்தானையனே-ஐயனேநல்லதிருவம்பலத்தின்கண்ணே எழுந்தருளிநின்று நிருத்தஞ்செய்கிறமுறைமையைச் சொல்லுகிறோங்கேள், நாடுந்திருவடியிலேநகரம்-உன்னரியஸ்ரீபாதத்திலே நகாரமாகவும், கூடுமகாரமுதரம்-பொருந்தப்பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும், வளர்தோள்சிகரம்-மிகுந்துவரப்பட்டநின்ற திருத்தோளிலே சிகாரமாகவும், பகருமுகம்வா-சொல்லப்பட்ட திருமுகத்திலேவகாரமாகவும், முடியப்பார் திருமுடியிலேயகாரமாகவும் இந்தமுறைமையிலே நமசிவாயவென்கிறபஞ்சாக்கரமே திருமேனியாகக்கொண்டு நிருத்தஞ்செய்வாரென்று விசாரித்தறிவாயாக. (௧௧)

சேர்க்குந் துடிசிகரம் சிக்கனவா வீசுகர
மார்க்கும் யகர மபயகரம் - பார்க்கிலிறைக்
கங்கி நகர மடியக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

இ-ள். சேர்க்குந்துடிசிகரம் - டமாகமேந்திய ஸ்ரீ அத்தத்திலே சிகாரமாகவும், சிக்கனவாவீசுகரம் - வீசிய ஸ்ரீ அத்தத்திலே வகாரமாகவும், ஆர்க்கும்யகரமபயகரம்-அமைத்தஸ்ரீஅத்தத்திலே யகாரமாகவும், பார்க்கிலிறைக்கங்கிநகரம் - அக்கினியேந்தியஸ்ரீ அத்தத்திலே நகாரமாகவும், அடிக்கீழ்முயலகனார் தங்குமகரமதுதான்-முயலகனைமிதித்த பாதத்திலே மகாரமாகவும் இந்தமுறைமையிலே பஞ்சாக்கரமே திருமேனியாகக்கொண்டு நிருத்தஞ்செய்வாரென் றறிவாயாக. (௧௨)

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனி
னீங்கா வெழுத்தே நிறைசுடரா - மாங்கார
மற்றா ரறிவாரணி யம்பலத்தா னாடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்.

இ-ள். ஓங்காரமேநற்றிருவாசி-பிரணவந்தானே நல்லதிருவாசியாகவும், உற்றதனி னீங்காவெழுத்தேநிறைசுடராம்-பிரணவத்தைவிட்டுநீங்காத பஞ்சாக்கரமே யுள்ளொளியாகவும், ஆங்காரமற்றா ரறிவர்-யானெனதென்னுஞ் செருக்கற்றவர்களறிவார்கள், அணியம்பலத்தா னாடலிதுபெற்றார் பிறப்பற்றார்பின்-அழகிய திருவம்பலத்தின் கண்ணிலே யெழுந்தருளிநின்று நிருத்தஞ்செய்யு முறைமையைத் தெரிசித்தவர்களே பின்பு சநநமரணமற்றவர்கள். (௩௫)

தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார - மூற்றமா
யூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

இ-ள். தோற்றந்துடியதனில் - டமரகமேந்திய ஸ்ரீஅத்தத்திலே சிருஷ்டியாகவும், தோயுந்திதியமைப்பில்-அமைத்தஸ்ரீ அத்தத்திலே ஆன்மா இரக்ஷையாகவும், சாற்றியிடுமங்கியிலே சங்காரம்-அக்கினியேந்திய ஸ்ரீஅத்தத்திலே மலசங்காரமாகவும், ஊற்றமாயூன்று மலர்ப்பதத்தி லுற்றதிரோதம் - உறுதியாயூன்றிய ஸ்ரீபாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்குந் திரோதமாகவும், முத்தி நான்றமலர்ப்பதத்தேநாடு-தூக்கியஸ்ரீபாதத்திலே யநுக்கிரகமுத்தியாகவும் இந்தமுறைமையிலே முத்தி பஞ்சகிருத்தியமே திருக்கூத்தென்று விசாரித்தறிவாயாக. (௩௬)

மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய வமுக்கியருள் தானெடுத்து - நேயத்தா

லானந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பாதந் தான்.

இ-ள். மாயைதனையுதறி-டமரகமேந்திய ஸ்ரீஅத்தத்திணலே மாயையைநீக்கி, வல்வினையைச்சுட்டு-அக்கினியேந்திய ஸ்ரீ அத்தத்திணலே கன்மமலத்தைச்சுட்டு, மலஞ்சாயமுக்கி - ஊன்றிய ஸ்ரீபாதத்திணலே மல்மேலிடாமலமிழ்த்தி, அருடானெடுத்து-தூக்கியபாதத்திணலே யருளேதனுவாகவிருத்தி, நேயத்தாலானந்தவாரிதியி லான்மாவைத் தானழுத்தல்தான் - கிருபையிணலேயமைத்த ஸ்ரீஅத்தத்திணலே யானந்தவெள்ளத்திலே ஆன்மாவை யழுத்துகிறதுதான், எந்தையார் பாதந்தான்-எம்முடையசுவாமியாகிய பரமேஸ்வரனுடைய திருக்கூத்துமுறைமை. (௧௭)

மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடு - மானந்த
மொண்டருந்தி நின்றாடல் காணுமருண் மூர்த்தியாய்க்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து.

இ-ள். மோனந்தமாமுனிவர் மும்மலத்தைமோசித்து-மௌனஞானிகள் சத்தாவினுடையகிருபையிணலே மூன்றுமலங்களையுநீக்கி, தானந்தமானிடத்தே தங்கியிடும்-ஆன்மபோதமுடிந்தவிடத்திலேயுதயமாகிற, ஆனந்தமொண்டருந்தி நின்றாடல்காணும்-ஆனந்தவெள்ளத்திலே முகந்துகொண் டநுபவிக்கிறதுதான், அருண்மூர்த்தியாய்க்கொண்ட திருவம்பலத்தான்கூத்து - ஆன்மாக்களைபிரக்ஷிக்கவேணுமென்கிற காருணியமே திருமேனியாகக்கொண்டு திருவம்பலத்தின் கண்ணி லெழுந்தருளிநின்று திருத்தாண்டவஞ்செய்கிற முறைமைத்தாம். (௧௮)

டரையுணர்வுங் கெட்டா வொருவன்றிருபஞ்சாக்
ரத்தால் வரைமகடான் பாதி

காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணு மவர்க்குண்டோ பிறப்பு.

இ-ள். உரையுணர்வுக்கெட்டா வொருவன்-மனவாக்குக்கா யங்களுக்கெட்டாத வொப்பற்றபரமேஸ்வரன், மிருபஞ்சாக்கர த்தால்-பஞ்சாக்கரத்தினாலே மிகுந்தகாருணியமே திருமேனியாக க்கொண்டு, பரையிடமாய்நின்று-பராசத்தியாகிய திருவம்பலவிட மாகநின்று, வரைமகடான் காணும்படியே-மலையரையன்மகள்கா ணும்படிக்கு, கருணையுருக்கொண்டு - கிருபையினாலேதிருமேனி கொண்டெழுந்தருளி, ஆடல்பேணுமவர்க்குண்டோபிறப்பு-ஆடி யருளியதிருக்கூத்தைவிரும்பினபெயர்கள்பின்புசநநமற்றவர்கள்.

நாதாந்த நாடகத்தை நன்று யருள்செய்தீ
ரோதி யெழுத்தஞ்சு முள்ளபடி - தீதறவே
யஞ்செழுத்தி தாகி லழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச வருட்குருவே சாற்று.

இ-ள். நாதாந்தநாடகத்தை நன்று யருள்செய்தீர்-தத்துவாதீ தமாயிருக்கிற திருக்கூத்து முறைமையை நன்று யருள்செய்தீர்; அஞ்செழுத்திதாகி லழியுமெழுத்தாய்விடுமோ-பஞ்சாக்கரமெழுத் துகளிலே யொன்றுயிருக்குமாகில் அழிகிற வெழுத்துகளாமோ, தஞ்சவருட்குருவே-புகலிடமாயிருக்கிறகிருபையுடையதேசிகனே தீதறவேயோதி யெழுத்தஞ்சுமுள்ளபடி சாற்று-குற்றமற்றபஞ்சாக் கரத்தி னுண்மையை யுண்டானபடியே யடியேனுக் கருள்செய்ய வேண்டும். (௨0)

உற்ற குறியழியு மோதுங்காற் பாடைகளிற்
சற்றும் பொருடான் சலியாது - மற்றதுபோ
லீசனரு ளாவி யெழிலார் திரோதமலமாகியெழுத் தஞ்சினடை வாம்.

இ-ள். ஓதுங்கால்-சொல்லுமிடத்து, உற்றகுறியழியும்-பொருந்தப்பட்ட வெழுத்துகளுடைய குறிகளழியும், பாடைகளிற் சாற்றும்பொருடான் சலியாது - பதினெண்பாஷைகளிலே யுண்டானபொருள்கள் சற்றுங்கெடாது, மற்றதுகேள் பஞ்சாக்கரத்தினுண்மையைச் சொல்லுகிறமுறைமைகேள், ஈசனருளாவியெழில் சேர்திரோதமலம் ஆசிலெழுத்தஞ்சி னடைவாம் - சிவன் அருள் ஆன்மா வழகியதிரோதம் மலமைந்துங் குற்றமில்லாத பஞ்சாக்கரத்தின் முறைமைத்தாம், (சச)

சிவனரு ளாவி திரோதமல மைந்து
மவனெழுத் தஞ்சி னடைவா - மிவனின்று
நம்முதலா யோதிலரு ளூடாது நாடுமருள்
சிம்முதலா யோதுநீ சென்று.

இ-ள். சிவனருளாவி திரோதமலமைந்து மவனெழுத்தஞ்சி னடைவாம் - சிவம் அருள் ஆன்மா திரோதம் மலமைந்தும் பரமேஸ்வரனுடைய பஞ்சாக்கரத்தின் முறைமைத்தாம், இவனின்று-பக்குவப்பட்டவான்மாநின்று, நம்முதலாயோதிலருளூடாது-நகாரமுதலாகவுச்சரிக்கில் அருள்பொருந்தாது, நாடுமருள்சிம்முதலாயோதுநீசென்று - ஆசாரியானுக்கிரகம்பண்ணின முறைமையிலேநின்று சிகாரமுதலாக வுச்சரிக்கிலருள்பொருந்தும், ()

அண்ணல் முதலா வழகா வெழுத்தைந்து
மெண்ணி யிராப்பகலற் றின்பத்தே - நண்ணி
யருளா னதுசிவத்தே யாக்கு மதுவே
யிருளா னதுதீர வின்று.

இ-ள். அண்ணல்முதலா வழகாவெழுத்தைந்தும்-சிவமுதலாகியழகுபொருந்திய பஞ்சாக்கரமைந்தும், எண்ணில்-இடைவிடாமலுச்சரிக்கில், இராப்பகலற்றின்பத்தே - கேவலசகலமற்றவிடத்தே, நண்ணியருளானது சிவத்தேயாக்கு மதுவேயிருளானதுதீர

வீன்று - ஆன்மாவுக்கு ஆணவமலமானதுநீங்கவருளானந்த
ன்பமாகிய சிவத்திலே பொருந்துவிக்கும்.

ஆதி மலமிரண்டு மாகியா யோதிறுற்
சேதியா மும்மலமுந் தீர்வாகா-போத
பதிப்பரிதா மின்பத்தே வாழலா மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே.

இ-ள். ஆதிமலமிரண்டு மாகியா யோதிறுற் சேதியா
லமுந்தீர்வாகா-ஆதியாகிய நகாரமும் மலமாகியமகாரமுந்
மெடியாகவுச்சரித்தால் உறுதியாக மும்மலமுநீங்கி ஆன்மா
ப்பொருந்திப் பேரின்பவாழ்வை யுறமாட்டாது. உறுமுறை
கூறுமிடத்து, மாறிவிதிப்படியோதஞ்செழுந்தும் (ஓதினால்)
தமதிப்பரிதா மின்பத்தே வாழலாம் - நகாரமுதலாக வுச்ச
முறைமையைமாறிச் சிவமுன்னாக அத் திருவெழுத் தஞ்சை
விதிப்படியுச்சரிக்க வான்மபோதத்தால் மதித்தற்கரிதாகிய
ன்பவாழ்விலெய்தி வாழலாம் நீயும்சிவமுன்னாகவுச்சரிப்பா

அஞ்செழுத்தே யாகமமு மண்ணை லருமறையு
மஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்து-மஞ்செழு
யானந்தத் தாண்டவமும் யாவைக்கு மப்பாலா
மோனந்த மாமுத்தி யும்.

இ-ள். அஞ்செழுத்தேயாகமமு மண்ணலருமறையும் -
மேஸ்வரன் திருவுளம்பற்றுகின்ற இருபத்தெட்டு திவ்வியா
களும் நாலுவேதமும் பஞ்சாக்கரமே, அஞ்செழுத்தே யாதி
ணம் மனைத்தும்-பதினெண்புராணங்களனைத்தும்பஞ்சாக்கர
அஞ்செழுத்தே யானந்தத் தாண்டவமும்-ஆனந்தநடனமும்ப
க்கரமே, யாவைக்குமப்பாலா மோனந்தமாமுத்தியும் - தத்
தீதமாகிய மௌனஞானமாயிருக்கிறபரமுத்தியும்பஞ்சாக்கர

முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை யிசையிற்றி-ஞெத்த
விரதமணம் வெம்மை யெழிஞதம் போல
விரவுவரொன் றேதும் விதி.

இ-ள். முத்திதனையடைந்தோர் - மோக்ஷத்தையடைந்தபெ யர்கள் பேரின்பத்திலே யிரண்டறநிற்கிற முறைமைக்குத் திருஷ் டாந்தமெப்படியென்று கேட்கிறாயாகில், முந்துபழம்போதங்கி வித்தகமாம்வீணையிசையிற்றிஞெத்தவிரதமணம் வெம்மையெழி ஞதம்போல - பழமும் ரசமும்போலவும் பூவுமணமும்போலவும் அக்கினியும் வெம்மையும்போலவும் பண்ணுமோசையும் போல வும், விரவுவரொன்றேதும் விதி-இப்படி யிரண்டறப்பொருந்தி நிற்பார்களென்றாகமங்களிலேசொல்லும். (சசு)

தத்துவங்க ளெல்லாஞ் சகசமா யான்மாவிற்
பெத்தத்தி னிற்கின்ற பெற்றிபோல்-முத்திதனிற்
சித்தமல மற்றார் செறிந்திடுவ ரென்றுமறை
சத்தியமா யோதியிடுந் தான்.

இ-ள். தத்துவங்களெல்லாஞ் சகசமா யான்மாவிற் பெத்தத் தினிற்கின்ற பெற்றிபோல் - பெத்தத்திசையிலே தத்துவங்களெ ல்லாம் ஆன்மாவினிடத்திலே யிரண்டறநிற்கிறமுறைமைபோல, முத்திதனிற்சித்தமலமற்றார் செறிந்திடுவரொன்று மறை சத்தியமா யோதியிடுந்தான் - முத்தித்திசையிலேசகசமலமற்றப்க்குவப்பட் டவான்மாக்கள் சிவனிடத்திலே இரண்டறப் பொருந்துவார்க ளென்று சத்தியமாகவே சிவாகமஞ்சொல்லும். (சஎ)

ஆதவன்றன் சந்நிதியி லம்புவியி ஞர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோ-ஞதாந்தத்

தன்னை திருவடியி லான்மா வணைந்தின்பக்
கண்ணி லழுந்தியிடுங் காண்.

இ-ள். ஆதவன்றன் சந்நிதியி லம்புலியின் சோதி பேத
நிற்கின்ற பெற்றிபோல்-ஆதித்தப்பிரகாசத்தின் முன்னே சந்
ப்பிரகாசமான இரண்டறநிற்கிற முறைமைபோல, நாதாந்த
ண்ண திருவடியி லான்மாவணைந்து-தத்துவாதீதமாயிருக்கிற தி
வடிஞானத்திலே யான்மாப்பொருந்தி, இன்பக்கண்ணி லழுந்
யிடுங்காண் - பேரின்பத்திலே யிரண்டறப் பொருந்துமென்ற,
வாறாக. (௪௫

சென்றிவன்றா னொன்றிற் சிவபூ ரணஞ்சிதையு
மன்றவன்றா னொன்றுமெனி லந்நியமா-மின்றிரண்டு
மற்றநிலை யேதென்னி லாதித்த னந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோற் கொள்.

இ-ள். சென்றிவன்றானொன்றிற்சிவபூரணஞ்சிதையும்-ஆன்மா சிவனைச்சென்று பொருந்துவானாகில் சிவனுக்குப் பூரணத்துவமில்லையாகவேணும், அன்றவன்றானொன்றுமெனி லந்நியமாம்-சிவன்றன்மாவைச்சென்று பொருந்துவானாகி லப்போ வான்மா வேறாயிருக்கவேணும், இன்றிரண்டு மற்றநிலையேதென்னில்-இரண்டுமுறைமையுமல்லாமனின்ற நிலைக்குந் திருஷ்டாந்தமெப்படியென்று கேட்கிறாயானால், ஆதித்தனந்தன்விழிக் குற்றமறநின்றதுபோற்கொள்-அந்தகனுக்குப் படலநீங்கினகாலத்து ஆதித்தப்பிரகாசமுங் கண்ணினுடைய வொளியும் இரண்டறக் கலந்து நின்றாற்போல். (௪௬)

வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனொரு
தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா-னீக்காப்
பதியினைப்போ னித்தம் பசுபாச மொன்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு.

இ - ள். வாக்குமனமிறந்த வான்கருணை யாளனொரு தாக்கு தவேநிற்குந் தனிமுதல்வா - மனவாக்குக் காயங்களுக் கெட்டா தபொருளே வடிவாய் அடியார்களிடத்திலே யிரண்டாகிற்கிற வொப்பற்ற கத்தாவே.—நீக்காப் பதியினைப்போ னித்தம் பசு பாச மென்றாய்-விட்டு நீங்காமலிருக்கிற பதியினைப்போற் பசவு ம் பாசமு நித்தியமென்றருளிச்செய்தது, — கதியிடத்து மூன்றி னையுங்காட்டு-முத்தியிலும் பதி பசு பாச மூன்றுமுதலும் அழியா மனிற்கிற முறைமையை அடியேனுக்கு அருளிச்செய்ய வேணும். (ருய)

முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவறு போகத்தைத் துய்த்தலணு-மெத்தவே
யின்பங்கொ டுத்தனிறை யித்தவினை வித்தல்மல
மன்புடனே கண்டுகொள்ளப் பா.

இ - ள். முத்திதனில் மூன்றுமுதலு மொழியக்கேளப்பா-அ ப்பனே முத்தியிலும் பதிபசுபாசமூன்று முதலுமழியாமனிற்கி ற முறைமையைச்சொல்லுகிறோங்கேள், —சுத்தவறுபோகத்தைத் துய்த்தலணு-பேரின்பத்தைப் புசிக்கிற தான்மா, —மெத்தவேயி ன்பங்கொடுத்த னிறை -பேரின்பத்தை மிகுதியுங் கொடுக்கிறது கத்தா, இத்தைவினைவித்தல்மலம் - பேரின்பத்தை மேன்மேலும் விளைக்கிறது மலம், — அன்புடனே கண்டுகொள் — அன்பினு லே யறிவாயாக. (ருக)

அப்பாவிம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பா யருளாலே செப்பக்கே-ளொப்பில்
குருலிங்க வேடமெனக் கூறியிவை கொண்டார்
கருவொன்றி யில்லார்கள் காண்.

இ - ள். அப்பா விம்முத்திக் கழியாத காரணந்தான் செப்பாயருளாலே செப்பக்கேள் - அப்பனே முத்தியைப்பெறுகைக் கழியாதகாரணஞ் சொல்லுகிறோம் கேட்பாயாக. — ஒப்பில் - உவமையில்லாதிருக்கிற சிவம். — குருலிங்கவேடமெனக்கூறில் குருவும் லிங்கமும் சங்கமமுமேயென்று கூறுகையால் சிந்திதறுக்கண்டு வழிபடுகிற சிவமென்று, — இவை கொண்டோர் - இந்த முப்பொருளையு முண்மையாகக் கொண்டோர், — கருவொன்றிகில்லார்கள் காண் - கருவிலேபொருந்திப் பிறந்திறவார்கள். (௫உ)

கற்று மனம்போற் கசிந்துகசிந் தேயுருகி
யுற்றுசா னிலிங்க முயர்வேடம் - பற்றாக
முத்தித் தலைவர் மும்மலத்தை மோசிக்கும்
பத்திதனி னின்றிடுவர் பார்.

இ - ள். கற்றுமனம்போற்கசிந்துகசிந்தேயுருகி - கன்றன்னிதான பசுவைப்போலுள்ளுருகிக்கசிந்துகசிந்து, — உற்றுசானிலிங்க முயர்வேடம்பற்றாக - மானிடதேகத்தைப்பொருந்திவந்த ஆசாரியனையும் சிவலிங்கப்பெருமானையும் பெரியவேடத்தாரையும் இந்த மூன்றுவடிவைத் தங்களுக்குப்பற்றான தெய்வமாகக் கொண்டு, — முத்தித்தலைவர் மும்மலத்தை மோசிக்கும் பத்திதனில்நின்றிடுவர்பார் - பரமமுத்திையைப் பெறுகைக்குத் தலையான சத்திநிபாதத்தையுடையதபோதனர்மும்மலமாகியபாசங்களைக் கழைய்றுக்கும் பத்தியின்கண்ணே நிற்பார் நீயுமிந்த முறைமையிலேபார்த்து வழிபட்டு நிற்பாயாக, (௫௩)

வாழ்ந்தே னருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே யலையாமல் மேதினியிற் - சூழ்ந்துவிடா

வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
யுண்மைத் தவப்பயனே யுற்று.

இ - ள். சூழ்ந்துவிடாவெண்ணெய் மேதினியில்சுவேதவன மெய்கண்டநாதனே-சத்தியத்தைத் தரிசித்தவர் விட்டுநீங்காததிருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளியிருக்கப்பட்டசுவேதவனனென்கிற பிள்ளைத் திருநாமத்தையுடையமெய்கண்டநாதனே உண்மைத்தவப்பயனே-உண்மையான தவத்தைப்பண்ணினவர்களுக்குப் பயனாயுள்ளவனே,—வற்றாப்பவக்கடலில் வீழ்ந்தேயலையாமல் - பிறவியாகியகடலில்அடியேன் வீழ்ந்தலையாமல்,—அருட்கடலே வாழ்ந்தேன்-தேவரீர் காருண்ணியத்தினாலே வாழ்ந்தேன். (௫௪)

திருச்சிற்றம்பலம்

உண்மைவிளக்க மூலமும் உரையும்

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

# திருவருட்பயன்:

[illegible]

நிரம்பவழகியர் பொழிப்புரையும்.



இஃது,

காஞ்சிபுரம்

மகாவித்வான்

## கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

## கா - சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கன்னிகைப்பேர்

## முருகேச முதலியாரால்

சென்னை

[illegible]நந்தவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

அலைகடல்சூழ்ந்தவிலவுலகின்கண் ஆன்மாக்களனை வற்றிற்கும் அருள்சுரந்தளிக்கும் அறப்பெருங்கடவுள் அன்பின்வழியறிந் தடிமைபூண்டொழுகும் சிற்றறிவுயிர்கள் சிற்சில விருப்பினும், கருணையிற்சிறந்த வொருபெருங்கடவுள் பழமையிற்பழமையாய்க் கல்வியறிவொழுக்கங்களாற் கற்றுணர்ந்தடங்கு மானிடர்கள் பாசத்தாற் சுழித்தலைத்துப் பவமாகிய கடலில் அழுந்தாவண்ணம் வேதங்களை யருளிச்செய்தனர் என்பது பலசமயத்தவற்கும் ஒப்பமுடிந்ததேயாம்.

அதனை யவரவர் கன்மத்தளவா யறிவுறுத்தும்ஆசாரியர்க ளநேகர் தோன்றி அவ்வவ்காலத்தில் அவ்வச் சமயங்களைச் சீடர்கள்கட்டுண் டொருவழிப்படஏற்படுத்தினமையால் சமயங்களுந்தற்கேற்ற நூல்களும்பலவாய்விரிந்தன.

அவ்வாறு பலவேறு பொருள்கொண்டு மயங்குறு வண்ணம் மெய்ப்பொருளே திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டதேவராயவதரித்துச் சிவஞானபோதமென்னு நூலருளிச்செய்தனர்.

சிவஞான போதத்தை விரித்து அவர் மாணாக்கர் அருணந்திதேவர் சிவஞானசித்தி செய்தருளினர்.

அருணந்திதேவர் மாணாக்கராகிய மறைஞானசம்பந்தரிடம் அநுக்கிரகம்பெற்ற உமாபதிசிவாசாரியர்சிவஞானசித்தியைத் தொகுத்துச் சிவப்பிரகாசமெனயாவரும் எளிதிலுணரும்படி யோர்நூலருளிச்செய்தனர்.

உமாபதி சிவாசாரியர் தாம்செய்த சிவப்பிரகாசம் முன்னூற்கேற்ப முடிந்தமையாம் சிறிது விரிந்திருப்பதைப்பற்றி மிகுபக்குவமுடைய அடியார்க்குவருத்தமின்றி மனனமாகும்பொருட்டுத்திருவருட்செயலால்திருவருளடையும் திருவருட்பயனென் றிந்நூலருளிச்செய்தனர்.

இதற்குப் பதவுரைசெய்தவர் நாமம் பிரதிகளில்காணப்படவில்லை, ஆயினும் சித்தாந்தசாத்திரங்களுக்குப் பெரும்பாலும்பதவுரை வேலப்பபண்டாரம்செய்திருக்கின்றனர்; இவ்வுரையும் அந்நடையே கொண்டிருக்கின்றது.

சேதுபுராணஞ் செய்தவரும், சேதுமடாலய சைவாசாரியருமாகிய நிரம்பவழகியர், இந்நூலுக்குப் பொழிப்புரை யருளிச்செய்தனர்.

இவ் விருவகையுரையும் சிற்சிலவிடங்களில் விசேஷக் கருத்தடங்கி யிருப்பதாலும் சித்தாந்தநூலுணர்வோர் கல்விப் பயிற்சியில் சிறிதடைந் திருப்பினும் இவ்வுரைகளை வாசிப்பதால் பெரும்பய னெளிதிலடைந்து மிகவும் வித்தியாசாகர ராவாரெனவுங் கருதிப் பலர் தெரிவித்தபடி சேர்த்து அச்சிடப்பட்டது

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

## காப்பு.

தேசத்தடியர் நினைந்துருகி நின்றிட்ட
வாசந் துளைகடக்க மாட்டாது-பாசத்
திருகோட்டு முக்கட் சிவபெருமா னீந்த
வொருகோட்டு நால்வாயுவா.

## நேரிசையாசிரியப்பா.

திருமகள்பிறந்த விரிதிரைப்பாற்கடற்
றுறையகங்கங்காற் சுழற்றுபுவெப்ப
வலைவதறவெழூஉந் தலைச்சீப்படர்ந்து
நிலைபெறுகின்ற நெடுந்திரளன்ன
வின்னமிரின்ப நன்னலஞ்சுரத்தலின்
விளங்கெழிற்றருமந் திரண்டுவீற்றிருந்த
வண்ணமும்போலு மண்ணறன்கயிலை
காவலிற்புரக்குங் கண்ணுதற்கடவு
ணந்திதாள்சுமந்துவந் தவ்வழித்தோன்றற்
பெண்ணையுடுத்த வெண்ணெய்ப்பின் றுருத்த
தொண்டர்களிதய முண்டகமலர்த்தும்
விஞ்சைவாளிரவி மெய்கண்டதேவன்
மறையகத்தடக்கிய வொருதனிக்குடிலையு
மருளூளிறைந்த பொருண்முழுதுணர்த்து
மாடிபோலக் கூடியகாட்சியிற்
புகல்சிவஞான போதநூன்முருக்கி
வகல்பொருடேர்தற் கருமையுமாங்கவன்
சம்பிரதாயத் தத்தவிவ்வான்பொரு

னுலவாப்பெருங்களி யுள்ளம்படைத்த
பண்பின்மேதகை சண்பையர்கோமான்
றற்பலன்றேராப் பற்பலசமயிகள்
மலைத்தலைக்கொண்மூ மாருதமறைத்தெனத்
தலைத்தலையிரியத் தானினிதுரைத்த
புகழ்சிவஞான போதமுன்னுறையாந்
திகழ்சிவஞான சித்தியின்விரிவு
மென்போன்மருண்ட புன்புலமாக்க
ளாவிடம்பையுந் திருவுளங்கொண்டுதன்
னாராக்காதலி னாக்கியோனாகப்
பாவிடங்கொண்டதன் னாவிடங்கொண்டு
பவப்பிரகாசப் படரிருள்விழுங்குஞ்
சிவப்பிரகாசத் திருப்பெயர்மேவித்
திசைமுகன்மருங்கிற் பரிவுடன்வளர்த்த
நாலையின்றொகைக்கு நான்மடங்குடைய
சைவநூற்சலதி நொய்தினிற்கடந்து
மரக்கலமதற்கு மாலுமியொப்ப
வெழிலினைத்தும் வழுவறப்புணர்த்தித்
தெள்ளுசீர்ப்புலமை வள்ளுவன்றனக்கோர்
நற்றுணையுடைத்தெனக் கற்றவர்களிப்ப
வருட்பயனென்றே யதற்கொருநாமந்
தெருட்படப்புனைந்து செந்தமிழ்யாப்பிற்
குறளடிவெள்ளை யொருநூறியம்பினன்
மற்றவன்புலியூர் வளநகர்க்கீழ்பாற்
கொற்றவன்குடியிற் குடிகொண்டுறைந்து
பூசுரனுறைந்த புதுமதிவேணியுங்
காசுறுங்கண்டமுங் கரந்த
தேசிகனுமாபதி சிவனென்பவனே.

சிறப்புப்பாயிர முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பயன்

உமாபதிசிவனென்னும் பிள்ளைத்திருநாமத்திற்கும் இந்நூற்கும் முதல்வராகிய கொற்றவன்குடி முதலியார். அறம் பொருள் இன்பம் வீடு என்னு நான்கினுள் வீட்டுநெறிகாட்டுவான் தம்மாலெடுத்துக்கொள்ளப்பட்ட இலக்கியம் இடையூறின்றி யினிதுமுற்றுதற்பொருட்டு, ஆதிக்கண்ணே கரிமுகக் கடவுளை வணக்கஞ் செய்தருளுகின்றார். வழிபடு தெய்வ வணக்கஞ்செய்துமங்கலமொழி முதல் வகுத்தெடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கணவிலக்கியம் இடுக்கணின்றி யினிதுமுடியு மென்பாராகலின்.

---

காப்பு.

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

என்பது அடைந்தோர்பாற் செய்யு நல்லருளினையுடைய யானைமுகத்தினையும், என்று மொருபடித்தா யிருக்கும் இளமையினையும் பெற்றகடவுளை, ஒருவர்மன மொழி மெய்களால் வந்திப்பாராயின், அவர்க்கு வேதாகம புராணமுதலிய கலைகள் யாவும் வருந்திக்கற்கும் பண்டமல்ல என்றவாறு. இதனாற்றானே யெளிதின் வருமென்பதாம்

உலகத்து ஆனைகளெல்லாம்அடைந்தோர்பாற் றுன்பஞ்செய்தலின் இதனை நற்குஞ்சரக்கன்றென றருளிச்செய்தார். யானையறிந்த றிந்தும் பாகனையேகொல்லும்என்றறிக. இஃதாகுபெயர்.

இந்நூலின் காப்பும் உரையும் சிறப்புப்பாயிரமும் அதன் முன்னுரைக்கும் உரையாசிரியர் காப்பும் சேது நிரம்பவழகியர் உரையிலிருந் தெடுத்துச் சேர்க்கப்பட்டன.

## ௧ - வது பதி முது நிலை.

அஃதாவது மேலாகிய இறைவனது இயல்பு.
சிவனுக்குத் தன்னியல்பேதென்னில்?

அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து.

எ-து. அகரவுயிர்போல் - அக்கரங்களுக்கெல்லாம் அகரமாகிய வெழுத்துப் பிராணனாய்நின்றாற்போல,—அறிவாகி-ஆன்மாக்களுக்கெல்லா மறிவாகி,—எங்கும் - சடத்திலுஞ் சித்திலும்,—நிகரிலிறை-ஒப்பில்லாத கடவுள்,—நிற்குநிறைந்து-சர்வத்திர பரிபூரணனா யசைவற்றுநிற்பன் எ-று.

நி-வ-உ. அகரமாகியவுயிரெழுத்துகளெல்லாவற்றிலும்பொருந்தி வேறறநின்றாற்போலத் தனக்கோர் உவமனில்லாத் தலைவன் உலகுயிர்முழுதும் ஒழிவற நிரம்பிஞானவுருவாய் அழிவின்றிநிலைபெறும்.

அகரம் தானேதனித்தும் ஏனையுயிருடம்புக்கெல்லாம் வேறின்றிப்புணர்ந்தும் நிற்றலானும், அங்ஙனம்புணர்க்கவழியுந் தன்னுருவுதோன்றுதாகலானும், முதற்கண் வைக்கப்படுதலானும், விகாரமின்றி நாதமாத்திரையா யியல்பாற்பிறத்தலானும், இறைவற்குவமையாயிற்று. இவ் வொப்புமையாற் சடமாகியவொலிவடிவன்றென்பதற்கு அறிவாகியென்றும், அகரம்போல வொருகாற்புணர்ந்து நீங்கதென்பதற்கு நிறைந்தென்றும், அவ்வகரமு-

நுலிய வெழுத்துக்களூ மூட்டுதற் கெங்குமென்றும், மாணுக்கற் கறிவித்தற்பொருட்டு உவமஞெடுபுணர்த்தினும் அன்னதன்றென் பதற்கு நிகரிலென்றுங் கூறியருளிஞர்.

"அக்கரங் டோறுஞ் சென்றிடு மகரம்போல் நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே" என் றருளிச்செய்தவாறுங் காண்க.

இதனு லிறைவன தன்மையும், அவன் வேறற நின்றனமை யுங் கூறப்பட்டன. (க)

இப்படி மனம் வாக்குக் காயங்களுக் கெட்டாமலிருந்தாலா ன்மாக்கள் மலபரிபாகம் வந்து மோக்ஷமடைகிற தெப்படி யெ ன்னில்?

**தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தருஞ்சத்தி**
**பின்னமிலா னெங்கள்பிரான்.**

எ-து. தன்னிலைமைமன்னுயிர்கள்-தன்னுடைய நின்மலமா கிய சுவதந்திரத்தை நிலைபெற்ற வான்மாக்கள், சார-பொருந்த, —தருஞ்சத்தி-கூட்டு மருட்சத்தி. அதனுற் சத்தியுஞ் சிவமு மிர ண்டோவென்னில்?,—பின்னமிலா னெங்கள்பிரான் - இரண்டி ல்லாதவன் எங்கள்சுவாமி.

நி-வ-உ. வாக்குமனங்கட்கெட்டாத தனது விமல ஞானு ந்தவீட்டினெல்லையை நிலைபெற்ற ஆன்மாக்கள்வந்துபொருந்து ம்படிசெய்யும் அருளாகிய பராசத்தியுடனே பேதமின்றி யொன் றிநிற்பான் எம்முடைய இறைவன்.

மன்னுயிர்களென்றதனுல் ஆன்மாக்கள்வினைவயத்தில்உரு வுந்தோறிலும் வேறுபடுவதன்றி நிலமுதல் நாதமீருகிய தத்துவ ங்கள்போலப் பிறந்திறப்பன வல்லவாம்.

இதனுல் அவன் ஓர் சத்தியோடும் கூடிநிற்பதென்பதூஉம் அது கருணைவடிவிற்றென்பதூஉம் கூறப்பட்டன. (உ)

அப்படி யும்முடையகடவுள் மகத்துவமேரவென்னில்?

பெருமைக்குநுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மையான்.

எ-து. பெருமைக்கும்-ஆன்ம போதத்தாலே யறியப்படாத மகத்துவத்துக்கும்,—நுண்மைக்கும் - இப்படிப் பஞ்சகிருத்திய நடத்தையிலேயு மான்மாக்களாலே யறியப்படாத விரகசியத்துக்கும்,—பேரருட்கும் - ஆன்மாக்கள்மேல் வைத்த மிகுந்த கிருபைக்கும்,—பேற்றினருமைக்கும் - சரிதை கிரியா யோகங்கண் முடிந்த விறுதியிலே சாயுச்சியத்தைக்கொடுக்கப்பட்ட வாச்சரியத்துக்கும்,—ஒப்பின்மையான் - இவனுக்குவமையில்லை.

வி-வ-உ. எவ்விடத்துமுளதாய நிறைவினானும், நொய்மையினானும், மிகுந்த கருணையினானும், ஒருவராற் பெறுதற்கருமையானும், ஆயவிந்நான்கினுந் தனக்கோ ரொப்புவமை யில்லாதான் முன்னங்கிளந்த எம்மிறைவன்.

இவ்வாற்றால் தனக்குவமனில்லானாகவே மற்றனைத்தியல்பினானும் ஒப்பிலனாதலினால் உய்த்துணர்க.

"அண்டப்பகுதி யுண்டைப்பிறக்க
வளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி
யொன்றனுக்கொன்று நின்றெழில்பகரி
னூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன
வின்னுழைக்கதிரின் றுன்னணுப்புரையச்
சிறியவாகப்பெரியோ னெனவும்
செருமைக்கண்டமனுத்தர
வனுவண்டத்து
நின்றுநுணங்கிய தண்டாச்சீர்த்தி"

எனவு மருளிச்செய்தவாறு காண்க.

குவ்வுருபு மூன்றும்வேற்றுமைப்பொருள்தந்தது. "யாதனுருபிற் கூறிற்றாயினும், பொருள்சென்மருங்கின் வேற்றுமை சாரும்" என்பதிலக்கணமாதலின்.

இதனுலிறைவன துயர்புகூறப்பட்டது. (௫)

இவனுக்கொப்பில்லை யென்பானேன், மூவரி லொருவனல்லவோ வெனின்?

ஆக்கியவைபு மளித்தாசுடனடங்கப்
போக்குமவன்போகாப் புகல்.

எ-து. ஆக்கி-பிரமாவையுண்டாக்கிச் சகத்தைச் சிருட்டிப்பித்து,—எவையுமளித்து-விட்டுணுவை யுண்டாக்கிச்சகத்தையெல்லாமிரட்சிப்பித்து,—ஆசுடனங்கப்போக்கு மவன் - முடிவின்மாயாமலத்திலே யெல்லாமடங்கச்சங்கரிக்குந்தன்மையையுடையகத்தாவாய்,—போகாப்புகல்-தானொன்றுமுடிவில்லாம லந்தப்பிரமாவிஷ்ணு ஜகமெவையிற்றுக்கும் புகலாகிய வாண்டவனும்.

கி-வ-உ-இனையனுகிய அக்கடவுள் ஒருவன்ஒருத்தி ஒன்றென்றுசுட்டப்பட்ட வுலகங்களெல்லாவற்றினையும் படைத்து நிறுத்தி யிச்சாஞானக்கிரியைக ளுணராதவண்ணம் ஆன்மாக்களெல்லாம் மூலமலத்துடனே அடங்கியிருக்கும்படி அழித்தலைச்செய்யுந்தான் என்ஞான்று நீங்காததோர் புகலிடமாயிருக்கும்.

ஆசுடனடங்க வென்றதனுல் புனருற்பத்தி யுண்டென்பது கூறியதாயிற்று. "உயிரவையொடுங்கிப் பின்னுமுதிப்பதெனன்பாலென்னிற் - செயிருறுமலத்தினுரும்" என் றருளிச்செய்தவாறுகாண்க.

இதனுல் அவனொருவனே முத்தொழிற்கும் உரியனென்பது கூறப்பட்டது. (௬)

அவனருவமோ வுருவமோ வருவா ரூபமோவென்னில்?

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவ முடையா னுளன்.

எ-து. அருவுமுருவும்-அருவமுமுருவமுமருவா ரூபமுமாம்,—அறிஞர்க்கு-அறிவான்மிக்கஞாதாக்களுக்கு —அறிவாமுருவம்-ஞானமாகிய வருட்டிருமேனியை,—உடையானுளன்-உடைத்தானவனுயிருக்கின்றான்.

நி-வ-உ. சிவம் சத்தி நாதம் விந்து என்னும்அருவடிவுநான்கும், மகேசுரன் உருத்திரன் மால் அயனென்னும் உருவடிவு நான்குமுடையன், அவ்விறைவன் அறிவுடையாரது உள்ளத்தின் தோன்றும் ஞானவுருவினையு முடையனுகலான்.

அருவும்உருவும் உளனெனவே அருவுருவாகிய சதாசிவவடிவமென்பது கூறவேண்டாவாயிற்று.

"சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழுமீச - னுவந்தருளுருத்திரன் ருன்மாலய னென்றிவென்ருய்ப், பவந்தருமுருவ னலிங் கருவநான் குபயமொன்ரு, நவந்தருபேதமாகநாதனுரடிப்பரொன்ப" என்றும் "குறித்ததொன்றுகமாட்டாக் குறையிலாதுதலானும்." என்றும்அருளிச்செய்தவாறுகாண்க.

இதனு லவனருவுருவு கூறப்பட்டன. (௫)

உடைமையாகி லொருவருண்டாக்கிக் கொடுக்கவேண்டுமென்னில்?

பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை.

எ-து. பல்லாருயிருணரும் - சர்வான்மாக்களுந் தங்கட்குக் கர்த்தா தனுகரண புவனபோகங்களைத் தந்தறிவிக்க அறிகின்ற,—பான்மையென-முறைமைபோல,—மேலொருவனில்லாதான்-தானே யறிதலன்றித் தனக்குமேலொருவ னறிவிக்கவேண்டுவதி

ல்லை யாதலாற் றுணிவுற்ற திருமேனியைத் தரித்துக்கொள்வன்
—எங்களிறை-எமதுகர்த்தா.

தி-வ-உ. நிறைந்து எண்ணிறந்த ஆன்மாக்களும் அறிவிக்க
வறியும் பகுதிபோலத் தனக்குமேலாய்நின்று உணர்த்துவதோர்
கடவுளையில்லாதான் எம்முடையஇறைவன்.

இதனாற் கடவுட்டன்மை யொருவராற்பெறாது இயல்பாக
வுடையன் என்பதுகூறப்பட்டது. (௬)

உம்முடையகர்த்தாவை எல்லாராலுமறியலாமோவென்னில்?

ஆறுவறிவா யகலா னடியவர்க்கு
வானோர் காணா தமன்.

எ-து. ஆறுவறிவாய்-எவ்விடத்தும் நீங்காத பேரறிவாய்,—
அகலானடியவர்க்கு - விட்டுநீங்கான் ஞானவான்களுக்கு,—வா
னோர்காணாதமன்-தன்னையறியாத பிரம விட்டுணுமுதலாகியதே
வர்களுக்குஅவர்கள்மனவாக்குக்காயத்துக்கெட்டாதஞானவான்.

தி-வ-உ. நீங்காதஞானமாய் அடியார்கள்உள்ளக்கமலத்தினை
விட்டு ஒருபொழுதும் பிரிதல்செய்யான், தான் தேவர்களால்கா
ண்டற்கரிய மேலோனாயினும்.

அடியவனெனவும், வானோனெனவும், பொதுப்படக் கூறின
மையால் யாவராயினும் அன்பர்க்கெளியவனாதலும்அன்பரல்லா
தவர்க்கு அரியனாதலும் உடையன் என்பதாம்.

"கனவிலுந்தேவர்க் கரியாய்போற்றி, நனவிலுநாயேற்கரு
ளினைபோற்றி" என்றருளிச்செய்தார் போதவூர் புகழுகம்போர்
த்தமெய்யன், வாதவூர் வந்தமறைமுதற்றலைவர்.

இதனால் அவன்அருள்புரியுமாறு கூறப்பட்டது. (எ)

உமதுகர்த்தா வேகதேசனோ வியாபகனோவென்னில்?

எங்குமெவையு மெரியுறுநீர்போ லேகந்
தங்குமவன் றானே தனி.

எ-து. எங்குமெவையும் - சித்தினும் சடத்தினும்,—எரியுறு நீர்போல - அக்கினியைப்பொருந்தின சலம்போல,—ஏகந்தங்கும்-கர்த்தாவிரண்டற வேகத்துவமாய்ப் பொருந்திநிற்பன்,—அவன்றானே தனி-அந்தக்கடவுடானே யொப்பில்லாதவன்.

தி-வ-உ. எல்லா வுலகங்களிடத்தும் அளவிறந்த வுயிர்கண்மாட்டும் நீரிடைநின்ற தழல்போல இரண்டறக் கலந்திருந்தானாயினும் அக்கடவுள் அப்பதங்களிற்றங்காது நீங்கி யேகனாய்நிற்பன்

ஏகாரம்-பிரிநிலை. "பார்பதமண்டமனைத்துமாய்" என்பதனுள் "நீருறுதீ" என்றருளிச்செய்தவாறுகாண்க.

நீருறுதீயென்பது, காய்ந்தபுனலின்கணுளதாயவெம்மை,

இதனால் யாண்டுநிரம்பி நிற்பினும் அதிற்றோயானென்பது கூறப்பட்டது. (அ)

கர்த்தா வெங்குமொருப்படித்தாய் நிற்பனோவென்னில்?

நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங்கரன்.

எ-து. நலமிலனண்ணார்க்கு-தன்னை வழிபடாதபேர்களுக்குத்தங்களாலேயுள்ள சனனமரணமாகிய துக்கத்தைநீக்கித் தன்னாலேயுள்ள வின்பநலத்தைக் கொடான்,—நண்ணினர்க்குநல்லன்-தன்னை வழிபட்டபேர்களுக்குத்துன்பத்தைநீக்கி யின்பநலத்தைத்தருவான். வழிபடாதபேர்க்குத் துன்பத்தைநீக்காமலும் வழிபட்டபேர்க்குத் துன்பத்தைநீக்கியு மிருக்கையினாலே பிரபஞ்சவாதியோவென்னில்?—சலமிலன் பேர்சங்கரன்-விருப்பு வெறுப்பில்லாதவன் சுகத்தை யான்மாக்க ளெவைக்குங் கொடுக்கையினாலே சங்கரனென்ற திருநாமத்தையுடையவன்.

தன்றாளினை யடைந்தார்மாட்டு நன்மையினைச்செய்யலும்; அதுசெய்யார்மாட்டு அது செய்யாதிருத்தலும் உடையனாயினும் வயிரமென்பது சிறிதுமிலன்; இன்பத்தினைப்பண்ணுஞ் சங்கரனென்னும் பெயரினையுடையான் ஆகலான்.

வடமொழியில் சம் என்பது சுகம், கரன் என்பது பண்ணு வான் இவையிரண்டும் புணர்ந்து சங்கரனெனநின்றது.

இதனால், விருப்பு வெறுப்பிலனென்பதும், அவரவர்செய்தி ற்கொத்த பயனுதவும்நடுநிலைமையை யுடையவனென்பதுங்கூற ப்பட்டன. (௯)

வழிபட்டவர்களாலே யந்தப்பொருளைப் பெறலாமோ வெ ன்னில்?

உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து.

எ-து. உன்னும்-நினையுங்கள்,—உளது-உண்டு,—ஐயமிலது சந்தேகமில்லை,—உணர்வாயோவாது-அறிவுக்கறிவாய் விட்டுநீங் காது. அப்படி விட்டு நீங்காமலிருந் தென்செய்யுமென்னில்?— மன்னுபவந் தீர்க்குமருந்து-பொருந்திய சனனமரணமாகிய வியா தியைத் தீர்க்கின்றதற்கு நல்ல பரமௌஷதம்.

நி-வ-உ. ஞானமாய்ப் பிரிப்பின்றிநின்று அனாதியேதொட ர்ந்துவரும் பிறவிப்பிணியினை அறுத்தற்கு ஓர்மருந்தாந் தன்மை யினையுடையன் அக்கடவுள் அதற்குஓர்ஐயமில்லை. அதனையெஞ் ஞான்றும் இடைவிடாது அன்புடன் நினைப்பீராக.

இதனால் பதியினை வழிபடவேண்டுமென்பதும் உறுதிப்பா டுங் கூறப்பட்டன. (௰)

பதிமுதுநிலை முற்றிற்று.

## உ-வது. பசு நிலை.

அஃதாவது பலவாய வுயிர்களது முறைமை.

இதனைப் பன்மைவாசகப்படுத்திய வதனால் பதியொன்றே யென்பதுதானே கொண்டுகிடந்தது. பதியினியல்புகூறிப் பசுக் களியல்பு கூறிற்றாகலான், மேலையதிகாரத்தினோடு இதற்கியை

புடைத்து எனக்கொள்க. பசு உயிர்-சேதனன்-புற்கலன்-சீவன்-அணு வியாபகன்-ஆன்மா-என்பன ஒருபொருட்கிளவி.

இதி லடைந்தவருண்டோவென்னில்?

பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை.

எ-து. பிறந்தநாண்மேலும் பிறக்குநாள்போலும்-பிறந்தவர்களாகிய ஆன்மாக்களுக்குந் தொகையுண்டானாற்போலவு மினிமேற்பிறக்குமான்மாக்களுக்குந் தொகையுண்டானாற்போலவும், துறந்தோர் துறப்போர் தொகை-தேகாதிப் பிரபஞ்சத்தைப் பொய்யென்று நீங்கி மோக்கத்தையடைந்தோர்க்குந் தொகையுண்டு, இனிமேலப்படி மோக்கத்தை யடைவோர்க்குந் தொகையுண்டு. அதற்குமளவில்லை இதற்குமளவில்லை.

நி-வ-உ. உயிர்கள்தோற்றிய காலத்தினதுதொகையும், மேற்றோற்றுங் காலத்தினது தொகையும், இறைவன் திருவடியை அடைந்தாரது தொகையும், மேல் அடைதற்குரியாரதுதொகையும், தம்மிலொக்கும்.—இஃதளவிலவென்பதாம்.

ஈற்றினின்றதொகைநான்கினோடுங் கூட்டப்பட்டது. இதில் உயிருண்மை யுடைத்தெனக் கூறியது எதனாலென்னில் பொருளுண்மைபெற்றே அதனியல்பு கூறவேண்டும்; பித்திகையுடைத்தாயே சித்திரமெழுதவேண்டுமாறுபோல.

இதனானுயிர்களதுஉண்மையும், மிகுதியுங்கூறப்பட்டன.
ஆன்மாக்களெல்லா மொருபடித்தோவென்னில்?

திரிமலத்தாரொன் றதனிற் சென்றார்களன்றி
யொருமலத்தா ராயு முளர்.

எ-து. திரிமலத்தார்-ஆணவம் கன்மம்மாயையென்னு மும்மலத்தையுடைய சகலராயும்,—ஒன்றதனிற் சென்றார்கள் மாயா

மலத்தைநீங்கி மற்றிருமலமுமுடைய பிரளயாகலராகியும்,—அன்றி-அவையன்றி,—ஒருமலத்தாராயும் - மாயாமலத்தையும்கன்மமலத்தையும் நீங்கி மற்றொருமலமுடைய விஞ்ஞானகலராகியும், உளர்-இப்படி மூவகை யான்மாக்களாயிருப்பர்கள்.

நி-வ-உ. ஆணவம் கன்மம் மாயை என்னுமலங்கள்மூன்றுமுடையராகியும், இம்மூன்றில் மாயைநீங்கி யேனைய இரண்டுமுடையராகியும், அவ்விருவகையு மல்லாது ஆணவ மொன்றினையுமுடையராகியும், சொல்லப்பட்ட மூன்றுதிறத்தினையுடையார் அவ்வான்மாக்கள்.

ஆயுமென்பது மூன்றிடத்துங் கூட்டப்பட்டது. அவர்கள் நிரனிறையிற் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலராம். "உரை தருமிப் பசுவர்க்கமுணரின் மூன்றாமியரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர், நிரையின்மல மலங்கன்மமலங்கன்மமாயைநிற்கும்" என்றருளிச்செய்தவாறுங் காண்க.

இதனால் தொடர்பின் விகற்பத்தால் உயிர்கள் மூவகைப்பட்டதன்மை கூறப்பட்டது. (உ)

இவர்க ளொருவர்க்கொருவர் அதிகயோவென்னில்?

**மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்க**
**டோன்றலர் தோற்றுள்ளார் துணை.**

எ-து. மூன்றுதிறத்துள்ளாரும் - அம்மூவகைப்பட்டவான்மாக்களும், அநாதியிலே, மூலமலத்துள்ளார்கள்-ஆணவ மலசம்பந்தர்களா யிருக்கிறவர்களாகையினாலே, தோன்றலர் தோற்றுள்ளார்துணை-தோன்றாத்துணையாயிருக்கிற சிவனுக்கு அடியவராயிருப்பர். அம்மூவர்க்குங் கத்தாவேதுணை.

நி-வ-உ. இம்மூன்றுதிறத் தான்மாக்களும்; மூலமலமாகிய ஆணவத்தாற்பிணிக்கப்பட்டவர்களே. அவருள், மாயையென்றுந்துணையினையுடைய சகலர், தாம்கட்டுற்றதொன்றும் தம்மை தமக்குத் தெரிதலிலர்.

ஏனையிருவருக்குந் தெரியுமென்பதாம்.
மலமென்பது அழுக்கு. உம்மை-முற்றும்மை.

இதனால் முன்னரொவ்வொன்றாக நீக்கப்பட்டது மாயையுங் கன்மமும் அல்லதுஆணவமன்றென்பது கூறப்பட்டது.

அடிமையல்லாதவான்மாக் கறிவுண்டென்னில்.

கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்றோ செயல்.

எ-து. கண்டவற்றைநாளும் - நாளும்நனவிலே கண்டபொருள்களை நாடோறும்,—கனவிற்கலங்கியிடும் - சொப்பனத்திலே மறக்கப்படும். அப்படிப்பட்ட. திண்டிறலுக்கென்றோசெயல் - அற்பவலிமையுள்ளவறிவில்லாத வான்மாக்களுக்குச் சுதந்தரமாகிய செயலேதுண்டு.

நி-வ-உ. பலகாலுஞ் சகலாவத்தையிற் தாம் கண்டறிந்த பொருள்களைச் சொப்பன அவத்தையில் திரிபுபடக்காணுந் திணிந்தவெற்றியினையுடைய வுயிர்களுக்குச் செயலுடைத்தென்பது எவ்வண்ணமோ?

திண்டிறலென்பது அன்மொழித்தொகையாய் இகழ்ச்சிக் குறிப்பு மொழியாய்நின்றது, திரிபுடக்காண்டலாவது-நல்குரவாளர்தமைச் செல்வராகவும், செல்வர்தமை நல்கூர்ந்தவராகவும், உறுப்பில்லார்தமை யுறுப்புடையராகவும், உறுப்புள்ளார்தமை யுறுப்பிலாராகவும், ஒன்றுஒன்றாக மாறுபாடாகக்காண்டல் முதலியனவெல்லாம். (௩)

சொப்பனத்திலேயல்லோ மறந்தான் நனவிலே தானேயறிவானென்னில்?

பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற.

எ-து. பொறியின்றி-ஐந்திந்திரியங்களி னொன்றிலல்லாமல்,—ஒன்றும் புணராதபுந்திக்கு-ஒருவிடயங்களையு மறியாதவான்மாக்களுக்கு—அறிவென்றபேர் - தானேயறியுமறிவையுடையனவென்றபேர்,—நன்றற-மிகவுநன்று.

தி-வ-உ. செவிமுதலிய கருவிகள்கூடாமல் யாதொருவிடயமும் எய்தமாட்டாத வுணர்வினையுடைய வுயிர்களுக்கு நூல்வல்லோர் அறிவுடையனவென்றிட்டபேர் மிகவும் அழகியது.

பொறியின்றியொன்றும் புணராதென்பதனால், கூடிப்புணருமென்பதாயிற்று. புந்தி ஆகுபெயர். நன்றென்பது முன்னையது போலிகழ்ச்சிக் குறிப்புமொழி.

இவை யிரண்டுபாட்டானும் உயிர்கட்கோர்முன்னிலையான் அன்றி அறிவுந்தொழிலுங்கூடாமை கூறப்பட்டது. (௫)

அப்படி இந்திரியங்களைக்கொண்டன்றி ஆன்மாவுக்கறிவில்லையோ வென்னில்.

ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய.

எ-து. ஒளியும் - சோமசூரியாக்கினிப் பிரகாசமும். இருளும் - பூதவிருளும், உலகும் - பிரபஞ்சமும், அலர்கட்டெளிவிலெனில் - அலர்வித்த கண்ணுக்குப் பிரகாசமில்லையாயில், என்செய - இது மூன்று மிருந்து பிரயோசனமேது? அப்படிப்போல வொளியாகிய சிவமு மிருளாகிய வாணவமலமும் பிரபஞ்சமாகிய மாயையும் அலர்விழியாகிய வான்மாவுக்குஅறிவில்லையாகில் அம்மூன்று மிருந்துபிரயோசன மென்ன? ஆகையா லன்றியே யான்மாவுக்கறிவுண்டு.

தி-வ-உ. விளக்கஞ்செய்யும் ஞாயிறு திங்கள் அங்கியென்னுஞ்சுடர்களும், மயக்கினைச்செய்யும் அந்தகாரமும், பல்வகைப் பொருளோடு சிறந்த வுலகமும், விழித்திராநின்ற கண்ணினிடத்

துச்சோதியில்லையாயின் என்னபயனைச்செய்தற்பொருட்டு?எ-று.
எனவே யாதுமின் றென்பதாம்.

இவ்வுவமையால் மிகுந்தபிரகாசமாகிய சிவனுடைய ஞானமும், இருளாகிய ஆணவமும், கலைமுதல் நிலனீறாகிய தத்துவங்களும், நித்தமாகியவுயிர்களிடத்து உணர்வில்லையாயின் என்னபயனைச்செய்யுமென்னும் பொருள்தோன்றிநின்றது. இஃது ஒட்டென்பதோ ரலங்காரம். இம்மூன்றுவகையினும் நன்று தீதுகளை யடைவனவுயிர்களேயா மென்பதாயிற்று.

இதனுல் விளக்கவிளங்குங் கண்போல் உணர்த்தஉணருமுணர்வினையுடைய தொன்பதூஉங் கூறப்பட்டது. (கூ)

ஆனுலிந்த மூன்றுபொருளையு மறிவ தியாதென்னில்? பதிக்கும்பாசத்துக்குமறியவேண்டுவதில்லை, பசுவேபகுத்தறியுமென்றது.

> சத்தசத்தைச் சாரா• தசத்தறியா தங்கணிவை
> யுய்த்தல் சதசத்தா முயிர்.

எ-து. சத்தசத்தைச் சாராது-சத்தாகியசிவம் அசத்தாகியபாசத்தைப்பொருந்தாது,—அசத்தறியாது-அசத்தாகிய பாசஞ் சடமாகையா லஃதொன்றையும் அறியமாட்டாது,—அங்கண்-அவ்விடத்தில்,—இவை-இவ்விரண்டையும்,—உய்த்தல்-பொருந்தியறிகிறது,—சதசத்தாமுயிர்-சதசத்தாகிய வான்மா.

நி-வ-உ. நிலைபெற்ற ஞானமாகிய சிவனுக்கு அநித்தங்களானசடப்பொருள்களைப் புதிதாகச் சுட்டியறியவேண்டுவதில்லை அசேதனங்களாகிய தத்துவங்கட் கறிவென்பதில்லை. இவ்விரண்டு தன்மையாயின், அவ்விடத்திவற்றைத் தன் னுணர்வுசெலுத்திப் பகுத்தறியுமுயிர்கள் சத்தும் அசத்துமன்றியே சதசத்தாதல் வேண்டும். அல்லது கூடாதென்பது கருத்து,

உயிர்களுஞ் சித்தென்று வழங்கப்படுமாயினும் சிவனுடையஞானத்திேைற டொருதன்மை யல்லவென்பதாம்.

"சிவன்சிவனென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னிற்-சிவனருட்சித்திவ னருளைச்சேருஞ் சித்திவன்றான், பவங்கேடு புத்தி முத்தி பண்ணுஞ்சித்தவற்றிற்-படியுஞ்சித் தறிவிக்கப்படுஞ்சித்து மிவன்றா, னவன்றானையறியுஞ் சித்தாதலினிரண்டு-மணைந்தா லுமொன்றாகா தந்நியமாயிருக்கு, மிவன்றானும் புத்தியுஞ் சித்தி வனுமோ புத்தி-யிதுவசித்தென்றிடி லவனுக்கிவனும்சித்தாமே" என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனாலுயிர்கள் சுத்தவறிவுஞ் சடமுமல்லவாதல் கூறப்பட்டது. (எ)

அப்படியான்மா சத்தும் அசத்துமானதற் குவமையுண்டோ வென்னில்?

இருளி லிருளாகி யெல்லிடத்தி லெல்லாம்
பொருள்க ளிலதோ புவி.

எ-து. இருளிலிருளாகி - இருளோடுகூடி யிருளாயிருந்தும், எல்லிடத்திலெல்லாம்-ஒளியோடுகூடி யொளியாயிருந்தும், பொருள்களிலதோபுவி-இந்தப் பூமியின்கண்ணே யிப்படிக்கொத்த பொருள்களில்லையோ? உண்டு. அதாவது, கண்ணும்-படிகமும்-ஆகாசமும்போல வான்மாவு மதுவதுவாக நின்றறிதற்குவமையாம்.

நி-வ-உ. இருள்வந் திறுத்தகாலை மறைந்தும்ஒளிவந்திறுத் தகாலை விளங்கியுநிற்கும் பொருள்களையுடையதன்றோ வுலகம்.

பொருள்களென்ற பன்மையால் அவை கண்ணும் ஆடியும் விண்ணுமுதலாயின. ஓகாரம் எதிர்மறை. இதுவுமொட்டென்பதோ ரலங்காரம்.

இதனால் சுத்தஉணர்வுஞ் சடமுமன்றி யிடைப்பட்டதொன் றில்லை யென்பாரை யுண்டென மறுத்து மேல்வலி யுறுத்தப்பட்டது. (அ)

ஒளியு மநாதியேகூடி நிற்கவே ஒளியோடுங் கூடி நின்று இருளோடுங் கூடுவானேனென்னில்?

ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
வாமன்கண் காணா தவை.

எ-து. ஊமன்கண்போல-கோட்டானுடைய கண்ணுக்கு, ஒளியுமிகவிருளே-ஆதித்தப்பிரகாசமு மந்தகாரமாயிருக்கும். அதுபோல, வாமன்கண் காணாதவை - நிலைபெற்ற சிவஞானத்தை யான்மாக்கள் காணாமலிருக்கிறது, இருளாகிய வாணவமலத்தால்.

நி-வ-உ. உதயஞ்செய்து விளங்காநின்ற சூரியனைக்காணாத கூகையினது கண்போல முற்கூறிய வுயிர்களும் கருத்தாவாகிய சிவனுடையஞானத்தினைக் காணமாட்டா, அந்தஞானமும் அக்கூகையினது கண்ணுக்குச் சூரியன் சிறிதுந் தோன்றாதின்றாற்போல வுயிர்களுக்குந் தோன்றாதிருக்கும்.

உம்மை-சிறப்பும்மை. ஏகாரம்-தேற்றம்.

இதனாலுயிர்கள் தமக்குஉயிராகி விளங்கின்றஞானத்தினைக்காணாமைக்கு, உவமையெடுத்துக் கூறப்பட்டது. (கூ)

இந்தவான்மாக்க ளறியாமையை நீங்கி யருளைப்பெறுவது மெக்காலம்? என்றிரங்கியது.

அன்றளவு மாற்றுமுயி ரந்தோ வருடெரிவ
தென்றளவொன் றில்லா விடர்.

எ-து. அன்றளவும்-அநாதியேதொடங்கி,—ஆற்றுமுயிர்-சுமந்து நடமாறப்பட்ட வான்மாக்களுக்கு,—அந்தோ-ஐயோ? அருடெரிவதென்று-அஞ்ஞானநீங்கிச் சிவஞானம்பிரகாசிப்பதுஎக்காலம்?—அளவொன்றில்லாவிடர்-அளவில்லாத சனனமரணமாகியதுக்கத்தை யநாதிதொடங்கி யாற்றுமென்றிரங்கியது.

நி-வ-உ. அநாதியேதொடங்கி யிற்றைவரையும் எண்ணிறந்ததுன்பத்தினைத் தாங்கிநிற்கு முயிர்கள் அந்தோ எந்தநாளோ

திருவருளாகிய ஞானத்தினைக் கண்டு தம்மியல்பைநீர்த்துபேரின்பத்தையெய்துநாள்.

அர்த்தோவென்ப திரக்கத்தின்கட் குறிப்பு.

இதனாலுயிர்படுந் துன்பமிருதிக்கிரங்கிக் கூறப்பட்டது.

இவ்வதிகாரத்தை உரையாசிரியர் நிரம்பவழகியர் உயிரவை நிலையெனக்கூறினார்.

பாசநிலை முற்றிற்று.

---

## ரு-வது பாசநிலை.

## இவ்வதிகாரத்திற்கு இருண்மலநிலை.

அஃதாவது, அறியாமையே வடிவாகிய ஆணவமலத்தின் தன்மை. உயிரவை நிலையென்பதுபோலப் பொதுப்பட்டப் பாசங்களதுநிலையென்னாது இருண்மலநிலையென்றதனால், ஒழிந்த மாயை கன்மங்க ளெவ்வா றடங்குமோவெனின், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே" என்பதனாலடங்கும். முற்கிளந்த வுயிர்களாற் புணரப்பட்ட பாசத்தினியல்புகூறுதலின், மேலை யதிகாரத்தினோடிதற் கியைபுண்மையறிக என்றார் நிரம்பவழகியர்.

ஆன்மாவைப் பொருந்திய விடராவதேதென்னில் ?

துன்றும் பவத்துயரு மின்பந் துணைப்பொருளு
மின்றென்ப தெவ்வாறு மில்.

எ - து. துன்றும்பவத்துயரும் - நெருங்கியிருக்கப்பட்டசனனமரணமாகிய துக்கத்தையும்,— இன்பும் - பேரின்பமாகியவீட்டையும்,— துணைப்பொருளும் - எல்லாத்துக்குந் தாரகமாயிருக்கப்பட்ட திருவருளையும்,—இன்றென்பது - இல்லையெனச்செய்வது, — எவ்வாறுமில் - தானுமெவ்வழியானு மில்லையென்னும்படி மறைந்துநிற்கும் இந்த வாணவமலம்.

நி - வ - உ. தொன்றுதொட்டிடைவிடாதுவரும் பிறவித் துன்பமும், மேலாய வீட்டின்பமும், இவற்றைக்கூட்டி முடிப்ப தாய் முதற்றுணை நிமித்தங்களும் இல்லையென் றறுதியிட்டுக் கூறுதல், காண்டல்முதலிய அளவைக ளெல்லாவற்றானு மில்லை. (க)

இந்த வாணவமலத்துக் கொப்புண்டோ வென்னில் ?

இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

எ - து இருளானதன்றி - பூதவிருளானது தன்னைக் காட்டுதலன்றி,—இலதெவையும் - எல்லாப் பதார்த்தத்தையுங் காட்டாமன் மறைத்து,—ஏகப்பொருளாகி-தானொரு பொருளாகி,நிற்கும்பொருள் - ஆணவமலமான திப்படி நின்றுவிடும்.

நி - வ - உ. உலகத்து வெவ்வேறு பலவகைப்பட்ட குணங்களையுடைய பொருள்க ளெல்லாவற்றினையும் ஒருபொருளாக வேற்றுமை தோன்றாது மறைத்துக்கொண்டு நிற்பது இருளுருவானதற் கன்றிப் பிறிதொரு பொருட்கில்லை.

ஆதலா லிதுபோலப் பிறப் பிறப்புக்களும், வீட்டுநெறியும், காரணங்களும், பகுத்தறியாதபடி மறைத்தது ஆணவமென்ப தாயிற்று.

இவை யிரண்டுபாட்டானும் ஆணவத்தினது உண்மையும், அஃதிருள்போல மருள்வடிவிற் றென்பதூஉம், கூறப்பட்டன.

இருள்போலத் தானே வென்னில் ?

ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு
மிருபொருளுங் காட்டா திது.

எ - து. ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்-பூதவிருளா னதெல்லாப் பதார்த்தத்தையு மறைத்துத் தன்னைக்காட்டி நிற்கும்,—இருபொருளுங் காட்டாதிது - இந்தவாணவமலமானது தன்னையுங் காட்டாது தனக்குள்ளே யிருக்கிற வான்மாவையுங் காட்டாது.

நி - வ - உ. அந்தகாரமானது வேறொரு பொருளையுங் காணாமல் மறைத்துத் தன்னுருவங் காட்டிநிற்கும், ஆணவமானது தன்னுருவத்தையும் ஞானத்தையுங் காட்டாமல் நிற்கும்.

இதனால் இவ்விருளினும் மிகக்கொடியது ஆணவமென்று கூறப்பட்டது.

காட்டாமல் மறைப்பது பதிக்குமோ வென்னில் ?

அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
யின்றளவு நின்ற திருள்

எ - து. அன்று - அநாதியே,—அளவி - ஆத்மாவைப்பொருந்தி,—உள்ளொளியோ டாவி யிடையடங்கி - சிவஞானத்தைப் பிராணனை யுடைய வான்மாவைப் பொருந்தி மறைத்து,—இன்றளவு நின்ற திருள் - சிவனது திருவடித் தாமரையைப் பெறுமளவு நின்ற திந்தவாணவ மலம்.

நி - வ - உ. அகவிளக்காகிய ஞானத்தினோடே தானும்அநாதியே கலந்துகொண்டு அந்த ஞானத்தின்மேற்படராதுஉயிராவிலே யமைவுற்று இது நாள்வரையும் நீங்காது நின்றது ஆணவமாகிய அந்தகாரம்.

உள்ளொளியோடு என்பது உயர்வின்கண்வந்தது. "ஒருவினையொடுசொ லுயர்பின் வழித்தே" என்பதிலக்கண மாதலின்.

இதனால் ஆணவமாகிய அந்தகாரம் அநாதியென்பதும், மாயைகருமம்போலநீங்கிப்புணர்ந்த தன்றென்பதும் கூறப்பட்டன, அப்படி யிவனிடத்திலே யடங்கியிருக்கப்பட்ட வாணவமலத்தை யிவனாலே யறியப்படாதோ வென்னில் ?

பலரைப்புணர்ந்து மிருட் பாவைக்குண் டென்றுங்
கணவற்குந் தோன்றாத கற்பு.

எ-து. பலரைப் புணர்ந்தும் - எல்லா வான்ம வர்க்கங்க ளையும் பொருந்திப் புணர்ந்தும்,—இருட்பாவைக்குண்டு இருள் மலசத்திக்குண்டு, — என்றுங் கணவற்குந் தோன்றாதகற்பு - எப் போதுந் தன்பத்தாவுக்கு விபசாரியென்றது தோன்றாத கற்பு டைய தன்மை - இந்த வாணவமல மான்மாக்களுக்குத் தோன்றா மனிற்பு திப்படியென்க, இது மூடிந்தகுறளிற்கருத்துரை.

நி-வ-உ. எண்ணிலராகிய ஆன்மாக்களைப் பேதமறக் கல ந்து இடையறாது நின்றாலும், இருள்மலமாகிய மகளுக்கொருநா ளுந் தனது தலைவராகிய ஆன்மாக்களுக்குத் தன்னைக்காட்டாது நிற்பதோர் நியமமுண்டு.

பாவையெனவுங் கணவரெனவுங் கூட்டம்பற்றி யுருவகஞ் செய்ததன்றி ஆண்குறி பெண்குறி யவ்விடத் தில்லையெனக் கொ ள்க. என்றும் என்றதனால் கேவலசகல சுத்த மூன்றினுமென்பது பெற்றாம். சிறப்பும்மை யிரண்டனுள், பின்னரதுஇழிபுகுறித்து நின்றது. இடைநின்ற உம்மைமுற்றும்மை.

இதனு லாணவத்தினது தன்மைகூறப்பட்டது. (௫)

இந்த வாணவமலத்தை யறிவதெவ்வாறென்னில்?

**பன்மொழிக ளென்னுமரும் பான்மை தெரியாத**
**தன்மையிரு ளார்தந் தது.**

எ-து. பன்மொழிக ளென்னுமரும் பான்மை தெரியாதத ன்மை - பலவாகச் சொல்லுவதென்ன? நித்திய அநித்தியத்தை அறியப்படாத முறைமை,—இருளார்தந்தது-இந்தவாணவமலங் கொடுத்ததென் றறிவாயாக.

நி-வ-உ. பற்பலவார்த்தைகளாற் பயனென்னே? அறியவே ண்டும் பொருள்களையறியும் பகுதிதோன்றாது நின்றவியல்பெ லாங் கருமைநிறத்தினையுடைய மூலமலமாயினார் கொடுத்தது.

அறியவேண்டும்பொருள்களாவன பதி பசு பாசமெனுமூவகைப்பொருள்களும், சரியை கிரியை யோக ஞானங்களென்றநால்வகையொழுக்கமுமாம். இருளென்பது செறலின்கண் வந்த அஃறிணை வழுவமைதி.

இதனால் மூலமலத்தினால்வந்த அறியாமைவலியுறுத்தப்பட்டது. (௬)

ஆணவமல மில்லையென்னில்?

இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றாகப் போம்.

எ-து. இருளின்றேல்-ஆணவமல மில்லையென்று நீசொல்லுவாயாகில்,—துன்பேன்-சுகதுக்கவேதனை வருவானேன்,—உயிரியல்பேல்-ஆன்மாவுக் கியற்கையென்று சொல்லுவையென்னில் (இயற்கையாவது கறுப்பும்வெளுப்புங்கரிக்கும்பாலுக்குமியற்கையானாற்போலவாம்),—போக்கும் பொருளுண்டே லொன்றாகப் போம்-அப்போதாணவமல நீங்குகிறபொழுது ஆன்மாவுங்கூட்க்கெடுவன்-ஆகையாற் குணமுங் குணியுமாகச் சொல்வதடாது.

நி-வ-உ. இருளாகிய அவிச்சையில்லையாயின், இந்திரியங்கட்கு ஏவல்செய்யும் பிறவித்துன்பம் படற்குக் காரணமென்னை? அஃது ஆன்மாவினது சுபாவமாயின் நீங்காது, நீக்குஞ்சிவஞானமுண்டாயின் அதனுடனே உயிருங்கெட்டுப்போமாதலால்-எனவே பிறவித்துன்பத்துக்கு நிமித்தம் அவிச்சையென்பதாயிற்று.

இதனால் அவிச்சையில்லையென்பாரை யுண்டென்றுமறுத்துக்கூறப்பட்டது. (௭)

ஆனாலிந்தமலம் நடுவேவந்ததென்னில்?

ஆசா தியேலணவ காரணமென் முத்திநிலை
பேசாதகவும்பிணி.

எ-து, ஆசாதியேல்-ஆணவமலமாதியெனறல், அணவகாரணமென்-இடையிலேவந்து பொருந்தக்காரணமென்ன? பொருந்தக்காரணமுண்டு, வெள்ளைப்புடைவையி லழுக்குப்போலவுங் கண்ணாடிக்குக் காளிதம்போலவுமென்னில்,—முத்தியிலே பேசாது - மோக்ஷமுண்டென்று சொல்லவேண்டுவதில்லை,—அகவும்பிணி-இந்தமலமாகிய வியாதி மோக்ஷத்திலும்வந்து பொருந்தும்.

நி-வ-உ. அவிச்சை யிடையிட்டுவந்ததாயின், அஃதோர்காரணமில்லாமல் வந்துபொருந்தியதென்னை? அன்றி முத்தியினு முறையபடாதுவந்து கவர்ந்துகொள்ளுமன்றோ.

உறையபடாது கவர்தல்-தோன்றாது விளைவிற்கவர்தல்.

இதனால் அவிச்சையாதியென்பாரை மறுத்துக் கூறப்பட்டது. (௪)

அறுதியாகி லொருக்காலு நீங்காதென்னில்?
ஒன்றுமிகினு மொளிகவராதே யுள்ள
மென்று மகலா திருள்.

எ-து. ஒன்றுமிகினும்-பூதவிருள்மேலிட்டகாலத்து,—ஒளிகவராதேல்-விளக்கினொளி யவ்விருளைச் சற்றேநீக்கும், அப்படி நீக்காதென்றால்,—உள்ளமென்றுமகலாதிருள்-அதுபோலவாணவமல்மான தொருக்காலு மான்மாவை விட்டுநீங்காது, ஆணவமலமானது கலாதிக்கிடங் கொடாதேயிருந்தா லாசாரியராலும்நீங்காது, கலாதிகளுக் கிடங்கொடுக்கையினாலே யாசாரியராலேநீங்குமென்றறிவாயாக.

நி-வ-உ. மலமாயையென்னு மிரண்டினுள், மலமாகியவிருள்வியாபகமெல்லா மறைத்ததாயினும், ஏகதேசவிளக்கமாகியமாயாகாரியத்தினை யுயிர்கள்கவர்ந்து கொள்ளாதாயின் எந்ஞான்றும் அவ்விச்சை யவைகளைவிட்டு நீங்குவ தில்லை-கவருந்தன்மை யுயிர்களுக்குண்டாகவேண்டுமென்பது கருத்து.

என்றுமென்ப தருளுடையமானகாலத்திலு மென்பதுகாட்டிநின்றது.

இதனாலுயிர்கள் அவிச்சைநீங்கி முத்தியடைவதற்கோர்நிமித்தங் கூறப்பட்டது. (௧)

மலமறையாது மாயை மறைக்குமென்னில்?

விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத் துவந்து.

எ-து. விடிவாமளவும்-பூதவிருணீங்குமளவும், விளக்கனைய-விளக்கானது பிரகாசித்து நின்றாற்போலவும், மாயைவடிவாதி கன்மத்துவந்து. மாயை கன்மத்துக்கீடாகத் தனுவாதியாகவிரிந்துகன்மமுள்ளமட்டுஞ் சீவித்துநிற்கும். திருவருள்விளங்கினவிடத்துவிடிவளவில் விளக்கொளிமழுங்கினாற்போலமாயைசீவியாது

வி-வ-உ. சிவனுடைய ஞானமாகிய கிரணந்தோன்றி ஆணவவிருள்நீங்குமளவும், மாயையினிடத்திலேநின்றுந் தனு கரண புவனபோகங்கள் நந்தம் புண்ணியபாவங்களுக்கீடாகத்தோன்றிச்சிறிதே மலவிருளினைநீக்கி விடயவின்பங்களைக் காட்டும்விளக்குகள்போலவாம்.

மலமுமாயையும், இருளுமொளியும்போலத் தம்முள் மாறுடைத்தென்பதாயிற்று.

சிறிதேநீக்குதல் - விளக்கனைய-என்பதனாற்பெற்றாம். விடிவாமளவும் என்றதனான் மாயாகாரியங்கள் சங்காரகாலத்திற் றமதுகாரணத்திலேயடங்கினும் உயிர்களைவிட்டு நீங்கினவன்றென்பதாம் "இருளிரிசுடரிரண்டாநின்ற முழுமலமாயை" என்றருளிச்செய்தவாறுகாண்க.

இதனால் அவ்வவிச்சையால் நீங்காது தொடர்ந்துநின்றமாயைகருமம், இரண்டின்முறைமையுங் கூறப்பட்டது.

பாசநிலை முற்றிற்று.

## ௯-வது அருளதுநிலை

அஃதாவது-கருணையுருவாகிய ஞானத்தின்முறைமை. இத்தன்மையவாகிய அவிச்சையைத் துறந்து வீட்டுநெறி காட்டுதற்பொருட்டு அதற்கு மாமுகிய அருளினது முறைமை கூறலின், மேலையதிகாரத்திறைேடிதற் கியையபுண்மையறிக.

விடிவாவ தேதென்னின்?

அருளிற் பெரிய தகிலத்து வேண்டும்
பொருளிற் றலையிலது போல்.

எ-து. அருளிற்பெரியது-திருவருளுக்கு மேலாகிய தொரு பொருளில்லை, அஃதென்போலவென்னில், அகிலத்துவேண்டும் பொருளிற் றலையிலதுபோல் - பூமியினிடத்தான்மாக்கள் அவரவர் விரும்புபதார்த்தத்துக்கு மேலானதொருபொருளில்லாதது போல.

சி-வ-உ, ஒருவர்க் கெல்லாப்பொருள்களுள்ளுந் தாம்விரும்பிய பொருளின் மேலாயபொருளில்லாதவாறுபோலத் திருவருளின் மிக்கதாகியபொருள் உலகத்தில்லை.

இதனு லருளினது உயர்வுகூறப்பட்டது. (க)

அருளதுநின் றென்னசெய்யுமோ வென்னில்?

பெருக்க நுகர்வினை பேரொளியா யெங்கு
மருக்கனென நிற்கு மருள்.

எ-து. பெருக்கம்-சஞ்சிதமிகுதியுங் கட்டுப்படவும், நுகர்-பிராரத்துவமிகுதியும் புசிக்கவும், வினை-ஆகாமியமேறவும், பேரொளியாய்-இதுகளுக்கெல்லா மிகுந்தபிரகாசமாய். நிற்கும்-நிற்கும், எங்கும்-எவ்விடத்தும், அருள் - திருவருளானது. அதற்குவமையென்னென்னில்? அருக்கனென-ஆதித்தனுலேசகத்துக்குக் காரியப்படுவதுபோல,

நி-வ-உ. உலகத்து மக்கட்டொகுதிகள் பொருளினை யீட்டவும் துய்க்கவும் நிமித்தமாய்நின்ற சூரியனைப்போல, அருளும்உயிர்களெல்லாம் புண்ணியபாவங்களை வளர்க்கவும் அவற்றின் பயனாகிய சுகதுக்கங்களை யருந்தவும் காரணமாய்மிகுந்தவொளியாகி யெவ்விடத்தும் நிறைந்துநிற்கும்.

அருக்கனென என்றதனால், அவ்வாறு காரணமாதல் ஒருவராற் செய்துகொள்ளப்பட்ட தல்லவாம். பொதுப்பட வினையென்றதனால் புண்ணியபாவ மிரண்டுமாம். சூரியனைப்போல வோரிடத்துண்டாயகாலை யோரிடத் தின்றாயிருப்பதில்லையென்பார், எங்கு மென்றருளிச்செய்தார்.

இதனால் அருள்காரணமாதல் கூறப்பட்டது. (உ)

அருள்காரியப்படுத்த வேண்டுவதில்லை, தானே செய்துகொள்வார்களெனில்?

ஊனறியா தொன்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான,

எ-து. ஊனறியா தொன்றும்-சரீரஞ் சடமாகையால்தொன்றையுமறியமாட்டாது, உயிரறியாதொன்றும்-ஆன்மா சிற்றறிவாகையினாலே தான்தனக்கென வறிவில்லை, இவை தானறியா தாரறிவார்தான்-இந்தத் திருவருளறிந்து புசிப்பியாதபொழு தாரறிந்து புசிப்பார்.

நி-வ-உ. அசேதனங்களாகிய தத்துவங்கட்கு எஞ்ஞான்றும் அறிவுண்டாவதில்லை, உயிர்கள் யாதொன்றுந் தாங்களாய் அறியமாட்டா, ஆதலால் அந்தஅருள் தாமறிந்தறிவியாமல் உலகத்தின்கண் அறிவினைப்பெறுவார் யாவர். அருளறிந் தறிவித்தே யறியவேண்டுமென்பதாம்.

இதனாலருளிற்கு அறியவேண்டுவ தில்லையென்பாரை உயிர்கட்கறிவிந்தற்பொருட்டு வேண்டுமெனமறுத்துக்கூறப்பட்டது.

இப்படி நடத்துகின்ற வருளையான்மாக்களறியாமலிருக்கிற தெப்படியென்னில்?

பாலாழி மீனுளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழியாளு மறித்து.

எ-து. பாலாழி மீனுளும்பான்மைத்து - பாற்சமுத்திரத்திலே திரிகிறமீனனது அப்பாலைக்குடித்துப் பசிதீராமற்றனக்குக் கீழாகிய ஜந்துக்களைத்தின்கிற முறைமைபோல, அருளுயிர்கள் மாலாழியாளுமறித்து - அருட்கடலிலே யிருக்கிற வான்மாக்கள் சிவானுபோகங்களைப் புசித்து ஜநந மரணங்களைப் போக்கிக்கொள்ளாமற் சத்தாதிவிடயங்களிலே திரியும்.

நி-வ-உ. மேலாய வருளின்கட்பட்ட வுயிர்கள், அதனோடு பொருந்திநின்று பேரின்பத்தைநுகராமல் மாயாபோகமாகியமயக்கவேலையு ளாழ்ந்து அழுந்துந்தன்மை, திருப்பாற்கடலின்கண்ணவையமீன்கள், பாலைப்பருகாது, அதனுள்சிறிதாயபிராணிகளை வருந்தித் தேடியுண்ணு முறைமையினை யுடைத்து.

மீன்களும் பாலைப்பருகுமாயின், ஜந்துக்களைத்தேடியொருகாற்கிடைத்துங் கிடையாதும் உழலாமல், நின்றநிலையிலேவெண்மெனவும் பருகும், உயிர்களும் அருளினோடுகலந்து நிற்குமாயின் சிற்றின்பங்களைத்தேடி அவ்வாறுழலாமல், பேரின்பத்தினைத்தாமும் அந்நிலையிலே யிடையறாது அனுபவிக்குமென்பதாம்.

இதனு லருளோடுகூடிநின்றும் உயிர்கடுன்புறும் இழிபுகூறப்பட்டது. (அ)

அருளறிவிப்பதை யறியாததெப்படியென்னில்?

அணுக்குத் துணையறியா வாற்றேனி லந்து
முணர்வை யுணரா வுயிர்.

எ-து. அணுக்கு துணையறியா வாற்றேனிலந்தும் - ஆன்மாவி டத்திலே பொருந்தியிருக்கிற பஞ்சேந்திரியங்களான்மாவினோடே

காரியப்பட்டுவருகையிலேயும் ஆன்மாவினாலே காரியப்படுகிறோ மென்றறியாத முறைமைபோல, உணர்வை யுணராவுயிர்-உயிரிந்தஆன்மாவுந் திருவருளினாலே காரியப்படச்செய்யுந் திருவருளினாலேகாரியப்படுகிறோமென்றறியாத வுண்மையுமத்தன்மைத்து.

தி-வ-உ. தனக்குமருங்காக வுடன்வருந் துணையினைத்துணையெனக்காணாது வழிச்செல்வான்போலவும், தமக்குமுதலாய்நின்று உணர்த்துந்தன்மையறியாத இந்திரியங்கள்போலவும், உயிர்கள் தாமுந் தமக்குயிராய்நின்றுணர்த்தும் அருளினை அறியமாட்டா.

இவை துணைமையுந் தலைமையும் பற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. (௭)

அருணடத்துவிப்பதனை யறியாததெப்படி யென்னில்?

தரையை யறியா தாமே திரிவார்
புரையை யுணரா புவி.

ஏ-து. தரையையறியாது தாமேதிரிவார்புரையை-பூமியினிடத்திலே யிருக்கப்பட்ட வான்மாக்கள் பூமிதாரகமாக நடக்கச் செய்யும் பூமிதாரகத்தைமறந்து நானடந்தேனென்னு மதுபோல், உணராபுவி-பூமியினிடத்திலேயிருக்கப்பட்ட வான்மாக்களுக்குந் திருவருளினாலே தொழிற்படச்செய்யுந் திருவருளினாலே தொழிற்படுகிறோமென்றறியாத முறைமையுமித்தன்மைத்து.

தி-வ-உ. பூமியைத்தமக்கு ஆதாரமென்றறியச் செய்யாது தாமேதமக்காதாரமாகப் போக்குவரவுசெய்வாரைப்போல், அருளினைத் தமக்காதாரமென்று அறியாஉயிர்களும்,

புவியென்ப தின்னுயிர்கண்மே னின்று. (௮)

அருளைத் தேடியறிவாரோவென்னில்?

நிலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான் கெடுத்தோர்
ஞானம், தலைகெடுத்தோர் தற்கேடர்காம்.

எ-து. மலைகெடுத்தோர்-மலைமேலிருந்து மலையைத்தேடினவர்போலவும்,—மண்கெடுத்தோர் - பூமியிலேயிருந்து பூமியைத்தேடினவர் போலவும்,—வான்கெடுத்தோர் - ஆகாயத்துக்குள்ளேயிருந்து ஆகாயத்தைத் தேடினவர்போலவும்,—ஞானம் தலைகெடுத்தோர்-ஞானமாகிய வறிவைக்கெடுத்துத் தேடுவார்கள்,—தற்கேடர்தாம்-தம்மைத் தெரியாதவான்மாக்கள்.

பி-வ-உ. மலையினையிழந்தோரும், மண்ணினையிழந்தோரும், ஆகாயத்தினையிழந்தோரும், எங்கணுநிறைந்த பேரறிவினையிழந்தோரும், தானென்பதனை யிழந்தோரும், தம்மிற்று மொப்பர்.

மலை நிலம் ஆகாயம் தான் என்பனவற்றைக் கெடுத்தோர் உலகின்கணில்லை-உள்ளாராயின் அவர்போல அருளினை யிழந்தோரும் பேதையரென்பதாம்.

கண்டுத்தற்கேடரென்பது யாக்கைமேல்நின்றது. (எ)

ஞானத்தை யிழந்துதிரிவ தேதென்னில்?

வெள்ளத்து ளுவற்றி யெங்கும்விடிந்திருளாம்
கள்ளத் திறைவர் கடன்.

எ-து. வெள்ளத்துளுவற்றி-கழுத்தளவு தண்ணீரிலே போஇறவன் ஒருவிடயத்திலே யதிதப்பட்டுப்போகிறதுபோலவும்,—எங்கும்விடிந்திருளாம்-ஆதித்தனெங்கும்பிரகாசிக்கச்செய்தேயும் பிறவிக்குருடனுக்கு மிருந்த விருளாயிருந்தது போலவும்,—கள்ளத்திறையவர்கடன்-கவட்டிந்திரியங்களுக்கு முறைமையாயிருக்கிறவான்மாக்கண் முறைமையு மித்தன்மைத்து.

பி-வ-உ. நிறைந்த நறுநீரின்கண்ணேநின்றும் அதனைப்பருகாது நாவறண்டும், எவ்விடத்தும் இருள்நீங்கி விடிந்திருக்கமயங்கியுநிற்கு மடவோரது தன்மையே, தாம்நிறைந்த அருளோடுகலந்துநின்றும் அதனால்வரும் பேரின்பத்தை நுகராத வஞ்சத்தலைமையுடைய ஆன்மாக்களது முறைமை.

உயிர்க்கண்மாட் டுளதாய குறையேயன்றி அருளின் குறை யன்றென்பதாம்.

வஞ்சத்தலைமையாவது, தாமொன்றிற்குங் கருத்தா வல்ல வாயிருக்கவும் யானெனதென் றகங்கரித்தல். (அ)

அஞ்ஞானநீங்கி யறிவ தெவ்வாறெனில்?

பாப்பமைந்த கேண்மினிது பாற்கலன்மேற் பூஞை
கரப்பருந்த நாடுங் கடன்.

எ-து. பரப்பமைந்த கேண்மினிது-அருட்பொருளைக்கேட் குமிடத்துக் கரணவியாத்திகளைவிட்டு இன்பமாகக் கேண்மின். அப்படிக் கேளாமலிந்திரியங்களின் வழியிலேநின்றாற் கேட்ட பொருளும்பலியாது, சநநமரணமுநீங்காது, அதென்போலவெ ன்னில்,—பாற்கலன்மேற் பூஞை - பாற்சட்டியின்மேலிருக்கிற பூஞையானது பாலைக்குடித்துப் பசிதீராமல்,—கரப்பருந்தநா டுங்கடன்-கரப்பைத்தின்ன விறப்பைநாடுமுறைமைபோல.

நி-வ-உ. சஞ்சலமனத்தாற்படும் விஷயவினையடக்கி அருளி ன்றன்மையே யினிதாகக்கேட்டு மனங்கொள்வீராக. அதனைநா டாது சிற்றின்பங்கள் மேற்படரும் இப்புல்லறிவாண்மை, உறி யின்மேல்வைக்கும் இனிய பாற்குடத்தின் மீதிருக்கும் பூஞையா னது, சுவர்த்தலையிலோடுங் கரப்பினைத் தாவிப்பற்றி நுகரவிசா ரிக்கு முறைமையினை யொக்குமாகலான்.

பூஞையும் உறியின்கட் பாற்குடத்தின்மே லிருந்தவாறே அதனைப்பருகாதே கரப்பினைப்பற்ற விசைகொண்டுவாவுங்கால் அது கைப்படின், சிறிதின்மையில்லாத வுணவாதலே யன்றித் தாவலான் மிக்கவருத்தமுமெய்தும். கைப்படாக்கால், வருத்தத் தோடு கரப்பினையும்போக்கிப் பாற்குடத்தினையுமுடைத்துமிக்க துன்பமெய்தும். உயிர்களும் அறுதியே கூடிநின்ற அருளகத்தட ங்கிப் பேரின்பத்தினை யெய்தாது சிற்றின்பங்கண்மேற் படரு

மாயின், அதுபோல வொருகாலெய்துஞ் சிற்றின்பத்துக்கு மன மொழி மெய்களாற் றுன்பமுற்றும், அஃதெய்தாக்கால் இருமை யின்பமு மிழந்தும், மிக்க இடர்ப்படுமென்பதாம்.

உறியின்மேல்வைகும்பாற்குடமெனவும், சுவர்த்தலையிலோ டுங் கரப்பெனவும், விதித்த தநுபவம்.

இவை யைந்துபாட்டானும், அருள்துணையும் இறைமையு மாகியும் ஆதாரமாகியும் நிற்றலை யறியாதிருத்தலும், எவ்விடத் தும் இருப்பதனைக்காணாது மயங்கலும், அதனால்வரு மின்பமெ ய்தாமையும், அதன்மேற் பற்றுச்செய்யாமையுமான உயிரின்குற் றங் கூறப்பட்டன. (௬)

அமையாதார்க் கறியப்படாதோவென்னில்?

இற்றவரை யிசைந்து மேதும் பழக்கமில்லா
வெற்றுயிர்க்கு வீடு மிகை.

எ-து. இற்றவரை யிசைந்தும் சிவனுள்ளகாலந் தொடங்கி யான்மா திருவடியைப் பெறுமளவும், திருவருளுபகரித்துவரச் சேயுந் திருவருளுடனே,—ஏதும் பழக்கமில்லா - சற்று முறவில் லாத,—வெற்றுயிர்க்கு - அளவில்லாதவான்மாக்களுக்கு,—வீடுமி கை-மோக்ஷமொன்றுமே கிட்டாது. இருவினையொப்பு வந்தல்லது ஞானம் பிரவேசியாதென்பது கருத்து.

இ-வ-உ. அநாதியேதொடங்கி இன்றளவும் அருளோடிரண் டறக்கலந்துநின்றும், சிறிதும் அதிற்றோய்ந்த பழமைதோற்றுத லில்லாத வெறியவுயிர்கட்கு வீடுசேர்தலென்பதுமிகுதி. தகாதெ ன்பதாம்.

வெறுமை, பயன்கொளாமை. பழமை தோற்றுதல், உலக வெறுப்புத் தோன்றுதல்.

இதனுல் அருளோடு கலந்துநின்றும் வீடுகூடாவினையாதவுயிரி லைப் பழித்துக்கூறப்பட்டது. (௭)

அருளதுநிலை முற்றிற்று.



## ௫-வது அருளுருநிலை.

அஃதாவது, ஞானவடிவாகிய குரவனதுதன்மை. அருளது நிலைகூறி, அருளாகும் வடிவினது நிலைகூறுதலின், மேலையதிகா ரத்தினோடு இதற்கியைபுடைத் தெனக்கொள்க.

இருவினையொப்பி லெவர்வருவா ரென்னில்?

அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாகி நீங்காத கோ.

எ-து. அறியாமையுண்ணின் றளித்ததே-அறியாமையாகிய பெத்தகாலத்திலே, அறிவுக்கறிவாய்நின்று இரட்சித்த திருவடி தானே,—காணுங்குறியாகி-கரசரணாதிகளுடனே குருவாயெழுந் தருளிவந்தது. ஆனாலுள்ளேயில்லையோவென்னில்? நீங்காதகோ-உள்ளும்புறம்பும் விட்டுநீங்காத ஞானராசாவாகிய குரு.

நி-வ-உ. தோன்றாத்துணையாய்க்கலந்து நின்று காத்து நடத்தின அருளே, கண்ணாற் காணப்படும் வடிவினை யுடையதாய் விட்டு நீங்காதகுரிசில்.

இதனால் அருள்குருவடிவுகொண்டுவந்தமைகூறப்பட்டது.

அவரே குருவாகவரவேணுமோ, படித்திருக்கிற வித்துவான்களாகாதோ வென்னில்?

அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான்.

எ-து. அகத்துறுநோய்க்குள்ளினரன்றி - ஒருவனுக்கந்தர மானவிடத்திலே வந்தவியாதியை அவனுக் கந்தரங்கமானபே ரறிந்துநிற்பது,—அதனைச் சகத்தவருங் காண்பாரோதான்-அந் தவாணவமலமாகிய வியாதியைச் சகத்திலேயுள்ள காரியம்போ லக் குருவாலே நீங்கப்போகாது; சிவனே யாசாரியமூர்த்தமாயெ ழுந்தருளிவந்து நீக்கினால் நீங்குமல்லது.

றி-வ-உ. ஓர்இல்லின்கண் ஒருவர்கொண்டபிணியை அவ்வி ல்லின்கண் வாழ்வார் அறிவதன்றி, அதனைச் சேய்மைக்கண்ண ராகிய உலகத்தார் அறிய வல்லரோதாம்.

தான்என்பது அசைநிலை, ஓகாரம் எதிர்மறை.

இதனால் இங்ஙனம் வடிவுகோடற்கு அருளாதல் வேண்டு மோவென்னில் ஐயத்தினை யகற்றி வலியுறுத்தப்பட்டது. (உ)

இப்படிவரப்பட்ட ஞானசாரியனை யெல்லாராலு மறியலா மோவென்னில்?

அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளா யறிவார் புவி.

எ-து. அருளாலகையா லருள்புரியவந்த-அருட்பிரகாசியாந் முறைமையினாலே யருளைக் கொடுக்கவந்த,—பொருளாரறிவார் புவி-இப்படிக்கொத்த ஞானசாரியனைப் பூமியிலுள்ளவான்மாக்க ளறியமாட்டார்கள்.

றி-வ-உ. படைப்பு நிலை ஈறு மறைப்பு என்னும் நான்கினை யுந் தோன்றாதுசெய்தவாறுபோல, அருளென்னுந் தொழிலினை யுந் தான் பண்ணுததுபோலப் பண்ணும்படி, மானுடவடிவென் றனும்அங்கியால் மறைத்துக்கொடுவந்த உண்மைப்பொருளேஇக் குருவடிவென்பதனை அறியமாட்டாதுஉலகு.

தம்போலொரு மானிடமாக நினைக்குமென்பதாம். (௩)

உத்தமரல்லாதா ரறியப்படாததெந்தவேதுவினாலென்னில்?

பொய்யி ருண்ட சிந்தைப் பொறியிலார் போதமா
மெய்யிரண்டுங் காணார் மிக.

எ-து. பொய்யிருண்டசிந்தைப் பொறியிலார்-அஞ்ஞானமி குதியாலே பொருந்தப்பட்ட சித்தத்தையுடையவர்கள் பஞ்சேந் திரியங்களிலே திரியப்பட்ட வான்மாக்கள்,—போதமா மெய்யி

ரண்டுங் காணார்மிக-அறிவுக்கறிவாயிருக்கிற திருவருளையும், அத்தத் திருவருடானே திருமேனியாய்வந்தவாசாரியனையும், ஆகவிரண்டுவிதத்தையு மிகுதியுற் றறியமாட்டார்கள்.

நி-வ-உ. நிலையாத காய வாழ்க்கையினையும், ஆணவமலத்தால் மறைந்தவுணர்வினையும் உடையராய், ஞானமென்னுஞ் செல்வத்தினையும் எய்துதலில்லாதார், அறிவுமயமாகிய அருளும், அவ்வருளான் ஆகியதேசிகவடிவும் என்னு முண்மைப்பொருளிரண்டினையும் சிறிதுமறியமாட்டார்.

இத்தன்மையவாகிய ஆசாரியவடிவினை, அருள்கொண்டவடிவமாக வுணராராகவே; நின்மலமாய், அகண்டமாய், சின்மயமாய், ஒழிவறநிறைந்த அவ்வருளினையும் உணரமாட்டாரென்பது கருத்து. (௪)

அவர் திருமேனியை யென்போல வறியவேணுமோ வென்னில்?

பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்ததற்காம்
போர்வையெனக் காணார் புவி.

எ-து. பார்வையெனமாக்களை-மானைக்காட்டி மானைப்பிடிப்பவர்போல வான்மாக்களை,—பற்றிப் பிடித்ததற்காம்-அவர்சத்திபொருத்திப் பிடிப்பட்டவற்காம்,—போர்வையெனக் காணார் புவி-இப்படி நம்மையிரக்ஷிக்க நமக்காகவந்த திருமேனியென்று பூமியிலுள்ள வான்மாக்கள் அறியமாட்டார்கள்.

நி-வ-உ. விலங்குகள் பறவைகளைப் பிடித்தற்கு அவ்வவற்றின் வடிவாற்செய்த தீவகம்போல, மிக்கதொரு வடிவங்கண்டு அஞ்சிவெருளாது. மனிதனைத் தன்வயத்தாக்கிக் கோடற்பொருட்டு, அருள்போர்த்துக்கொண்ட மானுடவுருவாகிய குருவடிவினைப் போர்வையாக அறியமாட்டாவாம் இவ்வுலகு.

இவை மூன்றுபாட்டாலும் அகளமாய் நிறைந்த அருளே குருவுருவுதரித்துவந்ததென்பதனை அறியாதார் இழிபு கூறப்பட்டது. (௫)

பேரரையாக வெல்லாரையும் தற்சொரூபமாக்க வொண்ணாதோவென்னில்?

எமக்கெ னெவனுங் கெவைதெரியு மவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.

எ-து- எமக்கென்-போகாது,—எவனுக் கெவை தெரியும்-பக்குவமல்லாத வான்மாக்களுக்கு எத்தனைப் புசித்தாலுந் தெரியாது,—அவ்வத்தமக்கவனை வேண்ட-பக்குவப்பட்ட வான்மாக்களந்தவாசாரியனை வழிபட்டுக்கேட்க,—தவிர் - அப்போது மலமாயாதி கன்மங்கணீங்கும்,

நி-வ-உ. நீ குருவுண்மை கொண்டமையால் எமக்கு வரும் பயனென்னே? யாவனொருவனுக்கு யாவை சிலநூற்பொருள்கள் குரவனையின்றி யுணர முன்னேடு பின்மலைவறத்தோன்றும், அந்நூற்பொருள்கள் அவனைத் தமக்குக் குரவனாக அவாவிநிற்கும் பொழுது இம்மறுதலையினை ஒழிவாயாக.

குருவுண்மை கொள்ளாயாயின் என்பதெஃகிநின்றது,

இதனால் யாதொரு நூற்பொருள்களுங் குரவனையின்றியுணரப்படாவென்று கூறப்பட்டது. (௬)

திருவருளறிவுக்கறிவாயிருக்கிறது போதாதோ குருவாய்வரவேணுமோவென்னில்?

விடநகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்
கடனிவிருள் போவதெவன் கண்.

எ-து. விடம்-ஒருவனை விடந்தீண்டித் தலைமண்டைக்கொண்டு கிடக்கச்செய்தே,—நகுல மேவினும் - கிரியைக் கொண்டு

வந்து கழுத்திலேகட்டினாலும் விட்டுநீங்காது. பின்னை நீங்குகிற தெப்படியென்னில்?—மெய்ப்பாவகனின் மீளும்-உண்மையாகிய பிடாரகன்வந்து தன்னையுங் கிரியாகப்பாவித்து அவன்கிரியாகப் பாவிக்கவே விட்டுநீங்கும்;—கடன்-இந்த முறைமைபோல வாசாரியனுஞ் சிவசொரூபமாயிருந்து சீடனையுஞ் சிவசொரூபமாக ஞானக்கண்ணினாலே பார்க்கவே.—இருள்போவ தெவன்கண்-அந்தகாரமலமாயாதிகன்மங்களெங்கும், பின்னையாராலேநீங்கும்.

கி-வ-உ. விடமானது கிரி தானேவந்து தீண்டினு மீளாது, அதன்வடிவினைப் பாவிப்பா னொருவனால் மீளுமாறு போலவே, இவனுடைய திருநோக்கினால் ஆணவவிருள்நீங்கு முனக்கு.

இறைவன் அருளியோ உயிரோடுகலந்துநிற்பினும் குருவுருக்கொடு வந்தல்லது பாசம் நீங்காதென்பதாயிற்று. இது சகலரைக்குறித்து நின்றது.

இதனால் ஆசாரியனால் பாசம்நீங்கவேண்டுமென்பது கூறப்பட்டது. (எ)

இவர் குருமூர்த்தமா யெழுந்தருளிவந்து இரட்சிப்பது ஒருவகைக்கோவென்னில்?

அகலத் தருமருளை யாக்கும் வினைநீக்குஞ்
சகலர்க்கு வந்தருளுந் தான்.

எ-து. அகலத்தருமருளை யாக்கும்-விஞ்ஞானகலரிற் பக்குவர்க்கு அறிவிலே ஞானத்தை யுதிப்பிப்பன். ஆணவமலத்தை நீங்குவன்,—வினைநீக்கும்-பிரளயாகலரிற் பக்குவர்க்குஅவர்களைப்போல மானும் மழுவுஞ் சதுர்ப்புயமுங் காளகண்டமு மூன்று நேத்திரமுமாக எழுந்தருளிவந்து ஆணவமலத்தை நீக்கிச்சிவஞானத்தைப் பிரகாசிப்பிப்பன்,—சகலர்க்கு வந்தருளுந்தான்-சகலரிற்பக்குவர்க்கு அறுவகைத் திட்சையிலேயு மும்மலத்தையு நீக்கிக்கிரமத்திலே சிவஞானத்தைப் பிரகாசிப்பிப்பன் கர்த்தா.

## கூஅ திருவருட்பயன் மூலமும் உரையும்.

கி-வ-உ. கலையினின்றும்நீங்கின விஞ்ஞானகலர்க்கும்பிரளயாகலர்க்கும் நிராதாரமாய்நின்று அருளைவிளக்கும். கன்மமலச் சேதனம்பண்ணுதற்குப் பக்குவராகிய சகலர்க்குங்குருவுருவினையாதாரமாகக் கொண்டவர்போலத் தானேவந் தனுக்கிரகம்பண்ணும். அவ்வா றருள்புரிதல் சகலர்க்குங்கூடாதென்பதாம்.

பிரளயாகலர்க்குக் கலைநீங்கலாவது, அதன்வயத்தாகாதிருத்தல். குருவுருபு விகாரத்தால்தொக்கது. முதலிருவர்க்கு "நிராதாரமாகிக் கழையிலருட்பரந்துவிதா சந்திநிபாதத்தால்" என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனால் அருள் யானிடச்சட்டை சாத்திவருதற்குக் காரணங்கூறப்பட்டது. (அ)

குரு வாராம லாகாதோவென்னில்?

ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின்.

எ-து. ஆரறிவார்-ஆரறிந்து மோக்ஷமடையப்போகிறார்,—எல்லாமகன்ற நெறியருளும்-முப்பத்தாறு கருவிகளும் நீங்கும்படிபண்ணிச் சாயுச்சியமான வீட்டைக்கொடுக்கப் பண்ணின,—பேரறிவான் வாராதபின் - மகத்தாகிய சிவஞானத்தை யுடைய சிவன் வாராதபோது.

கி-வ-உ. மந்திரமுதல் கலையீருகிய மூவிரண்டு அத்துவாவுங்கடந்த வீட்டுநெறியினை வெளிப்படுத்தும் நிறைந்த ஞானத்தினையுடைய இறைவனே, குருவுருக்கொண்டு வாராதவிடத்து, அதனை அறியவல்லார்யார். ஒருவருமில்லையென்பதாம்.

இதனால்நிறைந்த அறிவனாகிய இறைவனே உருக்கொடுவரினல்லது உண்மையையுணர்தல்கூடாதென்பதுகூறப்பட்டது.

இவர்வேறுமுத்தராக வரவேணுமோ என்னறிவிலே யிருக்கிறது போதாதோ வென்னில்?

ஞான மிவனொழிய நண்ணியிடுநற்கலநற்
பானு வொழியப் படின்.

எ-து. ஞானமிவனொழிய நண்ணிபிடும்-இவன் ஞானாசாரி யனுசு வாராமல் ஞானம்பிரகாசிக்கும்,—நற்கல நற்பானுவொழி யப்படின்-நல்ல சூரியகாந்தக் கல்லினிடத்திலே யாதித்தனில் லாம லக்கினியுண்டாகின்.

இவ்விரண்டு மப்படியாகா தென்பதுகருத்து.

வி-வ-உ. அருள்வடிவாகிய குரவனை யன்றி யொருவற்கு ஞானமுண்டாதல் கூடும். ஆதித்தனாலன்றி மாசிலாச் சூரியகாந் தக்கல்லினிடத்து நெருப்புத் தோன்றுமாயின். இரண்டு மில்லை யென்பதாம்.

இதனால் திருவடிஞானம் குரவனையின்றியமையாச் சிறப்பி ற்றென மேலதுவலியுறுத்தப்பட்டது. (௰)

அருளுருநிலை முற்றிற்று.

---

## ௯-வது அறியுநெறி.

---

அஃதாவது, உண்மைப்பொருளையுணரு முறைமை. அரு ளுருநிலைகூறி அதனாலறியும்பொருளுண்மைகூறுதலின், மேலை யதிகாரத்தினோடு இதற்கியை புண்மையறிக.

அவனெப்போது குருவாவானென்னில்?

நீடு மிருவினைக ணேராக நேராதல்
கூடுமிறைசத்தி கொளல்.

எ-து. நீடு மிருவினைகள்-மிகுத்த புண்ணியபாவங்களிரண் டும்,—நேராக நேராதல்-துலையொத்தவிடத்து,—கூடுமிறை சத் திகொளல்-கத்தா திருமேனிகொள்வர், அப்போ சத்திபதியும்.

தி-வ-உ. ஒன்றையொன்றொவ்வாது மிக்குவளர்ந்து வரும் புண்ணியபாவங்களிரண்டும் தம்மிலொப்பாக வரும் பருவத்திலேயுண்டாகும், சிவனுடைய சத்திபதிதல்.

நேராக,நேராதல், ஓர்புண்ணியத்துக்கோர்பாவமோர்வகையாநேரொத்திருத்தலாம். அதுவன்றி வாக்கு மனங் காயமென்னு மூவகையா லியற்றப்பட்ட புண்ணியங்கள்முழுவது மோர் பங்கும், பாவங்கள்முழுவது மோர்பங்குமாகப், பொன்னும் இரும்பும் கன்மத்தாற்றுலையொக்கத்தூங்குதல்போலப், பலத்தாற்சமனுதல். சத்தி பதிதலாவது, நிலையாதவியல்பினை யுடையவுலகநடையினையஞ்சி வீட்டுநெறியினை விரும்பும்வண்ணம் உயிர்களதுணர்வினைத் திருந்தச்செய்தல். ஒன்றையொன்றேற்றத்தாழ்வுபடின் அவையவை யிகல்செய்திழுக்குமென்பதாம்.

இதனானுண்மை வுணர்தற்கேதுவான சத்திபதிவு மெல்லை கூறப்பட்டது. (க)

கத்தா திருமேனிகொண்டுவந் தென்னத்தை யறிவிப்பானில்?

ஏக னனேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறே நியில்.

எ-து. ஏகன்-கத்தாவும்,—அனேகன்-ஆன்மாவும்,—இருள் ஆணவமலமும்,—கருமம்-கன்மமலமும்,— மாயையிரண்டு-சுத்தமாயை யசுத்த மாயையும்,—ஆகவிவை - ஆகவிந்த வாறுபொருளும்,—அநாதியில்-அநாதியிலே யுண்டானதென் றறிவித்தார்.

தி-வ-உ. ஒருவனாகிய இறைவனும், அளவிலவாகிய வுயிர்களும்; இருள்வடிவாகிய ஆணவமலமும், கன்மமலமும், சுத்த மசுத்தமென்னு மிருவகை மாயைகளுமாகிய இப்பொருள்கள்ஆறும் அநாதியாகிய பொருள்கள்.

அனேகன் என்பதில் ஈற்றுமகரம் னகரமாய்த்திரிந்து நின்றது. இவையாறுமென அஃறிணை வாசகங்கொண்டு மிகவினால் முடிந்த திணைவழுவமைதி. ஆறுமென்னு முற்றும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

இதனால் நித்தியப்பொருள்களிவையெனத் தொகுத்துக்கூறப்பட்டன. (உ)

அறுதியாகி லாறுபொருளினு மறிவ தேதெனில்?

செய்வானுஞ்செய்வினையுஞ் சேர்பயனுஞ்சேர்ப்பவனு
முய்வா னுளனென் றுணர்.

எ-து. செய்வானும்-கன்மத்தைச் செய்யப்பட்ட வான்மாவும்,—செய்வினையும் - செய்யப்பட்ட புண்ணியபாவமும்,—சேர்பயனும்-புண்ணியபாவத்துக் கேதுவாகிய சுகதுக்கமும்,—சேர்ப்பவனும்-இந்தக் கன்மத்தைக்கூட்டிப் புசிப்பிக்கப்பட்ட கத்தாவும்,—உய்வானுளனென்றுணர்-இஃதெல்லாமறிந்து பிழைக்கிறவனான்மா.

சி-வ-உ. புண்ணிய பாவங்களைப் பண்ணும்புருடனும்,அவனாற் செய்யப்படும் வினைகளும், அவற்றின்பயனாகியஇன்பதுன்பங்களும், அவற்றைக் கூட்டியருத்துமிறைவனு மென்னு மிந்நான்குதிறத்தினையுடையனாகவுன்னையறிவாயாக. மாணவகனே! நீகதிசேர்தற்பொருட்டு.

இவை யுணராதிருக்கவே யானெனதென்னுஞ் செருக்கமுற்று பிறவித்துன்ப முறுமென்பதாம். உடையனாதல் இருவினைகளைச்செய் திறைவனா லவற்றின்பயனை நுகர்தற்குத் தானுரியனாதல். (ங)

உய்வான் றனையறிவதேதெனில்?

ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூமொருவர்
தானுணர்வோ டொன்றாந் தாம்.

எ-து. ஊனுயிரால்வாழு மொருமைத்தே-சரீரமானது ஆன்மாவினாலே யொருபடித்தாய் சீவிக்கிற முறைமைபோல்,—ஊனுடயிர் - இந்தச் சரீரத்தேயிருக்கிற வான்மாவும்,—தானுணர்வோடொன்றாந்தரம்-இந்தத் திருவருளினாலே சீவித்து நிற்கிறதுமித்தன்மைத்து.

நி-வு-உ. உடம்பானது உயிரோடுகூடிப்பிரிப்பின்றிநடைபெறு மொற்றுமையினை யுடைத்து. அவ்வுடம்போடுயிர்கணிறைந்தஞானத்தோடுகூடி யொன்றுபட்டு வேறறநிலைபெறுந் தகுதியன. உடலகத்துயிர்போலக் கலந்துநின்றுநடத்துமென்பதாம்.

உடம்பென்ற பொதுவகையால் ஐவகையுடம்பு மடங்கும் அவையடங்கவே நிலமுதல் நாதமீறாகிய தத்துவமெல்லா மடங்குமெனக்கொள்க. (ச)

அருளாற் காரியப்படுத லெப்படியென்னில்?

**தன்னிறமும் பன்னிறமுந் தானாங்கற் றன்மைதரும்**
**பொன்னிறம்போன் மன்னிறமிப் பூ.**

எ-து. தன்னிறமும்-படிகந் தன்னுடையபிரகாசத்தையும்,—பன்னிறமும்-பஞ்ச வன்னங்களினுடைய விளக்கத்தையும்,—தானாங்கற் றன்மைதரும்பொன்னிறம்போல்-இவ்விரண்டையுங் கூட்டிக் காரியப்படுத்தப்பட்ட வாதித்தப் பிரகாசத்தைப்போல்,—மன்னிறமிப்பூ-கர்த்தாவினுடைய திருவருளுஞ் சித்துக்கறிவும் சடத்துப்பிரேரகமாயிருக்கிறது மித்தன்மைத்து.

நி-வ-உ. அடுத்த பலவன்னங்களையுங் கவர்தலும், அவையடுத்திருக்கினுந் தன்னிறமேகாட்டி நிற்றலுமாகிய படிகத்தினது தன்மை யிரண்டிற்கும் தான் காரணமாகிநின்று பண்ணுஞ்சூரியன்கிரணம்போலாம், இவ்வுலகிற்கு இறைவனது சுடராகிய ஞானசத்தி.

கட்டுவீடென்னு மிரண்டிற்குந் தானொன்றே காரணமென்பதாம்.

இவை மூன்றுபாட்டானும் இறைவனுலகினை நடத்துமாறு கூறப்பட்டது. (௫)

அருளாற்காணவேண்டுவதில்லை நானே காண்பனென்னில்?

கண்டொல்லைகாணுநெறி கண்ணுயிர்நாப்பணொளி
யுண்டில்லை யல்லா தொளி,

எ-து. கண் டொல்லை காணுநெறி-சீக்கிரமதிலே காணப்பட்டது,—கண்-கண்ணுலு மொளிவிளக்கானது கண்ணுக்கும்பதார்த்தத்துக்கு நடுவே பிரகாசித்தாற் கண்ணானதுபதார்த்தத்தைக் காணும்,—உயிர் நாப்பணொளியுண்டு-ஆன்மாவுக்கு நேயத்துக்கு நடுவே யருள்பிரகாசித்தா லான்மாநேயத்தைப்பெறுகிறதுண்டு,—இல்லையல்லாதொளி-ஒளியாகிய திருவருள்பிரகாசியாதபோது நேயமே விளங்காது.

நி-வ-உ. நினைவினையுடைய வுயிரினது நடுவாக்ஞானவொளிக்கு நிலையுண்டாதல் வேண்டுமென்றுயின் வாயில்வழியாற் புலன்களை யுற்றுப்பார்த்து விரைவிலுணருமுறைமையில்லை.

நடுவாகநிற்றல் கலந்துநிற்றல். இதனால் ஞானமுன்னிற்பினல்லது அறிதல் கூடாதென்பதோ ரநுபவவகையால்விளங்கக் கூறப்பட்டது.

இது குரவனு லன்றி யுணர்கொண் டுணர்த லரிதெனக் கொள்க. (௬)

அரனருளாற் காணுஞ்செய லென்போல வென்னில்?

புன்செயலி னோடும் புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி. [லை

எ-து. புன்செயலினோடும் புலன்செயல்போல்-ஆன்மா பஞ்சேந்திரியங்களினாலே யொரு விடயத்தை யறிகிற முறைமைபோல,—நின்செயலை-உன்னுடைய செயலையும்,—மன்செயலதா

சமதி-நிலைபெற்ற திருவருளினாலே காரியப்படுகிறோமென் றறி-வாயாக.

தி-வ-உ. புருடனது சிறுதொழிலின்வழியே திரிபின்றி நடக்குமிந்திரியங்களது செயல்போல, மாணவகனே; நின்னுடைய செய்தியையும் இறைவனது கிரியாசத்திவழியே யவ்வாறு நடப்பதாகக் கருதுவாயாக, அவ்வாறு கருதவே வினைத்தொடர்பின்றிப் பிறவிநீங்கி நிற்பனென்பதாம்.

இதனு லிறைவனது செயல்வழி நிற்றல்கூறப்பட்டது.

அருளாற் செயற்பட்டறிவ தேதென்னில்?

ஓராதே யொன்றையுமுற் றுன்றாதே நீமுந்திப்
பாராதே பார்த்தனைப் பார்.

எ-து ஓராதே-ஒன்றையும் விசாரியாதே கேவலத்திலும், ஒன்றையுமுற் றுன்றாதே-சகலத்திலும் நீ யொன்றையு நினையாதிருக்கச் செய்தேயிரு;—நீ முந்திப்பாராதே சுத்தத்திலு நீ யதுவிதுவென்று சுட்டிப்பாராதே,—பார்த்ததனைப்பார்-இந்த மூன்றவத்தையிலு மறுவதுவாக வருவிக்கப்பட்ட திருவருளையேகாண்பாயாக.

தி-வ-உ. ஞான மெய்வண்ண மிருக்குமோவென் றாராயாமல், அதனையும் விடயங்கள்போலக்குறிக்கொண் டென்றிநினையாமல், நீயாகமுன்சென்று மேற்கொண்டு காண்டலுஞ்செய்யாமல், உன்னைக்கண்ட ஞானத்தினைக் காண்பாயாக.

இவ்வா றசைவின்றி நிற்கவே அவ்வகண்டமாகிய ஞானந்தானே தோன்றுமென்பது கருத்து. (அ)

அப்படித் திருவருளை யெதிரிட்டுப் பார்க்கிலெனக்குச் சந்தோஷம் வருமேயென்னில்?

களியே மிகுபுல னக்கருதி ஞான
வொளியே யொளியா வொளி.

எ-து. களியே மிருபுலனுக் கருதி-அந்தச்சந்தோஷமேமிகு ந்தவிடயமாக நினைத்து,—ஞானவொளியே யொளியாயொளி - ஞானமாகிய பிரகாசமே மறைவாகவொளித்து நிற்பாயாக.

வி-வ-உ. இத்தன்மையவாகிய ஞானத்தினைக் காணப்பெற் றமையால், வருமகிழ்ச்சியைப் பெரியவிடயமாக நினைந்து ஞா னமாகிய வொளியன்றி வேறனக்கோரொளியின்றாகும்படி அத னுட் புக்குக்கரந்து நிற்பாயாக.

கரந்துநிற்றல் விகற்பமறக் கூடிநிற்றல்.

என்றுமிவை யிழந்துநிற்கிற தெப்படியென்னில்?

கண்டபடி யேகண்டு காணாமை காணாமை
கொண்டபடி யேகொண் டிரு.

எ-து. கண்டபடியே கண்டு - திருவருளைத் தரிசித்தபடியே தரிசித்து,—காணாமை காணாமை - சகல கேவல நீங்கினபடியே நீங்கி,—கொண்டபடியே கொண்டிரு-திருவருளுன்னைக் கருத்து க்கொண்டபடியேநீயுமசைவற நிற்பாயாக.

வி-வ-உ. ஞானமான துனக்கு யாதொருபடியே வெளிப்ப ட்டது, அப்படியே நீயும் கண் டறியாமையாகிய அதீதாவத்தை வந்துதோன்றாமல், யாதொருபடி யுன்னை விழுங்கிற் றப்படியே நீயும் விழுங்கக்கொடுத்திருப்பாயாக.

இம்மூன்றுபாட்டானு ஞானத்தினைக்காணுமாறும், கண்டா லதனுட்கலக்குமாறும், அவ்வழித் தன்னை அதன் வயத்தனுக்குமா றுங்கூறப்பட்டன. மாணவகனேயென்ப திம்மூன்றிற்குங் கூட் டியுரைக்கப்பட்டது. (௰)

அறிவுநெறி முற்றிற்று.

# எ-வது உயிர்விளக்கம்.

அஃதாவது ஆன்மசுத்தியென்னும்படி அறியுநெறியிற் கூறி யவாற்றான் அறிந்தபடி நின்று யானென தென்னுஞ் செருக்கறுத் தல் கூறினமையின், மேலையதிகாரத்தினோ டிதற்கியைபுடைத் தெனக்கொள்க.

கொண்டபடி கொள்வ தெக்காலமென்னில்?

தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோற்
றானதுவாய் நிற்குந் தாம்.

எ-து. தூநிழலார் தற்காருஞ்சொல்லார் பவுத்திரமாகியதன் னுடையநிழல் ஆதித்தன் மத்தியத்திலேவந்தாற் றனக்குள்ளேய டங்கிநிற்கிறதற்கு யாருஞ் சொல்லவேண்டியதில்லை,—தொகுமி துபோல்-இந்த முறைமைபோல,—தானதுவாய் நிற்குந் தாம் - இருவினை யொப்புவந்தா லான்மா திருவருடானாய் நிற்கிறதற்கு மியாருஞ் சொல்லவேண்டுவதில்லை.

நி-வ-உ. கோடையான் வெதும்பினோன் குளிர்ந்த நிழலை யடைதற்கு அடைதியென வொருவருஞ் சொல்லார், தானேவி ரைவினடையுந் தன்மையினை யொக்கும்; மாயாவிகார வெம்மை யான் வருந்தினோனொருவன் தானவ்வருளினை யடைந்ததுவாய் நிற்குமுறைமை.

உலகவெறுப்பினல்லது அருளினையடைதல் கூடாதென்ப தாம்.

இதனா லருளினையடைதற்கு ஏதுகூறப்பட்டது. (௬)

எல்லார்க்குமொக்க விந்தத் திருவரு ளில்லாத தென்னெ னில்?

தித்திக்கும் பாலுங் கைக்குந் திருந்திநோய்ப்
பித்தத்தின் றான்றவிர்ந்த பின்.

எ-து. தித்திக்கும் பாலுங்கைக்கும்-பித்தமேலிட்டபொழுது தித்திக்கிறபாலுங் கசக்கும்,—திருந்திடு நாப்பித்தத்திற்றுன்றவிர்ந்த பின்-திருத்தமாகவுறுகிற நாவிலே பித்தநீங்கினபோது கசந்தபாலுந் தித்திக்கும். அதுபோல வாணவமல மேலீட்டினாலே குருலிங்கசங்கமத்திலே யாசையறப்பண்ணும், அந்த வாணவமலநீங்கினபோது குருலிங்கசங்கமத்திலே விருப்பமுண்டாம்.

தி-வ-உ. குற்றந்தீர்ந்த நாவானது பித்தநோயினின்றுந்தான் நீங்கினபின்னர் முன்கைத்தபாலும் தித்திக்கும் அதனைத்தானுங் கண்டறியும்.

மலவிருள் தீர்ந்தபின்னர் முன்னந்திரோபவித்துநின்றமருளும் அருள்வடிவாகி வெளிப்படும், அதனையுயிர்களுங்காணுமென்பதுபொருள். மாசுநீரின் விளங்கித் தோன்றுந் தன்மையினையுடையது உயிரென்பதற்கு உவமித்து இதனைத்திருந்திடு நாவென்றருளிச்செய்தார். இதுவும் ஒட்டென்னுமலங்காரம்.

இதனாலருள்வெளிப்படுங் காலமும், உயிர் அதனைத் திருந்திக்காணுங்காலமு மொன்றென்பது கூறப்பட்டது. (உ)

அறியாமைநீங்க வறிந்தவனானென்னில்?

காண்பா ரொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வீண்பாவ மெந்நாள் விழும்.

எ-து. காண்பா ரொளியிருளிற் காட்டிடவும்-காணப்பட்டவான்மாவுக்குத் திருவருளான தாணவமலத்தைநீக்கிஞேயத்தைக் காட்டச்செய்தேயும்,—தான்கண்ட வீண்பாவ மெந்நாள்விழும்-நான்கண்டேனென்கிற பாவமெந்தச்சமயத்திலே தள்ளுமோ?

தி-வ-உ. ஒளிவடிவாகிய ஞானம், தன்னைக்கண்டறிதற்பொருட்டு மலவிருளிலே மருண்டுகிடக்கின்ற வுயிர்கட்குத் தன்னை வெளிப்படுத்தவும், அதனைநாடாது உயிர் தானே காண்பதாகக்

கண்டமையாலே வழிதேவரும் பாவமென்னபயனைச் செய்ததாய் வந்துமுற்றும்.

ஓர் புலனுணர்வான் வரும் பாவம்போலாது வாளாவருத லின் வீண்பாவமென் றருளிச்செய்தார்.

பித்தம் பாலானன்றி மற்றொன்றானும் தீராவாறுபோல,மல மும் அருளாலன்றிப் பிறிதொன்றால்தீராதென்பதூஉம், அருள் மறைந்துநில்லாது வெளிப்பட்டுநிற்பினும் அந்நாக்குச் சுவைகா ண்டல்போலத் தானே காண்டல் கூடாதென்பதூஉம், இதனுட் கொண்டுகிடந்தவாறு கண்டுகொள்க.

இதனால் அருளைமுன்கொண்டு காணுக்கால் குற்றமுடைத் தென்பது கூறப்பட்டது. (ரு)

தெளிந்தார் செயலுந் தெளியாதார் செயலு மெப்படியோ வென்னில்?

ஒளியுமிருளு மொருமைத்துப் பண்மை
தெளிவு தெளியார் செயல்.

எ-து. ஒளியுமிருளு மொருமைத்து படலமுடைய கண்ணு க்குஆதித்தப்பிரகாசமும் பூதவிருளு மொருபடித்து,—பண்மை- இந்த முறைமைபோல,—தெளிவு தெளியார்செயல் - மலமாயா கன்ம மேலிட்டபேர்க்குப் பாசமும் பதியுமொரு படித்தாய் விள ங்காநிற்கும்.

நி-வ-உ. பலவாய பொருள்கடம்பன்மை தோன்றாது ஒருப டித்தாயிருத்தல் ஒளியின்கண்ணும் இருளின்கண்ணு மொக்கத் தெளிந்துநிற்றலும் மருண்டுநிற்றலுமாய செயல்கள் அவ்விடத் துப்பேதம்.

இதனை லருளோடுகூடி நிற்றல் ஒருவகையாலிருளோடுகூடி நிற்றல்போலுமென்பது கூறப்பட்டது. பிறிதொன்றுந் தோன் றாதென்பதுகருத்து. (சு

தெளிந்தறிந்து கூடிய தெல்லார்க்குந்தெரியுமோவென்னில்?

> கிடைக்கத் தருமோநற் கேண்மையார்க் கல்லா
> லெடுத்துச் சுமப்பானை யின்று.

எ-து. நற்கேண்மையார்க்கல்லால்-நல்லகேள்வியினையுடையநாதாக்களுக்கேயல்லாமல்,—எடுத்துச் சுமப்பானை - எல்லாப் பதார்த்தத்தையுஞ் சுமந்தச் சுமக்கிற சிவனை,—இன்று-இப்பொழுது,—கிடைக்கத்தருமே கிடைக்குமே கிடையாதோ பிவனை.

கி-வ-உ. நல்ல கேளிரை யுடையார்க்குத் தம்மேல் பாழுழுதுஞ் சுமத்தச் சுமக்கு மொருவனை யிப்பொழுதே கிட்டுதல் கூடுமோ.

நற்கேண்மையென் றருளிச்செய்தார் அருளோடு கூடியதென்பதற்கு.

இதனால் அருளாகுங் கேண்மையினையுடையார்க்குத்தன்னையடைந்தார் வினைகளெல்லாம் அவரைத்தொடராதுதன்செயலாகக்கொள்ளுமேயம்வெளிப்படுதெல்லிதென்பதுகூறப்பட்டது.

"சிவனு மிவன்செய்தி யெல்லாமென்செய்தியென்றுஞ் செய்ததெனக் கிவனுக்குச்செய்ததென்றும், பவமகலவுடனாகி நின்று கொள்வன் பரிவார் பாதகத்தைச்செய்திடினும் பணியாக்கிவிடுமே" என்றருளிச் செய்தவாறு காண்க, (௩)

எடுக்கிறவனொருத்தன் சுமக்கிறவனொருத்தனோ, எல்லாம் பிரமந்தானே யென்னில்?

> வஞ்சமுடனொருவன் வைத்த நிதிகவரந்
> துஞ்சினையோ போயினையோ சொல்.

எ-து. வஞ்சமுடனொருவன் - வஞ்சகமாக வொருவன்,—வைத்தநிதிகவர-வைத்ததிரவியத்தை யெடுத்துக்கொள்ள வைத்தவன்வந்துகேட்க வில்லையென்ன,—துஞ்சினையோ போயினை

யோசொல் - தூங்கித்தான் கிடந்தாயோ இவ்விடம்விட்டுத்தான் போனயோ சொல்? அப்படிப்போலச் சிவன் தனு கரண புவன போகங்களைக் கொடுத்திருக்கவும், கொடுத்தவன்குருவேகுருலிங்க சங்கமமாய்வந்து என்னுடைமையைத் தாவென்று கேட்க, இல்லையென்றுசொல்லிக் கொடுத்தவனை மறைக்கையினலே நீ பிரமமல்ல அடிமை.

நி-வ-உ. ஒருவன் சேமித்தபொருளினை ஒருவன் களவினுல் கவர்ந்துகொண்டேக, மற்றவனுறங்குதல் செய்தானே, அவ்விடம்விட்டுநீங்குதல்செய்தானே, மாணவகனே! சொல்வாயாக.

அதுபோலக் கேடின்றி நிறம்பிநிற்கு ஞானசத்தியினை வஞ்சித்து அதன் முதலாயஞேயத்தினை யுடைத்தாதல்அரிதென்பது இதனுற் கூறப்பட்டது.

இதுவும், முன்னதுவும் ஒட்டென்னு மலங்காரத்தாற்கூறப்பட்டன. துஞ்சினையோ போயினையோஎன்பதனை துஞ்சினனே போயினனே எனப்பாடமுரைத்து தூங்குதல்செய்தானே அவ்விடம்விட்டுநீங்குதல் செய்தானேஎன உரைகூறினர் நிரம்ப வழகியர். (௬)

இப்படி யடிமையாகிய ஞானவானிடத்திலே மலங்கள்வாராதோவென்னில்?

> தனக்கு நிழலின்று மொளிகவருந் தம்ப
> மெனக்கவா நில்லா திருள்.

எ-து. தனக்கு நிழலின்று மொளிகவருந் தம்பமென-ஆதித்தனுச்சியிலே வருகிறபோது படிகத்தம்பமானது பஞ்சவன்னங் கவராம லாதித்தன்றனுய் நின்றதுபோல,—கவாநில்லாதிருள்-ஆன்மாவுக் கிருவினையொப்பு மலபரிபாகம்வந்த வவதரத்திலருள்பிரகாசிக்கவே பஞ்சமலங்களையும் பொருந்தாம லருளே நிகழ நிற்பது மிப்படியேபோல.

நி-வ-உ. தனக்கென வேறோரொளி தோன்றாதவண்ணம் சூரியகிரணத்தாற் கவர்ந்துகொள்ளும் படிகத் தூண்போல ஆன்மா தன்னுடையபோதந் தோன்றாதுநிற்கும்வண்ணம்அருள்கவர்தலைச் செய்யுமாயின் அந்நிலையே யிருளானதுதன்பால் நிலைபெறாது நீங்கும்.

சூரியகிரணத்தினுள்ளே தன்னைக் கொடுத்துநிற்கும்படிகம் போல ஆன்மாவுந் தன்னையருளினுள்ளே கொடுத்து நிற்றல்வேண்டு மென்பதாம்.

இதனால் ஆன்மாவை அருள் தன்வயத் தாக்குமாறு கூறப்பட்டது.

மலந்தோன்றாம லருளே நிகழநிற்ப தெப்படியென்னில்?

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பி
னிற்க வருளார் நிலை.

எ-து. உற்கைதரும் பொற்கை யுடையவர்போல்-பொலிவினையுடைய கையிலே விளக்கைப்பிடித்து முன்னிட்டுப் போனவர், நினைத்தபதார்த்தங்களை யெடுப்பார்கள்,—உண்மைப்பினிற்க வருளார்நிலை - ஆன்மாவருளை முன்னிட்டுக்கொண்டு நிற்கவே ஞேயத்தைப் பொருந்துவன்.

நி-வ-உ. தழற்கொள்ளியினைப் பிடித்திருக்கு மழகிய கையினையுடையோர், தாம் வேண்டியபொருள்களைக் காணுமளவும் அதனைமுன்னிட்டுத் தாம் பின்னிற்குமாறுபோல, ஞேயமானதுவெளிப்படுமளவும் அருளைத் தமக்குமுன்னாக்கித் தாம் அதன்பின் னிற்றலே யருளோடு பொருந்திநிற்கு நிலையாவது.

இதனா லருளோடு பொருந்திநிற்குமுபாயங்கூறப்பட்டது.

அருளேயறியும், யா னறியவேண்டுவதில்லையென்னில்?

ஐம்புலனாற் றான்கண் டகன்றா லதுவொழிய
வைம்புலனார் தாமா ரதற்கு.

எ-து. ஐம்புலனுற்றுண்க்கண்டகன்றலதுவொழிய-ஆன்மாப்ஞ்சேந்திரியங்களிஞலே யொருவிடயத்தை யறிகிறதல்லாமல்.— ஐம்புலஞர் தாமாரதற்கு-இந்திரியங்க ளான்மாவுக்கு விடயங்களை யறிவிக்கிறதல்லாம லிந்திரியங்களுக் கறியவேண்டுவதில்லை, அப்படிப்போல வான்மா திருவருளினுலேநேயத்தைப்பொருந்துகிறதல்லாமல் திருவருளுக் கறியவேண்டுவதில்லை.

வி-வ-உ. மெய் வாய் கண் மூக்குச்செவிகளால் தாம் கண்டறிந்த விடயங்களுள் ஒன்றல்லவாயின், அவ்வருளானே யன்றிப் பேரின்பமாகிய நேயத்தினை யடைதற் கவ்வைம்பொறிகள்தான் ஆர்? உயிர்கள்தாம் ஆர்?

சுட்டிறந்து நின்றமையா லிவர்க் கடைத லுரிமையில்லை யென்பார் ஆறொன்றருளிச்செய்தார். (கூ)

அருள் காட்டவேண்டுவதில்லை, நானே காண்பனெனில்?

தாமே தருமவரைத்-தம்வலியி னுற்கருத
லாமே யிவனு ரதற்கு.

எ-து. தாமேதருமவரை-ஒருத்தன் நயவினுலே கொடுக்கச்செய்தே,—தம்வலியினுற்கருதல்-தம்முடைய வலிமையினுலே பறித்தாற்கொடாது,—ஆமே-அப்படிப்போல,—இவனுரதற்கு- திருவருளானதுதன்னுடையகிருபையினுலேநேயத்தைக்காட்டாநிற்க வான்மபோதத்தாலே நேயத்தைப் பொருந்தப்போகாது.

வி-வ-உ. ஒருபொருளினை யொருவற்குத் தாமே கருத்தாக நின்று விரும்பித்தருதற்கு உரியாரைத் தம்வலியால் தந்தவராக நினைந்தல் முறைமையன்றே, ஆதலால், அவ் வருளாற் பெறும் பேரின்பத்திற்கு அப்பெற்றியினை யடையநிற்கும்இவன்யார்.

இவையிரண்டுபாட்டானும் பேரின்பமாவ தருளாலே யன்றிக் கரணங்களோடுகூடியும தனித்தும் உயிர்களால் அடையப்படா தென்பது கூறப்பட்டது. (ய)

உயிர்விளக்க முற்றிற்று.

# ௮-வது இன்புறுநிலை.

அஃதாவது, ஆன்மலாபமடையு முறைமை. ஆன்மசுத்தி கூறிப் பின்னரதனாலெய்தும் பயன்கூறினமையின் மேலையதி காரத்தினோடு இதற்கியை புண்மையறிக.

இன்பமடைத லெவ்வாறென்னில்?

இன்புறுவார் துன்புறுவா ரிருளி னெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

எ-து. இன்புறுவார் - இன்பத்தைப் பொருந்துகிறவர்கள் சிலர்,—துன்புறுவார் - துன்பத்தைப்பொருந்துகிறவர்கள் சிலர்,—இருளினெழுஞ் சுடரின் - அந்தகாரமாகிய விருளிலே விளக்கைப் பிடித்து முன்னிட்டுப் போனவர்கள் நினைத்த பதார்த்தத்தையெடுப்பார்கள். விளக்கைப் பின்னிட்டுப்போனவர்களந்தப் பதார்த்தையெடுக்கமாட்டார்கள். இந்தமுறைமைபோல.—பின்புகுவார் முன்புகுவார்பின்-ஆன்மா வருளை முன்னிட்டுக்கொண்டுநிற்கவே ஞேயத்தைப் பொருந்துவன். அருளைப் பின்னிட்டு நின்றவர்கள் சனனமரணத்திலே யழுந்துவார்கள்.

தி-வ-உ. முன்னர்ஞானத்தினைப் பின்னிட்டுத் தாமதற்கு முன்செல்வாராகில் துன்புற்றவரோ, பின்னர்மிக்க துன்பினைச் செய்யு மலவிருளிலேநின்று மெழுந்தஞானவிளக்கினைமுன்னிட்டுத் தாமதன்பின்செல்வாராகில் பேரின்பத்தினையடைவார்.

துன்பவின்பமடைதற்குக் காரணஞானத்திற்கு முன்பின் சேறலாயிற்று. கட்டுற்று நின்றவர்க்கும் வீடடைபவர்க்குந் தம்முள் வேற்றுமை யிதுவென்பது மாம்,

இதனாற் பேரின்பத்தை யெய்துவா ரிவரென்பது கூறப்பட்டன. (௭௧)

அருளேபோதாதோ, அதற்குமேலாகியஞேயமேனென்னில்?

௫௪ திருவருட்பயன் மூலமுமுரையும்.

இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டா
மொருவ னொருத்தி யுறின்.

எ-து. இருவர் மடந்தையர்க் கென்பயன்-இரண்டு ஸ்திரீகளுக்கூடிற வின்பமில்லை,—இன்புண்டாமொருவ னொருத்தியுறின்-ஒருவனு மொருத்தியுங்கூடிற வின்பமுண்டு ஆன்மாஞேயத்தைக்கூடுமிடத்துப் பேரின்பமாகிய மோக்ஷமுண்டாம்.

கி-வ-உ. இரண்டுபேர் மகளிர்க்குத்தம்புணர்ச்சியால்வரும் பயனென்னை? ஓர்புருடனு மோர்மகளுந் தம்மிற் புணர்வாராயி னன்றே யின்பமுண்டாவது.

உயிர்க்கும் அருட்குமுதலாயவேட்பேட் டெரிப்படி னல்லது இன்பமுண்டாகாதென்பதுபொருள். ஒருவனொருத்தியென்னும் உவமத்தலைமையுந்தன்மையும் பற்றிவந்தது. இதற்கிவ்வாறன்றி யுயிரினைப் பெண்ணியல்பினதாகவும் இறைவனை யாணியல்பின தாகவும் அறிவில்லார் கூறுமது பொருளன்று, அன்னவியற்கை அசேதனவடிவிற்கல்லது சேதனவடிவிற் கின்றாதலான்.

இதனாற் பேரின்பத்தினையெய்து மெல்லைகூறப்பட்டது.

உ. ப. தி.

ஆன்மா ஞேயத்தைக்கூடியிடத்து இவனாலேஞேயத்துக்கின் பமுண்டோ வென்னில்?

இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவ
மின்பதன மாதலினா லில்.

எ-து. இன்பதனை யெய்துவார்க்கீயும் - இன்பத்தைப்பெற வேணு மென்றவர்களுக்குக் கொடுப்பர்,—அவர்க்குருவமின்பத னமாதலினாலில்-அந்தச் சிவனுக்குப் பேரின்பமே சொரூபமா கையினாலே இன்பமொருவர்கொடுக்கவேண்டியதில்லை.

கி-வ-உ. தன்னைவந் தடையுமவர்க்குப்பேரின்பத்தினைவழங்கும் அவ்விறைவன் தனக்குவடிவம்ஆனந்தமயமாதலால், தான் தன்னை நுகர்வதில்லை.

அறுதியை யாணவமலத்தால் மறைப்புண்டு அநாதியிற் பொருந்தவமாக வந்ததுபோலக் கருது முயிர்கள்போலாது, இறைவன் அறுதியலமுத்தநாதலான் அவற்கில்லையென் றருளிச் செய்தார், புதிதாக வந்ததன்றென்பது கருத்து.

இதனு லுயிர்களுக்குக் கொடுப்பதன்றி யிறைவன் தானுமவ் வின்பத்தினை நுகர்வனேயெனுஞ் சங்கையினையகற்றிக் கூறப்பட்டது, (௬)

அந்நியமாயிருந் தவ்வின்ப மனுபவிப்பதேனென்னில்?

தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலை நீயேகமெனக் கொள்.

எ-து. தாடலைபோற் கூடியவை-எவ்வுந் தவ்வுந் தோன்றுமை டவ்வாய்த்திரிகின்றதுபோல,—தானிகழா வேற்றின்பக்கூடலை-தற்போதஞ் சீவியாதவிடத்திலே விளங்கப்பட்டபேரின்பத்தை,—நீயேகமெனக்கொள்-நீ யொன்றென்றே யறிவாயாக.

வி-வு-உ. தாள்தலையென்னுஞ் சொல்லிரண்டுந் தம்பொருள் பிரிந்து தோன்றுது பொருந்தியவாறுபோல், புணர்ச்சிக்கண்ணுருகாலு முண்டாகாத வேற்றுமையினையு மின்பத்தினையுமுடைய கலப்பினை யிறைவனே டொன்றுதலெனக் கொள்வாயாக மாணவகனே!

அச்சொற்கள் ஒரொருகாற் பிரிதலும், புணர்வாற்றும்பெறும்பயனின்மையுங் கருதி, யிவை யன்னவல்லவென்பதற்குறிகழாவேற்றின்பக் கூடலென் றருளிச்செய்தார். தாளுந்தலையுமென்னுஞ் சொற்களாற் கூறியது, உயிரினது தாழ்வு மிறைவனது உயர்வுங் காட்டுதற்காம்.

இதனுல் ஏகயத்நமுத்தி யொன்றுபட்டு நிற்குநிலை கூறப்பட்டது. (௭)

பின்னம் ஏகமெவ்வு என்னில்?

ஒன்றாது மொன்றா திரண்டாது மோசையெழா
தென்றாது மோரிரண்டு மில்.

எ-து. ஒன்றாது மொன்றா - ஆன்மாவுஞ் சிவனுமொன்றென்று சொல்லுவாயென்னில் அப்பொழுது பெறுவானும்பேறுமில்லை,—இரண்டாது மோசையெழா தென்றாலும் - ஆன்மாவுஞ்சிவனு மிரண்டென்று சொல்லுவாயென்னில் ஆன்மாவுஞ் சிவனு மேகத்துவமாகிய சாயுச்சியமு மில்லையென்றாம். இப்படியாகையினாலேயோ,—ஓரிரண்டுமில்-அத்வைதாத்துவிதமில்லை.

நி-வ-உ. இறைவனையு முயிரினையு மொன்றென்போமாயினும் பின்னர்ப் பொருந்தவேண்டுவதில்லை, இரண்டென்போமாயினுந் தம்முட்டாக்கிய வொலியெழுதலைச்செய்யாது, ஆதலாலொரு பொருளுமல்ல விரண்டாவதுமில்லை.

இதனு லிறைவனையும் உயிரினையுமேக மென்பாரையு மிரண்டென்பாரைய மறுத்து அத்துவிதங்கூறப்பட்டது. அத்துவிதமாவது தம்மிற் கலப்பா லநந்நியமாயிருத்தல். (௫)

கூடிப்பொருந்துங் கொள்கையாதாமென்னில்?

உற்றாரும் பெற்றாரு மோவா துரையொழியப்
பற்றாரு மற்றார் பவம்.

எ-து. உற்றாரும்-அந்தப்பொருளைப் பொருந்தினேனென்றவர்களும்,—பெற்றாரும் - அந்தப்பொருளைப் பெற்றேனென்றவர்களும்,—ஓவாது - கூடாது,—உரையொழிய-இந்தவிரண்டுவசனமு நீங்க, பற்றாரும் - இந்தப் பற்றுக்களற்றவரே,—அற்றார்பவம்-அவர்களே சநநமரணங்களை நீக்கி நிட்டையைப்பொருந்தின ராதாக்கள்.

நி-வ-உ. பேரின்பமாகிய முத்தியினை யடைந்தாரும், அதற்கு நேரே காரணமாகிய சமாதியை யடைந்தாரும், மெய்ப்பொ

ருளினை யொருகாலுநீங்குதல் செய்யார். அவ்வாறுவாக்கிறக்கும் படி அதனைப்பற்றி யில்லாதாரும்பிறப்பினையற்றவர்.

உரையொழியப்பற்று என்றதனால் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாகிய நிலையின்கண் நிற்பவென்பதாம். பிறப்பற்றுமென்பது பதமுத்திகளை யடைவாரென்பது கருத்து.

இதனால் வீட்டினையடைவாரது வகைமை கூறப்பட்டது.

உரையொழியப்பெற்றதென்போல வென்னில்?

> பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
> நீயொன்றுஞ் செய்யாம லில்

எ-து. பேயொன்றுந்தன்மைபிறக்குமளவும்-பேய்பிடியுண்டவன் முறைமை வருமளவும்,—நீயொன்றுஞ் செய்யாமலில்-உனக் கந்தச்சிவானுபூதி பிறக்குமளவு மான்மபோதஞ் சீவியாம லப்பொருளிலே நிற்பாயாக.

நி-வ-உ. பேய் பிடியுண்டோரது தன்மை யுனக் குண்டா மளவு நீ மேல் யாதொருசெயலுஞ் செய்யாதசைவற நிற்பாயாக.

பேய்பிடியுண்டாரது செயலெல்லாம் பேயின்செயலாமாறு போல வுன்செயலனைத்தும் இறைவன்செயலாமளவு மென்பது கருத்து. பின்னரச்சாதனையின்றென்பதாம். இனியென்றதனான் முன்னர்ச் செய்யவேண்டுவ வனைத்துஞ்செய்து முற்றியதென்பதும் பின்னிலைக்குச் செயலின்மையே வேண்டுவதென்பதுங் கண்டுகொள்க.

இதனாற் சமாதிசெய்வோர்க் கதுமுதிர்ந்து கைவருமாறு கூறப்பட்டது. (எ)

பொருள்பெறுவார் செயல்போல தென்போலவென்னில்?

> ஓண்பொருட்க ளுற்று றுறுபயனே யல்லாது
> கண்படுப் போர் கைப்பொருள்போற் காண்.

எ-து. ஒண்பொருட்க ளுற்றார்க்கு-ஞேயத்தைப் பொருந்தின ஞானிகளுக்கு,—உறுபயனேயல்லாது - பரமோக்ஷமே யல்லாமல் மற்றக்கிரியைகள் செய்வாரோவென்னில்?—கண்படுப் போர் கைப்பொருள்போற்றான் - நித்திரைபண்ணினவன் கையிற் பதார்த்தம்விழுந்தது தெரியாததுபோல.

வி-ம-உ. ஒள்ளியதாய மெய்ப்பொருளினது எல்லையைத் தலைப்பட்டார்க் கவ்விடத்தேயும் பேரின்பமேயன்றி மற்றுள்ள யோகமுதலிய தொழில்களியாவும் உறங்குவோர்கையிற் பண்டம்போல மெல்லெனத் தன்வயத்திலே நீங்குவதாக வறிக. தநுமே வலிது நீப்பதன்றென்பதாம்.

இதனா லவர்சமயாசாரம்நீங்குமுறைமைகூறப்பட்டது.
கூடியது கூறலாமோவென்னில்?

மூன்றாய தன்மை யவர்தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத வின்பமதன் சொல்.

எ-து. மூன்றாயதன்மை-ஞாதுரு ஞான ஞேயந் தோன்றாத விடத்திலே,— அவர்தம்மின் மிகமுயங்கி-அந்தச்சிவனிடத்திலே மிகுதியும்பிரியப்பட்டு,—தோன்றாதவின்பமதன் சொல்-ஆன்ம போதத்தாலே யறியப்படாத பேரின்பத்தைச்சொல்லப்படாது.

வி-ம-உ. ஞாதுரு ஞானஞேயமென்னுமூன்றுவகைப்பட்ட தன்மையுஞ் சிவசீவபாவங்களிரண்டுந் தம்மின்மிகவுங் கூடிய கலப்பினாற் றோன்றுதலைச் செய்யாத வின்பமவ்விடத்தது வார்த்தைதயாது.

இதனா லவ்வானந்தமிகுதியின் அதிசயங்கூறப்பட்டது.
எவ்வா றப்பொருளெய்துவதென்னில்?

இன்பி லினிதென்ற லின்புண்டே லின்புண்டா
மன்பு நிலையே யது.

எ-து. இன்பினினி தென்றல்-எல்லாவின்பத்துக்கு மேலா னதேனினிற் பேரின்பம்,—இன்புண்டே லின்புண்டாம் — அந் தப் பேரின்பத்திலே இச்சையுண்டான வக்ஷணமே யன்புநிலை யுண்டாம்:—அன்புநிலையேயது குரு லிங்க சங்கமத்திலே பத்தி யுண்டாகவே பேரின்பம் விளங்கிநிற்கும்.

பி-வ-உ. எல்லா வின்பங்களினு மினிமை யுடைத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பேரின்பமாவ தொருவற்கன்பெ ன்ப திப்பொழுதுண்டாயி னிப்பொழுதே யுளதாம் அது மிக்க வன்பினது நிலையே தனக்குநிலையாக வுடையதாகலான்.

இன்பென்றபொதுமையா லமிர்தநுகர்ச்சி முதலாயினவெ ல்லா மடங்கும் ஏகாரந்தேற்றம்.

இதனு லன்புடையார்க் கப்பேரின்ப மெளிதினி லெய்து மென்பது கூறப்பட்டது. (௮)

இன்புறுநிலை முற்றிற்று.

## ௯-வது ஐந்தெழுத்தருணிலை.

அஃதாவது, ஐவகைப்பட்ட திருவெழுத்தாகியஅருளினது முறைமை. இதனையு மோர்திருவுருவாகக் கூறியருளினார்வீட்டு நெறி காட்டுதலால்; அவ்வாறே சமாதியினை யடைதல் கூடாதா ர்க்கிதனை விதிப்படியோதவே யந்நிலை கூடுமாதலின் மேலையதி காரத்தினோடியைபுடைத்தெனக் கொள்க.

உரையிறந்தவின்பங் கூடாதாயின் மேலோருபாய மருளிச் செய்கிறார்.

அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகும்.

எ-து. அருளுருவு மாரணமு மல்லாதும் - கிருபையுடனே கர்த்தா வருளிச்செய்த விருபத்தெட்டாகமமும் நாலுவேதமும் இதுகளல்லாமற் சொல்லப்பட்ட பலசாத்திரங்களு மென்னத் தைச் சொல்லுமென்னில், ஐந்தின் பொருளு றெரிப்பதும்- பஞ்சாக்ஷரத்தி னுண்மையைச் சொல்லவந்ததால்.

நி-வ-உ. சைவாகமங்களினது கருத்தினையும், வேதங்களி னது கருத்தினையும், இவை யிரண்டுமல்லாத பல கலைகளினது கருத்தினையும் கற்று வல்லோ ராராயப்புகுவாராயின் அவையெ ல்லாந் திருவெழுத்தைந்தின் பொருளாகியபதி பசு பாசங்களைச் சொல்லுநூல்களாம்.

இதனா லெல்லாநூற்பொருள்களும் இவ் வைந்தெழுத்தினு ள்ளே யடங்குமென்பது கூறப்பட்டது. (௯)

இந்தப் பஞ்சாக்ஷர மென்னத்தைச் சொல்லுமென்னில்?

இறைசத்தி பாச மெழின்மாயை யாவி
யுறநிற்கு மோங்காரத் துள்.

எ-து. இறை-கர்த்தாவும்,—சத்தி - திருவருளும்,—பாசம்-ஆ ணவமலமும்,—எழின்மாயை - விளக்கமான திரோதானமும்,— ஆவி-ஆன்மாவும்,—உறநிற்கு மோங்காரத்துள்-பிரணவத்திலே நிற்கும்.

நி-வ-உ. சிவனும், சத்தியும், ஆணவமும், அழகுடைத்தாய மாயையும், ஆன்மாவும், ஆகியஐந்தும் ஐந்தெழுத்தோரெழுத்தா கிய பிரணவத்தினுள்ளே யமைந்துநிற்கும்.

இதனால் பிரணவமென்று பேர்பெற்றுநிற்கு நுண்ணியவை ந்தெழுத்தின தியல்பு கூறப்பட்டது.

இந்தப்பஞ்சாக்ஷரம் நிற்குந்தான மெங்ஙனே யென்னில்?

ஊன நடன மொருபா லொருபாலா
ஞான நடந் தானடுவே நாடு.

எ-து. ஊன நடன மொருபால்-மலமுந் திரோதமு மொரு பக்கலாகவும்,—ஒருபால்ஞானநடம் - அருளுஞ் சிவமுமொரு பக்கலாகவும்,—தானடுவே-ஆன்மா விந்தவிரண்டுக்குநடுவேநிற் பன்,—நாடு-அறிவாயாக.

தி-வ-உ. பிறப்பினைவிளைக்கு நகார மகாரங்களாகிய கூத் தொரு மருங்காகவும், வீட்டினை யுதவுஞ் சிகார வகாரங்களாகிய கூத்தொருமருங்காகவும், யகாரமாகிய ஆன்மா இவ் விருவகைக்கு நடுப்பட்டதொன்றாகவும் விசாரித்தறிவாயாக.

கூத்தென்றது உயிர்களைப் பெத்த முத்திகளி லுய்த்து நடத்தலை.

இதனு லைந்தெழுத்தின் பொருளியல்புகூறப்பட்டது. (௩)

இந்தப் பஞ்சாக்ஷரமிருக்கையினாலே யான்மா நேயத்தைப் பெறுமலிருப்பா னேனென்னில்?

விரியமன மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரப் பெறும்.

எ-து. விரியமனமேவி-மனமானது பிரபஞ்சத்திலே விரிந்துபொருந்தி,—யவ்வைமீளவிடா-யவ்வாகிய வான்மாவை யருளினாலே திரும்பாதபடி பண்ணுவிக்கும்,—சித்தம் பெரியவினை தீரப்பெறும்-ஆன்மாவுக்கு மகத்தாகிய புண்ணியபாவமிரண்டுந் துலையொத்தவிடத்திற் பேரின்பமாகிய மோக்ஷமுண்டாம்.

தி-வ-உ. மகார நகாரமாகிய மலமும் திரோதமு மிகவுமிறுகப்புணர்ந்து யகாரமாகிய வுயிர்களைத் திரும்பவிடா; அவ்வுயிர்கள் தம் பெரியபிணியாகிய மலவிருள்நீருங்கால் சிகாரமாகிய சிவத்தினையடையும்.

மலந்திரயே திரோதந்தானே நீங்குமென்பதாம். வினைஎன்பது ஈண்டுப் பிணியென்னும் பொருள்தந்து நின்றது.

இதனாற் சட்டவீடென்னு மிரண்டும் ஐந்தொழித்திறனே யமையுமென்பது கூறப்பட்டது. (௯)

இந்தப் பஞ்சாக்ஷர மிருக்கையிலே யாணவமல நீங்காமலி ருப்பானே னென்னில்?

> மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
> மேலாசு மீளா விடின்.

எ-து. மாலார்திரோத மலமுதலாய்மாறுமோ-மயக்கமாகிய நகாரமுன்னாகச்செபித்தான்மலநீங்காது. ஆனால்நீங்குகிறமுறை மை யெப்படியென்னில்?—மேலாசு மீளாவிடின்-ஆணவமலத் தைக் கீழ்ப்படுத்தி நகாரமேற்படச் சிகாரமுன்னாக மாறிச்செ பிக்கின் மோக்ஷமாம்.

நி-வ-உ. மயக்கத்தினைப் பொருந்திய திரோதானமு மல முமாகிய நகாரமகாரம் இரண்டும் ஆதிக்கண்ணதாக வுச்சரிக்கில் அவைகள் நீங்குமோ, இவற்றைக் கீழாக்கிச் சிவமாகிய சிகார மேலாம் வண்ணமாற்றி யுச்சரியாதொழியின்.

இதனால் நகாரமகாரங்களை முதலாகவுச்சரித்தாலெழுங்குவது வீட்டினையடைவோர்க் காகாதென்பது கூறப்பட்டது.

பஞ்சாக்ஷரத்தைச்செபித்தபேர்க்கு மலநீங்குமோவென்னில்?

> ஆராதி யாதார மந்தோ வதுமீண்டு
> பாராது மேலோதும் பற்று.

எ-து. ஆராதி-ஆராதனை பண்ணுவாய்,—ஆதாரம்-நமக்கா தாரஞ் சிவனென் றறியாமலிருக்கிறதற்கு,—அந்தோ-ஐயோ,— அதுமீண்டுபாராது மேலோதும்பற்று - இப்படிச் சிகாரமுன்னா கச் செபித்தான் மலமுந் திரோதமுமிவனைவந்து பொருந்ாது.

நி-வ-உ. தமக் காதார மாமுகவெண்ணி யவ்வா றுச்சரித்த லால் வரும்பழுதினைத் திரும்பிவிசாரியாம லந்தோ நகாரமகார ங்களை மேலாகவுச்சரிக்கும விருப்பம்.

இதனு லவ்வாறுரைத்துவார் துணையின்றித் தான்புறுதற் கிரங் கிக்கூறப்பட்டது. (ஸ)

இந்தப் பஞ்சாக்ஷரத்தைச் செபிக்கிறதேதென்னில்?

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி.

எ-து. சிவமுதலேயாமாறு சேருமேல்-இப்படிச்சிகாரமுன் னுகச் செபித்தாயானுல்,—தீரும்பவம் - சனனமுநீங்கும்,—இது நீயோதும்படி-இதுநீசபிக்கப்பட்டமுறைமை. (எ)

நி-வ-உ. சிகார வகாரமென்னு மிரண்டு மாதிக்கண்ணதே யாம் வண்ண முச்சரித்தல் கூடுமாயின். அந்நிலையே யுனது பிற வித்துன்பநீங்கும், மாணவகனே! வீட்டினைக்காமுற்றநீ யுச்சரிக் குமுறைமையிது.

இதனுல் முத்தரோதுமாறு கூறப்பட்டது.

இப்படி சபிக்கப்பட்ட வான்மாக்களுக்குப் பிரயோசன மேதென்னில்?

வாசி யருளியதை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு.

எ-து. வாசியருளியதை வாழ்விக்கும் - வகாரமாகிய திருவ ருள் யகாரமாகிய வான்மாவை சிகாரமாகிய சிவத்திலே கொடு த்துப் பேரின்பமாகிய சுகத்தை யுண்டாக்கும்,—மற்றதுவேயாசி லுருவமுமாமங்கு - அந்தத் திருவருள்தானே குற்றமில்லாத திரு மேனியாயிருக்கும் அந்தவான்மாவுக்கு.

நி-வ-உ. அவ்வா றுச்சரிக்குங்கால், வகாரமாகியவருள்சிகா ரமாகிய சிவத்தினைக்காட்டி யகாரமாகியவுயிரினை வீட்டின்பத் திலே யிருத்தும். அன்றியும் அவ்வருளே யந்தச்சிவத்திற்குக்குற் றந்தீர்ந்த திருமேனியாயிருப்பது.

இதனால் திருவெழுத்தைந்தில் வகாரமாகியவருளின்றுதன்மை வகுத்துக்கூறப்பட்டது. (அ)

அந்தவான்மாமோக்ஷத்திலேயிருக்கிறதெதப்படியென்னில்?

ஆசினவா நாப்பணடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

எ-து. ஆசினவா நாப்பணடையாது - குற்றத்தைப்பொருந்திய நகாரத்திலு மகாரத்திலும் பொருந்தாமல்,—அருளினால்-ஆசாரியனுடைய கிருபையினால்,—வாசியிடைநிற்கை வழக்கு-அருளுக்குஞ் சிவத்துக்கு நடுவே நிற்கிறதேமுறைமை,

சி-வ-உ. குற்றந்தீர்ந்த திரோதானமும் அருளுமாகியநகார வகாரங்கட்கு நடுப்பட்டுநில்லாது வகாரமாகியவருளினாலேயகாரமாகியவுயிர் அவ்வகாரத்திற்குஞ் சிவமாகிய சிகாரத்திற்கு நடுப்பட்டுநிற்பது முறைமை.

அவ்வா றதற்கெழுத்துக்களைமாறி யுச்சரிப்பது குருமுகத்தாற்றெளிந்துகொள்க. ஆன்மாவைமறைக்கும் பாசங்களைச்செலுத்துவதன்றி திரோதானசத்தி தானுகமறையா தென்பதற்கு ஆசினவென் றருளிச்செய்தார்.

இதனாற் றிருவெழுத்தினைக் கூறிய முறைமையினேதுவாரமைந்துநிற்கு நிலைகூறப்பட்டது. (௯)

ஆசினவா என்பதற்கிருவகை யுரையாசிரியர் கூறியபேதங்களை யுஙித்தறிக.

மோக்ஷத்திலே யிருக்கிறதற்குப் பிரத்தியக்ஷ முண்டோவென்னில்?

எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து.

எ-து. எல்லாவகையு மியம்பும் - வேதாகமங்க ளெல்லாஞ்சொல்லுகிற தேதென்னில்,—இவனகன்றுநில்லாவகையைநினை

ந்து-ஆன்மா சிவசத்தியினை விட்டுநீங்காத முறைமையைச் சொல்லும்.

நி-வ-உ. எவ்வகைப்பட்ட வுபாயங்களினையு நூல்களுணா க்கும், இவ்வாறான்மாவானவன் சிவசத்தியினை நீங்கிநில்லா துடனாய்நிற்குந் திறத்தினைக்கருதி.

இதனை லறியுநெறிமுதல் இவ்வதிகாரமீறான நான் கதிகாரத்தினது கருத்துந் தொகுத்துக்கூறப்பட்டது. (௰)

ஐந்தெழுத்தருணிலை முற்றிற்று.

---

# ௰-வது அணைந்தோர்தன்மை.

---

அஃதாவது, இவ்வகைப்பட்டசமாதியினையடைந்தோரது தன்மை. மேலையதிகாரங்களாற் சமாதிகூடுமுறைமைகூறியது கூடினோரது தன்மையிதனாற்கூறிதலின், அவற்றோடிதற்கியை புடைத்தெனக் கொள்க.

நேயத்தைவிட்டுநீங்காத நாதாக்களினை வேறெதன்னில்?

ஐங்குணர்வி னுள்ளொடுங்கி யுள்ளத்து ளின்பொ
தூங்குவர்மற் றேதுண்டு சொல். [டுங்கத்

எ-து. ஒங்குணர்வி னுள்ளொடுங்கி யுள்ளத்து ளின்பொடுங்க - மகத்தாகிய சிவத்திலே யான்மாவொடுங்க ஆன்மாவிலே சிவமொடுங்க,—தூங்குவர்-பேரின்பந் தானுகவழுங்குவர்,—மற்றேதுண்டுசொல்-நேயமேயல்லது மற்றொருநினைவுமில்லை.

நி-வ-உ. நிறைந்த ஞானத்தினுள்ளே தாம்அடங்கித் தம்மறிவினுள்ளே பேரின்பமடங்கும்படி யாகந்துநித்திரை பண்ணுநிற்பர், மற்றவார்த்தையாதுளதாம்.

அவ்வின்பம் இறைவற்கின்றி யுயிர்கள் தாமே நுகர்தலின் உள்ளத்திலின்பொடுங்கவென்றும், ஞேயத்தழுந்திஞானத்தின் மிக்கா ரன்றென்பதற்கு ஒங்குணர்விலுள்ளடங்கியென்று மரு ளிச்செய்தார்.

இதனுலவர் ஞேயத்தழுந்திநிற்கு மியல்பு கூறப்பட்டது.

இப்படிநின்றவர்கள் மேலானபதங்களையும் விரும்புவார்க ளோவென்னில்?

ஐந்தொழிலுங் காரணங்க ளாந்தொழிலும் போக
வெந்தொழிலு மேவார் மிக.
[நுகர்

எ - து. ஐந்தொழிலும் - பஞ்சகிருத்தியமும்,—காரணங்க ளாந் தொழிலும்-காரணேசுரர் தொழிலாகிய சாலோகாதிபதங் களையும்,—போகநுகர் வெந்தொழிலும்-போகத்தைக் கொடுக்க த்தக்க கொடிதாகிய சுவர்க்காதி பதங்களையும்,—மேவார்மிக-மி கவும் பொருந்தார்கள்.

நி - வ - உ. பரமசிவனாற் செய்யப்படும் படைப்பு நிலையீறு மறைப்பு அருளென்னும் ஐந்தொழில்களையு மொருங்கே செய்த லும், அயன் மால் உருத்திரன் மகேசன் சதாசிவனென்னுமிவரி லொருவற்கு மோரோவொரு தொழிலைச்செய்தலும், மாயாபோ கத்தினையருந்தும் பிறப்பிற்கேதுவாகிய வெய்ய தொழிலினைச் செய்தலுஞ் சிறிதும் பொருந்தாரவர்.

அசஞ்சலமா யகண்டமாயொழிவற நிறைந்தஞானவடிவின ராய்நின்றும் பரமானந்தத்தினை யனுபவித்திருக்கு மொன்றிற்கு மே யுரியா ரென்பது கருத்து. மிகவென்பது குறிப்பு மொ ழியாய்ச் சிறிது மென்னும் பொருள் விளங்க நின்றது. "உயி ர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே" என் றருளிச் செய்தவாறு காண்க.

இதனுலவர் மற்ெருரு தொழிற்கு முரியாரல்ல ரென்பது கூறப்பட்டது. (உ)

சர்வஞ்ஞத்து வாதிகுணங்கள் வந்து பொருந்தினலோவெ ன்னில்?

எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்
றல்லா தறியா ரற.

எ-து. எல்லாமறியு மறிவுறினும்-சருவஞ்ஞத்து வாதிகுண ங்கள்வந்து பொருந்தினலும்,—ஈங்கு-இவ்விடத்திலே,—இவர்- இந்தஞாதாக்கள்,—ஒன்றல்லா தறியாரற - ஞேயமொன்றுமேயல் லது மற்ெருன்றையும் பொருந்தி யறியமாட்டார்கள்.

தி-வ-உ. இயல்பினுன் முழுவதூஉ முணரு ஞானமானது வெளிப்பட்டுத் தம்மையிரண்டறக் கலந்துநிற்பினு மிவ்விடத் திந்தச் சீவன்முத்தரானவரானந்தஞானமொன்றுமேயன்றிப் பிறி தொரு பொருளினையுஞ் சிறிது மறிதல்செய்யார்.

அற என்பது மிகவென்பதுபோலக் குறிப்பு மொழியாய் நின்றது. சீவன்முத்தர் சிவ மொன்றுமே யன்றிப் பிறிதொன்று மறியாராகவே பரமுத்தருமவ்வாருதல்கூறவேண்டாவாரியிற்று.

இதனுலவர் பிறிதொன்றுமறியா தெவ்விடத்துஞ் சிவமே கண்டிருத்தல் கூறப்பட்டது. "பரஞானத்தால்" என்பதனுள் "சீவன்முத்தர் பரமேயார்த்திருப்பார்" என்றருளிச்செய்தவாறு காண்க. (௩)

இப்படிக்கொத்த ஞாதாக்களை விடயங்கள்வந்து பொருந்தி னலோ வென்னில்?

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலனடக்கு மாமை தக.

எ-து. புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் - விடயங்கள் வந்து பொருந்தினற் றமக்குப் பிராணனுகிய ஞேயத்திலேயடங்கி

நிற்பார்கள்,—போதார் - ஒரு விடயத்திலுங் கர்மித்துப் புரியார்கள். அஃ தென்போல வென்னில்?—தலநடக்கு மாமைதக-பூமியிலே நடக்கப்பட்ட வாமையானது ஆரவாரமில்லாத விடத்திலே நடக்கும், ஆரவாரமுள்ள விடத்திலேயடக்கு மதுபோல.

வி-வ-உ. ஓர்விடயமெதிரிடுங்கால் அதற்கஞ்சி யதன்மேற் செல்லுந் தம்முணர்வினை மாற்றித் தமது முதலாகிய ஞேயத்தினிடத்திலே புக்குப்பொருந்தி மறித்து நீங்குதல்செய்யார், அவர் பூமியின்கண்ணே நடந்துசெல்லுங்கா லொருவரெதிர்ப்படி னவ்வாயஞ்சித்தன் றலையினைச்சுரித்துள்ளேவாங்கியசைவறக் கிடக்கு மாமையினையொப்ப.

ஆமை பின்ன ரெதிர்ந்தோரகலுங்காற் றன்றலையினை வெளிப்படுத்திச் செல்லுமதுபோ லிவர் வினைவிற்றிரிபு படாமையிற் போதாரென் றருளிச்செய்தார்.

இதனலவர் புலனுணர்வுக்கஞ்சி யகலுமாறு கூறப்பட்டது.

அப்படிச் சிலர் ஞேயத்தைவிட்டு நீங்கி யிருப்பர்களோவெனின்?

> அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கு
> மிவனையொழிந் துண்டாத லில்.

எ-து. அவனையகன் றெங்கின்று மாங்கவனும் - அந்தச் சிவனை விட்டுநீங்கி யான்மாவுக் கிருக்கவிடமில்லை. அந்தச்சிவன்றனும்,—எங்கும்-சட சித்துக்களெல்லாம்,—இவனை யொழிந்துண்டாதல்-இந்தச்சிவனையல்லா தான்மாவில்லாது.

வி-வ-உ. இறைவனைநீங்கி யெவ்வுலகமு நிற்பதில்லை, அதுபோல விறைவனுதல்லைடந்த விம்முந்தான்மாவையன்றி யெவ்விடமுமுளதாய் நிற்றலில்லை.

இவனு மிறைவனைப்போல வியாபகனுய்நிற்குமென்பதாம். "காயங்கழிந்தக்கா லெங்குமாய்க் கருந்தாப்போல்நிற்பன்" என் றருளிச் செய்தவாறுகாண்க.

இதனா லவர் சிற்றறிவுநீங்கிப் பேரறிவுடையரென்பது கூறப்பட்டது.

(௫)

ஆனால் அந்தப் பொருளை யுள்ளே கண்டிருப்பார்களோ புறம்பே கண்டிருப்பார்களோ வென்னில்?

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில்.

எ-து. உள்ளும் புறம்பும் - அந்தரங்கத்திலே யறிவாய்விளங்கியிருக்கப்பட்ட திருவருளையும், புறம்பே குருவாகித் திருமேனி கொண்டுவந்த வாசாரியனையும்;—ஒருதன்மைக் காட்சியருக்கு-ஒருபொருளென்று தரிசித்தவர்களுக்கு; எள்ளுந்திறமேதுமில்-உள்ளென்றும் புறம்பென்று நீக்கவிடமில்லை

தி-வ-உ. அகமும்புறமு மொருதன்மைத்தாய் நிற்கு ஞானத்தினை யடைந்தோருக் கொன்றனை யிகழ்ந்திடும்வண்ண மெவ்வாற்றானு மில்லை.

இதனா லவர்க் கெல்லாப்பொருள்களு ஞானமாயே தோன்றுதல் கூறப்பட்டது.

வேறு. ஆனா லிந்திரியங்களினா லறியுமறிவாலுஞ் சிவனைத் தரிசிக்கலாமோ வென்னில்? தனக்குப் பிராணனாய்நின் றுபகரிக்கிறதன்மையையு மவனவ ளதுவாய்நின் றுபகரித்தும் பின்பாசாரியமூர்த்தியாய்நின்று மிரக்ஷிக்கிற பூரணமான பொருளை விசுவமானது மறையும்படி யொரு நீர்மையாகக் கண்டவர்களுக்குச் சிவனது திருவடியை நீங்குகைக்கு வழியில்லை.

இது ஞானவான்கள் பிரபஞ்சந்தோன்றுமனிற்கு முறைமை.

(௬)

ஆனாலிப்படி நீக்கமறநிற்கிற நாதாக்களுந் தொழிற்படுவார்களோ வென்னில்?

உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தந்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

எ-து. உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந்தந்தம் - உலகத்திலே யிருக்கப்பட்ட வான்மாக்கள் செய்த வேலைக்குத்தக்க கூலி கொடுப்பார்கள். அதுபோல,—வறுந்தொழிற்கு வாய்மைபயன்- தொழிலற்ற நாதாக்களுக்குச் சத்தியமாகிய சேயபொன்றுமே பிரயோசனம்.

இ-வ-உ. நன்மையாற்றிய தலையைப்பிய் தொடர்ந்தருளும் யானெனதென்னுஞ் செருக்காற் செய்யப்பட்ட வினையகின்ற பயனாவ துலகவாழ்க்கைகள், செருக்கினீங்கித் தம்மை யிகழ்ந்தோர்செய்யும் தானந்தவமுதலிய தொழிற்குறும் பயனாவதழிவி ல்லாத வீட்டின்பமே.

நக்கப்பய னென்றதனால் பயன்பலவாயிற்று. வறுந்தொழி லென் றருளிச்செய்தார். தொடர்ந்துபயன் வழங்காமையின். இத னாலவரோர் தொழிலினைச்செய்யினும் பிறிதொருகாமியத்தினைக் கருதிச்செய்யாரென்பது கூறப்பட்டது.

வேறு. ஆனால் தொழிலாலுஞ் சிலவினைக் கூடலாமோவென் னில்? பிரபஞ்சத்திற் றத்தந் தொழிலுக்குத்தக்க பிரயோசனங்க ளிவர்களுக்குண்டா மாறுபோல வொன்றுஞ் செய்யாதுசெயலுந் தத்துவண்மை பிரயோசனம்.

இத்தவுண்மையிலே நின்றவர்களுக் கொருசெயலுங் கூடா தென்ப தறிவித்தது. (௭)

பிராரத்துவம் புசிக்கச்செய்தே யாகாமிய மேறுதோவென் னில்?

ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சகம்.

எ-று. ஏன்றவினையுடலோடேகும்-பிராரத்தம் தேகத்துட னேபோம், ஏற்றதும் பின்னையிலேபோம்,— இடையேறும்வினை தோன்றி லருளேசகம் - பிராரத்தம் புசிக்கச்செய்தே கட்டுப்படு கிற வாகாமியஞ் சிவஞானம் விளங்கவே நீங்கும்.

இ-வ-உ. பக்குவப்பட்டமைந்த வினையானதுடம்பிற்கமை ந்த காலவரையறையிலே தொலையும், இடைப்பட்டகாலத்திற் வந்து பொருந்தும்வினை ஞானவழி யருளென்னு நெருப்பி லேவெந்துபோம்.

சஞ்சிதம் நீங்காமல் ஞானம்வெளிப்படாது. வெளிப்படா தாகவே யாகாமியந் தீர்வதில்லை யாதலின் அருளே சகமென்பத னாற் சஞ்சிதமு நீங்கிற்றென்பதாகவே பொருளாகக்கொள்க. தோன்றிலென்பதற்கு அது தோன்றுந்தன்மை யிடையறாது தொடர்ந்து நிற்பதென்பது கருத்து.

இதனாலவர்க்கு வினைத்தொடர்பின்றென்பது கூறப்பட்டது.

வேறு சஞ்சிதகன்மம் ஞானக்கினியிலேபோம், பிராரத்தம்தே கத்துடனேபோம், ஆகாமியம் சிவஞானத்தினாலே கெட்டுவிடும்.

இது ஞானிகளுக்குக் கொருகன்மமுமில்லையென் றுமிட மறிவித்தது.

பரமுத்தி சரீரத்திலேயோ வென்னில்?

மும்மைத் தருவினைகள் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம்.

எ-து. மும்மைத் தருவினைகள் மூளாவாம்-சஞ்சிதபிராரத்த மாகாமிய மிந்த மூன்றுவினையும் பொருந்தாவாம். என்பொருந் தாவென்னில்? மூதறிவார்க் கம்மையு மிம்மையே யாம்-மேலா கிய சிவஞானத்தைப்பெற்ற ஞாதாக்களிச்சரீரத்திலே பெற ப்பட்ட பரமுத்தியுஞ் சரீரமிருக்கையிலேயாம்.

வி-வ-உ. இம்மையம்மை மறுமையென்னு மூவகைப்பய னையுந்தரும் வினைகள்யாவுந் தொடரா, தம்மேலாய வறிவினையு டையார்க்கும் பிறந்தெய்து மின்பமு மதனோடு கூடி நிற்கவே யுள்ளதாமாகலான்.

இம்மை யிப்பிறப்பு, அம்மை மேலுலகினையடைதல், மறு மை மறிந்து வரும்பிறப்பு. உடம்பிறந்தகாலத்து மிலே வேறுபடு தலின்மைநோக்கி யம்மையு மிம்மையேயாமென் றருளிச்செய் தார்.

இதனுலவர்க்குச் சிறிதும் வினைத்தொடர் பின்றென்பது வலியுறுத்தப்பட்டது.

வேறு. அந்தப் பிராரத்தம் புசிக்கவேண்டியதாயின், மாத்தி ரமங் காயங்களி லுண்டாமாகன்ம மவர் சிவசம்பாவனையாலே யவர்களை வாதியாது, பின்புண்டாஞ் சாயுச்சியமு மவர்களுக் கிப் பொழுதேயாம்.

இது சீவன்முத்தரான நிலையிலே தன்னிலே பரமுத்தியா மென்றறிவித்தது. (க)

இவர்களுக் கான்மாக்களை யிரட்சிக்கவேணுமென்கிற கரு ணை யில்லையோவென்னில்?

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

எ-து. கள்ளத்தலைவர் துயர்கருதி - கட்டிந்திரியங்களுக்கு முதன்மையா யிருக்கிற வான்மாக்கள்படுகிற துன்பத்தைத் திரு

வுள்ளத்திலே நினைத்து,—தங்கருணை வெள்ளத்தலைவர் மிக-தமக்குக் கிருபையாகிய ஞான சமுத்திரத்திலே மிகுதியு மழுந்தி நிற்பர்கள்.

நி-வ-உ. யானென்தென்னும் வஞ்சகத்தலைமையினை யுடைய வான்மாக்கள் படிந்துன்பத்தினை யெண்ணித்தம்மிடத் தெழுந்த கருணையாகிய கடலினுள்ளே மிகவுமலைதலைச் செய்வர்.

அலைத விரக்கத்தாற் றளர்தல்

இதனாலவர் வீட்டினைவிரும்பாத வுயிர்கள் மாட்டிறைவன் போ லருளுடையராதல் கூறப்பட்டது.

வேறு. ஆனால் 'ஞானவான்களுக்கு விடயங்களுடன் கூடி நிற்கலாமோவென்னில்? இந்திரியங்களுடன் கூடினலுண்டான கிலேசத்தையுணர்ந்து சிவனுடைய கிருபாசமுத்திரத்திலே விழுந்து தன்செயலற்றது வதுவாய்விடுவார்கள்.

" மறையோன், கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை கழுமலமுதுபதிக் கவுணியனறியு, மனையதன்மையை யாதலினின்னை, நினையவல்லவரில்லைநீணிலத்தே,, என்றவாறுகாண்க. (ம)

அணைந்தோர்தன்மை முற்றிற்று.

திருவருட்பயன் மூலமுமுரையும் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

# போற்றிப்பஃறொடைமூலமும்

இதற் குரையுடன்.

---

இஃது

காஞ்சிபுரம்

மகாவித்வான்

கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

கா. சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு

கன்னிகைப்பேர்

முருகேச முதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1898 ௵

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# போற்றிப்பஃறொடை.

## மூலமும் உரையும்.

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர்கோன்
மாமன்னுசோதி மணிமார்ப - னாமன்னும்
வேதம்வேதாந்தம் விளக்கஞ்செய்விந்துவுட
னாதநாதாந்த நடுவேதம் - போதத்தா
லாமளவுந்தேட வளவிறந்தவப்பாலைச்
சேமவொளியேயெவருந் தேறும்வகை - மாமணிசூழ்
மன்றுநிறைந்து பிறவிவழக்கறுக்க
நின்றநிருத்த நிலைபோற்றி.

எ-து. பொற்றாமரைப்பூவி னிலைமைபெற்ற நான்முகத்தோடெழுந் தருளியிருக்கிற பிரமாவுந் தேவர்களு மவர்களுக்கு மன்னனாகிய தேவேந்திரனுந் திருமகள்பொருந்திய மார்பின்மிருந்த பிரகாசமுடைய கௌத்துவமணி தரித்திருக்கிறவிஷ்ணுவுஞ் சகலபொருண்மையு நாவிலிருந்துசொல்லுகிறவேதங்களும் வேதமுடிவான வுபநிடதங்களுஞ் சகலவறிவும் விளக்கஞ்செய்கிற விந்துவு மதற் குள்ளொளியாகிய நாதமுங் குடிலையுந் தத்தமிதயத்திற் றோன்றிய போதச்செயல்களா லாமளவுந்தேடவு மளவுபடாம லப்பாற்பட்டிருக்கிற பேரின்பவொளியாகிய பதியான்மாக்களை யிரக்ஷிக்கவேண்டுமென்கிற கிருபைசந்தித்து எவர்களும் பத்தியுடனே தரிசித்து மலமயக்கநீங்கித் தெளிந்து தேறும்படிக்கு மிருந்த விரத்தினமணிகள் சூழ்ந்து விளங்குகின்ற வழகிய திருச்சிற்றம்பலத்துள் ஞானப்பிரகாச நிறைந்து தோன்றநின்று ஆன்மாக்களுடைய பிறவித்தொடர் பறுக்கச்செய்யு மானந்த நிருத்தநிலை மெய்ம்மை யிரக்ஷிக்க,

குன்றாத, பல்லுயிர்வெவ்வேறு படைத்துமவைகாத்து
மெல்லவினைப்பொழிய விட்டுவைத்துந்-தொல்லையுறு
மந்தமடி நடுவென் றெண்ணளவிறந்து
வந்தபெரியவழி போற்றி.

எ-று. அநாதியா யெண்ணிறந்த வான்மாக்கள் மோக்ஷ
மடைந்திருக்கவுங் குறைவில்லாம னித்தியமா யளவிறந்திருக்கிற
பெத்தான்மாக்களைக் கன்மத்துக்கீடான தேகங்களிற் சராயுஜம்
அண்டஜம் சுவேதஜம் உற்பீஜம்ஆகிய நால்வகையோனிகளினு
மாறிமாறி வேறுவேறாகப் படைத்து மவ் வான்மாக்களுக்குள்ள
வரியவினைப்போகங்களை யேறுமற் குறையாமற் கூட்டிப் புசிப்
பித்தும் சர்வசங்காரகாலத்தி லான்மாக்கள் சகலாவத்தைப்பட்
டுப் பிறந்திறந்தலைந்து திரிதலினைப்பு நீங்கும்படிக்குக் காரண
கேவலாத்தையி லொடுக்குவித்தும் அநாதியேதொடுத் தாதியா
யச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்து மளவிறந்தாதி நடுவந்த
மற்று வருகிறபெரிய கிருத்தியவழி யெம்மையிரக்ஷிக்க.

முந்துற்ற, நெல்லுக்குமிதவிடு நீடுசெம்பிற்காளிதமுந்
தொல்லைக்கடலேறென்றத் தோன்றுவரு - மெல்லா
மொருபுடையொப்பாயத்த னுள்ளவாறுண்டா
மருவமாயெவ்வுயிரு மார்த்தே - யுருவுடைய
மாமணியையுள்ளடக்கு மாநாகம்வன்னிதனைத்
தாண்டக்குங்காட்டத் தகுதியும்போன் - ஞானத்தின்
கண்ணைமறைத்த கடியதொழிலாணவத்தா
லெண்ணுஞ்செயன் மாண்டவெவ்வுயிர்க்கு-மூன்றடிக்
கட்புலனுற்காணுற்றங் கைக்கொடுத்தகோலேபோற்
பொற்புடையமாயைப் புணர்வின்கண் - முற்பாற்
றனுகரணமும்புவன முந்தந்தவற்றான்
மன்முதலால்வந்த விகாரத்தால் - வினையிரண்டுங்
காட்டியதனாற் பிறப்பாக்கிக்கைக்கொண்டு
மீட்டறிவுகாட்டும் வினைபோற்றி.

எ-று. ஆன்மாக்க ணித்தியமாயிருக்கச் சிருஷ்டிப்பட்டுத்
திதிப்பட்டுஞ் சங்காரப்பட்டும் வருவானேனென்னில் அநாதி

யிலே மலத்திலே பந்திக்கப்பட் டிருக்கையினாலே மல நீங்கும்ப
டிக்குக் கத்தா கிருபையினாலே செய்வித்ததா யிருக்கும். ஆணவ
மலமான்மாக்களைப் பந்தித்ததெப்படியென்னில் முன்னேயுண்
டான செல்லுக்குமிதவிடுமுளை மூற்பிற்பாடில்லாம லநாதியிலே
கூடத் தோன்றினதாயிருக்கும். இதிலாணவமல மான்மாவினறி
வைமறைத்த தெப்படியென்னின் செம்பினுடைய நிறத்தைக்
களிதங்கூடவுதித்து மறைந்தது போன்றிருக்கும். கத்தாவினு
டைய வியாபகத்திலே யான்மாக்க ணிறைந்திருக்கவுமாணவமல
முயிரைமறைத்த தெப்படியென்னில் பழமையாகியகடல் வியா
பகத்திலே நிறைந்திருக்கிற தண்ணீரை யுப்புக்கலந்து பிடித்திரு
ப்பதுபோன்றிருக்கும். இப்படியெல்லாம் வெவ்வேறு யொரு
புடையொப்பாகக்கத்தா வுள்ளவன்றேயுண்டா யருவமாய் மூல
கை யான்மாக்களையு மாணவமலம்பிடித் தறிவையுடைய மகத்தா
ன மாணிக்க மணியை நஞ்சுவாய்க்கு ளடக்கின மகத்தாகிய
சர்ப்பம்போலவும் பச்சையாய் முளைத்து விறகாகுமட்டு மக்கி
னியைத்தெரியாமன் மறைத்து வைத்திருந்த காட்டைப்போலவுமா
ன்மாவினுடைய ஞானக்கண்ணை மறைத்த கடுந்தொழிலையுடை
யவாணவமலத்திலே யறிவுஞ்செயலு மிறந்த சகலவுயிர்களுக்குங்
கத்தா கிருபையினாலே நன்று யவர்களிச்சையை நாடிப்பார்த்து
க்கட்புலனின்றும் காணுதபிறவியந்தகர்க்குரிமையுள்ளவர்களிச்சித்
தபடிக்குக் கோலைக்கொடுத் திச்சித்த விடங்களிலேகொண்டுபோ
ய்விடுகிறதுபோலப் பொலிவினையுடையமாயையின் காரியமான
தனுகரண புவன போகங்களையு முன்னேயுண்டாக்கிக்கொடுத்து
இச்சித்த புவனங்களிலே யிச்சித்தவினைப்போகங்களையுங் கூட்டி
முடித்துப் புசிப்பிக்கையினு மந்தவாணவமல மயக்கத்தாற் கத்
தாவுபகாரத்தை மறந்து நாமென்றிறுமாந்[illegible] விகாரவறிதா
றிதமுண்டாகையாற் புண்ணியபாவ[illegible]ண்டாம்படி கா
ட்டியந்தப் புண்ணிய பாவத்தினாற் பிறக்கும் பிறவியுண்டாகிய

திலூற்செய்யு மிருவினைகளையு மேற்றுக்கொண்டு மீண்டு மந்தவி னைப்போகங்களைப் புசிப்பதற்குக் கலாதிஞானங்களையுங் காட்டு ங் கிருபைத்தொழிலெம்மையிரக்ஷிக்க.

நாட்டுகின்ற, வெப்பிறப்புமுற்செயிருவினையானிச்சயித்
பொற்புடையதந்தைதாய் போகத்துட்-கர்ப்பமாய்ப்[துப்
புல்லிற்பனிபோற் புகுந்திவலைக்குட்படுங்கா
லெல்லைப்படாவுதரத் தீண்டியரிப் - பல்வகையா
லங்கேகிடந்த வநாதியுயிர்தம்பசியர்
லெங்கேனுமாக வெடுக்குமென-வெங்கும்பிக்
காயக்கருக்குழியிற் காத்திருந்துங்காயத்துக்
கேயக்கைகான்முதலா யெவ்வுறுப்பு-மாசறவே
செய்துதிருத்திப்பின் பியோகிருத்திமுன் புக்க
வையவழியேகொண் டணைகின்ற-பொய்யாத
வல்லபமே போற்றி.

எ-து. கத்தா வான்மாக்களுக்கு வினைப் போகங்களைப்புசி ப்பிக்கிறதற்குத் தேகங்களைக் கூட்டுகிற முறைமை சொல்லுமிட த்து முன் பாகமங்களிலே சொல்லப்பட்ட வெண்பத்து நான்கு நூராயிர மியோனிபேதப் பிறப்பின்வகை யெல்லாமுன்செய்த விருவினைக்கீடாக வுண்டாம்படி திருவுள்ளத்திலே நிச்சயித்துப் பலபிரகாரம் வெவ்வேறு தேகபேதங்களையுண்டாக்குமதுமல்லா மல் மானிடதேக முண்டாக்குமதெப்படியென்னில் அழகுபொ ருந்திய தந்தையுந் தாயுங் காமவிகாரந் திரும்பபடிக்குச் சையோக போகஞ் செய்யுங்காலத்து அவர்களுக்குப் பிள்ளைபே றுண்டில் லையென்பது மறிந்து தாயினுடைய கருப்பத்திற் றந்தையானவ ன் புல்லினுனியிற்றங்கிய பனித்திவலைபோன்றவிந்துவை விழம் போ ததற்குள் ளுயிரையடக்கி யுட்கருப்பாசயத்திற் சுரோணிதத்

த்துடனே கல்பித்திருத்தி யந்த விந்து தாய்வயிற்றி லளவுற்றிரு
க்கிற வுதராக்கினியினு லெரிகவராமலும் பலவகையாகிய வந்தவ
யிற்றுக்குட்கிடந்த வநாதி யுயிர்களாகிய புழுக்கள் தங்கள் பசியி
னாலேவந்தவிந்துவை விரைவிலே யெடுத்துப் புசியாமலும் வெய்
யகும்பிபாகம்போன்ற காயக்கருக்குழியிற் காத்திருந்து வினைக்
கீடான கைகால் முதலாகிய சகலவுறுப்புங் குற்றமறச்செய்து அ
ழகுபொருந்தத் திருத்திப் பின்பந்தத் தேகத்தையெடுத்துநேரே
யோகத்திலிருத்தித் திரிகால வர்த்தமானங்களையு மறியும்படிக் கு
ணர்வையுங் கொடுத்துப் பத்துமாதவரைக்கும் புசிப்புங்கொடுத்
துப் பின்பு பூமியிலே பிறக்கும்போ திரண்டுகையுஞ்சிரசிலே கு
வித்த பாவனையாய்த் தலைகீழாய் வரும்படி செய்துமுன்புகுந்த சி
றுவழியைப் பெருவழியாக்கி வுயிர் துன்புற்றிறவாம லுயிருக்குயி
ரா யணைந்திருந்து வெளியிலே யிழுத்துக்கொண்டு வருகிற மெ
ய்மையாகிய வல்லப மெய்மையிரக்ஷிக்க.

அம்மாயக்கர் ருன்மறைப்ப
நல்லவறிவொழித்து நன்குதீ - தெல்லையுரு
வக்காலந்தன்னிற் பசியையறிவித்தழுவித்
துக்காவிசோரத்தா யுண்ணடுக்க - மிக்கோங்குஞ்
சிந்தையுருகமுலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப்பக்கண்டு வாழ்ந்திருப்பப் - பந்தித்த
பாசப்பெருங்கயிற்றாற் பல்லுயிரும்பாலிக்க
நேசத்தைவைத்த நெறிபோற்றி.

எ - து தாய்வயிற்றைவிட்டு பூமியிலே பிள்ளை பிறந்தவுட
னே சரீரத்துக்குக் காரணமான மாயைச் சண்டமாருதம்போல
லைத்துமயக்க முன்கருப்பத்திலிருக்கும்போ திந்தப் பிறவித்து
ன்பத்தை நீக்கிக்கொள்ளவேண்டுமென் றவ்விடத்திலேநினைத்தி
ருந்த நல்நினைவையுமறந் துயிர் தேகமயமாய் நல்வினை தீவினை

த்தூன்பத் தொடர்ச்சியாற் பகுத்தறிவில்லாமல் அக்காலத்தி லுயி
ர்புசிப்பிச்சை யுற்றிருப்பதை யறிந்து பசிதெரியும்படி யறிவித்
துக்கதறியழும்படி செய்வித்துப் பின்னையழுவதுகண் டுடனேபெ
றும்போதுற்ற வருத்தத்தையுந் தாயானவள் மறந்து உட்கி யாவி
சோரும்படியுள்ளே நடுங்கிமிகுந்தோங்கிய வன்பினுலே யவள் கொ
ங்கை யிரங்கி யுருகப்பச்சுடம்பி லிருந்த இரத்தஞ் சிவப்புமாறி
வெண்ணிறவமுதமாய்க் கொங்கையில்வந்து சுரக்கிற வந்தத்தீஞ்
சுவைப் பாலைப்பிள்ளை வாய்வைத்துக்குடித்து முகஞ் செழித்தி
ருப்பதுகண்டுதாய்மகிழ்ந் திருக்கும்படி செய்வித்திப்படிப் பின்
னையாசையென்கிற பெருங்கயிற்றினுற் கட்டிச் சகலவுயிர்களுக்கு
ங் குழந்தைகளை வளர்க்கும்படிக்கு ஆன்மாக்கடோறு நேசத்தை
வைத்தருளிய நெறி யெம்மையிரக்ஷிக்க.

ஆசற்ற, பக்ஷப்பசும்பதத்தும் பாலுமப்பதத்து
நாளுக்குநாட்சகல ஞானத்து-மூள்வித்துக்
கொண்டாளவாளக் கருவிகொடுத்தோக்கநின்று
பண்டாரியான படிபோற்றி.

எ-து தாயன்பர் யிருந்திரக்ஷித்த சந்தா லிப்படிசகித்துவ
ருமுயிர்களுக்குக்கருப்பத்தி லிருக்கிற பசும்பருவத்தும்பாலனுயி
ருக்கிற அந்தப்பருவத்தும் நாளுக்குநாள்பரிபாலித்துவளரும்பால
குமார விருத்தப்பருவத்தஞ் சகலாவத்தைப் படுத்திப் பருவத்
துக்கேதுவான கலாஞானத்தைக்கொடுத்துச்செடலற்றவுயிர்கள்
வாங்கிக்கொள்ள வாள்வதற்கேற்ற முப்பத்தாறுவகைக் கருவிக
ளையுங்கொடுத் துயிர்க்குயிரா யிமைப்பொழுது நீங்காதநின்றுப
ண்டாரியா யுயிர்க் கேவல்செய்யுங்கிருபை யெம்மை யிரக்ஷிக்க.

தண்டாத, புன்புலால்போர்த்த புழுக்குரம்பைமாமலையி
லன்புசேர்கின்றனகட் டைக்காக்கி-முன்புள்ள
வுண்மைநிலைமை யொருகாலகலாது
திண்மைமலத்தாற் சிறையாக்கிக்-கண்மறைத்து

மூலவுருக்கட்டிலுயிர் மூடமாயுட்கிடப்பக்
காலநியதி யருகாட்டி-மேமேலாங்கு
மூன்றிவியன்கட்டிலுயிர் சேர்த்துக்கலைவித்தை
யத்தவராக மவைமுன்பு-தந்த
தொழிலறிவிச்சை துணையாகமானி
னெழிலுடையமுக்குணமு மெய்தி-மருளோடு
மன்னுமிதயத்திற் சித்தந்தாற்கண்டபொரு
ளின்னபொருளென் றியம்பவொண்ணா-வந்நிலைபோய்க்
கண்டவியன்கட்டிற் கருவிகளினாற்றொழியக்
கொண்டுநியமித்தற்றை நாட்கொடுப்பப்-பண்டை
யிருவினையான்முன்புள்ள வின்பதுன்பங்கண்
மருவும்வகையங்கே மருவி-யுருவுடனின்
றேருந்துறாதலாய வோலக்கமண்டபத்திற்
போங்கருவியெல்லாம் புகுந்தீண்டி-நீங்காத
முன்னைமலத்தினிருண் மூடாவகையகத்துட்
டுன்னுமிருணீக்குஞ் சுடரேபோ-லந்நிலையே
சூக்கஞ்சுடருருவிற் பெய்துதொழிற்குரிய
ராக்கிப்பணித்த வறம்போற்றி.

எ-து கர்த்தா பண்டாரிபோலநின்று தத்துவங்களைக்கூட்டியிரக்ஷிக்கும்படி யெப்படியென்னில் நீங்காமற் புன்புலால்நாறுந்தோல்போர்த்த புழுக்கூடான சரீரமாகிய பெரியமனைக்குள் இருபையிருலே துரியாதீதந் துரியஞ் சுழுத்திசொப்பனம் சாக்கிரமென்னும் பெயருடைய வைந்து கட்டாக்கி யான்மாவுக்காதியிலே பொருந்தின வுண்மைநிலையான வாணவமல மறைப்புச்சற்றுநீங்காமற் றின்மையா யுயிரைச்சிறைப்படுத்தி நிற்குமூலாதாரமாகியவீட்டி லதிதப்பட்டுயிர் மூடமாயுட்கிடப்ப வவ்விடத்

திவிளைப்பாறுமட்டுங் காலத்தை நியதியினெறிறுத்தி யப்பான்மே
லே யோங்கியிருக்குந் துரியமான நாபித்தானவீட்டி லுயிரைப்பி
ராணவாயுவுடனேகூடச் சேர்த்து அவ்விடத்திலே கலைவித்தையி
ராகத்தினுன் முன்னேயான் மாவினுடையதொழிலறிவிச்சைமூன்
றையுமெழுப்பியதற்குத் துணையாகப் பிரகிருதிமாயையினுண்
டானவழகுபொருந்திய சாத்துவீக ராசததாமத மென்னு முக்கு
ணங்களையுஞ்சேர்த் தப்பான் மேலே சுழுத்தி வீடாகிய ஹிருதய
த்தானத்திற் சித்தக்கருவியுடனே கூட்டி யவ்விடத்திற் சித்தத்
தாற் கண்டபொருளின்னபொருளென்றறியாமன் மயங்கிநின்
றவுயிரைச் சொப்பன வீடாகிய கண்டத்தானத்திற் சேர்த்து அ
வ்விடத்திலே சத்தாதியைந்தும் வசனாதியைந்தும் அந்தக்கரண
ங்கள் நான்கும் வாயுக்கள் பத்தும் புருடனுமானவிருபத்தைந்து
கருவியுங்கூட்டி முன்னே செய்த விருவினைக்கீடாக முன்சாக்கி
ரத்திலே யின்ப துன்பத்தைப் புசிப்பித்தமுறைமைபோலச்சொ
ப்பனத்திலு மிருவினைப்போக முண்டாவது மறிந்து சுத்ததத்து
வங்களினாற் பிரேரித்துப் புசிப்பித்துப் பின்பதற்கு மேலாய தூ
லதேகத்திற்கண் வளர்ந்து நிற்கிறசாக்கிரவீடாகிய நுதற்றான
மருவிய வோரைங்கமண்டபத்தின் முன் சேவலாவத்தைதக்குக் கூடா
மனின்ற பூதங்களைந்தும் புருடதத்துவமீர்கலாதியின்ற வித்தியா
தத்துவமாறுஞ் சிவதத்துவமைந்து மாகப்பதினொறு முன்சாக்கிர
த்தி லிருந்த ஞானேந்திரியமைந்துங் கன்மேந்திரிய மைந்துஞ்
சொப்பனத்திலிருந்துவந்த விருபத்தைந்து கருவியு மற்றப்புற
க்கருவியெழுபத்தைந்து மாகத் தொண்ணூற்றாறு கருவிகளையும்
பொருத்திச் சீவிக்கும்படி செய்வித்து முன்னேவிட்டுநீங்காமலே
ந்தவத்தையினு மறைந்துநின்ற ஆணவமல மிருள்கூடாதபடி ம
லையிலேயெரிகின்ற பிரகாசின்ற விருளை நீக்கும் விளக்கைப்போல
ச்சுக்குமாதி வாக்குடனே கூடிப் பிரகாசித்து நிற்குஞ் சகலாவ
த்தையிலுயிரை நிறுத்திக் கன்மத்துக்கேதுவான சத்தாதி விடய
ங்களைக்காட்டி யான்மாக்கள் யானெனதென்று கர்ச்சித்துநின்

றவைகள் வெவ்வேறு தொழிற்குரியராம்படி செய்விக்குஞ் சிவதர்ம மெய்மையிரட்சிக்க.

வேட்கைமிகு, முண்டிப்பொருட்டாலொருகாலவியாறு
மண்டியெரியும் பெருந்திமாற்றுதற்குத் - திண்டிறல்சேர்
வல்லார்கள்வல்ல வகையாற்றொழில்புரித
லெல்லாருமுடனே யொருங்கிசைந்து - செல்காலை
முட்டாமற்செய்வினைக்கு முற்செய்வினைக்குஞ்செலவு
பட்டோலையிட்டும் படிபோற்றி.

எ - து. கர்த்தா சகலவஸ்துவைத்தயிற் கருவிகூட்டி முடிக்குமுபகாரத்தைமறந்து ஆன்மாக்கள் பிரபஞ்ச வாசைமிகுந்துபுசிப்புநிமித்திய மொருகணநேரமாறலுங் கெடாமல் வயிற்றிலே மண்டியெரிந்து கொண்டிருக்கிற வடவாமுகாக்கினிபோன்ற பசியைத்தணிக்கும்பொருட்டுத் திண்ணியவாங்காரப் பலன்களால் வரவரவல்லமைக்கேற்ற தொழில்கள் செய்யுமிடத் தவர்களுக்குத் தோன்றாம லுடனிகழ்ச்சியான வொருமைப்பாடாய்க் கூடிநின்றவரவர் வினைவின்படி செய்வித்துக்கொடுத் தான்மாக்கள் பானனைதென் றிடையறாது செய்யும்வினை மிகுதியான வாகாமியத்துக்கு முன்செய்தவாறத்தாவிலுங் கட்டுப்பட்டிருக்கிற சஞ்சிதத்துக்கு மதிலேபாகப்பட்டுப் புசிப்புக்குவந்த பிராரத்துவஞ்செலவுக்கு மவரவர் கணக்கப்பிள்ளையாயிருந்து பட்டோலை யெழுதியொப்பிக்குங்கருணையிரட்சிக்க.

கட்டோங்கு, மிக்கிலைமைமானுடருக் கேயன்றி யெண்
மன்னுயிர்க்குமிந்தவழக்கேயாய்-முன்னுடைய [ணிலா
நாளுள்வரையி லுடல்பிரித்துநல்வினைக்கண்
வானுளின்மாலா யயனுகி-நீளுகர்
வானாடர்கோமுதலாய் வந்தபெரும்பதத்து
நானுவிதத்தா னலம்பெறுநாட்-டான்மாளா

வெற்றிக்கடுந்தூதர் வெகுண்டுடன்வந்து
பற்றித்தம்வெங்குருவின் பாற்காட்ட-விற்றைக்கு
மில்லையோபாவி பிறவாமையென்றெடுத்து
நல்லதொழின்சொ னடிவாகச் - சொல்லியிவர்
செய்திக்குத்தக்க செயலுறுத்துவீரென்று
வெய்துற்றுரைக்க விடைகொண்டு-மையறநுஞ்
செக்கினிடைத்திரிந்துந் தீவாயிலிட்டெரித்துந்
தக்கநெருப்புத்தூண்டழுவித்து-மிக்கோங்கு
காராசங்காய்ச்சிச் செவிமடுத்துநாவரிந்து
மீராவன்னூலைத்தின் னென்றுறுத்தும்-பேராம
லங்காழ்நரகத் தழுத்துவித்தும்பின்னுந்தம்
வெங்கோபமாறாத வேட்கையரா-யிங்கொருநா
ளெண்ணி முதற்காறாத வின்னற்கடிகாரம்
பன்னெடுநாட்செல்லும் பணிகொண்டு-முன்றொடக்
கண்டுடன்கழித்தல் காரியமாமென்றெண்ணிக்
கொண்டுவருவோரின் குறிப்பறிவார் மண்டெரியிற்
காய்ச்சிச்சுடவுருக்கக் கண்ணூறிக்கனன்றிய
மீய்த்துத்தாய்தந்தைதம ரின்புறுதல்-வாய்த்தநெறி
யோடியதேரின்கீ ழுயிர்போனகன்றாலே
நீடுபெரும்பாவமின்றே நீங்குமென-நாடித்தன்
மைந்தனையுமூர்ந்தோன் வழக்கேவழக்காக
வஞ்சனையசிந்தை நமன்றூதர்-வெஞ்சினத்தா
லல்லலுறுத்து மருநரகங்கண்டிரங்க
வல்லகருணைமறம் போற்றி.

எ - து. கத்தா வான்மாக்கள்செய்த விருவினைக்குந் தலைக்
கெழுதினபடிக்குப் புண்ணிய பாவத்துக்குள்ள பலன்களையுங் கூ-
ட்டுகிற தெப்படியென்னில் பொருந்தி மிகுந்த விருவினைமுறை

லே யழுந்துவித்தும் பின்னுந்தங்களுடைய கடுங்கோபமாறுந்
விச்சையுடையரா யவற்றிலேயொருநாள்போல் துன்பத்தைக்
கொடாநின்ற கொடிய நரகங்களிலே பலநெடுநாட் செல்லுமட்
டுமியமகிங்கர்கள் பணிசெய்யக் காருண்ணிய வடிவாகிய கர்த்தா
ஒற்றுயிர்களை யமகிங்கரர்களிடத்திலே காட்டிக்கொடுத்து அவர்
கள் துக்கப்படுகிறதைப் பார்த்திருப்பானே னென்னில் உலகத்
திலே தந்தை தாயானபேர்கள் பிள்ளையினுடைய நோய் மிகுதி
யை யுள்ளபடியறிந்து நோய்தீரும்படிக் கதற்கேற்ற முறை
மைசெய்வது கடனென்று நினைந்து பிள்ளையை நோயறிந்து மரு
ந்துகொடுத்துத் தீர்க்கும் வைத்தியத்தொழில் செய்கிறவனிடத்
திலே யொப்புவித்து அவனிருப்புகாராசங்காய்ச்சிச் சுடவுஞ்சத்
திரமிட் டறுக்கவுங் கண்படலத்தை யுரிக்கவு மிப்படிப்பலவிதி
யையுஞ்செய்யப் பிள்ளை வருந்தப்பட்டாலு நோய்தீர்ப்பதையறி
ந்தந்தவைத்தியனுக்கு நல்ல திரவியமுதலானவெகுமானம்பண்
ணிச் சந்தோஷத்துடனே யவர்கள் கண்டுநிற்பதுபோலவுமனுச்
சக்ரவர்த்தியான சோழராஜா தானரிய தவப்பண்ணிப்பெற்ற வ
ருமையான வொருமகன் திருவாரூர்த் தெருவழியேதேரேறிப்
போம்பொழுது மாயமாகத் தேர்க்காலில் வீழ்ந்திறந்த பசுவின்
கன்றினிமித்திய மந்தப் பாவந் தீரும்படிக் கெத்தனைபேர்கள்மா
றுபாடாய்த் தடுக்கவுங்கேளாமற்பிள்ளையைக்கன்று தங்கினபடிக்
குத் தேர்க்காலிலேபோட்டு நசிக்கிப்போடவேண்டுமென்று து
ணிந்து தேரிலே தாய்ப்பசுவைவைத் தூர்ந்துகொன்றது மகனை
யமன் பிடிந்து வருந்தாதபடிக்குச்செய்தகிருபையே யானையால
ந்தவழுக்குப்போலவும் விடம்பொன்றசிந்தையையுடைய நமன்
றூதர் மிகுந்த கோபத்துடனே பாவஞ்செய்த வுயிர்களைக் கொடி
ய நரகவாதனைப் படுத்துவதைச்சகல வுயிர்களுக்குந் தந்தையுந்
தாயுமாயிருக்கிற சிவபெருமான் சத்தியமலநோய் தீர்ந்தாற் போதுமெ
ன்று சந்தோஷத்துடனேகண்டு நிற்கிற வல்லபமான கருணை மற்
றெம்மை யிரட்சிக்க.

பல்லுயிர்க்கு, மின்னவகையா லிருவினைக்க ணின்றருத்தி
முன்னை முதலென்ன முதலில்லோ-னவ்வினைக்க
ணெல்லாவுலகு மெடுப்புண்டெடுப்புண்டு
செல்காலம்பின்னாகஞ் சோரமே-நல்லநெறி
யெய்துவதோர்காலத்தன் னன்பரைக்கண்டின்புறூஉ
உய்யுநெறிசிறிதே யுண்டாக்கி-மையலே
மட்டாய்மலராய் வருநாளின் முன்னைநாண்
மொட்டாயுருவா முறைபோலக்-கிட்டியதோர்
நல்லபிறப்பிற் பிறப்பித்துவொம்வினை
யெல்லையிரண்டு மிடையொப்பிற்-பல்பிறவி
யத்தமதிலன்றோ வளவென்றுபார்த்திருக்கு
சத்திபதிக்குந் தரம்போற்றி.

எ - து. கர்த்தா வெங்ஙனஞ் சொன்ன வொன்பது வகையி னுலு மிரட்சிக்கப்பட்ட வான்மாக்களுக்குப் பெத்தகால முடிவாகமட்டு மிருவினைப் பலன்களை யவனவ னது முன்னிலையாக நின் றருத்தித் தனக்குமேலொரு கர்த்தாவில்லாத சகலபுவன கர்த்தாவாகிய சிவனந்த விருவினைகளுக் கிருப்பிடமானமாயா வுலகங்களை யெடுப்புண் டெடுப்புண்டு மாறிமாறி வரும்படிக்காதியாயநாதிதொடுத்துச் சிருஷ்டித்துத் திதித்துஞ் சங்கரித்துந் திரோபவித்து மநுக்கிரகித்துந் தமது சத்தியினாலே பஞ்சகிருத்தியங்களைச் செய்வித்து மலபரிபாகப்பட்டதை யறிந்து பின்னரகத்திற் செல்லும் பெத்தத்தை நீக்கி யான்மாக்களுக்கு முந்திக்காலத்தைநேர்ப்படுத்தவேண்டித் தனக்கன்பரான மெய்யடியார்களைக் கண்டவுடனே தன்னைக் கண்டதுபோல வந்தவான்மாக்க ளின்புற்றவரோவின பணிவிடைகேட் டுய்யும்படிக்குச் சிறிது நல்லவழியை யுண்டாக்கிக் காட்டி யந்நல்வழியே சிவபுண்ணியமான புத்திபூர்வத்தினுமபுத்திபூர்வத்தினு முபாயச்சரிதையாதியிலுமுண்மைச் சரிதையாதியிலுமாகக் கிரமத்திலே செய்யப்படுத்தியந் தமட்டாய் மலராயிருக்கிற வரும்பு பருவமாகிய வரும்புருவத்துக்கடுத்த முத்

னுள் மொட்டாயிருக்கிற மலர்போல் மலம் பரிபாகம் பிறந்த த
ன்மை சமீபத்திற் கண்டொப்பற்ற நல்லசிவ சமயத்திற் பத்திமி
குந்த விடத்திலே பிறப்பித்து நாட்பட்ட விருவினையு மேகா
லத்திலே யிரண்டுந் தராசு நுனிபோலச்சமனானபருவத்திலே ப
லபிறவியு மத்தமாம்படிக்குத் தமது திவிரதரம் பொருந்தின வ
ருட்சத்தியை யவ்வுயிர்களின் மலநீங்கும்படிக்குப்பதிக்குந்தாமெ
ம்மை யிரட்சிக்க.

முத்திதரு, நன்னெறியின் ஞானகலர் காடுமல மொன்றி
மங்கிலேயேயுவ்வண்ணின் றறுத்தருளிப்-பின்னன்பு [னையு
மேவா விளங்கும் பிரளயாகலருக்குத்
தேவாய்மலகன்மந் தீர்த்தருளிப்-பூவலயந்
தன்னின் றுநீங்காச் சகலர்க்கவர்போல
முன்னின் றுமும்மலந் தீர்த்தாட்கொள்கை- யன்னவெனும்
காதிகுணமாதவிரு வாடுந்திருத்தொழிலுஞ்
சோதிமணிமிடற்றுச் சுந்தரமும்-பாதியாம்
பச்சையிடமும் பவளத்திருச்சடைமேல்
வைச்சநதியு மதிக்கொழுந்து-மச்சமற
வாளரவு மழகார்த்திருநுதன்மே
லீடுறுநவன்னி நெடுங்கண்ணுங்-கேழலயன்
கூடுந்தமருகமுங் கோலவெரியகலும்
பூட்டரவக்கச்சும் புலியதளும்-வீட்டின்ப
வெள்ளத்தழுத்தி விடுந்தாளினுமடியா
ருள்ளத்தினும்பிரியா வொண்சிலம்புங்-கள்ளவினை
வென்றுபிறப்பறுக்க சாத்தியவீரக்கழலு
மொன்றுமுருத்தோன்றும னுள்ளடக்கி-யென்று
பிறவாதவின்பத் தெனையிருத்தவேண்டிப்
பிறவாமுதல்வன் பிறந்து-மறவாருக்
தாருலாவும்புயத்துச் சம்பந்தநாதனென்று
பேரிலாநாதனொரு பேர்புனைந்து-பாரோர்த

முண்டியுறக்கம் பயமின்பமொத்தொழுகிக்
கொண்டெழுந்த குணம்போற்றி.

எ - து. இருவினையொப்பு மலபரிபாகஞ் சத்திநிபாதம்பெ
ற்ற பக்குவான்மாக்களுக்குக் கர்த்தா வாசாரியமூர்த்தமா யநுக்கி
ரகம் பண்ணுகிற முறைமை யெப்படியென்னில் முத்தியைக்
கொடுக்கு நல்வழியையுடைய விஞ்ஞானகலர்க் கவர்கள்பற்றியிரு
க்கிற வாணவமல மொன்றினையு மவர்களறிவுக்குட்போறிவாய்
ப் பிரகாசித்துத் தோன்றி நீக்கி யருள்வடிவாக்கியேயத்தி லழுத்
தும்படி கடாட்சிப்பர். பின்பு பொருந்திவிளங்காநின்ற பிரளை
யாகலருக்குத் திருவுரு காணும்படிக்கு மானுமழுவுஞ் சதுர்ப்புஜ
முங் காளகண்டமுந் திரிநேத்திரமுமுடைய திருமேனிகொண்டி
ருந்து அவர்களைப் பற்றியிருக்கிறவாணவமலங் கன்மமல மிரண்
டையு நீக்கி யருள்வடிவாக்கிஞேயத்தி லழுந்தும்படி கடாட்சிப்ப
ர். அசுத்த மாயையிற்றோன்றிய பூலோகத்தைவிட்டுநீங்காமலிரு
க்கிறசகலருக்கவர்களைப்போல்மானிடச்சட்டைசாத்தி மானைக்கா
ட்டிமானைப்பிடிப்பார்போல முன்னின்றுதரிசனைகொடுத்தவர்
கள்பற்றியிருக்கிறவாணவங் கன்மமாயையென்னுமூன்றுமலங்க
ளையுந் தீக்ஷாக்கிரமங்களினாலேதீர்த்தருள்வடிவாக்கி யடிமையாக்
கிக் கொள்ளுதலக்கர்த்தாவுக்காதிகாலத்திலே யுண்டானகுண
மாதலாற் றிருச்சிற்றம்பலத்தின் கண்ணேநின்றாடுகின்ற திருநடன
த்தொழிலும் பிரகாசம் பொருந்திய நீலமணிபோன்றிலங்குகிற
காளகண்டமுந் திருமேனியிற் பாதியாய்ப் பச்சைவடிவுகொண்
டிலங்குஞ் சிவகாமிதங்கிய விடப்பாகமும் பவளக்கொடி படர்ந்
து கிடப்பதுபோன்ற திருச் சடாபாரத்தின்மேற் றரித்திருக்கிற
கங்கையும் பாலசந்திரப் பிரபையும் வெருவும்படிக்குப் படம்வி
ரித்தாடுகிற சர்ப்பமும் அழகு மிகுந்ததிருநுதனடுவின்மேனோக்
கி நீண்டிடங் கிலங்கு மக்கினிநேத்திரமும் வலக்கையிற் பிடித்
திருக்கிற கேடில்லாத வயத்துடனே முழங்குந் தமருகமு மழகு

பொருந்திய விடத்தைக் கையிற் பிடித்திருக்கிற வக்கினி குண்டமு
மரையிலே கட்டியிருக்கிற வைந்தலை யரவக்கச்சும் புள்ளிபொ
ருந்திய புலித்தோலுடையும்பக்குவான் மாக்களை மோக்ஷமாகிய
பேரின்ப வெள்ளத்தழுந்துதற்கூன்றின பாதத்தினு மடியா ருள்
ளத்திற்கலந் தின்பபூரணமாயிருக்கிற ஞான குஞ்சிதபாதத்தினு
ம்பிரியாமற் றரித்திருக்கிற திருவருட்பிரகாசம்பெயருந்திய சில
ம்பு முயிர்களைச் சோரத்தனமாய்க் களவுகொண்டு தன்வசப்ப
டுத்துகிற முன்னை வினையையென்று பிறவித்துன்பங்களையறுப்
பதற்கு மலவைரிகாமென்று முழந்தாளிற் றரித்துக்கொண்டிரு
க்கிற வீரகண்டாமணியையு மிவைகளொன்று முருந்தோன்று
நபடி யுள்ளேயடக்கி யொளித்துக்கொண் டென்றுமுடிவில்லாத
பேரின்ப மோக்ஷத்தி லெம்போல்வாரையு முறுத்தவேண்டிப்
பிறவாமுதல்வன்பிறந்து வந்தானென் றதிசயமாய்ச்சொல்லும்ப-
டிக்குத் திருமேனிகொண்டு தேன்பொருந்தியசெங்கழுநீர்மாலை
யுலாவும் புயத்தையுடைய மறைஞான சம்பந்தநாதனென்னொரு
பெயருஞ் சுபாவத்திலில்லாதநாத னொருதிருப்பெயருஞ் சாத்திக்
கொண்டு பூமியினுள்ளவர்களைப்போலவுண்பதும் உறங்குவதும்
அஞ்சுவதும் விடயபோக மின்புறுவது மொத்தொழுகிக்கொ
ண்டெழுந்தருளி மகிழ்ந்திருந்த குண மெய்ம்மையிரட்சிக்க.

மீண்டாய, வாறுசமயப்பொருளு மறிவித்தவற் றிற்
பேறின்மையெங்களுக்கே பேருக்கித் - தேறுத
சித்தத்தெளியத் திருமேனிகொண்டொரு
மத்தகைமைதானே யமையாமல் - வித்தகமாஞ்
சைவநெறியிற் சமயமுதலாக
வெய்துமபிடேக மெய்துவித்துச் - செய்யதிருக்
கண்ணருளானோக்கிக் கடியபிறப்பாற்பட்ட
புண்ணுமிருவினையும் போயகல - வண்ணமலர்க்

ணைகத்தலந்தனைவைத்தருளிக் கல்லாயமெஞ்சுருக்கி [துஞ்
மெய்த்தகைமையெல்லாம் விரித்தோதி - யொத்தொழு
சேணாரிருள்வடிவஞ் செங்கதிரோன்பானிற்பக்
காணூதொழியுங் கணக்கேபோ - லாணவத்தி
னூதிருகையாம லெண்பாலனுகாம
னீதிநிறுத்து நிலைபோற்றி.

௭ - து. இப்படி மானுடரைப்போலத் திருமேனிகொண்டாசாரியமூர்த்தமாய்ப் பெண்ணாகடத்தின் கணெழுந்தருளியிருந் தெங்களுக் ககங்காரம்பொருந்திய புறச்சமயப் பொருள்களெல்லா மழிவித்ததிலே யொருபிரயோசனமு மில்லையென்றறிகிற திடமே பெறுகும்படி செய்வித்துத் தேறுமலிருந்த சித்தந்தெளியும்படிக்குத் திருமேனி தரிசனைகொடுத்தருளிய வந்தத் தகைமையும் போகாமன் மேம்பாடாகிய மெய்கண்ட சந்தானச் சுத்தசைவநெறியில் விட்டகுறையறிந்துசமயவிசேடநிருவாணம்பொருந்தப்பட்ட வபிடேகமென்னு நான்குவகைத்திட்சையும் பண்ணிச் சிவந்த தாமரைமலர்போன்ற திருக்கண்ணருளினூற்பார்த்துத் துன்பப்பிறப்பினூற்பட்ட புண்ணுடம்புத் துன்பமு மிருவினைத்துன்பமு முயிரைவிட்டு நீங்கும்படிக்கழகுபொருந்திய தாமரைமலர்போன்ற திருக்கைத்தலத்தைச் சிரசிலேவைத்தருளிக் கற்போன் றிருந்த நெஞ்சை யக்கினியைச் சேர்ந்த மெழுகுபோல வுருக்கித் திரிபதார்த்த மெய்த்தகைமைப் பொருள்களெல்லாம் விரித்தோதி யுபதேசித்தொற்றுமையாக வாகாயத்தைநிறைத்த பூதவிருள்வடிவானது அந்தஆகாயத்திற் சிவந்தசூரியனுதையமானவுடனே பூதவிருட்பிரகாசமாய் மறைந்து நீங்கலாகாயஞ் சூரியவொளி வடிவாகிநின்ற முறைமைபோல வுபதேசித்த ஞானப்பிரகாசத்தைப்பற்றி மும்மலமுநீங்கி யான்மபோத மருளிலடங்கச்செய்து மலமான்மபோதத்தையும் பற்றுமற் றன்னு

வெனக்கும்வீணேயிரங்கியநுக்கிரகம் பண்ணவேண்டி வேதாகம புராணசாத்திரங்களிற் சொல்லப்பட்ட வெல்லாப்பொருளுக்கு மனத்துக்குந் தாமரை மலரி னெழுந்தருளி யிருக்கும்பிரமவிஷ்ணுமுதலாகிய தேவர்களினைப்புக்குந் தெரியப்படாததாரம்போலே நின்றும் ஜடசித்துக்களிடத்தினு மணித்தாய் நிறைந்திருக்கிற வழகுபொருந்திய ஸ்ரீபாத கமலத்தை யடியேன் சிரசின்மீதிருந்து பிரகாசிக்கும்படிக்கு வைத்தநுக்கிரகம்பண்ணிப்பெரியமகாதேவரென்னும் பெயரையுடைய மறைஞான சம்பந்த ஞானசாரியரெனக்கநுக்கிரகம்பண்ணினபொருளேதென்னிற்றான் வேறு நான்வேறாய்வந்துபொருந்தின தில்லையென்னும்வழக்கை யறிவித் தநாதியேதொடுத்தன்னிடத்திலே யொளித்திருந்து நம்மைக்காணுதிருக்க நாமென்றமுன்னைக்கண்டுகொண்டிருந்தோமென்கிற கள்ளத்தையிப்போதுயிர்க்குயிராய்ப் பிரகாசித்துநின்றறிவித்த பாதமானதெம்மையிரக்ஷிக்க.

வள்ளமையாற், றன்னைத்தெரிவித்துத்தன்றருளினுட்கிடந்த
வென்னைத்தெரிவித்த வெல்லையின்கண்-மின்றாரும் [ந்த
வண்ணமுருவ மருவுங்குணமயக்க
மெண்ணுங்கால மெய்ப்பொருளு-முன்னமெனக்
கில்லாமைகாட்டிப்பின் பெய்தியவாகாட்டியினிச்
செல்லாமெனாட்டுஞ் செயல்போற்றி,

எ - து. வளப்பமிகுந்த கிருபையினாற் கர்த்தா தன்னைத்தெரிவித்துத் தன்பாததாமரையான திருவருளுக்குள்ளே பிரியாமலென்றுங்கிடந்தவென்னையுந் தெரிவித்தவெல்லைக்கண்மின்போ

ன்று தோன்றியழிகிறவண்ணத்தையுடையதேகமுந்தேகத்தை
ப்பொருந்திய குணமயக்கங்களு மறிவைவிளக்கப்பட்டகலையாதி
முதலாகியதத்துவங்களு முன்னில்லாதகேவலாவத்தையையுமுன்
னேயறிவித்துப் பின்பு தேகமுதலிய கருவிகரணாதிகளுங் கூடி
னசகலாவத்தையு மறிவித்து இனியருளைவிட்டுத் தேகமுதலான
கருவிகரணாதிகளிற் செல்லாத சுத்தாவத்தையுமறிவித்தசெயலெ
ம்மையிரக்ஷிக்க.

எல்லாம்போய்த், தம்மைத்தெளிந்தா ராய்த்தாமேபொ
யெம்மைப்புறங்கூறி யின்புற்றுச்-செம்மை [ருளாகி
யவிசாரம்பேசு மகம்பிரமக்காரர்
வெளியாமிருளில் விடாதே - யொளியாய்நீ
நின்றநிலையிலே நிகழ்த்தியொருபொருள்வே
றின்றியமையாமை யெடுத்தோதி - யொன்றாகச்
சாதித்துத்தம்மைச் சிவமாக்கியிப்பிறவிப்
பேதந்தனிலின்பப் பேதமுறாப்-பாதகரோ
டேகமாய்ப்போகாம லெவ்விடத்துங்காட்சிதந்து
போகமாம்பொற்றாளி னுட்புணர்த்தி - யாதியுட
னிற்கவழியா நிலையிதுவேயென்றருளி
யொக்கவியாபகத்தன் னுட்காட்டி - மிக்கோங்கு
மாநந்தமாக்கடலி லாராவமுதளித்துத்
தான்வந்துசெய்யுந் தகுதியினா - லானுயிர்தான்
முன்கண்டகாலத்து நீங்காதமுன்னோனை
யென்கொண்டு போற்றிசைப்பேனியான்.

எ - து. எல்லாத் தத்துவங்களையும்-பொய்யென்றுகண்டு நீ
க்கித் தம்மைத்தெளிந்தோமென்று நமக்குமேலேவேறொருபொ
ருளில்லையென்றுஞ் சைவசித்தாந்திகளுடனே கூடலாகாதவர்ந
மக்குப் புறம்பென்றும்பேசித் தன்னின்பத்தைத்தானே புசித்தி
ருப்போமென்று மகிழ்ச்சியுற்றுச் செவ்விதானநிருவிகாரி நாமே
யென்றுபேசி யகமே பிரமமென்னும் வாதிகள் தன்னையுமறியா
மற் றலைவனையு மறியாமன் மயங்கிநிற்கிறவெளிபோன்றவிருளி
லென்னைவிடாமல் ஞானசொரூபவொளிவடிவா யிப்போது நீநி
ற்கிற நிலையென்று நிகழ்த்தியிதற்குமேலே வேறொருபொருளின்
றி யமையாமையு மெடுத்தோதி யான்மாவைச் சிவத்துடனே
யொன்றாகும்படி சாதித்துத் தம்மைச்சிவமாக்கியிந்தப் பிறவிப்
பேதமாகிய சரீரத்திலேதானே ஜீவன்முத்தித் தன்மையும் பரமு
த்தித்தன்மையுஞ் சரியாகக்கண்டு வெற்றின்பமான சிவபோகம்
புசியாமல் சமவாதம்பேசி யான்மசத்தியுடனேகூடி யின்பம் புசி
ப்போமென்கிறபாதகரோடுங்கூடி யேகமாய்ப் போகாமலென
க்கெவ்விடத்துங் குருலிங்கசங்கமாய்க் காக்ஷிகொடுத்து. மேலா
னபோகமுண்டாகிற திருவருட்பாதத்திற் பிரியாம லுள்ளேயடங்
கிக்கிடக்கும்படி பொருத்துவித்து ஞேயத்திலழுந்திநிற்குமழியா
தசாயுச்சியநிலை யிந்தவருணிலையென்று விகற்பந்தோன்றாமலநு
க்கிரகித்துத் தமதுபரிபூரண வியாபகத்துள்ளே யானுமொக்கவி
யாபித்து நிற்குந் தன்மையுங்காட்டி மிகுந்தோங்கியளவுபடாம
னிறைந்துநின்ற தமது பேரானந்தத் திருவருட்கடலில் விளைந்த
வாராதஞேயவமுதத்தைப் புசித்துக் களித்திருக்கும்படி தாமே
யென்னைத்தேடிவந்துகொடுத்த பெருங்கருணைத்தகுதியினாலுனு

யிர்தானே முதன்மையென்று நின்றபெத்தகாலத்து மதற்குமுதன்மையுங் கொடுத்து நீங்காமனின்ற முன்னோனை யெந்தவிதங்கொண்டு புகழ்ந்து போற்றுவேனியான்.

போற்றிதிருத்தில்லை போற்றிசிவபோகம் [யெங்கள்
போற்றியவன்மெஞ்ஞானப் புண்ணியநூல் - போற்றி
வெம்பந்தவாழ்க்கைவிட வேறுய்வந்துண்ணின்ற
சம்பந்தமாமுனி பொற்றாள்.

போற்றிப்பஃறொடை மூலமும் உரையும்.




திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி

# உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

## வினாவெண்பாமூலம், கொடிக்கவிமூலம்,

# உண்மைநெறிவிளக்க

## மூலமும் உரையும்.

---

இஃது,

காஞ்சிபுரம்

மகாவித்வான்

## கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

## கா. சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கன்னிகைப்பேர்

## முருகேச முதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1898௵

உ

திருச்சிற்றம்பலம்.

# வினாவெண்பா

## மூலமும் உரையும்.

---

நீடுமொளியு நிறையிருளு மோரிடத்துக்
கூடலரிது கொடுவினையேன் - பாடி. தன்மு
னொன்றவார்சோலை யுயர்மருதச்சம்பந்தா
நின்றவா றெவ்வாறுநீ

இ - ள். நீடுமொளியு நிறையிருளு மோரிடத்துக் கூடலரிது-விரிந்தபிரகாசமு நிறைந்தவிருளு மோரிடத்திலே கூடமாட்டாது—கொடுவினையேன்பாடித்தன்முன்-கொடுவினையேன்பக்கற் றெரிசிப்பதற்கு முன்பு,—வார்சோலையுயர்மருதச் சம்பந்தா வொன்றிநின்றவா றெவ்வாறுநீ-அழகியசோலையுயர்ந்த மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே யடியேனிடத்துத்தேவரீர்பொருந்திநின்றதெப்படி - (கருத்து) அந்தகன் கண்ணுக்கு ஆதித்தப்பிரகாசம் வியாத்தமா யிருக்கையிலேயுந் தெரியாதிருந்த தன்மைபோலென்பதாம். உ-ம். சிவஞானபோதத்தில். "அருக்கனேர்நிற்பினு மல்லிருளேகாணார்க் கிருட்கண்ணேபாசத்தார்க்கீசன்" கண்டுகொள்க. (நுட்பம்) மலமான்மாவைச் சகசமாய் மறைத்திருக்கையிலே சிவமான்மாவைப்பொருந்தி நின்றதெப்படியென்னும் வினவுக்கு உ-ம் சிவஞானபோதத்தில். "மெஞ்ஞானந்தன்னில் விளையாத சத்தாதல்" என்றபாடத்திலும். சிவதருமோத்தரத்தில் பரமசிவன் பராசத்திபல்லுயிர்க்கும் பயின்றிருக்க,விரவுவதெனி ருளொளிற்கேள் வெய்யவழற் பசுமரத்தின், விரவியதே பசுமரமும் வெந்தலை வெந்துவிழும், பருவமுறக் கரணமுறப் பதியுமுறப் பழுதறவே." என்பது கண்டுகொள்க. (க)

இருளிலொளிபுரையு மெய்துங்கலாதி
மருளினிலையருளு மானுங் - கருவியிவை

நீங்கினிருளா நிறைமருதச்சம்பந்தா
வீங்குணருளா லென்பெற.

இ - ள். இருளிலொளிபுரையும்-ஆணவமேலிட்டகாலத்து ஞானமொழிந்துநிற்கும்,—எய்துங்கலாதிமருளினிலையருளுங்கா லாதிகளைப் பொருந்தின விடத்திலுமாணவத்தையேதந்து,—மா வி நீங்கின பொழுது இருளாயிருந்தது, —நிறைமருதச்சம்பந்தா னீங்குணருளாலென்பெற-நிறைந்தமருதநகர்வாழ் சம்பந்தமாமு னியே யிவ்விடத்துன்னருளாற்பிரயோசனமென்ன - (க-து.)கே வலசகலத்திலுமல்ல சுத்தத்திற் பிரயோசனமென்பதாம் உ-ம். சி வப்பிரகாசத்தில், " காட்டிடுங் கரணமொன்றும்" என்றபாடத் திற் கண்டுகொள்க.

(௨)

புல்லறிவுநல்லுணர்வ தாகாபொதுஞான
மல்லதிலதுள்ளதெனி லந்நியமாம் - தொல்லையிரு
ளூனமலையாவா றுயர்மருதச்சம்பந்தா
ஞானமலை யாவாய்நவில்.

இ - ள். புல்லறிவு நல்லுணர்வ தாகாபொதுஞான மல்லது சிற்றறிவுபேரறிவாகாதுஞானமல்லதுபொதுஞானமூன்றுவிதமா யிருக்கும்,—இலதுள்ள தெனிலந்நியமாம்-முன் பில்லாத சிவஞா னம் மலபரிபாகத்திலே யுண்டாமென்னில் சற்காரியவாதமாகாம லந்நியமாம்,—தொல்லையிருளூன மலையாவாறுயர்மருதச்சம்பந்தா ஞானமலையாவாய் நவில்-பழமையாகவருகிறஆணவமலத்தின்கு ற்றத்திலே மயங்காத முறைமையையுயர்ந்த மருதநகர்வாழ் ச ம்பந்தமாமுனியே மலைபோல ஞானத்தையுடையவரேதிருவுளம் பற்றவேணும். (க-வது.) ஆன்மஞானம் சிவஞானமாகாது. தத்து வங்களுடைய சுபாவத்தை இதுபொய்யென் றறிவிக்கிறது சிவ ஞானம் இப்படியறிகிற வேற்றுமையும் விட்டு வாய்ந்த ஞானமா யிருப்பது சுத்தம். உ-ம். சிவப்பிரகாசத்தில் " தத்துவமானவற்றி ன் றன்மைகள்" என்றபாடத்திலும், சிவஞானசித்தியில், " சிவன்

மேவென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற் சிவனருட் சித்தி வனருளைச் சேருஞ்சித்து. கண்டுகொள்க. (௩)

கனவுகனவென்று காண்பரிதாங்காணில்
நனவிலவைசிறிது நண்ணு - முனைவனரு
டானவற்றிலொன்று தடமருதச்சம்பந்தா
யானவத்தை காணுமாறென்.

இ - ள். கனவுகனவென்று காண்பரிதாம்-கனவிலேநின்றுக னவைத் தரிசிக்கப்படாது,—காணில்நனவிலவை சிறிதுநண்ணு நனவிலே காணும் கண்டதென்னில் நனவிலந்தக்கருவிகளில்லா தபடியினலே காணவில்லை,—முனைவனருடான வற்றிலொன்று அருளிலே நின்றுகண்டதென்னில்அவத்தைகளிற்பொருந்தா து,—தடமருதச்சம்பந்தா யானவத்தைகாணுமாறென்-தடாகம் பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியேநானவத்தைகளை த்தரிசிக்கும்படி யெப்படி. (க-து.) சுத்ததத்துவங்களைக்கொண் டறியவேணுமென்பாம். உ-ம், சிவப்பிரகாசத்தில் இத்தகைமை யிறைபருளா லுயிரறியும்" என்றபாடத்திற்கண்டுகொள்க. (௪)

அறிவறிந்ததெல்லா மசத்தாகுமாயின்
குறியிறந்தநின்னுணர்விற் கூடா - பொறிபுலன்க
டாமாவறியா தடமருதச்சம்பந்தா
யாமாறறிவா ரினி.

இ - ள். அறிவறிந்ததெல்லா மசத்தாகுமாயின்-என்னுடை யவறிவினலே யறியப்பட்டதெல்லா மசத்தாயழிந்து போமேயா யின்,—குறியிறந்த நின்னுணர்விற்கூடா—வாக்குமனத்துக்கெட் டாமல் குறியிறந்து நிற்கிற தேவரீருடைய ஞானத்திலே பொரு ந்தப்போகிறதே யில்லை,—பொறிபுலன்கடாமாவறியா-பொறிபுல னுகிய தத்துவங்கள் தாமாயறியமாட்டா,—தடமருதச்சம்பந்தா யாமாறறிவாரினி-தடாகம்பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமா

முனியே யானை யறியப்போகிறதுதானினி. (க-து.) கண்ணானது யிருளோடுகூடி யிருளாயு மொளியோடுகூடி யொளியாயுநின்றதுபோலப் பாசத்தோடுகூடிப் பாசமாய்நின்றவான்மா அருளோடேகூடிப் பாசநீங்கியருளாய் நிற்குமென்பதாம் உ-ம். சிவப்பிரகாசத்தில், "சத்திதுவென்றசத்துத்தானறியாது" என்றபாட்டத்திற் கண்டுகொள்க. (௫)

சிற்றறிவுமுற்சிதையிற் சேர்வாரின்றுஞ்சிறிது
மற்றதனினிற்கிலருண் மன்னுவார்-துற்றமுகின்
மின்கொண்டசோலை வியன்மருதச்சம்பந்தா
வென்கொண்டுகாண்பே னியான்.

இ-ள். சிற்றறிவு முற்சிதையிற்சேர்வாரின்றும்-சிற்றறிவு முன்னேகெடுமாயின் பின்னருளைப் பொருந்தப்போகிற பேரில்லை—சிறிது மற்றதனினிற்கிலருண் மன்னுவாம்-சிற்றறிவுகொஞ்சமாக நின்றாலுமருள்பொருந்தாது—துற்றமுகின்மின்கொண்டசோலைவியன்மருதச் சம்பந்தாவென்கொண்டு காண்பேனியான் மேகங்கள் நெருங்கிய வாகாயத்தை யளாவியசோலைசூழ்ந்த வியன்மருதநகர்வாழ்சம்பந்தமாமுனியே என்னத்தைக்கொண்டு காண்பேனியான். (க-து.) சிற்றறிவுகெட்டதுமல்ல முன்போலவிருந்ததுமல்ல பாசபந்தநீங்கித் திருவடியிலேகலந்து கிடக்குமென்பதாம். உ-ம். சிவஞானசித்தியில். "செம்பிரதக் குளிகையினாற் களிம்பற்றுப்பொன்னாய்" என்றபாட்டத்திற் கண்டுகொள்க.

உன்னரியநின்னுணர்வ தோங்கியக்காலொண்கருவி
தன்னளவுநண்ணரிது தானாகு-மென்னறிவு
தானறியவாரா தடமருதச்சம்பந்தா
யாமறிவதெவ்வா றினி.

இ-ள். உன்னரியநின்னுணர்வதோங்கியக்கால்-நினைத்தற்கரிதாகிய தேவரீரருள் தோன்றினகாலத்து,—ஒண்கருவிதன்

ளவு ந்ண்ணரிதாருகும்- அழகுபொருந்திய மூப்பத்தாறுத்த துவங்களாற் பொருந்தப்படாது,—என்னறிவுதானறியவாராதன ன்னுடையபசுஞானத்தாலு மறியப்படாது,—நடமருதச்சம்பந்தா யாமறிவதெவ்வாறினி-நாடகம்பொருந்தியமருதநகர்வாழ் சம்பந் தமாமுனியே அடியோங்களறிகிறதெப்படித்தானினி.(க-து.)பசு கரணங்களுஞ் சிவகரணமா யான்மாவு மருளாய்ப்பொருந்தின் றறியுமென்பதாம். உ-ம். சிவப்பிரகாசத்தில், "மாலயமாமாயை மாயா" என்றபாடத்திற்கண்டுகொள்க. (எ)

அருவேஉருவன் றுருவேலருவன்
திருவேறுமொன்றிற் இசையா - வுருவோரிற்
காணிலுயர்கடந்தைச் சம்பந்தாகண்டவுடற்
பூணுமிறைக்கென்னும் புகல்.

இ - ள். அருவேஉருவன் றுருவேலருவன்திருவேறுமொன் றிற்இசையா-கத்தா திருமேனியருவமாறு லுருவமாகமாட்டாது உருவமாறு லருவமாகமாட்டாது அருவு முருவுமொருபொருளு க்கிரண்டுதன்மையிசையாது,—உருவோரிற்காணிலுயர்கடந்தை ச் சம்பந்தா கண்டவுடற் பூணுமிறைக்கென்னும்புகல்-திருமேனி யை விசாரித்துக்காணி லுயர்கடந்தை நகர்வாழ்சம்பந்தமாமுனி யே கொண்ட திருமேனியைப் பூணப்பட்ட கத்தாவுக்குத் திரு மேனியென்னத்திலேயுண்டானது திருவுளம்பற்றவேண்டும்(க-து ஞானத்திலே திருமேனிகொள்ளுவனென்பதாம். உ-ம். சிவஞா னசித்தியில், "மாயைதான் மலத்தைப்பற்றி" என்றபாடத்திற்க ண்டுகொள்க. (அ)

இருமலத்தார்க்கில்லை யுடல்வினையென்செய்யு
மொருமலத்தார்க்காரா யுரைப்பேன் - திரிமலத்தா
ரொன்றாகவுள்ளா ருயர்மருதச்சம்பந்தா
வன்றாகிலாமா றருள்.

இ-ள். இருமலத்தார்க் கில்லை யுடல்வினையென் செய்யும் இரண்டு மலமுடைய பிரளயாகலருக்குமாயையில்லாத படியினு லே உடம்பில்லை வினைபொசிக்கும்படியெப்படி,— ஒருமலர்தார்க்காராயுரைப்பேன்-ஒருமலமுடைய விஞ்ஞானகலருக்குரையா ராகச்சொல்லுவோம்,—திரிமலத்தா ரொன்றாகவுள்ளார்-மூன்றுமலமுடைய சகலருக்கல்லோ வொன்றாகவுள்ளது.—உயர்மருதச் சம்பந்தாவன்றாகிலாமாறருள்-உயர்ந்தமருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே யப்படியல்லவாகி லாமாறருள். (க-து.)விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்குச்சுத்தமாயையிலேதேகமென்பதாம். உ-ம் சிவஞானசித்தியாரில். "வித்தைகளவித்தையீசர் சதாசிவமொன்றிவர்க்கு" என்றபாடத்திற்கண்டுகொள்க. (௯)

ஒன்றிரண்டாய்நின்றொன்றி லோர்மையதாமொன்றாக
நின்றிரண்டாமென்னிலுயிர் நோராகும் - துன்றிருந்தார்
தூங்கியவாழ்தண்கடந்தைச் சம்பந்தாயானுகி
யோங்கியவா றெவ்வாறுரை.

இ-ள். ஒன்றிரண்டாய் நின்றொன்றி லோர்மையதாம்-ஒருபொருள் விவகாரத்திலே யிரண்டாய் நின்றொன்றா மென்னில் ஒன்று பொருந்தமாட்டாது,—ஒன்றாகநின்றிரண்டாமென்னிலுயிர் நோராகும்-இரண்டாய் நின்றொன்றாமென்னிலொன்றிலே யொன்றழிந்துபோம்,—துன்றிருந்தார் தூங்கியவாழ்தண்கடந்தைச் சம்பந்தாயானுகி யோங்கியவா றெவ்வாறுரை-ஞானத்தைப்பொருந்தின பெரியோரால் தாங்கிவாழப்பட்டகுளிர்ந்த கடந்தைநகர்வாழ் சம்பந்தமாமுனியேயான் சிவமாகியோங்கினமுறைமையைத் திருவுளம் பற்றவேணும். க-து. ஆணவத்தைப்பொருந்தின வான்மாவைப்போல வென்பதாம். உ-ம். சிவப்பிரகாசத்தில். "ஒன்றிரண்டாகி யொன்றியொருமையாம்" என்ற பாடத்திற்கண்டுகொள்க. (௰)

காண்பானுங்காட்டுவதுங் காண்பதுவுநீத்துண்மை
காண்பார்களன்முத்தி காணார்கள் - காண்பானுங்
காட்டுவதுங்காண்பதுவுந் தன்கடந்தைச்சம்பந்தன்
வாட்டுநெறி வாராதவர்.

இ-ள். காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை காண்பார்கள்-காண்கிறவான்மாவுங் காட்டுகிற சிவனுங் காணப்படுகிற பொருளையும்விட்டுண்மையைத் தரிசிப்பார்களென்னில்—நன்முத்திகாணார்கள்-நல்லமுத்தியைக்காணார்கள்—காண்பானுங்காட்டுவதுங் காண்பதுவுந் தன்கடந்தைச் சம்பந்தன்வாட்டுநெறிவாராதவர்-ஆனால் காணுகிறவனுங் காட்டுகிறவனுங் காணப்படுகிற பொருளுமாகவோ காண்பார்களென்னில்அப்படிக் காணுகிறவர்களுங் குளிர்ச்சிபொருந்தின கடந்தைநகர்வாழ் சம்பந்தமாமுனி வாட்டும்வழி வாராதவர். க-து. ஞாதுருஞான ஞேயமென்கிற சங்கற்பனைகளைவிட்டு ஒன்றாகச் சிவனியல்பினுணருகிற ஞானமே பெறவேணுமென்பதாம். உ-ம். சிவஞானசித்தியில் "சன்மார்க்கஞ் சகலகலைபுராணவேதஞ்சாத்திரம்" என்ற பாடத்திற் கண்டுகொள்க. (௰௩)

ஒன்றினுகர்வதிவ னானுமுழு தொழிலு
மென்றுமிடையி லிடமில்லை - யொன்றித்
தெரியாவருண்மருதச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றெவ்வாறு பேசு.

இ-ள். சர்வவியாபியாயிருக்கையிலேயுந் தோன்றாத திருவைபொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே தேவரீர்திருவடியைச் சேர்ந்து பிரியாமற் போகங்களைப் புசிக்குமுறைமையைத் தெளியப்பற்றவேணும். க-து. அவன்சர்வவியாபியாகையினாலும்இவன் சுதந்தரஹீனனாகையாலும் அவனே போகங்களைப் புசிப்பிக்கிறவ னென்பதாம். உ-ம் திருவருட்பயனில், "அவனையகன்றெ

ங்கின்று மாங்கவனுமெங்கு. மிவனையொழிந் துண்டாதலில்" சி
வஞானபோதத்தில், " ஈண்டிவ்வான்மாக்க ளவனையன்றியமை
ந்தொன்றையும் விஷயியாவாகலானவனுமவற்றதுவிஷயத்தையு
ணருமென்றும். உண்மைநெறிவிளக்கத்தில். " பாதகங்கள் செய்
திடினுங் கொலைகளவுகள்ளு" என்றபாடத்திலுங்கண்டுகொள்க.

**அருளாலுணர்வார்க் ககலாதசெம்மைப்**
**பொருளாகிநிற்கும் பொருந்தித் - தெருளா**
**வினாவெண்பாவுண்மை வினாவாரே லூமன்**
**கனாவின்பாலெய்துவிக்குங் காண்.**

இ-ள். அருளாலுணர்வார்க் ககலாதசெம்மைப் பொருளா
கிநிற்கும்பொருந்தி-ஆசாரிய னநுக்கிரகம்பெற்ற ஞானவான்களு
க்கு விட்டுநீங்கி மலைவுவராமல் செம்மைப்பொருளாகவேபொரு
ந்திநிற்கும்,—தெருளாவினாவெண்பா வுண்மை வினாவாரேலூம
ன்கனாவின்பா லெய்துவிக்குங்காண்-அறியத்தக்கதாக வினாவெ
ண்பாவி னுண்மையை வினாவி யறியாதபேர்ஊமன்கனாவிலேபா
ல்குடித்ததைக் கொக்கும். (க-து.) ஞானமிகுதியுடையோர்க்குச்ச
த்தியமாகவே தோன்றும். அல்லாதபேர்எத்தனை சாத்திரம்படி
த்தாலும் வினாவெண்பாப்பாராயணம்ஊமன் கனாவினாலே பால்
குடித்ததுபோல் ஒன்றுந்தெரியாதென்பதாம்.

**வினாவெண்பா மூலமும் உரையும் முற்றிற்று.**

---

திருச்சிற்றம்பலம்.

இவ்வுரை சகாத்தம் ௧௮௱-க்கு மேற்செல்லாநின்ற பிங்கள
௵ வைகாசி௴ மெய்கண்டசந்ததியில் திருவாவடுதுறைநமச்சி
வாயமூர்த்தி மரபில் வேலப்பபண்டாரமநுக்கிரகம்பெற்றநமச்
சிவாயத் தம்பிரான் செய்ததெனவறிக.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# கொடிக்கவி

## மூலமும் உரையும்

ஒளிக்குமிருளுக்கு மொன்றேயிட மொன்றுமேலி
டிலொன், றொளிக்குமெனினு மிருளடராதுள்ளுயிர்க்
குயிராய்த், தெளிக்குமறிவுதிகழ்த் துளதேனுந்திரியலத்
தே, குளிக்குமுயிரருள் கூடும்படிக்கொடிகட்டினனே.

இ-ள். ஒளிக்குமிருளுக்கு மொன்றேயிடம்-ஆணவத்துக்கு ஞானத்துக்கு மிடமொன்றே—ஒன்று மேலிடிலொன்றொளிக்கும்—ஞானமேலிட்டகாலத் தாணவமொளித்துநிற்கும். ஆணவமேலிட்டகாலத்து ஞானமொளித்துநிற்கும்,—எனினுமிருளடராது ஒன்றுமேலிட்டகாலத்திலே யொன்றொளித்து நின்றாலு ஞானத்தையாணவமலம் பொருந்தாது,—உள்ளுயிர்க்குயிராய்த் தெளிக்கு மறிவுதிகழ்ந்துளதேனுந் திரிமலத்தேகுளிக்கும்-பூர்வவாசனை விசேஷத்தாற் சிவஞானஞ் சற்றுவிளங்குமாறாலு மும்மலங்களிலேமூழ்கிக்கிடக்குமல்லாம லதுகொண்டே நீங்கமாட்டாது—உயிரருள்கூடும்படிக்கொடிகட்டினனே-இப்படி மும்மலங்களிலே மூழ்கிக்கிடக்கிறவான்மா வருள்கூடும்படிக்குத் தீக்ஷாக்கிரமத்தினாலே மலங்களைப்போக்கத் துசங்கட்டினேன். (கருத்து.) ஆணவத்துக்கு ஞானத்துக்குமிடமொன்றாயிருக்கத்தனது காரணங்கெடாமலிருக்கிற மலத்தைத் தீக்ஷாக்கிரமத்தினாலேபோக்கி மோக்ஷத்தை யடைவிப்போமென்பதாம். (நுட்பம்) ஆணவத்துக்கு ஞானத்துக்கு மிடமொன்றென்பதற்கு. உ-ம். சிவஞானபோதத்தில், மெய்ஞ்ஞானந்தன்னில்"என்றபாடத்தில், தண்கடனீருப்பு

ப்போற்றுசேயுளமுளவாய்த்தான்." எ-து. கண்டுகொள்க. ஒன்றுமேலிட்டகாலத்திலேயொன்றொளித்துநிற்குமென்றதற்கு உ-ம் சிவப்பிரகாசத்தில். "மாயைமாமாயைமாயா." என்றவிருத்தத்திற் கண்டுகொள்க. இதல்லாமலாணவமேலிட்டபெத்தகாலத்திலே ஞானமொளித்து நிற்குமென்று முத்திகாலத்திலே சிவம்பிரகாசித்து ஆணவங் கௌரவங் கெட்டொளித்து நிற்குமென்றுங்கூறியதற்கு, உ-ம். போற்றிப்பஃறொடையில். "என்ற னுள்ளமென்று நீங்காதொளித்திருந்துதோன்றிநின்ற, கள்ளமின்று காட்டுங்கழல்போற்றி." சிவஞானபோதத்தில். "நேசத்தர்தன்பாணிக் கூத்தைசெய்போற் பாசத்தார்க்கின்றாம்பதி" எ-ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க. ஞானத்தை யாணவம்பொருந்தாதென்பதற்கு உ-ம். சிவஞானபோதத்தில். "அந்நியமிலாமையாற் கொன்றுணர்வின்றாம்." என்றபாடத்திற்கூறியவையந்தகாரம்பொருந்தாமலிற்கும். எ-து. கண்டுகொள்க. முன்விட்டகுறையினாலே யுயிர்க்குயிராயிருக்கிற ஞானஞ் சற்று விளங்குமாகனு மலத்திலேயழுந்திக்கிடக்கு மல்லாமல் நன்றாகச் சத்தியாகாது. இப்படியிருக்கிறவான்மாவருளைக்கூடும்படித் தசங்கட்டினே னென்றதற்கு ஆசாரியர் தீக்ஷாகிரமத்தினாலே மலத்தைப்போக்கியருளைக்கொடுப்பர். அந்தச்சிவஞானமாசாரியனையல்லாமலாகாது. உ-ம். சிவப்பிரகாசத்தில். "விரும்பிய மந்திராதிகாரம்." என்றவிருத்தத்திலும். சித்தியாரில். "பலவிதமாசான்பாசமோசனந்தான் பண்ணும்படி." எ-ம். "ஆசானருளாலடிசேர்ஞானம்வந்திடுமற்றொன்றும் வாராதாகும்." எ-ம். கண்டுகொள்க.

பொருளாம்பொருளேதுபோதேதுகண்ணே
திருளாம்வெளியேதிரவே - தருளாளா
நீபுரவாவையமெலாநீயறியக்கட்டினேன்
கோபுரவாசற்கொடி.

இ-ள். பொருளாம்பொருளேது-பொருளிலேயழியாதபொ ருளேது—போதேது-கிரணமாகியசத்தியேது —கண்ணேது-கண் போல்வான்மாவேது-இருளாம்வெளியேதிரவேது-அஞ்ஞானமா கிய சகலகேவலந்தானேது—அருளாளா-அருளையுடையவனே-நீ புரவாவையமெலா நீயறியக்கட்டினேன்-வையமாகிய மலமாயா திகன்மங்களிலே பொருந்தாமல் ஆன்மாக்களிடமாகப்பொருந்தி யிருக்கிற தேவரீரறியக்கட்டினேன். கோபுரவாசற்கொடி-கோ புரவாசலிலேகொடி.(க-று.) கத்தாவேது, சத்தியேது, ஆன்மா வேது, கேவலசகலமேது இதுசொல்வாருமுளரோவென்றுகொ டிகட்டினேனென்பதாம்(ஙு-ம்.)அழியாதபொருளேதென்னிலெ ன்றது அகண்டபரிபூரணமா யுயிர்க்குயிராயானந்தரூபமா யிருக் கிறது தற்சிவம். அதற்கு. உ-ம், சிவப்பிரகாசத்தில். "பலகலையா கமவேதம் யாவையினும்"என்ற விருத்தத்திற் கண்டுகொள்க கி ரணவொப்பாகிய சத்திதானேதென்னில் சத்தியென்று தனியே யொருமுதலல்ல சூரியனுங்கிரணமும்போல மரமுங்காழ்ப்பும் போலத் தடையற்ற ஞானமா யிருக்கும். உ-ம், சிவப்பிரகாசத் தில். சுத்தமாஞ்சத்திஞானச்சுடராகும்"என்றபாடத்தில் "இரவி காட்டும் வளரொளிபோன்மகிழ்ந்தே"எ-ம். சித்தியாரில்"சத்திதெ ன்வடிவேதென்னிற் றடையிலா ஞானமாகும்"எ-ம்"ஒருவனேயி ராவணாதி' என்றபாடத்தில்"வரும்வடிவெல்லாஞ்சத்தி சத்திதா ன் மரமுங்காழ்ப்பு மிருமையும்போலமன்னிச்சிவத்திறேடிசை ந்து நிற்கும்"எ-ம். கண்டுகொள்க. கண்ணொப்பாகியவான்மாவே தென்னில் அநுவநுவாய் அநேகநித்தியமாய் வசிப்பைப் பற்றின வியாபகமாய்க்கண்படிகமாகாயம்போலஒப்பையுடைய தாய் அக்கினியைப்போல வொன்றைப்பற்றி நிற்கிறதல்லாமற் றனித்துநிற்கிற முதல்லவாய் அருவமுருவமும் ரூபாரூபமல்ல வாய்ப்பூவிற் கந்தம்போன்றதாயிருக்கிறதான்மா இதற்கு. உ-ம் சிவஞானபோதத்தில். "மாயாதநுவிளக்காய்மற்றுள்ளம்"என்ற பாடத்திலும், சிவப்பிரகாசத்தில்." ஓரிடத்திருத்தல்." என்றபா

டத்திலும். சித்தியாரில்,"அசித்தருவியாபகம்போல்வியாபகமரு வமன்றாய், வசித்திடவரும் வியாபியெனும் வழக்குடையனாகி, எ-ம். திருவருட்பயனில்" இருளிருளாகி யெல்லிடத்திலெல்லாம் பொருள்களிலதோபுவி''எ-று. சித்தியாரில்'' அங்கியானதுதானு மொன்றை யுணர்த்துகின்று திகழ்ந்திடும். பங்கியாதுயிர்தானு மிப்படிபற்றியல்லது நின்றிடா'' எ-ம்.சிவஞானபோதத்தில்"தோ ன்றல்மலர்மணம்போற்றொக்கு'' எ-ம்,வருமேதுக்களைக் கண்டு கொள்க அஞ்ஞானமாகிய கேவலசகலந்தானேதென்னில் அதிற் கேவலமாவது தத்துவங்களோடே பொருந்தாமற் போகந்திற் கொள்கையில்லாதவனும் அறிவில்லாதவனும் அந்தகாரத்திலே அலரவிழித்த விழிபோன்றதாய் மலமொன்றுமே யாயதுவாயந் தமலமாய் விட்டுநீங்குமுறைமை யில்லாததாயிருப்பதுகேவலம். இதற்கு, உ-ம், சிவப்பிரகாசத்தில். ஓங்கிவரும்பலவுயிர்கள். ''எ ன்றபாடத்திலும். சித்தியாரில். "அறிவிலன் மூர்த்தனித்தனரா காதிகுணங்களோடும். "என்றபாடத்திலும் வருமேதுக்களைக் கண்டுகொள்க. சகலமாவதேதென்னில் சகலத்துக்கு வெளியென் றுந் தீபமென்றும்பெயர். வெளி தீபமென்றிருக்கிறசகலத்தையஞ் ஞானமென்று சொல்லுவானே னென்னில்சகலத்திலேஅஞ்ஞா னமாகிய மாயாபோகத்தைப் புசிப்பிக்கு மல்லாமல் ஞானத்தை யுணர்த்தாது. ஞானஞ்சுத்தத்திலே யல்லாமறுண்டாகாது. ஆ கையால் சகலமும்போகத்தைப் புசிப்பிக்கிற நிமித்தமாகக்கேவ லத்துக்கு இது தீபமென்றும், வெளியென்றுஞ்சொன்னதல்லாம ல்இதுவு மஞ்ஞானமே தப்பாது இதற்கு உ-ம்சிவப்பிரகாசந்தில் புகலுமலமொழித்தற்கு, ''என்றபாடத்திலும்,இருபாவிருபஃதில் இருள்வெளியாக்கு மருளினையறுத்து, ''எ-ம். வருமேதுக்களைக்க ண்டுகொள்க. அருளாளாவென்றது அறிவுடையவனேயென்றது. சீபுரவாவையமெலா மீயறியக்கட்டினேனென்றதேதென்னில் ச ர்வத்திர பரிபூரணமாயிருக்கிறவர் பிரபஞ்சமாகிய மலமாயாதிக ன்மங்களைப்பொருந்தாமலான்மாக்களிடமாக விருப்பாரென்று

சொல்லுவானே னென்னில் சிவனை மலமாயாதி கன்மங்கள்பொருந்தாது. ஆனால்சர்வவியாபக மெப்படியென்னில், சூரியனுடையசந்நிதியி லந்தகாரம் பொருந்தாமல் நிற்கிறதுபோல மலமுஞ்சிவன்சந்நிதியிலே நிற்கிறது, அப்படி சிவ னான்மாக்கள்தோறு நிறைந்திருக்கச் சிவனைபொருந்தாமலான்மாக்களை மலம்பொருந்தினதெப்படியென்னிற் சமுத்திரமும் ஜலமுமுப்பும்போல, இதற்கு உ-ம், நெஞ்சுவிடுதூதில். "படநாகம்பூண்ட பரமன்பசுவினிடமாய் நிறைந்தவிறைவன், ' எ-ம். சித்தியாரில். "அனைத்துஞ்சத்தென்னி லொன்றையறிந்திடா தசத்தாலென்னில்,முளைத்திடா தசத்துசத்தின் முன்னிருளிரவிமுன்போல், நினைப்பதிங்கசத்தேயென்னிற் சத்தின் முன்னிலாமையானுந், தனைக்கொடொன்றுணர்தலானுந் தானசத்துணராதன்றே. எ-ம். ' சுத்தமெய்ஞ்ஞானமேனிச் சோதிபாலசத்தஞ்ஞான, மொத்துருகுற்றமெல்லாமுற்றிமுயிரின்கண்ணே. சத்துளபோதேவேருஞ்சதசத்துமசத்துமெல்லாம். வைத்திமெகாதியாக வாரிநீர்லவணம்போலும்." எ-று வருமேனுக்களைக்கண்டுகொள்க. தேவரீரறியக்கோபுரவாசலிலே கொடிகட்டினேனென்பதற்கு அந்தக்கத்தாவேகன்னபரம்பரையாக அநுக்கிரகம்பண்ணி அறிகிறதல்லாமல் மற்றப்பேராலேஅறியப்படாதென்பதுகருத்து. (உ)

வாக்காலுமிக்கமனத்தாலுமெக்காலுந்
தாக்காவுணர்வரியதன்மையனை - நோக்கிப்
பிரித்தறிவுதம்மிற்பிரியாமைதானே
குறிக்குமருணற்கொடி.

இ-ள். வாக்காலுமிக்க மனத்தாலுமெக்காலுந் தாக்காவுணர்வரியதன்மையனை வாக்குமனதுக்களாலு மொருகாலத்திலுந்தாக்காமலறிவதற் கரிதாகிய தன்மையுடையவனை—நோக்கி-விசாரித்துப்பார்த்து,—பிரித்து-பகுக்குமிடத்து,—அறிவுதம்மிற்பிரியாமைதானே குறிக்குமருணற்கொடி-அறிவுக்கறிவாயிருக்கிறசி

வத்தைப் பிரியாமற் குறித்து மருள்பொருந்தத் தக்கதாகக்கொடி
கட்டினேன். (டு-ம்) மனவாக்குக் காயங்களினாலே யொருகாலு
ந்தாக்காதவனென்றும், ஆன்மபோதத்தாலறியப்படாதவனென்று
ஞ்சொன்னதற்கு, உ-ம், சித்தியாரில், "மறையினாலயனான்மாலான்ம
னத்தினால்வாக்கால்மற்றுங்குறைவிலாவளவினாலுங்கூறொணுவா
கிநின்ற விறைவனார்" எ-ம், சிவப்பிரகாசத்தில், "பாசமாஞானத்
தாலும் படர்பசுஞானத்தாலு மீசனையறியவொண்ணு" எ-ம், வரு
மேதுக்களைக் கண்டுகொள்க. விசாரித்துப்பருக்குமிடத்தி லென்
றதுஇப்படி மனவாக்குக்காயங்களுக்கும் ஆன்மபோதத்துக்கு
மெட்டாத சிவனை ஆசாரியர் தீக்ஷாக் கிரமங்களினால் மலமாயா
திகன்மங்களைப் போக்கிப் பசுகரணங்களைச் சிவகரணமாக்கிமல
த்திலே பற்றாகவிருந்த வறிவைத்திருப்பி யருளிலேபற்றாக்கியெ
ன்றதற்கு, உ-ம், நெஞ்சுவிடுதூதில், "பார்த்தான் பழையவினைப
ஞ்சமலக்கொத்தை யெல்லாம், நீத்தான் நினைவுவேறாக்கினான்
எ-து, கண்டுகொள்க, அறிவுதம்மிற் பிரியாமைதானேகுறிக்கு
மென்றது இப்படி மலங்களைப்போக்கி அறிவை யருளிலேதிருப்
பினவாசாரியருடைய வநுக்கிரகத்தினாலேஞாதுருஞான ஞேயங்
களாகிய சங்கற்பனை ஞானங்களிலேபோகாமல்,தன்னிடத்திலே
உயிர்க்குயிரா யநாதியேதோன்றாமற் பொருந்தியிருக்கிற திருவ
ருளிலே அறிவுதாரமாக நிறுத்தி யென்றதற்கு, உ-ம், சித்தியாரி
ல்,"ஞாதுருஞானஞேயஞ் சங்கற்பனைஞானமாகும் திருஞானமி
வையெல்லாங் கடந்த சிவஞானமாதலினாற் சீவன்முத்தர்சிவமே
கண்டிருப்பர்,"என்பது கண்டுகொள்க, அருணல்கக்கொடி எ
ன்றது இப்படி யாசாரிய ரநுக்கிரகம்பெற்ற அநுட்டானத்தினா
லே சிவனான்மாவைவந்து கவளீகரித்துக் கொள்ளுவனென்றும்
இந்த முறைமையிலே யல்லாமல் மோக்ஷமடையப்படாதென்று
ங்கொடிகட்டினேனென்பது கருத்து அருள்பொருந்துமென்றி
ருக்கச் சிவன்கவளீகரிப்பவனென்று சொல்லுவானேனென்னில்
அருளென்றுஞ் சிவமென்றும் வேற்றுமையில்லையென்றது, ஆன்

மாவைச்சிவன்கவளீகரித்த தெப்படியென்னில் இரசகுளிகை பொன்னைத் தனக்குள்ளே யடக்கிக்கொண்டது போலவும், தாளுக்கினதெப்படியென்னில் அக்கினியிரும்பைத் தாளுக்கினது போலவும், சிவனுன்மாவை வகித்துவிடாத தெத்தன்மையென்னில்காந்தமிரும்பைவகித்தால் ஒருகாலும் விடாது அத்தன்மை போலவும், சிவனுன்மாக்கள் மலத்தைப்போக்கித் திருவடியிலே கூட்டினதெப்படியென்னில் அக்கினி காட்டகத்தைக் கெடுத்தது போலவும் சூரிய னந்தக்காரத்தைப்போக்கினது போலவும்மலத்தைப்போக்கி உப்பையணைந்த வப்பைப்போலவொன்றுபட்டுத்திருவடியிலே கலந்திருப்பது. ஆன்மா சிவனைப்பொருந்திச் சிவனாய் நீங்காம லிருக்கிறதெப்படி யென்னில் குளத்திலே கட்டுப்பட்ட தண்ணீர ணையை முறித்துக்கொண்டு சமுத்திரத்திலே சேர்ந்தபோ தந்தச் சமுத்திரசலமேயா யந்தச் சமுத்திரத்தைவிட்டு நீங்காத முறைமைபோல ஆன்மா சிவனைப்பொருந்திச் சிவமேயாய்ச்சிவனைவிட்டு நீங்காமற் சிவனுடைய திருவடியிற்கலந்துகிடக்கிறது மிந்த முறைமைத்து. இதற்கு. உ-ம். சித்தியாரில். "இரும்பைக்காந்தம் வலித்தாற்போல்,, என்ற பாடத்திலும். சிவஞானபோதத்தில் "மன்னுமிருளைத்துரந்து.,, என்றபாடத்திலும் "நசித்தொன்றினுள்ளம்,, என்ற பாடத்திலும். "சிறைசெய்யநின்ற,, என்ற பாடத்திலும் வருமேதுக்களைக் கண்டுகொள்க. (ரு)

அஞ்செழுந்து மெட்டெழுத்துமாறெழுத்துநாலெழுத்தும், பிஞ்செழுத்துமேலைப் பெருவெழுத்து - நெஞ்சழுத்திப், பேசுமெழுத்துடனே பேசாவெழுத்தினையுங் கூசாமற்காட்டக்கொடி.

இ-ள். அஞ்செழுத்து மெட்டெழுத்துமாறெழுத்து நாலெழுத்தும்-சிவாயநமவென்கிற வைந்தெழுத்தும். ஓம்-ஆம்-அவ்வும்-சிவாயநமவென்கிற வெட்டெழுத்தும் ஓம்நமசிவாய வென்கிற ஆ

றெழுத்தும் ஓம்-சிவாயவென்கிறநாலெழுத்தும்ஆகவிப்படி உச்ச
ரிக்கிற விதிப்படியே யுச்சரித்து, —பிஞ்செழுத்து மேலைப் பெ
ருவெழுத்தும் நெஞ்சழுத்தி - விதிப்படி யுச்சரிக்கிற முறை
மையை விட்டுப் பஞ்சாக்ஷரத்தி னுடைய சொரூபத்தை ய
றிந்து பிஞ்செழுத் தாகிய வகாரமாகிய பராசத்தியையும் மே
லைப் பெருவெழுத்தாகிய சிகாரமாகிய சிவத்தையுந் தன்னு
டைய ஹிருதயத்திலே வைக்கில், —பேசுமெழுத்துடனே பே
சா வெழுத்தினையுங் கூசாமற் காட்டக்கொடி - பேசுமெழு
த்தாகிய வகாரமாகிய சத்தி பேசா வெழுத்தாகிய சிகாரமாகிய
சிவத்தை யிரண்டறக் கூசாம லழுத்தி விக்கக் கொடிகட்டி
னேன். (க-து.) பஞ்சாக்ஷர முதலாகிய மந்திரங்களை யுச்சரி
த்து அதின் பிறகு அந்த மந்திரத்தினுள் அக்ஷர சொரூபத்தை
யறிந்து சத்தி சிவான்மீகமாயிருக்கிற அக்ஷரத்தை ஹிருதயத்தி
லே வைத்தால் அந்தச் சத்திதானே சிவனை யிரண்டறக் கலப்பி
ப்பளென்று பஞ்சாக்ஷரத்தினாலே மோக்ஷத்தை யடையும்படி
க்குக் கொடிகட்டினேன் என்பதாம். (ரு-ம்.) அஞ்செழுத்து
மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும் பிஞ்செழுத்துமே
லைப் பெருவெழுத்தும் நெஞ்சழுத்தி - பஞ்சாக்ஷர முச்சரிக்கிற
முறைமையிலே தூலபஞ்சாக்ஷரம் சூக்குமபஞ்சாக்ஷரம் அதி
சூக்குமபஞ்சாக்ஷரமென்று உச்சரிக்கிற முறைமை மூன்றுவித
மூண்டு அந்த முறைமை யுச்சரித்து அந்தப் பஞ்சாக்ஷரத்தினு
டைய சுபாவமறிந்து (அதுவேதென்னில் சிகாரஞ் சிவம் வகார
ஞ் சத்தி யகாரமான்மா நகாரந் திரோதை மகாரமலம் ஆகவிந்
த முறைமையறிந்து) இதில் ஊனநடனமாகிய நகார மகாரத்தி
லேசென்று ஜநநமரணத்திலே போகாமல் ஞானநடனமாகிய சி
கார வகாரத்தைப் பொருந்திச் சிகாரமுதலாக வுச்சரித்து அப்
படி யுச்சரிக்கிற முறைமையும் விட்டு வகாரமாகி ஞானந்தானா
க நிற்கவேசிகாரமாகிய ஞேயத்திலே யழுந்துவிக்கும். அதுவெ
ப்படியென்னில் சத்தியாகிய வகாரமிடமாகச் சிவமாகிய சிகாரச்

இனிடையிலே அழுந்தவே அத்தன்மை யுண்டாக்கும் அதற்கு.
உ-ம். நெஞ்சுவிடுதூதில். "அஞ்செழுத்தை யுச்சரிக்குங்கேண்
மை யுணர்த்தி யுணர்த்தியபின் - மைச்சிருக்குமந்த வழியாக்கி,,
எ-ம். சிவப்பிரகாசத்தில். "திருவெழுத் தைந்தில்,, என்றபாட
த்திலும். திருவருட்பயனில் "ஊனநடன மொருபா லொருபா
லா; ஞானநடனந்தானடுவேநாடு,, எ-ம். "ஆசினவர்காப்பணை
டையா தருளினால், வாசியிடை நிற்கைவழக்கு, எ-ம். வருமே
துக்களைக் கண்டுகொள்க. ஆனால் பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்தா
ற் போதாதோ உச்சரிக்கவு மதின்மேலே சத்தி சிவான் மீகமா
கிய எழுத்தினிடத்திலே நிற்கவும் அதின்மேலே மோக்ஷ முண்
டாமென்ற தேதென்னில் பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்ததினாலே
அஞ்ஞானநீங்கி ஞானம் பிரகாசிக்கும். அதற்கு. உ-ம். சிவஞா
னபோதச் சூரணையில். ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி யுச்சரி
க்கவென்றது இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்து மஞ்
ஞானத்தை வெய்புகின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நி
ற்குமாதலினது நீக்குதற் கெனக்கொள்க. இந்தப் பஞ்சாக்ஷர உ
ச்சரிப்பிலே விளங்கின ஞானத்தினாலே நகார மகாரந் திரோத
மலமென்றும் யகாரம் ஆன்மபோதமென்றும் மூன்றெழுத்து நீ
ங்கி ஞானமேயா யந்த ஞானத்தினாலே சிகார வகாரத்தினிடை
யிலே நின்றழுந்துகிறதுவே சிறப்பென்றதற்கும். உ-ம். திரு
வருட்பயனில். "அருளினால் வாசியிடை நிற்கைவழக்கு, எ-து.
கண்டுகொள்க. இப்படி ஞானத்திலே யழுந்துகிறே மென்கி
றதையும் விடவே சிவன்தானே யிவனை யிருத்திக்கொண்டு மி
வன் செயலெல்லாந் தன்செயலாகவு மினுந் தானாகவே நிற்பா
ன். இதற்கு. உ-ம். திருவுந்தியாரில். "நஞ்செய லற்றிந்த நா
மற்றபின்னாதன், றன்செயறானே யென்றுந் தீபற, தன்னையே த
ந்தானென்றுந் தீபற,, இதிலிந்த மூன்றுவகையுங் கண்டுகொ
ள்க. (சு)

கொடிக்கவி மூலமும் உரையும் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

பிரதிகள்தோறும்இந்நூலுரையாசிரியர் பெயர் காணப்படவில்லை.

திருச்சிற்றம்பலம்

# உண்மைநெறிவிளக்கம்

## மூலமும் உரையும்.

---

மண்முதற் சிவமதீருய் வடிவுகாண் பதுவேரூப
மண்முதற் சிவமதீருய் மலஞ்சட மென்றல்காட்சி
மண்முதற் சிவமதீருய் வகையதிற் ருனிலாது
கண்ணுத லருளால்நீங்கல் சுத்தியாய்க் கருதலாமே.

இ-ள், மண்முதற்சிவமதீருய் - பிருதிவிமுதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களையும்,—வடிவுகாண்பதுவே ரூபம் - தனுவுங் கரணமும் புவனமும் போகமும் செயலும் பிரேரகமுமாய் நின்றபெருவடிவுங் குணமுந் தொழிலுந் தனக்கு வேருய்க்காண்பதுவே தத்துவரூபமாம்,—மண்முதற் சிவமதீருய் மலஞ்சட மென்றல்காட்சி - பிருதிவிமுதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களையுஞ் சுத்தமாயா அசுத்தமாயா மலத்தினது காரியமென்றுஞ் சடபதார்த்தமென்றுந் தன்னாலே யறியப்பட்டதென்றுந் தன்னறிவிலே விளங்கக் காண்பதுவே தத்துவ தரிசனம்,—மண்முதற் சிவமதீருய் வகையதிற்ருனிலாது - பிருதிவிமுதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களினது விகற்பமாகிய கூட்டங்களிற் ருனில்லாமல்,—கண்ணுதலருளால் நீங்கல் சுத்தியாய்க் கருதலாமே - தத்துவங்கள் தன்னைத்தாக்காமல் கானலைத் தண்ணீரென்று கண்டவன் கானலென்றறிந்தவிடத்ததைத் திரும்ப விரும்பாதது போலவுஞ் சொப்பனத்தில் யானையேறினதாகக் கண்டவன் விழித்தவிடத் ததுமெய்யாய்க் காணுதல் பொ

ய்யாய்க் கண்டது போல்வுந் தன்னறிவிலே கண்டு நீங்கித் தான
சைவின்றி யந்நிடறு யெங்கு நிறைவாய் நித்தியமா யறிவாயுள்ள
முறைமையை யறிந்து நிற்பது தத்துவ சுத்தியாமென்று வேதா
கமங்கள் சொல்லும். (க)

பாயிருணீங்கிஞானந் தனைக்காண்டலான்மரூப, நீயு,
நின்செயலொன்றின்றி நிற்றலேதரிசனந்தான், போயி
வன்றன்மைகெட்டுப் பொருளிற்போயங்குத் தோன்று
தாயிடலான்மசுத்தி யருணூலின் விதித்தவாறே.

இ-ள். பாயிருணீங்கிஞானந் தனைக்காண்ட லான்மரூபம்
தேசிகமூர்த்தத்தினது அநுக்கிரகத்தினலே தன்னையுந் தன்னி
டத்திலே பெந்தமாயிருக்கிற தத்துவ விகாரங்களையு மெவ்வி
டத்திலுந் தோன்றாமல் சகசமாய் மறைத்து நின்ற வாணவ மல
த்தையு நீங்கித் தானறியு முறைமையும் அவனது ஞான மறிவுக்
கறிவாய் நின்றுபகரிக்கிற முறைமையுந் தன்னறிவிலே விளங்க
க் காண்பதுவே ஆன்மரூபமாம்,—நீயுநின்செய லொன்றின்றிநி
ற்றலே தரிசனந்தான் - ஆன்மசெய்தி யெவ்விடத்திலுந் தோன்
றாமல் தத்துவதாத்திகங்களை யென்னதென்றும் பசுஞானத்தை
யானென்றும்நின்ற வசத்திடபோதநீங்கிப் பழைய சிற்றறிவாகி
ய சுட்டுப்போதங் கழன்றுநிற்பது ஆன்மதரிசனமாம்,—போயிவ
ன்றன்மைகெட்டு - தனக்கெனச் செய்தியில்லாத வான்மா தன
து சுட்டறி வெவ்விடத்திலுந் தோன்றாமற் கெட்டு,—பொருளி
ற்போய் - தன்னிடத்திலே விளங்கப்பட்ட வநுக்கிரக ஞானத்
திலே தற்பூரணமெல்லா மடங்கித் தனது செய்தியெல்லா மநு
க்கிரகத்தினது செய்தியாய்,—அங்குத்தோன்றுதாயிடல் - தன்
னை யந்த ஞானமடக்கின முறைமையுந் தானந்த ஞானத்திலேய
டங்கின முறைமையு மெவ்விடத்திலுந் தோன்றாமல், பெத்தத்தி
லுலே தேகமேதானாயுந் தானே தேகமாகியு நின்ற முறைமை
போலச் சிவமேதானாய் நிற்கவந்ததானால்,—ஆன்மசுத்தியருணூ

வின் விதித்தவாறே - ஆன்ம சுத்தியாமென்று வேதாகமங்களி
ன் வழியிலே யடைந்த ஞாதாக்கள் சொல்லு முறைமையாம்.

எவ்வடிவு களுந்தானா யெழிற்பரை வடிவதாகிக்
கல்வியமலத் தான்மாவைக் கருதியே யொடுக்கியாக்கிப்
பவ்வம்விண் டகலப்பண்ணிப் பாரிப்பா னொருவனென்று
செவ்வையே யுயிரிற்காண்டல் சிவரூபமாகு மன்றே.

இ-ள். எவ்வடிவுகளுந்தானாய் - ஜடசித்துக்களாகிய தாபர
சங்கமங்களு ளெல்லாந் தான்வேறறநின்று,—எழிற்பரைவடிவ
தாகி - பெருமைபொருந்தி யிருக்கப்பட்ட காருண்ணியசத்தியே
தனக்குத்திருமேனியாகி,—மலத்தான் மாவைக்கருதியே - ஆண
வமலஞ் சகசமா யிருக்கப்பட்ட வான்மாக்கள் பாகபேதங்களைத்
திருவுள்ளத்தடைத்து,—கல்வியே - தனதிச்சாஞானக் கிரியையி
ன் செய்தியாகிய மாயா தத்துவங்களினால்,—ஆக்கி யொடுக்கி -
சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்தும்,—பவ்வம்விண் டகலப்ப
ண்ணி - மலபாகவொழிவிலே யிந்தத் தத்துவங்கள் வேறும் படி
க்குச் சத்திநிபாதத்தை விளைவித்து,—பாரிப்பானொருவன் - சத்
திநிபாதத்தின் வழியிலே புறம்பே கட்புலனுக்குந் தோன்ற மா
னிடச் சட்டைசாத்தி யெழுந்தருளிவந்து தான்வேறற நிற்கிற மு
றைமையைத் தருகின்றவன் ஆன்மாக்களுக் கெல்லா மறிவுக்க
றிவா யிருக்கிற சிவனேயென்று,—செவ்வையே யுயிரிற் காண்ட
ல் - பிரதிக்கினை யேது திட்டாந்தங்களினாலே மயக்க விசற்பம
றத் தன்னறிவிலே விளங்கக்கண்டு நிற்பது,—சிவரூபமாகுமன்
றே-சிவனது ரூபமாமென்று வேதாகமங்கள் சொல்லும்.

பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது ரூபமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகுமென் றிவ்வுண்மை
யினை மிகத்தெளிந்து பொருள்வேறென் றின்றித், தனை

முதலிற் போகாது நிலையினினில்லாது தற்பரையினின்
றமுந்தா தற்புதமேயாகித், தெரிவரிய பரமார்த்தத்திற்
சேர்தல் சிவனுண்மைத் தரிசனமாய்ச் செப்புநூலே.

இ-ள். பரையுயிரில் யானென தென்றறநின்ற தடியாம் - ஆன்மாவென்ப தெவ்விடத்திலுந் தோன்றும லென்ன தென்றும் யானென்றும் நின்றவசத்திய போதநீங்கத் தேசிக மூர்த்தத்தி னநுக்கிரகஞானம் பிரகாசித்துநின்ற வவசரஞ் சிவனது பாதமாம்,—பார்ப்பிடமெங்குஞ் சிவமாய்த் தோன்றலது முகமாம் - தன்னை யுணர்ந்தும் பருகியாகத் தாக்குவதான விஷய போகங்களை யவனவனாதுவாய் நோக்கு மிடமெல்லாமவ னநுக்கிரகத்தையே கண்டநுபவிப்ப தவனது திருமுகமாம்,—உரையிறந்த சுகமதுவே முடியாகும் - அந்த வநுக்கிரகத்திலே தற்செயல் தோன்றாமல் பரவசப்படுவதே சிவனது திருமுடியா மென்றறிந்து,—இவ்வுண்மையினை மிகத்தெளிந்து - இந்த வுண்மையைச் சந்தேகவிகற்பமற வுள்ளபடி விசாரித்தறிந்து,—பொருள் வேறொன்றின்றி - இதுவல்லாமல் சத்தியமாயுள்ள பொருள் வேறேயுமொன்றில்லை யென்று தெளிந்து, —தரைமுதலிற் போகாது-என்னதி யானென்னும் விகற்பமாகிய பிருதிவிமுதல் நாதமீறாகச் சொல்லப்பட்ட சகலாவத்தையிலும் பொருந்தாமல்,—நிலையினி னில்லாது - இந்தக் கருவிகள் நீங்கிநின்ற றனித்துள்ள சகச நிலையாகிய கேவலாவத்தையிலும் பொருந்தாமல்,—தற்பரையி னின்றமுந்தாது - இந்தக் கேவலசகல மிரண்டு நீங்கின விடத்து விளங்குவதான போதபூரணமாகிய அகம்பிரம ஞானத்திலும் பொருந்தாமல்,—அற்புதமேயாகி - தேசிகமூர்த்தத்தி னநுக்கிரக ஞானத்திலே தற்பூரணமெல்லா மடங்கித் தனது செய்தியெல்லா மவனதநுக்கிரக ஞானசத்தியினது செய்தியாய்,—தெரிவரிய பரமார்த்தத்திற் சேர்தல் - அரிதற்கரிதாகிய மேலான பூரணவின்பந்தோன்றும லேகதேச வியாபாரமாகிய தனுகரணாதி யின்பமே தோ

ன்ற அந்த வின்பங்களையே மெய்யென் றநுபவித்து நின்றமு
றைமைபோலத் தனுகரணாதி யின்ப மெவ்விடத்திலுந் தோன்
றாமல் பூரணவின்பத் தொடர்ச்சியாகிய தேசிகமூர்த்தத்தி னநு
க்கிரக ஞானத்தை யெவ்விடத்திலுங் கண்டநுபவிப்பது,—சிவ
னுண்மைத் தரிசனமாய்ச் செப்புநூலே - சிவனையுள்ளபடி சத்தி
யமாகப் பெற்ற தரிசனமென்று சொல்லுஞ் சிவாகமங்கள். (௭)

இனி யான்மசுத்தியாகிய போதவொழிவும் அருள் கழற்றியு
ம் வருமாறு.

எப்பொருள் வந்துற்றிடினு மப்பொருளைப் பார்த்
தங்கெய்து முயிர்தனைக் கண்டிங் கவ்வுயிர்க்கு மேலா
மொப்பிலருள் கண்டுசிவத் தண்மைகண்டிங் குற்றதெ
ல்லா மதனாலே பற்றிநோக்கித், தப்பினைசெய்வது மது
வே நினைப்புமதுதானே தருமுணர்வு புசிப்புமதுதானா
யாகு மெய்ப்பொருளுமதைவில்லை யெனவந்தபொருளோ
டிசைவதுவேசிவபோக மெனுமிறைவன்மொழியே.

இ-ள், எப்பொருள்வந் துற்றிடினும் - ஜடசித்துக்க ளிர
ண்டினு நின்று விளங்குவதாகிய ஹிதா இதங்களுக் கேற்ற சத்
தாதி விஷயங்களிலே யெந்த விஷயங்கள்வந்து தாக்கினாலும்,—
அப்பொருளைப் பார்த்து - அந்த விஷயங்களை யெதிரிட்டுப் பார்
த்து இது மாயாகாரியமான தனுகரண புவனபோகங்களினது
விகற்பமென்று மிந்த விஷயங்களி னின்றும் விளங்குவதாகிய
இதா இதங்கள் கன்மத்தினது விகற்பமென்றுங் கண்டு தனக்கெ
னச் சற்றுஞ் செய்தியில்லாத ஜடரூபமாகையினாலே தானாய்ச்செ
யற்படவறியாது.—அங்கெய்து முயிர்தனைக்கண்டு - அந்த விஷ
யங்களை யதுவதுவாகப் புசிக்கு மான்மாவை நித்தியனாய்ப் பூர
ணனா யறிவாயிருந்தாலும் தானாக வொன்றையு மறிதற் கறிவில்
லையென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து.—அவ்வுயிர்க்கு
மேலா மொப்பிலருள் கண்டு - அந்த ஆன்மாவினது அறிவுக்க
றிவாய்நின்று இந்த விஷயபோகங்களை யிடைவிடாமற் பாகமறி

ந்துணர்த்தி நிற்கிற திருவருளையு முள்ளபடி தரிசித்து;—சிவனு
ண்மை கண்டு - அந்த வருளினது நிறைவெல்லாந் தனது வடி
வாகவுடைய பூரணவின்பமெனக் கண்டித்துக் குருமூர்த்தம
யெழுந்தருளி மானிடச்சட்டை தரித்துவந் துபதேசித்த வநுக்கி
ரகத்தை யுள்ளபடி தரிசித்து,—இங்குற்றதெல்லா மதனாலேய
றிநோக்கி - இவ்விடத்திலே வந்து பொருந்தப்பட்ட சத்தாதிவி
ஷயங்களையெல்லா மந்த வநுக்கிரகத்தினாலே பொருந்திப் பா
ர்த்து,—தப்பினைசெய்வது மதுவே நினைப்பு மதுதானே - இந்தவி
ஷய போகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விக்கிறதும
நுக்கிரகமாகிய திருவருள்தானே நல்வினையைச் செய்விக்கிறதும
ந்தத் திருவருள்தானே,— தருமுணர்வு புசிப்புமதுதானேயாகி -
இந்த நன்மைதீமைகளை யறியும்படிக்குப் புசிப்பாகிவந்த விஷய
பேதங்களு மவ்வநுக்கிரகமாகிய வருள்தானேயென் றுள்ளபடித
ரிசித்து,—எப்பொருளு மசைவில்லையென - இந்த முறைமையெ
ன்றியிலே சித்தாகிய வான்மவர்க்கத்துக்கும் ஜடமாகிய பாசஜா
லங்களுக்கு மொன்றையொன்றறியவு மொன்றையொன்று பொ
ருந்தவு மொருசற்றுஞ் செயலில்லையென்று முறைமையை யுள்ள
படி தரிசித்து அந்தப் பொருளோ டசைவதுவே,—சிவபோக
மெனு மிறைவன் மொழியே - அவனநுக்கிரக பூரணமெல்லாந்
தற்பூரணமாகவு மிப்படி யிரண்டற நிற்கிறதே சிவனுடனே யிர
ண்டறக் கூடின முறைமை யென்றுஞ் சிவாகமங்கள் சொல்
லும். (௫)

பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுட்
டபயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றி வரினுஞ், சாதி
நெறிதப்பிடினுந் தவறுகள்வந்திடினுந் தனக்கெனவோ
ர்செயலற்றுத் தானதுவாய்நிற்கின், ஓதனவ னுடலுயிரா
யுண்டுறங்கிக்கிடந்து நாளுபோகங்களையுந் தானாகச் செய்
து, பேதமற நின்றிவனைத் தானாக்கிவிடுவன் பெருகுசிவ
போகமெனப் பேசுநெறி யிதுவே.

இ-ள். பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்பயின்றிடினு நெறியல்லா நெறியயிற்சிகளினுஞ் சாதிநெறி தப்பிடினுந் தவறுகள் வந்திடினும் - இப்படிப்பட்ட செய்தியல்லாத் தொழில்களைச் செய்தாலும்,—தனக்கென வோர்செயலற்றுத் தானதுவாய்நிற்கில் - தற்செய லெவ்விடத்திலுந் தோன்றாமலநுக்கிரகமாகிய வருணிறைவிலே வேறற நிற்கில்,—நாதனவனுடனுயிராய் - அந்த வருணக்கு முதன்மையாகிய சேயமவனதறிவுபூரணமெல்லாந் தனது வடிவாகக்கொண்டு தானந்தவறிவு பூரணத்துக்கெல்லா முயிராய்—உண்டுறங்கி நடந்து-இவனதறிவுதொழிலாகிய விந்திரிய போகங்களாய் வரும் புசிப்புந் தொழிலுந்தனது புசிப்புந் தொழிலுமாகவே புசித்துத் தொழிற்படும், —நானுபோகங்களையுந் தானுகச்செய்து - நானுவிதமாகிய போகங்களையெல்லா மிவனுக்குத் தனது பூரணவின்பமாகிய சேயவடிவாகவே காட்டி,—பேதமறநின்றிவனைத் தானுக்கிவிடுவன் - இவனதறிவு பூரணமெல்லாந் தனதின்பப் பூரணமாகவும் தனதின்பப் பூரணமெல்லா மிவனதறிவு பூரணமாகவும் வேறறத் தோன்றிநின்று தனதின்ப நிறைவெல்லா மிவனதநுபோக பூரணத்தையமிழ்த்தி நிற்பது.—பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே ஜடசித்துருவ மாகிய பிரபஞ்ச மெவ்விடத்திலும் தோன்றாமல் பெருகப்பட்ட சிவாநந்த மேலீடாகிய சிவபோகத்தினது முறைமை யித்தன்மைத் தென்று சொல்லும் வேதாகமங்கள்.

உண்மைநெறிவிளக்கம்-மூலமும்-உரையும்,

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

இந்நூலுடையாசிரியர்பெயர் காணப்படவில்லை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சங்கற்பநிராகரண மூலம்.



கொற்றவன்குடி

## உமாபதிசிவாசாரியர்

திருவாய்மலர்ந்தருளியது.



இதற் குரையுடன்.

ஸ்ரீ

காஞ்சிபுரம்

மகாவித்வான்

கந்தசாமி முதலியார்

மாணாக்கர்

கா. சுந்தரமூர்த்தி முதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கன்னிகைப்பேர்

முருகேச முதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



1898௵

உ

திருச்சிற்றம்பலம்.

# சங்கற்பநிராகரணம்.

## மூலமும் உரையும்

---

### விநாயகர் வணக்கம்.

திருந்திய வருந்தவம் பொருந்துபன் முனிவர்
கமையாக்காத லமையாது பழிச்சும்
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை
வாட்டரு மும்மை நாட்ட நால்வாய்ப்
பாசமங்குசந் தேசுறு மெயிறொண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்க தங்கடகம் பொங்கிழை யார
நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி
கொண்டதிண் பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுத னிருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே.

இ-ள். திருந்திய வருந்தவம் பொருந்து பன்முனிவர்-சாத்திரங்களில் உத்தமப் பிரகாரமாக விதிக்கப்பட்ட வரிய தவங்களோடுங் கூடி யிருந்துள்ள மஹா இருடிகள் பலருங்கூடி, —கமையாக்காத லமையாது பழிச்சும் - ஒருங்காலு நிறம்பாத வாஞ்சை யோடுங்கூடி யநவரதமுந் தோத்திரம்பண்ணும். —நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த புனிற்று வெண்பிறைத் தனிப்பெ

ருங் கோட்டு - ஒப்பில்லாமலிருக்கிற செக்கர் வானம்போன்றசி வந்தபுகரோடுங் கூடியிருக்கிற முகத்திலே தோன்றப்பட்ட வீன்றணித்தாயுள்ள வெள்ளிய பிறைபோலு மொப்பில்லாத பெரிய கொம்பினையு முடையதாய்;—தழைசெவி மழை மதப் புழை நெடுந் தடக்கை - தழைந்த செவியினையுங் கார்போலும் பொழியாநின்ற மதத்தினையு மிரண்டு துவாரத்தோடுங்கூடி நெடியதாய்ப் பருத்திருக்கிற துதிக்கை யினையுமுடையதாய், —வாட்டரு மும்மைநாட்ட நால்வாய் - ஒளியினையுடைய மூன்று கண்ணினையும் நான்றவாயினையு முடையதாய், —பாசமங்குசந் தேசுறுமெயி ருண்கனி யிவைதாங்கும் புனிதநாற்கரத்து - பாசத்தினையுந் துறட்டினையும் பிரகாசத் தினையுடைய கொம்பினையு மழகிய மாங்கனியினையு மிவை யிற்றைத் தரித்துக் கொண்டிருக்கிற சுத்தமாயுள்ள நாலுகையினையு முடையதாய்,—அங்கதங் கடகம் பொங்கிழையார நிறைமணிச் சுடிகை கறையணற் கட்செவி கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாள் - தோள்வளையினையு மிரத்தின கடகத்தினையு மிக்க நவரத்தினங்களை யழுத்தி யிழைக்கப்பட்டிருக்கிற வாபரணத்தினையுங் குறைவற வணிந்து இரத்தினத்தை யுடைய தலையினையுங் கறுத்திருக்கிற கண்டத்தினையு முடையதாய் கண்ணே செவியாகக்கேட்கிற பாம்புகொண்டு கட்டப்பட்டுச் சிக்கென்று பெரிதாயிருக்கிற வயிற்றினையுங் குறுகியிருக்கிற காலினையு முடையதாயிருக்கிற,—களிறுதனிருகழல்கருதா - இப்படிக்கொத்தவானை யினதிரண்டுபாதங்களையு மென்மனதாரநினைந்து,—வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே - குற்றந்தோடுங் கூடியிருக்கிற துக்கங்களை மிகவும் விடுவியாநின்றோம், (௪)

காப்பு-முற்றிற்று.

## பாயிரம்.

பெருங்கட லுத்வுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள்
பாலரை யுணர்த்து மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளா
லருளிய கலைக ளலகில வாலவை
பலபல சமயப் பான்மைத் தன்றே
யஃதா லந்நூற் றன்மை யுன்னிய
மாந்த ரிதுவே பொருளென் றதனிலை
யறைதலின் வேற்றோர் பனுவ லேற்றோர்க்
கிசையா மாறுபாடு கூறுவ ரதனாற்
புறச் சமயங்கள் சிறப்பில வாகி
யருளின் மாந்தரை வெருளுற மயக்கி
யவ்வகைத் தெரி னிலையிற் றீரு
மீங்கிவை நிற்க நீங்காச் சமய
மூவிரு தகுதி மேவிய தாமு
மொன்றோ டொன்று சென்று நிலையி
லாறு மாறு வீறுடைத் திவற்று
ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகி லாகம நிலவுத லுளவவை
கனக மிரணியங் காஞ்சன மீழத்
தனிகி யாடகந் தமனிய மென்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை விளக்கும்
வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி
யாசா றகி வீஇய சமத்துட
னெழுஞ் சிறுநூ றெடுத்த வாயிரம்

வாழுநற் சகள மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த வற்புதஞானி
யாளும் விழவிற் பொற்றே ராலயத்
தேறு வெண்மர் நிறையி லிருப்ப
மயங்குவாத மாயாவதி
முயங்கிட வொருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம்பதி திகழ்
மெய்கண்டவ னருள் கைகண்டவர்களி
லொருவ ரொருதலை மருவியிருப்ப
வஞ்சப்பிறவிக் கஞ்சிவந்தொருவ
னேதிறை யருளென வீதெனுமாயா
வாதியை யயலினர் மருதலைத் தருடா
மற்றவரயலின ரவருரை மறுத்துச்
சொற்றரவயலின ரவருந்தொலைவுற்
றின்னேயெவரு முன்னேகழியுழி
யாங்கய லிருந்த வருளின ரழகிது
நீங்கள் சங்கற்ப நிராகரித் தமையென
மற்றவ ருரைத்த சொற்றரு பொருள்கொடு
வாதசெற்ப விதண்டையு மேனு
மோதுநால்வகை யுவமையுந்திகடர
வருள்சேர்மாந்தர் வெருள்சேராமற்
றர்க்கமும் விடையமுங் கற்க
நற்கவிமாந்தர் நகைவிற்றுவனே

இ-ள். பெருங்கடலுதவுங் கருங்கடு வாங்கிக் கந்தரத்தமைத்த வந்தமில் கடவுள் - பெரிதாயுள்ள திருப்பாற் கடலிலே நின்று முண்டாகப்பட்ட கறுத்தநஞ்சினைத் தனது ஸ்ரீயத்தத்திலே வாங்கி யமுதுசெய்து கண்டத்திலே தரித்துக் கொண்டிருக்கை யிலேயுந் தனக்கு முடிவில்லாத கடவுள். (என்னவே சுத்தாவை நீக்கி முற்காலத்திலே தேவர்கள் அமுதங்கடைய வதிலே நஞ்சு

பிறந்தது அதினாலே யவர்கள் பீடைப்படுகையினாலே துஷ்டநி
க்கிரகமும், அவர்கள் கர்த்தாவைநோக்கியபயமிட வஞ்சாதிரொன்
றந்தகஞ்சை யமுதுசெய்தவர்களை யிரக்ஷிக்கையினாலே சிஷ்டப
ரிபாலனமுமாகி நின்றதெனக் கொள்க.) இப்படித் துஷ்டநிக்கி
ரகமுஞ் சிஷ்டபரிபாலனமு முடைய கடவுளானவர்,—பாலரை
யுணர்த்து மேலவர்போல - தங்கள் பிள்ளைகளுக்கந்தப் பக்குவ
ங்கடோறு மறிவையுந் தொழிலையும் கொடுத்துவந்த மாதா பிதா
க்களைப்போல,—கேட்போ ரளவைக்கோட் படுபொருளா லரு
ளியகலைக ளலகில - கேட்கிற சீடர்களுடைய வெல்லைக் கோட்
பாடுகளுக்கீடா யுள்ளவத்தங்களைக்கொண் டருளிச்செய்யப் பட்
டிருக்கிற சாத்திரங்க ளெண்ணிறந்த தாயிருக்கும், —ஆலவை
பலபல சமயப்பான்மைத் தன்றே - அப்படி யிருக்கையால் அந்
தச் சாத்திரங்கள் வெகுவிதமாயுள்ள சமயப் பகுதிகளோடுங்கூ
டியிருக்கும்,—அஃதா லந்நூற்றன்மை யுன்னியமாந்த ரிதுவே
பொருளென் றதனிலையறைதலின் - ஆகையால் அந்தச் சாத்திர
ங்களினதுண்மை யாராய்ந் தறிந்தவர்கள் நமக்கிதுவே சாத்திர
மு மிதுவேயத்தமுமென் றந்தச்சமயத்தையே பலமாகச்சொல்லி
நிற்கையினாலே,—வேற்றோர்பனுவ லேற்றோர்க் கிசையா மாறு
பாடுகூறுவர் - மற்றொருசாத்திரத்தை யாராய்ந்தறிந்தவர் களுக்
கு அவன்சொல்லுகிற சாத்திரமு மத்தமும் பொருந்தா தாகை
யால் அவன்சொன்ன இவனுக்குப் பொருந்தாமலிவன்சொன்ன
தவனுக்குப் பொருந்தாம லொன்றுக்கொன்று மாறுபடச் சொல்
லாநிற்பர்கள்,—அதனாற் புறச்சமயங்கள் சிறப்பிலவாகி யருளின்
மாந்தரை வெருளுறமயக்கி யலகைத்தேரி னிலையிற்றீரும் - அப்
படி யிருக்கையினாலே உலகாயிதன் புத்தன் சமணன் மீமாஞ்சி
சன் மாயாவாதி பாஞ்சராத்திரியென்று சொல்லப்பட்ட புறச்சம
யங்களிலுள்ள வத்தங்களினுண்மைப் பகுதியில்லாததாய் சிவனு
டைய வநுக்கிரகத்திற் கேதுவல்லாதவை பக்குவான்மாக்களை யீ
தோரத்த மிருந்தபடியென் றச்சப்படத் தக்கதாக மருட்டிப் பே

யத்தேனைத் தண்ணீரென்று கருதி இதைக்குடித்துத் தாகந் தீர
லாமென்று வந்தவனுக்கந்தத் தண்ணீர்பொய்யாய்ப் பேய்த்தேர்
மெய்யான தன்மைபோல வித்தச்சாத்திரங்களு மத்தங்களுஞ் ச
த்தியம் போலத்தோன்றி யசத்தியமாய் முடியும், —ஈங்கிவைநி
ற்க நீங்காச்சமய மீவிரு தகுதிமேவிய தாமும் - ஆகையால் இவ்
விடத்திற் சொல்லப்பட்ட சமயங்களு மத்தங்களு நமக்கு வேண்
டுவதில்லை. தன்னிலொன்றோடொன்று கூடிக் கொண்டிருக்கிற
சைவம் பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வைரவம் என்
கிற வுட்சமயங்களாறும்,—ஒன்றோடொன்று சென்றுறுநிலையி லா
றுமாறுவீறுடைத்து இவை யொருசமயத்தோ டொருசமயந் தாக்
கிப் பார்க்குமளவில் அந்தவாறு சமயங்களுந் தனித்தனியேமகத்
துக்களாயிருக்கும்,—இவற்று ளெவ்வமில்லாச் சைவநற்சமயத்த
லகிலாகம நிலவுதலுள - இந்தச்சமயங்களில் வைத்துக்கொண்
டு ஒருசற்றுங் குற்றஞ்சொல்ல வொண்ணுமலிருக்கிற சைவமாகி
யநல்சமய மொன்றையு நோக்கித் தம்பிரானா ரருளிச்செய்யப்ப
ட்டிருக்கிற வாகமங்க ளெண்ணிறந்து பொருந்தாநிற்கும் அந்த
ஒருசமயத்தை நோக்கிப் பலசாத்திர மருளிச்செய்வானேனென்
னில்,—அதை கனக மிரணியங் காஞ்சன மீழந்தன நிதியாடகந்
தமனியமென்றிப் பலபெயர் பயப்பதோர் பொருளேபோலப்பதி
பசு பாசவிதிமுறை விளக்கும்-அப்படிப்பலவாக வருளிச்செய்த
து மொருபொருளைப் பற்றியிருக்கும் அஃதெங்ஙனேயென்னில்
கனகமென்றும் இரணியமென்றும் காஞ்சனமென்றும் ஈழமென்
றும் தனமென்றும் நிதியென்றும் ஆடகமென்றும் தமனியமென்று
ம் இங்ஙனம் பலபெயராகச் சொல்லப்பட்டவை யெல்லாம்பொ
ன்னாகிய வோர்பொருளையே பற்றிநின்றார் போல வந்தச்சாத்திர
ங்களும் பதியினிலக்கணத்தையும் பசுவினிலக்கணத்தையும் பா
சத்தினிலக்கணத்தையுமே சொல்லாநிற்கும்,—வாய்ந்தநூல்களா
ய்த்தனராகிய சாதுநி வீரியசமத்துடன் - இங்ஙனம் பொருந்தப்ப
ட்டிருக்கிற வாகமங்களைக் கற்றுணர்ந்தாராய்ந்தபோதவான்களா

ய்சமயவிசேஷ நிருவாண வபிஷேகமென்கிற நாலுநிலைகளை
யுமுடையவர்களா யெங்கும் பிரகாசிக்கப் பட்டிருக்கிறபக்ஷப்பி
ரதிபக்ஷமில்லாத சமபோதவான்களாயுள்ளவிந்தப்பெரியோர்கள்
—ஏழஞ் சிருநூறெடுத்தவாயிரம் வாழுகற்சகன மருவாநிற்ப-சகா
த்தம் ஆயிரத்திருநூற்றுமுப்பத்தைஞ்சுசெல்லாநின்றகாலத்திலே
பொற் பொதுமலிந்த வற்புத ஆனியாறும்விழவில்-பொன்னினு
ற்செய்யப்பட்ட திருவம்பலத்தின் கண்ணே நிலைநின்றெழுந்தருளி
யிருக்கிற வாச்சரியவானாயுள்ள திருவம்பலமுடைய தம்பிரானாரு
டைய வானிமாதத்தி லாறுந்திருவிழாவிலே—பொற்றேராலயா
த்தேறுமெண்மர் நிரையிலிருப்ப-பொலிவினையுடைத்தாகியதே
ர்மண்டபத்திலேயேறிமுன்சொல்லப்பட்ட வாசாரியமாரெட்டு
த்திருப்பெய ரொழுங்கிலேயெழுந்தருளியிருக்கிறவவதாரத்திலே
மயங்குவாதமாயாவாதி முயங்கிடவொருதலை-சற்காரியவாதமின்
றியொருகாற்சொன்ன தொருகாற்சொல்லாமல் முன்னொடுபின்
மலைந்துவருகிற வர்க்கத்தோடுங்கூடியிருக்கிற மாயாவாதியென்
கிறசமயியொருபுறத்திலேகூடியிருக்க—முனைவெதிர்மலைசேர்பெ
ண்ணைசூழ்ந்தவெண்ணெயம்பதி நிகழ்மெய்கண்டவனருள்கை
கண்டவர்களி லொருவரொருதலைமருவியிருப்ப-முதிர்ந்தமூங்கில்
களினுண்டாகிய முத்துக்களோடுங் கூடியிருக்கிற பெண்ணையா
று சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரென்கிற திருப்படை வீ
ட்டிலே திருவவதாரஞ் செய்யப்பட்ட மெய்கண்ட தேவநாயனா
ருடைய வநுக்கிரகத்தைப் பெற்றவடியார்களிலே பொருந்தாத்
தக்கூட்டத்தி னொருபுறத்திலே பொருந்தி யெழுந்தருளி யிருக்கி
றவவதாரத்திலே,—வஞ்சப்பிறவிக் கஞ்சிவந்தொருவ னேநிறைய
ருளென - பொல்லாங்கை விளைப்பதாயிருக்கிற பிறவிப் பிணிக்
குப் பயப்பட்டானொருபக்குவன்வந் திவர்களைத் தண்டம்பண்ணி
த்தம்பிரானார் திருவருளெப்படி யிருப்பதென் றவன்வினவ.—
ஈதெனு மாயாவாதியை யடலினர் மறுதலைத்தருட - தன்னுடை
ய வுத்தரத்தைப்பார்த்திருவே பொருளொன்று காட்டின மாயாவா

திலை யருகேயெழுந் தருளியிருந்தவ ரவன்சொன்ன வத்தத்தை
க்கண்டிருந் திதுவத்தமல்ல வென்றுதள்ளித் தம்முடைய வத்தத்
தை யிதுவே பொருளென்றுநாட்ட, —மற்றவரயலின ரவருரை
மறுத்துச்சொற்றா - அவருடைய பக்கத்திலிருந்தவர் அவர்சொ
ன்னவத்தத்தைக் கண்டித்துத் தம்முடைய வத்தத்தை யிதுவே
பொருளென்றுநாட்ட,— அயலின ரவருந் தொலைவுற்று - அவரு
டையவருகே யிருந்தவராலே யவருங் கண்டிக்கப்பட்டு,— இன்
னேயெவரு முன்னேகழியுழி - இப்படியொருவரை யொருவர்ம
றுத் தெட்டுப்பேருமுன்னே தள்ளுண்டவவதரத்து,—ஆங்கயலி
ருந்த வருளினாழுகிது நீங்கள்சங்கற்ப நிராகரித்தமையென மற்
றவறுரைத்த சொற்றரு பொருள்கொடு - அவ்விடத்தவர்க ளரு
கேயெழுந் தருளியிருந்த வாசாரியவான்களைப் பார்த்து நீங்களு
ங்களத்தங்களைச் சங்கற்பித்தது மத்தைநிராகரித்தது மிகவு நன்
றாயிருந்த தென்றருளிச்செய் தவர்கள்சொன்ன சொற்களிலுண்
டாகிய பொருள்களை யெடுத்துக்கொண்டு யான்,—வாத செற்ப
விதண்டையு மேதுவு மோதுநால்வகையு வமைந்திகடா - வாத
மென்றசொல்லுதான் விகாரமென்றும் விசியுழியென்றுமிரண்டா
ம். இதில்விகாரமென்றது குருவுஞ் சிஷனுமாகுதல், தன்னோ
டொத்த பக்ஷபாதனுமாகுதல், மாறுபாடின்றிப்பிரமாணங்களிலு
ண்டாகிய வத்தங்களைத் தர்க்கித்ததிலுண்டாகிய குற்றங்களை நீங்
கிச் சத்தியமானவத்தத்தை நியமிக்கப்படுவதெனக் கொள்க விசி
யுழியென்ற சொல்லுதான் செற்பையென்றும் விதண்டை யென்
றுமிரண்டாம், இதிற் செற்பையென்றது பிறருடைய வத்தங்க
ளை நிராகரித்துத் தன்னுடையபொருளை மலைவறநாட்டுவதென
க்கொள்க. விதண்டையென்றது பிறருடைய வத்தங்களைநிரா
கரித்துத் தன்னுடையவத்தந் தோன்றுமனின்று சாதிக்கப்படுவ
தெனக்கொள்க. ஏதுவென்றது அளவைப் பிரமாணங்களிலே
விதிக்கப்பட்டிருக்கிற பலவேதுக்களும். ஓதுநால்வகையுமமை
யுமென்றது வினை பயன் மெய் உருவென்று சொல்லப்பட்ட நா

லுவகையுவமையு மிந்தநூலிலே விளங்கத்தக்கதாக,—அருள்சே
ர்மைந்தர் வெருள்சேராமல் - திருவருளுக் கேதுவாயுள்ள பக்கு
வான்மாக்களுக்கு அத்தமலையென்கிற வச்சம்வந்து பொருந்தாம
ல் அவர்கள்,—தர்க்கமும் விடயமுங்கற்க நற்கவிமாந்தர் நகைவி
ற்றுவனே - இந்நூலிலுண்டாகிய தர்க்கங்களையும் விடயங்களை
யுங்கற்கத்தக்க தாகவும் நல்லகவிதையோடுங் கூடியிருக்கிறவித்
துவான்கள் இவனுமொருநூல் செய்வதேயென்று சிரிக்கத்தக்க
தாகவும் இந்தநூலைச் சொல்லாநின்றேன். (௨)

பாயிரமுற்றிற்று.

---

## மாயாவாதிசங்கற்பம்.

—()—

நவிற்றியநிரையி னவித்தைதீயிறேனுரை
நித்தனறிவன் சுத்தனகண்டித
னிருவிகற்பனிர்த் தத்துவனிரஞ்சனன்
சொல்வகையெவையுந் தொடராத்தூய்மணி
வரம்பில்வேதச் சிரந்தருபரம்பொருள்
சத்தாயெவையுந் தானுயவித்தை
தொத்தாதுயர்ந்த தொல்சுடர்மூவா
வின்னதன்மைய னேகனேகன்
கன்னற்பெருஞ்சுவை தன்னிற்பிறவாப்
பெற்றியினிருந்து பொற்பணியியல்பினின்
வான்வெளியனனீர் மண்மருந்தன்ன
மானதரது வாறைங்கோசந்
தொகுதியாக்கைப் பகுதியொருபுடை
சுத்திவெள்ளி யொந்தனமித்தையிற்
றுனைலாருந் தன்மைத்துறு [illegible]தயிற்

இன்னாற்றகையின் வேற்றுமைமரீஇய
தென்னப்பன்மைய தெனினிலைபழம்பூத்
தோனுர்வயிரந் தருத்தருந்தொன்மையின்
வானரந்திரை நுரைதருவாய்மையிற்
கூடியசித்தைச் சித்தாதவாதெனி
னெற்பதர்பலாலத் திற்பரந்தருமிது
தன்னியல்பென்றும் விளையாட்டென்று
முன்னுளமறைகள் மொழிதலினொருநாற்
பன்மணிநிலையும் பசுப்பாலெனவும்
பகல்வனீரி லலர்கதிரெனவுங்
கூவலொழிருளஞ் சிறுகுழிகால்
வாவியாவையும் வருபுனலெனவு
மவ்வவற்றடங்கி யாடியுணிழலெனத்
தோன்றியாக்கைகற் காந்தத்திரும்புங்
கனவிற்றீங்குங் கங்குலிற்கயிறும்
புனலிற்றோன்றும் பேய்த்தேர்ச்செய்தியு
மன்னதன்பினன் னிறப்பளிக்கெனப்
பதினாற்காணத் தொருமூன்றவத்தை
நானானு நயந்தாறுமிருபயன்
றன்னிற்சாராத் தொன்மைத்தன்மை
தர்ப்பணநிழற்கட் குற்றிபாய்ந்தற்றே
விவ்வியற்பந்தப் பௌவமதகல்
விலமுதறந்த கொண்மூப்படலத்
திருளறவுதித்த காரகவிவேகத்
தன்னிற்றோன்றிச் சாதகமனைத்தையு
மன்னகப்பிரிப்பு மடியிழைவாங்கலும்
போலஞானம் பொய்யறக்கழித்த்
தானேகாணுய்த் தன்னிற்ற[illegible]
தானேகண்டு [illegible]

வசையிறந்துவ மசிபதத்தெளிவா
லகமேபிரமமாயின னெனவறிந்
தசலனாகிற்சல சலமதியெனக்
கண்டிடுமுடலம் விண்டகல்கடந்து
மங்குலறுடைதர வெங்குமாந்தகைத்தே
யிவ்வகையுணர்ந்து செய்தொழிலறுத
மடவோர்தாமுங் கடனாவியற்றுங்
கன்மகாண்டத் தொன்மைப்புரிவாற்
றேற்றியவித்தை மேற்கடையாணியி
லெழுந்தெரியவற்றை விழுங்கியதென்னத்
தன்னொழிந்துள்ள தானுமழியு
மந்நிலையன்றி யழிவறுமுத்தி
யேயாதென்றுதன் னியல்பை
மாயாவாதிவகுத் துரைத்தனனே.

இ-ள். நவிற்றியநிரையி னவித்தையி னுரை - முன் சொல்லப்பட்ட வொழுங்கில் மாயாவுபாதிகளினாலே வாதிக்கப் பட்டுப் பரப்பிரம மிப்படி மயங்கி நிற்குமென்று சொல்லுகிறமா யாவாதியினுடைய மதமிருக்கும்படி, —நித்தனறிவன் சுத்தனக ண்டிதன் - ஒருக்காலு மழிவில்லாதவனுமாய் சர்வக்கியனுமாய் நிர்மலனுமாய் கண்டிக்கப்படாதவனுமாய், —நிருவிகற்பனிர்தத் துவ நிரஞ்சனன் - விகற்பமில்லாதவனுமாய் தத்துவாதீதனுமா ய் மறைப்பில்லாதவனுமாய், —சொல்வகையெவையுந் தொடரா த்தூய்மணி - சொல்லும்பொருளுமா யிருக்கிற சாத்திரங்களொ ன்றாலுஞ்சென்று கிட்ட வொண்ணாமலிருக்கிற சுத்த ரத்தினமாய் —வரம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள் - எந்தச்சாத்திரங்க ளினாலு மளவிடப்படாமலிருந் துள்ளதாமாயினு மெல்லையற்றிரு க்கிறவேதத்தினது தலையிலேசுமந்து தரப்பட்ட வெல்லாத்துக் குமேலாயிருக்கிறவத்தமாய், —சத்தாய் - சுத்த சைதன்னியமாய், —எவையுந்தானாய் - எல்லா வுபாதிகளுந் தானேயாய், —அவித்

தைதொர்த்தா துயர்ந்தொல்சுடர் - அப்படியிருந்த தாமாயினும் ந்தவுபாதிக டானவனைத் தொந்தியாதபடி மிக்க பழையதாயுள்ள பிரகாசமாய்,—மூவாவின்ன தன்மையன் - ஒருக்காலும் போது செய்யாமலிருக்கிற வித்தியாயத்தோடு கூடியிருப்பானாய்,—ஏக னேகன் - ஒருத்தனுமாய்ப் பலயோனிகளிலு நிற்கிறவனுமாய் —கன்னற்பெருஞ்சுவை தன்னிற்பிறவாப் பெற்றியினிருந்து - கரும்பிலுண்டான மிக்கவிரத மான நந்தக்கரும்புக்குத் தோன்று தவியல்புபோலத் தன்னிடத்திலுண்டாகிய வின்பத்தையுந் தான றியாமலிருந்துள்ள பரப்பிரமமானது பிரபஞ்சலீலையையுண்டா க்குமிடத்து,—பொற்பணி யியல்பினின் - பொன்றானதுபலவா ன வாபரணங்களாயிருந்த தன்மைபோல,—வான்வளி யனனீர் மண்மருந் தன்னமான தாதுவாறைங் கோசத்தொகுதி யாக்கை ப்பகுதிய தொருபுடை - பரப்பிரமந்தானே ஆகாசமும் வாயுவும க்கினியுமப்புவும் பிருதிவியு மௌடத வன்னங்களு மதனாலுண் டாகப்பட்ட தாதுக்களாறு மன்னமயம் பிராணமய மனோமயவி ஞ்ஞானமய மானந்தமயமென்கிற ஐங்கோசங்களும ஒருபகுதியி லையெல்லாமாகக் கூடியிருக்கிற சரீரத்தின்பகுதியா யிருக்கும். இங்ஙனந் தோன்றப்பட்ட பிரபஞ்சநித்தியமோ வநித்தியமோ அநித்தியமென்னில் இதுநித்தியமாய்த் தோன்றுவானே னென் னில், —சுத்திவெள்ளியொத்தன மித்தையில் - சுத்தியாகிய சிப் பியானது வெள்ளியையொத்துத் தோன்றினாற் போலத் தோன் றிற்றென்று சொல்லலாமாக, மதிப்பிரமையினாலே டநித்தியமா யுள்ள பிரபஞ்சமு நித்தியமாய்த்தோன்றும். ஆனாலந்தப்பரப்பிர மமு மிந்தப்பிரபஞ்சமும் தன்னில்வேறுவென்னில்,—தானெ னலாகுந் தன்மைத்து - அந்தப்பரப்பிரமந்தானே யிந்தப்பிரப ஞ்சமுமென்று சொல்லுந்தன்மையை யுடையதாயிருக்கும் அந்த ப்பிரமத்தைப்போலேயிராம லிந்தப்பிரபஞ்சம் வேற்றுமையாயி ருப்பானேனென்னில்,—உலூதையிற் சின்னூற்றலைகயின் வேற் றுமைமரீஇயது - சிலம்பியினிடத்துண்டாகிய சிறியநூலினையொ

க்கப் பிரபஞ்சமும் பிரமத்துக்கு வேற்றுமையைப் பொருந்தியி
ருக்கும்,—என்னப் பன்மையதெனின் - சிலம்பிநூல்போலவெ
ன்றுசொல்ல வதுவொருதன்மையா யிருந்தது. பிரபஞ்சம்பலவி
ரகாரமா யிருப்பானேனென்னில், —இலைபழம் பூத்தோ னார்வ
யிரந் தருத்தருந்தொன்மையின் வாரூரந் திரை நுரை தருவாய்
மையிற்கூடும் - இலையும் பழமும் பூவுங் காயுந் தோலு நாருவ
யிரமு மிவையெல்லாமரமானது தந்தொடுங்குந் தன்மைபோ
லவும் பெருமையினையுடைய தண்ணீரானது திரையையு நுரை
யையுந் திவலையையுங் குமிழியையுந் தந்தொடுக்குந்தன்மைபோ
லவும் இப்படிபிரபஞ்சமும் பலவாகத்தோன்றி யொடுங்குமென்
றுசொல்லப்படும்,—அசித்தைச் சித்துதவாதெனில் - அசித்தாயு
ள்ள பிரபஞ்சஞ் சித்தாயுள்ளபிரமத்திலே தோன்றுதென்னில்—
நெற்பதர் பலாலத்திற்பரந்தரும் - நெல்லானது பதரையும்வை
க்கோலையுந் தந்ததன்மைபோலச் சத்தாகியபிரமும் சித்தாகியபி
ரபஞ்சத்தைத் தராநிற்கும். இந்தப்பிரம மிப்படிச்செய்யவேண்
டுவானேனென்னில்:—இதுதன்னியல்பென்றும் - இப்படிச்செய்
துவருகிறதிந்தப் பிரமத்தினுடைய வியல்பாயிருப்ப தொன்றெ
ன்றும். பிரமமிந்த வுபாதிகளினாலே வாதிக்கப்பட்டிருப்பானே
னென்னில்,—விளையாட்டென்றும் - இந்த வுபாதிகளோடுங் கூ
டிக்கொண் டிருக்கிறதைப் பிரமத்துக்கு விளையாட்டா யிருப்ப
தொன்றென்றும் பிரமத்துக் கியல்பென்றும் விளையாட்டென்று
மெங்கேகாணப் பட்டதென்னில்,—முன்னுள மறைகளுமொழி
தலின் - அநாதியேயுள்ள வேதங்கள் சொல்லுகையினாலே. இந்
தவுபாதிகள் பலவாகக் காண்பிக்கப்பட்டாற்போல வந்தப்பிரம
மு மிப்படிப்பலவாகக் கண்டிருக்கப் பட்டிருக்குமோ வென்னி
ல்,—ஒருநூற் பன்மணிநிலையும் பசப்பாலெனவும் பலவகைநில
லர்கதிரெனவுங்கூவ லாழி குளஞ் சிறுகுழி கால் வாவியாதியையு
ம்வருபுனலெனவு மவ்வயற்றடங்கி - மணிகள் பலநிறமாயிருந்த
தாயினும் அதிர்கோர்ப்புண்டானநூ லந்நிறம்போற் றோன்றிய

மொருதன்மையா யிருந்தாற்போலவும் பசுக்கள் பலவர்ணங்களா யிருந்தாலும் பாலொரு தன்மையாயிருந்தாற்போலவும் நீர் பொருந்திய பாத்திரங்கள் பலவாயிருந்ததாயினும் அதிற் பிரதிபிம்பஞ்செய்கிற வாதித்தனொன்றாயிருந்த தன்மைபோலவும் கிணறுங் கடலுங் குளமுஞ்சிறிதாயுள்ளகுழிகளும் வாய்க்கால்களும்இவை யெல்லாம் பலபேதமா யிருந்ததாயினுந் தண்ணீரொன்றாயிருந்த தன்மைபோலவும் இப்படியே யோனிகள்பலவாறாயிருந்த தாயினுமறிவேகமாய் அநந்தயோனிகடோறுங் கூடியிருந்தாயி னிந்த வுடல்கடோறும் பெந்தப்படாதோ வென்னில்,—ஆடியுணிழலெனத்தோன்றி யாக்கை-கண்ணாடியிலே நிழலானது தோன்றிநிற்கும் அந்தநிழலநிற் றோய்வறநின்றாற் போலவும் உடலிலே பிரமமானதுதோன்றி நிற்குமிடத்தேயு மந்தவுடலிற் றானுந்தோய்வறநிற்கும். அப்படியந்தவுடலிலே தோய்வறநிற்குமாயின் இந்த வுடல் காரியப்படுகிற தெப்படியென்னில்,—நற்காந்தத்திரும்பும் - நல்லகாந்தமானது தோய்வறநிற்க வதின் சந்நிதியிலே யிரும்பானது காரியப்பட்டாற்போலப் பிரமந்தோய்வறநிற்க வதின்சந்நிதியிலே யுடலானது காரியப்படாநிற்கும். அந்தவறி விந்த வுடலிலேநின்று சுகதுக்கங்களை யநுபவிக்குதே யதுவருவானே னென்னில்,—கனவிற்றீங்குங் கங்குலிற்கயிறும் புனலிற்றொன்றும் பேய்த்தேர்ச் செய்தியும் - ஒருவன் சொப்பனங் காண்கிற விடத்தவனை யோரானைபின் பிடித்துக்கொண்டுவர வதற்குப்பயப்பட்டி வனோடு மிடத்துவிழித்தவவதரத் திவையெல்லாம் பொய்யாயிருந்ததன்மைபோலவும் ஒருவனிராக் காலத்திலே யொரு புறத்தின் வாசலிலே கயிறுகிடக்கிறதைக் கண்டொருபாம்பு கிடக்கிறதைப்பாரீரென்று பிரமித்துநிற்குமிடத்து விடிந்தவவதரத்துப் பாம்புபொய்யாய்க் கயிறுமெய்யான தன்மைபோலவும் ஒருவன் தண்ணீர்தாகத்தின் மிகுதிகொண்டு கானலைத் தண்ணீரென்று புத்திபண்ணிக்கொண்டு வந்தா னதினுடைய வுண்மையைப் பார்த்த விடத்தவனுக்குத் தண்ணீர் பொய்யாய்க் கானல்மெய்யான தன்

மைபோலவும் இந்தப்பிரம முடலோடுங்கூடி நின்று சுகதுக்கங் களை யநுபவித்தாற்போல விருக்குமதொழிந்து தன்னுண்மைபா ர்க்குமிடத்திந்த சுகதுக்கங்களு மந்தவறிவுக் குண்டாகாது. இப் பொழுது பிரத்தியக்ஷமாக சோத்திராதிகளோடுங் கூடியதுதா னுய்க்கன்மங்களைப் புசிக்கிறது காணப்பட்டிருக்குதே யென்னி ல்,—அன்னதன்பி னன்னிறப்பளிங்கெண - அப்படியந்தவிந்தி ரியங்கள் தானுய் நின்றதாயினும் பிரமத்துக்கந்த வநுபோகமுண் டாகாது அக்தென்போலவென்னில் படிகமானது நல்லபஞ்சவ ன்னங்களோடுங்கூடி யதுதானுயிருந்ததாயினு மவையிற்றி னோ டும் படிகமொரு சற்றுந்தோய்வற நின்றாற்போலவு மெனக்கொ ள்க. இதன்றியும்,—பதிறைற்கரணத் தொருமூன்றவத்தை நாளு நாளு நயந்துறும் - சோத்திராதிகளைந்தும் வாக்காதிகளைந்தும் அ ந்தக்கரணங்க ளுலுமாகப் பதினுலோடுங்கூடிப் புருவ மத்திய த்திலே சாக்கிராவத்தையும் அதிலே சோத்திராதியும் வாக்காதி யுநிற்க வந்தக்கரணங்க ளோடுங்கூடிக்கண்டத்தானத்திலே சொ ப்பனுவத்தையும் அதிலே மனுேபுத்தி யாங்கார நிற்கச் சித்தத் தோடுங்கூடி யிதயத்தானத்திலே சுழுத்தியவத்தையும் இந்தவவ த்தைகளிலே நாடோறும் பொருந்தி யநுபவியா நிற்கும், அறி வானதிந்த வவத்தைகளோடுங்கூடி யநுபவிக்குமாயி னிதற்குப் புண்ணியபாவதொந்தனை யில்லையோவென்னில்,—இருப்பன் ற ன்னிற்சாராத் தொன்மைத்தன்மை தற்பணநிழற்கட் குற்றிபாய் ந்தற்றே - இந்தவவத்தைகளோடுங்கூடி நின்றதாயினுமநாதியே புண்ணிபாவதொந்தனை யிந்தப்பிரமத்துக்குச் சாராது. அக்தெ த்தன்மைத்தென்னில் கண்ணுடியிலே யொருவன்முகம் பிரதிபி ம்பஞ்செய்ய வவ்விடத் தந்தமுகத்தின் கண்ணே பாரைக்கோல் கொண்டு பாய்ந்தவிடத் தந்தக்கண்ணுடி யுடைந்தொழிந்து கண் ணுக்கீனம் வராதிருந்தாற்போலு மெனக்கொள்க. (இதுபெத்த விலக்கணம்) (மேல்முந்தி) — இவ்வியற்பந்தப் பௌவம தக ல - இப்பொழுது நான்சொல்லிவந்த முறைமையிலே இந்தப்பி

ரமத்தை வாதிக்கப்பட்ட மாயாவாதைகளி லுண்டாகிய பிறவி
த்தொந்தனை நீங்குகைநிமித்தமாக. —விண்மூடறந்த கொண்மூ
ப்படலத் திருளறவுதித்த காறக - ஆகாச மென்கிறதிலே நின்று
மேகமானது தோன்றி யந்தவாகாசத்தை மறைக்க வதனாலுண்
டாகிய விருளானது நீங்குகைநிமித்தமாக வந்த வாகாசத்திலேநி
ன்று தோன்றி யந்தமேகங்களைநீக்கி யாகாசத்தை நின்மலமாக்
கின வாயுவைப்போல,—விவேகந்தன்னிற் றோன்றி - அந்தப்பி
ரமத்திலேநின்றும் விவேகஞானமானது தோன்ற,—சாதகமனை
த்தையும் - இந்தப்பிரமத்துக்குண்டாகிய மறைப்புக்களெல்லாத்
தையும்,—மன்னகப் பிரிப்பு மடி யிழை வாங்கலும்போல ஞால
ம்பொய்யறக் கழிந்து - நிலைபெற்று வாராநிற்கிற தொருவீட்டை
யொருத்த னொருவைக்கோலாகவு மோரொரு மரமாகவும் நாளி
லே பிடுங்கிப்போட்டபின் அந்த வீடென்கிற சொரூப மில்லை
யாய்ப்போன தன்மைபோலவும் மடியாகிய புடவையு மப்படித்
தானொரோரிழையாக வாங்கிப்போட்டாற் புடவை யென்கிறத
ன்மை போனாற்போலவும் பிரபஞ்சமாகிய பொய்யையும் பிருதி
விமுதலாகக்கண்டு நானல்லவிது நானல்லவென்று நியதிபண்
ணிநாளிலே நீங்கிக்கொண்டு,—தானே தானாய்த் தன்னிற் றன்
னைத்தானேகண்டு தன்னலமுற்றி - இப்படியந்த வுபாதிக ணீங்
கினவிடத் திருந்தவறிவான இந்தப் பிரமந்தானேயாய் தன்னிடத்தி
லே தற்சொரூபத்தைத் தானேதரிசித்துத் தன்னிடத்திலுண்டா
கிய வின்பத்தைத் தானேயநுபவித்து,—வசையி றத்துவ மசிபத
த்தெளிவா லகமே பிரமமாயினனென வறிந்து - குற்றமற்றிருக்
கிற தத்துவமசியென்கிற மகாவாக்கியத் தொம்பதந்தத்பத மசிப
தமென்னு மிலக்ஷணை மூன்றுமறிந்த தெளிவுகொண் டந்தப்பி
ரமந் தானென்கிற பிரமஞானத்தைத் திரவிளங்கி, —அசலனாகி
இந்தப்பிரமஞான முண்டான விடத்தாப் பின்னைச் சற்றுஞ் சலன
மில்லாதவனாய், உபாதிகளோடுங் கூடிச் சந்ததி விடயங்களைப்
புசிக்குமிடத்துச் சலனமில்லையென்ற தென்னையெனில், —தற்சல

சலமதியெனக் கண்டிடும் - உபாதிகளோடேங் கூடிச் சத்தாதிவி டயங்களைப் புசிக்குமிடத்தே யந்தவுண்மைக்குச் சலநமில்லாதது நல்ஜலமான தசைந்தவிடத் தந்தஜலத்தோடேங்கூடினசந்திரனு மொக்க வசைந்தாற்போலே யிருக்க வந்தச்சந்திரனுண்மையை ப்பார்க்குமிடத் ததற்கில்லையானாற்போல விந்தவறிவையுங்காண ப்படும். (இதுஜீவன்முத்தியிலக்கணம்) (இனிபரமுத்தியிலக்க ணம்,)—உடலம்விண்டகல் கடத்து மங்குலதுடைதர வெங்கு மாந்தனைகத்தே - இந்தச்சரீர தொந்தனை விட்டவவதாரத் தந்தவ றிவு மந்தப்பிரமமு மொன்றுபட்டவிடத் தென்போல வென்னி ல் விசாலமாக விருக்கிற கடத்துக்குள்ளே யகப்பட்டுநின்ற வா காயமிந்தக்குட மானதுடைந்த வவதாரத் தந்தப்பிரகாசமுந்தானு மொன்றுபட்டாற்போல வாமெனக்கொள்க. (இதுபரமுத்தி.)— இவ்வகையுணர்ந்து செய்தொழிலருத மடவோர்தாமும், எ - து அதுதானென்கிற பிரமஞானத்தையறிந்து தான்முன்புசெய்துவ ந்த கன்மங்களெல்லாவற்றையும் விடமாட்டாத வறிவில்லாதவர் தாமும்.— கடனு வியற்றுங் கன்மகாண்டத் தொன்மைபுரிவா ற்றேற்றியவித்தை - எ - து, அந்தப்பிரமஞான முண்டாகைநி மித்தமாகச் சாதநசதுஷ்டயமாகிய கன்மங்களையநுஷ்டித்தந்தத் தொழில்களைப் பழகிச்செய்துவர விவேகஞான மானதவர்களுக் குண்டாகாநிற்கும்.— மேற்கடையரணியி லெழுந்தெரியவற்றை விழுங்கியதென்னத் தன்னெழிந் துள்ளதானுமழியும் அப்படி யுண்டான விவேகஞானமுந் திக்கடைக்கோலே மேலேவைத்துக் கடைய வந்தத்தொழிலினாலே யுண்டாகிய நெருப்பந்த வரணி யையுங் கோலினையுஞ் சேரச்சுட்டுப் போட்ட தன்மையே யந் தானென்று மொழிந்து மற்றுண்டாகிய கன்மங்களையு [illegible] ழித்துப்போடா நிற்கும்,—அந்நிலையன்றி - அந்தநிலை [illegible] றுவிடக்கடவன், அந்தொழிந்து,—அறிவறமுந் [illegible] று தன்னியல்பை மாயாவாதி வகுத்துரை [illegible] டையதாயிருக்கிற முத்தியென்றும் [illegible]

யபெத்தத்திலு முத்தியிலுமுண்டாகிய முறைமையினை மாயாவா
தியானவன் விரித்துச்சொன்னான். (க)

மாயாவாதிசங்கற்ப முற்றிற்று.

---

## மாயாவாதிசங்கற்பநிராகரணம்.

உரைதருபிரம மொன்றெனுமுரைகண்க்
வருபிரமாண மறையெனிலருமறை
யொன்றென்றதன்றி யிருபொருளுரைத்த
னன்றன்றபேத னாடியபொருளேற்
பேதமும்பேதமு மோதவேண்டா
பேதமெனினு மபேதமெனினும்
பேதாபேத மெனினுமமையுநின்
னையமிலுரையிற் பையவந்துளதாந்
திகழ்பிரமாண விகழ்வுமுண்டன்றிப்
பெத்தம்பேத முத்தியபேதமே
லநவத்திதமா மவையிருதிறனு
மினியப்பழமொழி யிரண்டலவொன்றே
யன்றியும்பெத்தம் பேதத்தறைதலு
மொன்றியமுத்தி யபேதத்துரைத்தலும்
பழுதாமித்திறம் பதையாதாய்கமற்
றெழுதாமறையெனு மிப்பிரமாண
மாருரைதானே யாயினதேனுன
தேகமநேக முறுபியம்பாமற்
சத்தருபந் தாகாதெனில்வானத்
தொத்தொலியுறமு மெனில்வழி [illegible]
சன்றியு [illegible]

யின்றியோரொலியா யெழுந்திடுமதனுக்
கறிவிலதுருவில தறியாதறையா
தன்றியுமவ்வகை யகண்டிதமதுவிது
வென்றதுகுறிப்ப தெவ்வகையாவு
மொன்றெனுமுரையு மொழிந்தனையன்றே
யருமறைபிரம வுரையெனினதற்குத்
தந்ததாலு முதனவில்பொறியில
தென்னிலோருடற்கண் மன்னியவல்லைக
யறைந்தற்றென்ப தார்சொலதமலத்
திறப்பெற்றின்றே செய்தோர்பெயராற்
சுயம்புவென்றல வியம்புமென்றறியினித்
தற்கிட்டலைவரைத் தான்றொழுதுரைக்குஞ்
சொற்கேற்புரவல னேவலமைச்சரை
யடிகண்மற்றெங் குடிமுழுதாண்மினென்
றேத்தியிறைஞ்சிக் காப்பீர்களென்றுங்
கீசனுஞ்செயப் பேசினனன்றி
யிவையவைபிறரிற் கனவிலுமிலனே
தன்னைத்துதிக்குஞ் சொன்னலந்தானுமத்
துறையறிவாணர்க் கறைவதொன்றன்றியுந்
தனக்குத்தானே தன்னலம்பகரா
தசத்துக்குரையா தார்க்குரையுயிர்ச்செவி
னுரைபிரமாண மிறைபிரமேய
நீபிரமாதா நின்பிரமிதியென
நால்வகையுளதென தேககன்றன்றே
நற்பிரமாண நிற்பதொன்றன்று
லப்பிரமேயமு மதனியல்பன்றே
கன்னற்சுவையி லக்கியமில்தா
லினிமைதோன்றுந் தனிமைத்தென்றனை
யறிவிற்குவமை யசத்தாங்கட்டி

பிறிவித்தொட்டினும் பெறதருதே
தற்பரவிரிவு பொற்பணிதருமெனிற்
செய்வோரின்றிச் செய்வினையின்மையிற்
பொன்மணியாகை தன்பணியன்றே
செய்வோர்போலாச் செயப்படுபொருண்முதற்
செய்வோரேயாச் செய்யவும்படுமே
சுத்திவெள்ளியிற் றோன்றிற்றுயினுஞ்
சத்துஞ்சேதுந் தாராதருமெனி
னுலகமித்தையென் றோராதுரைத்தனை
நிலவுநின்மரபு நினைந்திலையாங்கொல்
விவகாரத்தில் வேண்டுதுமுலகம்
பரமார்த்தத்திற் பகராமென்னிற்
பரத்துளதேலிவை யும்பரமார்த்தம்
பரத்திலதேலொழி முன்பகர்மாற்ற
மதன்முதலிதுவென வுதவுகவன்றியும்
விவகரிக்குங்காற் றிகழ்பரமார்த்த
நிலையதுதெரியி னிதுநீயேற்
றெரியாதாயி னஃதுந்தெரியா
துரையாராளவையு மொழிந்தனையன்றே
யளவைகாண்டல் கருதலுரையென
வுளதனைமூன்றின் மொழிவழிநுழையி
னின்பிரமேய மென்பதெறுங்கொல்
பொற்பிதிர்பிதிர்த்தும் பொன்னேயாநின்
றற்பரமித்தைத் தருமாறென்னெனிற்
சிலம்பிநூறரு நலம்போற்றோற்று
மென்றனையதுவு வதன்றொழிலன்றிய
மொன்றதனியல்பல கோரியல்பன்றெனப்
பலவிலைபழம்பூப் பாதவந்தருநீர்
திரைநுரைதிவலை சிலதருமவைபோற்

றுனேபலவா மெனச்சொற்றினை
சத்தசத்தாகவுஞ் சத்தினிலசத்தின்
கொத்துளதாகவுங் கூறினரில்ரால்
வித்திலைகனிகனி விழுதாறருநெறி
சத்தலதொன்று தான்றரவேண்டு
நெற்பதர்பலா லத்திற்குபாதானமென்
காரணமின்றிக் காரியம்பிறவா
பாரிடையொருபடம் பண்ணவும்படுமே
யந்தமில்பிரம மவித்தைகாரணமெனத்
தந்தனையவித்தை தானெய்துறுத
றன்னியல்பென்னில் வன்னிதன்வெம்மையிற்
சத்தினதியல்புஞ் சத்தேயசத்தெனில்
வைத்தனியல்பெனும் வழக்கொழியன்றியு
மிருள்பொதிவிளக்கென வருமருவிளக்கிற்
கருமைப்யந்த பெருகொளிதருமெனிற்
றன்னியல்பன்றத னுபாதிவசத்தான்
மன்னியதன்றிமைத் தான்றனிமாயா
தொன்றுனசுத்த னன்றுமன்றே
யாங்கொருகாலத் தோங்கியதாயி
னந்தமிலவித்தை வந்தணைவதற்கோ
ரேதுவேண்டும் புடவியல்பெனின்வீ
டேதுவேண்டா வொழிந்தோரிறுநூறங்
களங்கமதுறவுறு மவித்தைதுறக்கவிந்தல்
விளங்கியபிரம விளையாட்டாயி
னவித்தையென்பதொன் றங்கியந்தன்னி
லுதிக்குமென்றமுன் னுரையுமறந்தனை
நுண்ணூர்குடம்பை நுந்துழிபோலுட்
படுநெறியதனல் விடுநெறியிலதாற்
றலைமையுமறிவு மிலதெனவித்தையை

விடுத்தெடுத்தாணரும் வேற்றோரன்றே
யொளிகொடாமிரங் குளிகைபெற்றுங்கத
னவித்தைதயைவித்தை தவிர்குமென்றுரைக்கி
னித்தனறிவன்சுத்த னென்றுரைத்த
வித்தகமென்னீ வித்தையும்வேறுன்
றெம்மனோரி லொருவனின்னிறை
யமமசைவர் தவனீயன்றே
பன்மணிபசுநற் பாத்திரமெனவு
நன்னூல்பானீர் நற்கெதிரெனவு
மூடலையுமுணர்வையு மூவமித்தனையேற்
றடமணிசரமொடு தாங்குடலவே
யுணர்வுணர்வொழியி னுலகுணர்வுறினிஃ
பாலும்பசுவுஞ் சாலுஞ்சாலக்
கலம்பல்வன்றிச் சலம்பலவிலதெனக்
காணுநரின்றி வீணின் விளம்பினை
யாடியுணிழல்போற் கூடுதல்கூறிற்
றன்னிழல்கொண்டு தற்பணஞ்சலிக்கின்
மன்னிழல்கொண்டேல் வந்தகன்றிடுமே
மன்னயக்காந்த மெனவுடல்பிரம
சந்நிதியளவிற் சலித்திடுமாயி
னகண்டிதன்சந்நிதி யலதிலதெனவ்வு
நடந்திடவேண்டுங் கிடந்திடப்பெறுவே
காந்தத்திரும்பு காட்டுநர்ப்பெறிலயஞ்
சேர்ந்திடுதீக்குஞ் செயலதற்கிலதே
கறுத்துயர்கயிற்றர வெறுச்சிலதொடுத்தனை
கனவின்பயனு நனவின்பயனும்
வினையின்பயனவை பொய்யெனவேண்டா
வுடன்மாறூட்டக் கடனதாகுறாக
வுற்றபுற்று மற்றதிற்கயிறு

முடலுங் கூடச் சடமெனவறிதி
யறிவுகயிறென் றறியாதன்றே
யச்சமதனைடதல் கொச்சைமையுடைத்தே
யின்னுமக்கனவி லிருளுறுகயிற்றிற்
பின்னுநின்பிரமம் பிரமித்திடுமே
துன்னியவினையிற் செம்மலர்ப்பளிங்கெனத்
தானுந்தனைகமை யானல்லனென
வொருபயனன்றிப் பலபயன்மரீஇய
இருவினைதருபய னெனநனிவேண்டி
லாண்டவித்தையு மவித்தைகொடாக்கையு
மீண்டிருவினையு மியம்பினைபரத்தைக்
கள்வனைப்பிணிக்குங் காவலரெனமுய
ரல்வினைத்தொடக்கிற் றோன்றுடற்சிறையிட்
டிருவினையூட்டு மெம்மானம்மா
னருவினையுடற்க ணவத்தைகளுரைத்தனை
யாருறுபவர்பர மகண்டிதமடங்கா
தோர்விலதுடல்சட முருநெறியாதெனின்
மன்னியகரண மாறுட்டத்திற்
பன்னினமென்னி னிவையோபரமோ
முதலியதாயி னிவைபிறழ்வெய்தா
திவையெனினுனது மொழிபழுதுளதே
யுடற்படுபிரமமுறுமெனிற் சாரத்
திடத்தகுமுறவிர னுதியளியெறிதுய
ரங்குலிதானே யருந்திலுடற்கட்
டங்கியவறிவு தனித்துறுமன்றே
தற்பணநிழற்கட் குற்றிபாய்ந்தற்று
னற்கணிற்றுயர நணுகாத்தகைத்தெனி
னின்மொழிவிரோதமுங் காட்சிவிரோதத்
தன்மையுமுறுமவை தவறிலவாக

யாமுடைப்பதிவகை யாவரும்பலகலை
சொல்லுதலெளிதரி தத்தொழில்புரிவெனப்
புல்லியபழமொழி புதுக்கினையன்றே
யகண்டிதமெனநீ பகர்ந்தமைதனக்குப்
பந்தமிதுவெனத் தந்தமைகருதில்
வானிடைக்குங் காலினைப்பிடித்துப்
பருவிலங்கிட்ட வொருவனீயன்றே
பந்தமதகல வுந்துவிவேகம்
வான்வளியெனத்தனிற் றனேதோன்றின்
முன்புளதாயின் மயங்காதிலதெனிற்
பின்புளதாகா திலதுளதெனின்வெளி
மலரதுதருமனல் மரக்கணின்றகித்
தருவதுதருமெனிற் றனேதோன்று
விறகினுதித்த கனறருமாயி
னவித்தையினுதித்த வித்தையம்மரத்
துதித்தவிவேகம் வித்தையென்றுரைத்த
வெந்தழலனைய விவேகமுதித்த
இந்தனமனைய இறையிலன்றற்றே
யிற்படப்பிரிப்பின் மெய்ப்படுமெவற்றையு
மிதுவன்றிதுவன் றெனக்கழிகாலை
யதுவேதானே யாயினதென்றனை
வித்தைமுன்ன ரவித்தையுமவித்தைமுன்
வித்தையுமில்லா வியறொளியிருளை
விருளலவொளிக்கு மொளியலவிருட்கு
மொருகாலத்து மொருபயனிலதா
லிரண்டையுந்தரு முரண்டருவிழியென
வித்தையுமவித்தையு முய்த்தனென்றுவாதி
தானேதானு மாறுற்பவனென்
றன்னிற்றன்னைத் தானேகாணிற்

கண்ணிற்கண்ணைக் காணவும்படுமே
தன்னலமதனைத் தானேநுகரு
மென்னின்முன்னல் மெய்தா திருந்ததென்
கட்டிபோலெனக் கதறினையின்பம்வந்
தொட்டிடும்வித்தை யுடையையாயிடினே
தத்துவமசியென வைந்தமுப்பதத்திற்
கொன்றேபொருளென் றன்றேபகர்வது
நீபுலியாயினை யென்றுங்குணரி
லாயினையென்றது தாகுவமைத்தா
ஞேயாயினமே லாயாயென்று
லகமேபிரம மாயினதென்றுற்
சகமேயறியத் தான்வேறன்றே
யுண்மையிற்சலமில வுடற்சஞ்சலமுறும்
வெண்மதிபோல விளங்கிடுமென்றனை
யசலனாகிச் சஞ்சலசலத்துச்
சலனமேவின மௌனமதிகாண
வேண்டுமதன்றிக் காண்பவர்பிறரே
லீண்டுனதேகமென் செய்ததியம்புக
வுடல்விடக்கடத்துட் படுவெளிபோலெனில்
விட்டென்பெறவுடற் பட்டென்பட்டமற்
றிகலறவொருவ னிவ்வகைதெளியி
லகிலமுமுத்தி யடைந்திடவேண்டு
மறிந்தோர்முத்தி யடைந்தோராயின்
பிறந்தோருயிர்பல பேதந்தன்றே
கன்மகாண்டங் காரணமாக
மன்னும்விவேக மென்னிலவித்தைக்
கேதுகாரண மோதினையில்லை
யிதற்குக்காரணம் விதித்தல்வேண்டுமே

யரணியிலுதித்த கனலவைகவர்வென
விரதத்துதித்த விவேகமழித்தல்
வருந்தியாயினுந் திருந்தியவேத
நீதியெல்லா நீத்துப்போதமொன்
றறியோர்தாமு மவ்வழிநடத்தல்
பொறியோபோத நெறியோவினுபவ
நீங்கிடுநெறிதரு பாங்கினைப்பழித்த
னன்றிகொன்ற லன்றேயன்றியு
ஞாலநீதியு நான்மறைநீதியும்
பாலருன்மத்தர் பசாசரிலெனவு
முறங்கினோன்கை வெறும்பாக்கெனவுந்
தானேதவிரா தாறுற்புரியா
தொழிந்திடினிரயத் தழுந்துநறிடமே
யய்ந்தோனன்றி முத்தியுரைத்தல்
பித்தோபிரமஞ் செத்தோபெறுவ
துடலையுநீயே சடமெனச்சாற்றினை
வையினும்வாழ்த்தினுங் கொய்யினுங்கொளுத்தினும்
வணங்கினுமுதைப்பினும் பிணங்குதல்செய்யாப்
பிரமத்தன்மை பெறுவதெக்கால
மிருக்குநான்கில் வெண்ணிறாக்கந்த
தருக்கம்பேசித் தலைபறியுற்ற
கண்டோரியந்தப் பிண்டமுண்டலைப்
பன்றேயாக்கை தன்றேயுற்றுடல்
விடவருமென்று ந [illegible]
விட்டோர்செய்யுந் தொட்டு [illegible]
யானேயெவரு மானேனென்றலி
னவ்வவர்சிறிய வவ்வவர் [illegible]
செவ்விதினிரயஞ் சேர்த்து [illegible]
மாயாவாதப் பேயாகுலக்கு [illegible]

தேவரிலொருவருண்டாக
மேவருநரகம் விந்தலோவரிதே.

இ - ள். உரைதரு பிரமமொன்றெனு மூரைக்கருங் வருபி
ரமாண மறையெனில் - நீபெத்தமாகவு முத்தியாகவுங் கூறினவு
ன்னுடைய மதத்தின் முற்பரியம் பிரமமொன்றுமே யுள்ளதெ
ன்று சொல்லுமிடத்து ஒன்றென்றதற்குப் பிரமாணமேதென்னி
ல், இதற்குப்பிரமாணமாகச் சொல்லப்பட்டது வேதமா யிருக்
குமென்னில்,—அருமறை யொன்றென்றதன்றி யிருபொருளு
ரைத்த தன்றன்று - அரியவேதமானது பிரமமொன்றுமே யுள்ள
தென்று சொல்லுவதன்றி ஜீவபரமிரண்டென்று சொல்லுகிறது
நீயிட்ட பிரமாணத்துக்கு நன்றாகாது,— அபேதராகிய பொரு
ளேல் - வேதமப்படி யிரண்டென்றது மபேத சித்தாந்தத்தைச்
சொன்னதாயிருக்குமென்னில்,— பேதமு மபேதமு மோதவே
ண்டா - நீ யொன்றென்றதற்கிட்ட பிரமாணமிரண்டென்று மிர
ண்டல்லவென்றுஞ் சொல்லவேண்டுவதில்லை. பேதமென்று ம
பேதமென்றும் பேதாபேதமென்றும் வேதஞ்சொல்லுகிறதெல்
லா மந்தப்பிரம மொன்றையுமா யிருக்குமென்னில்,— பேதமெ
னினு மபேதமெனினும் பேதாபேதமெனினு மவையு நின்னை
யமிலுரையிற் பையவந்துளதாம் இகழ்பிரமாண விகற்பும் - வே
தமிரண்டென்றாலு மிரண்டல்லவென்றாலு மிரண்டுமா யிரண்
டல்லவுமா யிருக்குமென்றாலு மவைமயிறந்திருந்தி, வுன்னுடை
ய சந்தேகமற்ற சாத்திரத்திலே விசாரித்துப் பார்க்குமிடத்துன்
மதத்திலே விளங்கப்பட்ட பிரமாண விரோதமுண்டாகாநிற்கு
ம்,—உண்டன் றிப்பெத்தம் பேதமுத்தி யபேதமேல் - அப்படி
ப் பிரமாண விரோத முண்டாகாது காணும் அந்தவேதம்
பெத்தத்திற் பேதமென்று முத்தியிலபேதமென்றுஞ் சொல்லுமெ
ன்னில்,—அதவத்திதமாயவையிருந்தாலும் - சாத்திரம் பெத்த
த்திற் பேதமென்று முத்தியிலபேதமென்றுஞ் சொல்ல [illegible]
வையும் விசாரித்துப்பார்க்குமிடத் தன்னுடைய [illegible]

யில்லாததாம். ஆகையாற் சாத்திரவிரோத முண்டென்கிறது த
ப்பாது,—இனியப் பழமொழி யிரண்டல வொன்றே- நானாவ
த்திதமாயிருக்கு மென்றது கொண்டு நீயிப்பொழு தந்தப்பழை
ய மொழியாகிய வேதமிரண்டென்று சொல்லாது ஒன்றென்று
சொல்லுமென்னில்.—அன்றியும் பெத்தம்பேதந் தனைதலுமொ
ன்றிய முத்தியபேதந் துணைத்தலும்பழுதா மித்திறம்பதையா தா
ய்க.—சாத்திரமுன்னே யிரண்டென்று சொல்லி யிப்போதொ
ன்றென்று சொன்ன தோஷமன்றியும் பெத்ததிசையில் ஜீவபர
மிரண்டா யிருக்குமென்றதும் முத்திதிசையில் ஜீவபரமிரண்டு
மொன்றாயிருக்குமென்றதுங் குற்றத்தை யுடைத்தாம். இப்படி
நான்சொன்னவகையைப் பதறாமலாய்ந்து பார்ப்பாயாக.—மற்
றெழுதாமறையெனு மிப்பிராமணமாருரை - அதொழிந்தெழு
தப்படாதவேதமாகிய விந்தப்பிரமாண மாராலே சொல்லப்பட்
டது,—தானேயாயினதேல்-அஃதொருவராற் சொல்லப்பட்டத
ல்லசுயம்புவாயுள்ள தொன்றென்னில்,—உனதேக மனேகமுறும்
நீபிரமமொன்றென்றது பொய்பிரமமொருமுதலும் வேதமொ
ருமுதலுமாக வுன்னுடையஏக மநேகமாய்ப் பொருந்தாநின்றது
- இதன்றியும்,—இயம்பாமற் சத்தரூபந் தகாதெனில் - ஒருவனு
ச்சரியாமற் சத்தத்தினுடையசொரூபந் தானேதோன்றாதென்
னில்,—வானத்தொத்தொலி யுறாதெனின்-ஆகாசத்திலேயொரு
வருச்சரியாமற்சத்தமானதுண்டாகிறாற்போலவேதமுமொருவ ருச்
சரியாமற்றானே யுண்டாகாநிற்குமென்னில்,—வறிதுதியாது-ஆ
காசத்திலே வாயுவேதுவாகக்கொண்டு சத்தமுண்டாவதொழிந்து
சும்மாச்சத்தந்தோன்றாது,—அன்றியும் பதமும் பாழியு மின்றி
மின்றியோ ரொலியாமெழுந்திடு மதனுக்கறிவிலது-அன்றியும் ப
தமென்றுங் கிரமமென்றும் பாழியென்று மின்னும் பலசத்தங்க
ளுமத்தங்களு மந்தங்களுமாயிருக்கும் வேதமானது இப்படி யா
காசத்திற்சத்தமொரு பிரகாரமாயிருக்கும் அந்தசத்தத்துக்கறிவெ
ன்ப தொன்றில்லை இந்தவேத மறிவாயிருப்ப தொன்றாகையாலங்

த வாகாசத்திலுண்டாகிய சத்தம்போலு மிந்தவேதமென்றுசொ ல்லலாகாது. வேதந்தானே யுண்டாகாதென்மூலந்தவேதத்தைச் சொன்னார் சிலர்வேண்டும். இதற்கு,—உருவிலதறியா தறையா து - இந்தச்சரீரத்தாலே சொல்லப்பட்டது வேதமென்னி லிது சுத்தஜடமாயிருந்தபடியாலே யொருசத்தத்தையு மத்தத்தையுஞ் சொல்லமாட்டாது. அன்றியுமவ்வகை யகண்டிதமதுவிதுவென் றது குறிப்பதெவ்வகை. அறுவயம். அவ்வகை யன்றியுமகண்டி த மதுவிதுவென்றது குறிப்ப தெவ்வகை - அந்தச்சரீரத்தின்ப குதியுமன்றியும் பிரமத்தினுடைய தன்மையை விசாரிக்கி லதுக ண்டிக்கப்படாததா யகண்டிதமாயிருந்தபடியாலே சத்தத்தையு மத்தத்தையு மதுவிதுவென்று சுட்டிச்சொல்லும்பகுதி யெப்படி யாவு மொன்றெனுமுறையு மொழிந்தனையன்றே - ஆகையாலெ ல்லா மொன்றேயென்று சொன்ன சொல்லையும் விட்டுவிட்டா யாகும்,—அருமறை பிரமவுரையெனில் - அரியவேதமான தந்த ப்பிரமத்தாலே யுச்சரிக்கப்பட்டதென்னில்,—அதற்குத் தந்தத் தாலுமுத னவில்பொறியிலது - அந்தப்பிரம மகண்டிதமாகை யால் பல்லுநாக்கு முதலாக விதற்குச்சொல்லப்பட்ட கருவிகளி ல்லாதபடியினாலே யந்தப்பிரமத்தாற் சொல்லப்படாது,—என் னிலோருடற்கண் மன்னியவலகையறைந்தற்று - அந்தப்பிரமத் தாலே வேதஞ் சொல்லப்படாதென்னில் பேயானது ஒருவன்ச ரீரத்திலே நிலைபெற்றுநின்று வருகால நிகழ்ச்சிகள் சொன்னாற் போல வந்தப்பிரமமு மொருவனுடலைச் சார்ந்துநின்று வேதத் தைச்சொல்லாநிற்கும்,—என்பதார்சொல தமலத்திறம் பெற்றி ன்றே - அப்படியோருடலைச் சார்ந்துநின்று சொல்லுமென்றது ஓர்தேவரைச்சார்ந்தோ ஓரிருடியைச்சார்ந்தோ யாரைச் சார்ந்து நின்று வேதத்தைச்சொல்லப்பட்டது. அப்படியொருவரைச் சா ர்ந்துநின்று சொன்னதாமாகி லதுபசுவாக்கியு மாகையா லந்தச் சொல்லுக்கு நின்மலத்துவமுண்டாகாது, பின்னையெப்படிப்பிர பஞ்சமெல்லாஞ் சுயம்புவென்று சொல்லுவதென்னில்,— செய்

தோர்பெயராற் சுயம்புவென்றுலகியம்பு மென்றறியினி - நிஃதக
ளமாய்நின்ற கர்த்தாசகளீகரித் தவனாலேபிறந்தர்த வேதமுச்சரிக்
கப்படுகையினாலே இதைச் சொன்னவன் சுயம்பானையா லிந்த
வேதத்தையுஞ் சுயம்புவென் றுலகஞ்சொல்லாநிற்கும் இஃதிப்ப
டியிருக்குமென்று மேலறிவாயாக,— தற்கீட்டலேவரைந் தான்
றெழுதுரைக்குஞ் சொற்கேல் - வேதமும்முடைய கர்த்தா சொ
ன்னதாகில் அவன்றனக்குக் கீழதாயுள்ளதேவதைகளைநீந்தா னம
ஸ்கரித்துச் சொல்லவேண்டுவானேனென்னில்,—புரவலனேவல
மைச்சரையடிகண் மற்றெங்குடி முழுதாண்டியினென் றேத்திமி
றைஞ்சிக் காப்பர்களென்றுங் கீசனுஞ்செயப் பேசினன் ராஜரா
ஜாவினுடைய குடியாயுள்ளவர்களெல்லாரு மந்தராஜாவைக்கண்
டு தங்கள்மேற் கருமஞ்சொல்லிக் கொள்ளமாட்டார்கள்; வாசற்
காரியம்பார்க்கிற மந்திரிமுதலானபேர்களைக்கண் டடியோங்கள்
தேவரீருக்குப் பழையவடிமையாக விருக்குமென்று வணங்கின
விடத் தவர்களுக்குண்டாகிய மேற்கரும மந்தக்காரியப் பெயர்க
ளாலே தீர்க்கப்பட்டாற்போலக் கர்த்தாவு மெல்லாரும் பக்குவர்
களல்லாததுகொண்டே யபக்குவர்களாயுள்ளவர்கள் வழிபாடுசெ
ய்யத்தக்கதாக அந்ததேவதைகளையுஞ் சொன்னதா யிருக்கும்.—
அன்றியினையவை பிறரிற்கனவினுமிலனே- இஃதொழிந்தபிற
தெய்வங்களையவ னமஸ்கரித்துச் சொன்னானென்கிற தவனுக்கு
ச்சொப்பனத்தினு முண்டாகாது. உம்முடையகர்த்தா தன்னைத்
தான் ஸ்தோத்திரம்பண்ணுவானே னென்னில்,—தன்னைத் துதிக்
குஞ்சொன்னலந்தானு மத்துறையறிவாணர்க் கறைவதொன்று-
கர்த்தாதன்னைத்தான் ஸ்தோத்திரம்பண்ணுகிறது பக்குவான்மாக்க
ளாயிருக்கிறவர்கள் தன்னை வழிபாடு செய்யத்தக்கதாகச் சொன்ன
தாகயிருக்கும்,—அன்றியுந் தனக்குத்தானே தன்னலம்பகரா நகை
த்துக்குறைபா தார்க்குரை யுயிர்க்கெனில் - இதன்றியுங் கர்த்தா
தன்னுடைய பெருமையைச் சொல்லுமிடத்து வேறேயொருவர்
கேட்கச் சொல்லுவதொழிந்து தனக்குத்தான் றன்னுடைய பெ

ருமைமையைச் சொல்லிக்கொள்ளாது. பின்னைச்சரீரம் ஜடமானப
டியினாலே யர்தச்சரீரத்தை நோக்கிச் சொல்லாது. பின்னையவ
னுடைய பெருமைமையைச்சொன்ன தாரைநோக்கி ? அது பிறரை
நோக்கிச் சொன்னதென்னில்,—உரைபிரமாண மிறைபிரமே
யமீபிரமாதா நின்பிரமிதியென நால்வகையுளதன்றேக நன்றன்
றே - சாத்திரமாகிய பிரமாணங்கர்த்தாவாகியபிரமேயம் ஆன்மா
வாகியபிரமாதா ஆன்மாவினுடைய வறிவாகிய பிரமிதியென்று
நால்வகையாகக் காணப்பட்ட தாகையா னீயொன்றென்றது ந
ன்றாயிருந்தது,—நற்பிரமாண நிற்பதொன்றன்றால் - ஆகையா
ல் நன்றாகவிதற்குப் பிரமாணமொன்று காட்டப்பட்ட வேதமு
மொன்றென்றுசொல்லி நிலைநிற்கப்பட்டதில்லை,— அப்பிரமே
யமு மதனியல்பன்றே - இந்தப்பிரமாணத்தாலே யளவிடப்பட்
டதாய் மேல்மறுக்கப்போகிற பிரமேயமு மந்தச்சாத்திரத்தி னு
டைய வியல்பாகப்படும். (இது அவன்வேதஞ் சுயம்புவென்ற
தை மறுத்தது.) (மேற்பிரமேயமேன் றவன்கொண்ட பிரமத்
தை மறுக்கிறார்.)—கன்னற்சுவையிலக்கியமிலதா லினிமைதோ
ன்றாத் தன்மைத்தென்றனை - கரும்பிலுண்டாகிய விரதந் தன்
னில் வேறுபாடில்லாததுகொண்டு தன்னுடையவிரதந் தனக்குத்
தோன்றாத்தன்மை போலும் பிரமமுந்தன்னுடையவின்பத்தை
த்தானறியாதென்றும் நீயுன்மதத்திலேசொன்னாய்,— அறிவிற்கு
வமையசத்தாங்கட்டிபிரிவித் தொட்டினும்பெறாதன்றே - அ
றிவாயுள்ளதற் குவமைசொல்லுமிடத் தறிவாயுள்ளதைச் சொல்
லாமல் ஜடமாயுள்ள கரும்புமிரதமும் போலுமென்று சொன்னா
ய், அந்தந்தோஷமன்றியுங் கரும்பிலுண்டாகிய கட்டியைத் தன்
னிலேபிரித்துவைத்து மேலோரவசரத்திலே கூடினவிடத்தித்த
னைநாளிந்த விரதத்தையிழந்தோமே யிப்பொழுதிந்த விரதத்
தைப்பெற்றோமே யென்கிறதன்மை கட்டிக்குண்டாகா தாகை
யாலது பிரமத்துக்குவமையன்று,இதன்றியும், தற்பரவிரிவுபொ
ற்பணிதருமெனில் - பரப்பிரமந் தேகாதிபிரபஞ்சமாகப்பலவா

கவிரிந்த தன்மைபொன்னானது பலபணியாயிருந்த தன்மைபோ
லுமென்று நீசொல்லில்—செய்வோரின்றிச் செய்வினை யின்மை
யிற் பொன்பணியாகை தன்பணியன்றே - இந்தப்பிர பஞ்சத்தி
ற்செய்வோ ரொருவரையன்றிச் செய்தொழிலானதுகாணப்படா
தாற்போலப் பொன்னானது மொருவன் பண்ணப்பல் பணியாக
விருந்ததொழிந்து தானாகப்பலபணியாகாது. நீசொன்னபிரமம்
பிரபஞ்சமாக விரிந்ததும் வேறேயொருவனாலே செய்யப் பட்ட
தாகவேண்டும். அப்படியன்றாகானும் எல்லாத்தையுஞ்செய்தது
பிரமந்தானே யென்னில்,—செய்வோர்போலாச் செயப்படுபொ
ருண்முதல் - இந்தவுலகத்திற் செய்கிறவர்கள் போலாயிராதிவர்
களாற்செய்யப்படும் பொருள்களுக்கு முதலாயுள்ள வுபாதானமு
ம். அதென்போலவென்னில் குலாலனைப் போலேயிராது சால்
குடம் சட்டி பானைக் குபாதான மாகியமண்ணும். ஆகையாலி
ந்தப்பிரமத்தை யின்றிப் பிரபஞ்சத்துக் குபாதானம் வேறே
யொன்றுண்டாகவேண்டும், அப்படியோருபா தானமுண்டாகி
லதுவேயமையாதோ யிந்தப்பிரமமே னென்னில்,— செய்வோ
ரேயாச்செய்யவும்படுமே - அந்தவுபாதானம் ஜடமாயிருந்த படி
யாலே யதுதானாகப் பிரபஞ்சமாகாது அந்த வுபா தனத்தைக்
கொண்டு செய்கைக்குக் கத்தாவேண்டும். அதுவன்றிப் பிரபஞ்
சத்தி லியாதொருபொருள்களுஞ் செய்வோரொருவரையில்லாம
லந்தத்தொழில்கள்தான் செய்யப்பட்டுவருவது முண்டாமோ,—
சுத்தி வெள்ளியிற் றோன்றிற்றாயினுஞ் சத்துலகேதுந்தாரா தரு
மெனில். - சுத்தியென்னுஞ் சிப்பியானது வெள்ளியாகத்தோன்
றினார்போலக் கண்டவர்களுக்கு அசத்தியமாயுள்ள பிரபஞ்சமு
ஞ் சத்தியமாகத் தோன்றிற்றாயினும் அறிவாயுள்ளபிரமம் ஜடமா
யுள்ளபிரபஞ்சத்தை யொருபிரகாரத்தா லுண்டாக்காது. உண்
டாக்குமென்னில்,—உலக மித்தையென் றோராதுரைத்தனை - நீ
முன்னே யிந்தவுலகத்தைப் பிராந்தியென்று சொன்னது விசாரி
யாமற் சொன்னதாகவேண்டும்,—இலவு பின்மரபு நினைந்திலையா

ங்கொல் - இப்படிமலைபோற் பொருந்தப்பட்ட வுன்னுடைய வத்தித்தினது பிரமத்தை நமறந்தாயாகவேண்டும்,— விவகாரத்தி லவேண்டுதுமுலகம் பரமார்த்தத்திற் பகராமென்னில் இந்தப் பிரமமுபாதிகள் வசத்தினாலே தன்னை ஜீவனென்று பிரமாணம் பண்ணிக் கொண்டு நிற்கிற வித்தவிவகாரதிசைக் குலகமென்று கொள்ளப்படும், அஃதொழிந்து நான்பிரமமென்றறிந்த ப்ரமா ர்த்ததிசையிலே யெல்லாம் பொய்யா யிருந்தபடியாலே யவ்விட த்துக்குலகமென்று சொல்லப்பட் டிராதென்னில், —பரத்துள தேலிவையும் பரமார்த்தம் - இந்தவுலகம் ப்ரமார்த்தமாயுள்ளபி ரமத்திலே நின்றுமுண்டானதாயின் அசத்தியமாயுள்ள பிரபஞ்ச மும் சத்தியமாயுள்ள பரமார்த்தமாகவேண்டும்,—பரத்திலதேல் - உலகம் பொய்யாயிருந்தபடியாலே யிந்தப் பரமார்த்தத்துக்குப் பணியல்லவென்னில்,—ஒழி முன்பகர்மாற்றம் - முந்தப்பிரமத் திலேநின்றுந் தோற்றினதென்று சொன்னவார்த்தையை நீயொ ழித்துவிடுவாயாக,—அதன்முத லிதுவெனவுதவுக - இந்தவுலக ம்பிரமத்திலே தோன்றினதல்லவாயின் அதுதோன்றின வுபாதா னமுனக்குத் தெரியுமாயி னின்னதென்று சொல்லுவாயாக,—அ ன்றியும் விவகரிக்குங்காற் றிகழ்பரமார்த்தநிலை யது - இந்தத் தோல்வியன்றியும் இன்னமுஞ்சொல்லுமிடத்து நின்மலமாயெல் லாவுபாதிகளையுங் கழன்ற பரமார்த்த நிலையாயிருப்பதொன்றந்த ப் பரப்பிரமம்,—தெரியினிது நீ - அந்தப்பிரமந்தான் காணுநா னென்னில் அது அறிவாயிருப்பது, விசாரித்துப் பார்க்குமிடத் துமலமாயிருக்கிற வித்த மாயாவுபாதிகளோடுஞ் சம்பந்தியாயிரு ப்பதொருத்தனீயாகையாலிந்த ஜீவனுந் தனித்தொரு முதலெ ன்,—நீயேல் - அந்தப்பிரமந் தான்காணுநானென்னில் அஃதறி வாயிருப்பது இஃதறியாமலிருப்பானேன்,—தெரியாது - இதுஉ பாதிவசத்தினாலே யறியாமலிருக்கும,—ஆயி னஃதுந்தெரியாது- நீயுமந்தப்பிரமமு மொருமுதலாயிருக்கையினாலே இவ்வுபாதிவ சத்தினாலே யறியாமலிருக்குமாயின் அந்தப்பிரமமு மறியாதாக

வேண்டும்,—உரையாளரையு மொழிந்தனையன்றே - உன்னு
டையமதத்தை யளவிட்டுச் சொல்லிவைக்கிற பிரமாணத்தை
யும்விட்டுவிட்டாய், அதேனென்னில் அஃதொன்றைச் சொல்
லி யொன்றைச் சொல்லுகையால் அந்தச் சாத்திரத்தின்படி
காணு நான்சொன்னதென்னில்,— அளவை காண்டல் கருதலு
ரையெனவுளது - பிரமாணமாவது பிரத்தியக்ஷமென்று மநுமா
னமென்று மாகமமென்று மூன்றுவகைப்படும்,— அவைமூன்றி
ன்மொழிவழி நுழையினின் பிரமேயமென்பதெனுங்கொல் அ
ங்ஙனஞ் சொல்லப்பட்ட பிரத்தியக்ஷத்தின் வழியாலு மநுமான
த்தின் வழியாலு மாகமத்தின் வழியாலு நுழைந்தொன்றையறிந்
துகொண்டு வருமாயின்வாக்குமனத்துக்கு மெட்டாதவுன்னுடை
யபிரமேயமென்று சொல்லப்பட்டதென்னமாய்முடியும். (இது
அவன் பிரமேயமென்றதை மறுத்தது,) (மேற்சித்தினிடத்த சித்
துத்தோன்று மென்பதைமறுக்கிறார்,)—பொற்பிதிர் பிதிர்ந்தும்
பொன்னேயா நின்றற்பரம சித்தைத் தருமாறென் னெனில் -
பொன்னும்பணியும் போலப்பிரமமும் பிரபஞ்சமு மென்றாய்.
பலபணியானதும் பொற்கட்டியானதும் மாற்றுநிறமு மொருப
டித்தாகக் கண்டோம்பின்பு பொன்னோடுங்கூடப் பொன்றாய்
நின்றதுங்கண்டோம் ஆகையாலுன்னுடைய சத்தாயுள்ளபிரமத்
ந்த வசத்தாயுள்ள பிரபஞ்சத்தைத்தந்த பிரகார மெப்படியென்
றுநான்முன்னே யுன்மதத்திலே கேட்டபொழுது,—சிலம்பிநூற
ருகலம்போற்றோன்று மென்றனை - சித்தாயுள்ள சிலம்பிஜடமா
யுள்ள நூலைத்தந்த தன்மைபோலுஞ் சித்தாயுள்ள பிரமத்திலேஜ
டமாயுள்ள பிரபஞ்சந் தோன்றினதென்றுசொன்னாய்,— அதுவ
தன்றேழில் - அந்நூலையநவரதமுந் தோற்றி விந்நூற்கொண்டி
ருக்கிறதந்தச் சிலந்திக்குள்ளதொழில் பிரபஞ்சம் பிரமத்திலேயி
ன்றோவதரத்திலே தோன்றுவதொழிந் தநவரதமுந் தோன்றி
க்கொண்டு நில்லாது.—அன்றியுமொன்றது வரியல்புலகோ ரிடல்
பன்றெனை - அதன்றியுஞ் சிலந்தியினிடத்திலே தோன்றின நூல்

லொருதன்மையாகக் காணப்பட்டது பிரமத்திலே தோன்றின
பிரபஞ்சமொரு தன்மையாகக் காணப்பட்ட தில்லையென்று நா
ன்முன்னேசொன்னபொழுது,—பலமிலை பழம்பூ பாதவங்கருநீ
ர்திரை நரை திவலை சிலதருமிவைபோற் றானே பலவாமெனு
நீசாற்றினை - காயையு மிலையையம் பழத்தையும் பூவையு மரமா
னதுதந்த தன்மைபோலவும் திரையையு நரையையுந்திவலையை
யுங்குமிழியினையு நீரானது தந்தத் தன்மைபோலவும் பிரமந்தா
னே பலவிதமாயுள்ள பிரபஞ்சமா யிருக்குமென் றுன்மதத்திலே
சொன்னாய்,—சத்தசத்தாகவுஞ் சத்தினி லசத்தின் கொத்துளதா
கவுங் கூறினரிலரால் - அறிவாயுள்ள தறியாமையாயிருக்கு மெ
ன்று மறிவினிடத்திலே யறியாமையினது கூட்டங்கடோன்றுமெ
ன்று நீ சொன்ன விந்தமலைவு புத்தர் சமணாதிகளுஞ் சொல்லார்க
ள், (ஆல்-அசை.) பின்னையிந்தப் பிரபஞ்சந்தோன்றினபடியெ
ப்படியென்னில்,—வித்திலை கனிநனி விழுதாறருநெறி சத்தல
தொன்று தான்றரவேண்டும் - சூக்குமமாயுள்ள வித்தானது இ
லையையும் பழத்தையுமிகுதியாயுள்ள விழுதையுமுடைய தூலமா
கிய வாலமரத்தையுந்தந்த தன்மைபோலத் தூலமாய்ப் பலவாயி
ருக்கிற பிரபஞ்சத்தையுஞ் சூக்குமமாய் அசத்தா யிருக்கிறதோ
ருபாதானந் தந்ததாகவேண்டும். அப்படி யன்றாகாணும்நெல்வி
லேநின்று ரவைக்கோலும் பதருந்தோன்றினாற்போலச் சித்திலே
நின்று ஜடமாயுள்ள பிரபஞ்சந்தோன்றுமென்னில்,—நெற்பதர்ப
லாலத்திற் றுபாதானமென் - நெல்லுஞ் சூக்குமமாய் ஜடமா யிரு
க்கையா லதுவும் வைக்கோலுக்கும் பதருக்கு முபாதானமென்
றறிவாயாக,—காரணமின்றிக் காரியம்பிறவா - ஆகையாற் றன
தாகவுடைய காரணத்திலே நின்றுங் காரியந்தோன்றாது. அப்
படித் தோன்றுமென்பையாகில்,—பாரிடை யொருபடம் பண்
ணவும்படுமே - பருத்திகாரணமாகப் புடவையுண்டான தொழிந்
து மண்காரணமாகப் புடவைபண்ணப்படுமோ ஆகையால் ஜட
ங்காரணமாக ஜடமுண்டாவதொழிந்து சித்துக்காரணமாக ஜட

முண்டாகாது இப்படியிருக்கையிலே நீ,—அந்தமில்பிரம மவித்
தைகாரணமெனத் தந்தனை-ஜடமாயழிந்து போவதா யிருக்கிற
தேகாதி பிரபஞ்சத்துக்குச் சித்தாயழிவில்லாம லிருக்கிற பிரமங்
காரணமென்று சொன்னாய்,—அவித்தை தானெய்துறுதல் - சித்
தாயுள்ள பிரமத்திலே ஜடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றுவானே
ன்,—தன்னியல்பென்னில் - இந்தப்பிரபஞ்சந் தோன்றுகிறதந்த
ப்பிரமத்துக் கியல்பாயிருப்ப தொன்றென்றுநீசொல்லில்,—வன்
னிதன்வெம்மையிற் சத்தினதியல்புஞ் சத்தே - அக்கினிக் குஷ்
ணமியல்பானாற்போல நீசித்துக்கியல்பென்று சொன்னபிரபஞ்ச
முஞ்சித்தேயாகவேண்டும்,—அசத்தெனில் - பிரபஞ்சத்தைஜட
மென்னில்,—வைத்தசனியல்பெனும் வழக்கொழி - சத்தாகவை
க்கப்பட்ட பிரமத்தினுடையவியல்பிந்தப் பிரபஞ்சமென்றுசொ
ன்னவழக்கை விடுவாயாக,—அன்றியுமிருள்பொதி விளக்கென
வரும் - இந்தக்குற்றமன்றியுஞ் சித்தாயுள்ள பிரமத்துக்குஜடமா
யுள்ள பிரபஞ்சமியல்பென்றுநீ சொல்லுகிறது பிரகாசமா யுள்ள
விளக்கு இருளானதைப் பொதிந்துகொண்டு நின்ற தென்றதை
யொக்கும் அப்படியன்றுகாணும்,—மருவிளக்கிற் கருமைபயந்த
பெருகொளிதருமெனில் - பெரியவிளக்கினிடத் துண்டாகியமிக்
கபிரகாசமானது கறுத்த மையைத்தந்த தன்மையை யொக்கும்
சித்தாயுள்ள பிரமம் ஜடமாயுள்ளபிரபஞ்சத்தைத் தந்ததென்று
நீ சொல்லில்,—தன்னியல்பன்ற தனுபாதிவசத்தால் மன்னியது
- அங்ஙனம் விளக்கினிடத்திலே கறுத்தமையானது தோன்றின
து விளக்கினுடைய வியல்பல்ல வென்றறி, திரியென்றும் நெய்
யென்றுஞ் சொல்லப்பட்ட வுபாதிகள் வசத்தினாலேமையானது
நிலைபெற்ற தென்றுகொள்,—அன்றிமைத்தான் மனின் மாயாது
- அன்றியும் பிரமத்திலேதோன்றின பிரபஞ்சமீளவும் பிரமத்தி
லே யொடுங்காநிற்கும் விளக்கிற்றோன்றிய மையானது மீளவும
ந்த விளக்கிலே சென்றொடுங்காது. அன்றியும்,— ஒன்றானசுத்
த னன்றாமன்றே - இந்தப்பிரமமென்று சொல்லப்பட்ட வொ

ப்பில்லாதவன் முன்சுத்தனொழிந்த சுத்தனுயிருப்பா னொருத்த
னல்லவே அப்படியிருக்கச்சே யிந்த மாயாவுபாதிகளோடுங்கூடி
யிருக்கவேண்டுவானேன்,—ஆங்கொருகாலத் தோங்கிய தாயின்
- அந்தப்பிரமத்தினிடத்திலே யோரவதாரத்திலே யிந்த வுபாதிக
ள்வந்துகூடினதாயின்,—அந்தவில்வித்தை வந்தணைவதற் கோ
ரேதுவேண்டும் - முடிவில்லாத மாயாவுபாதிகள் பிரமத்தி னிட
த்திலே வந்துகூடினதற்கு முன்னே யொருகாரண முண்டாக
வேண்டும்.— புயலியல்பெனின் - நின்மலமாயிருக்கிற வாகாசத்
தை மேகமானதுவந்து மறைத்ததன்மைபோலச் சுத்தமாயுள்ள
பிரமத்தை மாயாவுபாதிக ளியல்பாகவந்து கூடிற்றொழிந் திதற்
கொருகாரணம் வேண்டுவதில்லையென்னில்,— வீடோத வேண்
டாம் - இந்தவுபாதிக ளியல்பாகவந்து பொருந்தின் மோக்ஷமெ
ன்றுசொல்லவேண்டுவதில்லை. அதேனென்னில்,—ஒழிந்தோரி
னுமுறும். எல்லாவுபாதிகளையு நீங்கிப்பழைய சுத்தத்தைக் கூடி
னவர்களிடத்திலு மிந்தவுபாதிக ளியல்பாக வந்து பொருந்தும்.
அப்படியன்றுகாணும்,— களங்கமதுறவுறு மவித்தை தற்கவித்த
ல் விளங்கியபிரம விளையாட்டாயின் - பிரமத்துக்கு மயக்கமுண்
டாகத் தக்கதாகப் பொருந்தப்பட்ட மாயாசரீரங்க ளிந்தப் பிர
மத்தைப் பொருந்திக்கொண்டது மிக்கபிரமத்துக்கு விளையாட்
டாயிருப்ப தொன்றாயின்,—அவித்தை யென்பதொன் றந்நியந்
தன்னிலுதிக்குமென்ற முன்னுரையு மறந்தனை - விளையாடுகிறவர்
களுக்கு விளையாடப்பட்ட பொருள்வேறானால்போலப் பிரமத்தி
னையுடைய விளையாட்டாகிய மாயாசரீரமும் வேறாயிருப்ப தொ
ன்றானகையாம், பிரமத்தினிடத்திலே யுபாதிகடோன்றிப் பிரமத்
தை மறைக்குமென்று நீ முன்னேசொன்னசொல்லையு மறந்தா
யாகவேண்டும்,—நுண்நூற்குடம்பை நூக்துழிபோலுட்படுநெறி
யதனால் விடுநெறியிலதாற் றலைமையு மறிவு மிலதென் - உலட்
டுப் புழுவானது தன்னிடத்திலே நின்றுந் தோன்றிய நுண்ணிய
நூலாலே தனக்குக் கூடாகப்பண்ணித் தானதற்குள்ளேபுகுந்து

பின்னைத் தானாகப்புறப்படமாட்டாமற் செத்ததன்மைபோல வ ந்தப் பிரமமு மாயசரீரத்துக் குள்ளே விளையாட்டாக வந்துபு கு ந்து பின்னைத் தானாகப் புறப்படமாட்டாம லிற்கையா லந்தப் பிரமத்துக்குச் சர்வமுதன்மையுஞ் சர்வஞ்ஞியத்துவமு மில்லையெ ன்றுசொல்,—அவித்தையை விடுத்தெடுத்தாணரும் வேற்றோ ன்றே - இதுபாசபந்தியாயிருக்கையாலே இந்த மாயாசரீரத்தை த் தானாக விடுவித்துக் கொள்ளமாட்டாமனின் மலமா யிருக்கிற தொரு குருமுதலிந்த மாயாசரீரத்தை நீக்கிப் பாவக்குழியினு நி ன்றெடுத்துத் தனக்கடிமையாக வாண்டுகொள்கையினு லந்தச்ச ரீரத்தோடே கூடிநிற்கிறது பிரமமாகாது. அப்படியன்றுகாணு ம்,—ஒளிகொடாமிரங் குளிகைபெற்றுங் கதனவித்தையைவித் தைதவிர்க்குமென் றுரைக்கின் - பிரகாசத்தோடுங் கூடியிருக் கிறசெம்பானது இரதகுளிகையோடுங் கூடினவிடத்துக்காளித நீங்கிப் பொன்னான தன்மைபோல வந்தப் பிரமத்துக்குண்டாக் கிச் சரீரசம்பந்தத்தையு மதனிடத்லே தோன்றின விவேகஞான நீக்க வந்தப்பிரமஞ் சுத்தமாமென்று நீ சொல்லில்—நித்தனவ றிவன் சுத்தனென்னுறைத்த வித்தகமென்னி - அப்படி யசுத்த மாயிருக்கிற முதலை நீ முன்னே நித்தியனென்றுஞ் சர்வஞ்ஞிய னென்று நின்மல னென்றுஞ் சொன்ன சாமர்த்திய மென்னதா ன்,— வித்தையும் வேறொன்று - நீ விவேகமென்று சொல்லுகிற இந்த வவித்தையோடுங் கூடிக்கொண்டுநிற்கிற முதலல்ல தை வேறே முதலென்றுசொல், இந்தவிவேகந்தான் காணுமந்தப்பிர மமென்று நீசொல்லில்,—எம்மனோரி லொருவ னின்னிறை - நீ சுத்தாவென்றுசொல்லுகிறமுதல்பாசபந்திகளாயுள்ளவெங்களிலே யொருத்தனாகவேண்டும்,—அம்ம - நான்சொல்லுகிறசொல்லைப் பு த்திபண்ணிக் கேட்பாயாக,— சைவந்தவனியன்றே - யாதொரு த்தனைப்பொல்லாதவனென்று சொல்லப்பட்டது அப்படிச்சொ ல்லப்பட்டவ னியாகவேண்டும். (இதுபிரமிநியையமறுத்தது)(இ னிபிரமாதாமறுப்பு.) இதன்றியம்,—பன்மணிபசுசற்பாத்திரமெ

னவு நன்றூல்பானீர் நற்கதிரெனவு முடலையுமுணர்வையு மூவ
மித்தனையேல் - இரத்தினங்கள் பலவாயிருந்ததாயினுமதிற்கோ
க்கப்பட்ட நூற்சர டொருதன்மையா யிருந்தாற்போலவும்பசுக்
கள் பலவாயிருந்த தாமாயினு மவையிலுண்டானபா லொருதன்
மையாக விருந்தாற்போலவும் பாண்டங்கள் பலவாயிருந்ததாமா
யினு மவையிற்றிற் பிரதிபிம்பஞ்செய்கிற வாதித்தனொருதன்மை
யா யிருந்தாற்போலவுங் கூவலாழி குளஞ் சிறுகுழி கால் பலவா
யிருந்த தாமாயினு மவையிற்றிலுண்டாகிய தண்ணீரொரு தன்
மையா யிருந்ததுபோலவுமென்று யோனிபேதங்களா யிருந்துள்
ளவுடல்களுக்கும் அவையிற்றிற்கூடிநிற்கிற பிரமத்துக்கு மூவ
மையாகச்சொன்னாய் அப்படியாகில்,— தடமணிசரடொடு தாங்
கூடவே - பிரகாசத்தினாலே மிகுந்திருக்கிறமணிகளுஞ்சரடுந்தா
மாகக்கூடினதில்லை யவையிற்றை வேறேயொருத்தன் கோக்கக்
கோப்புண்டுநின்ற தன்மைபோல வுன்னுடையபிரமத்தையு மிந்
தவுடலையுங்கூட்டினவ னொருத்த* னுண்டாகவேண்டுமே, அதன்
றியும்,—உணர்வுணர்வொழியி னுலகுணர்வுறினின் பாலும் பசுவு
ஞ் சாலும் - உன்னுடையபிரமமான தறியாததாயுங் கூடிநிற்கி
றதேகாதி பிரபஞ்சமறிவேயா யிருந்ததாமாயினீ பாலையும் பசு
வையு மூவமையாகச் சொன்னதற்கொக்கும். அதன்றியும்,—சா
லக்கலம்பலவன்றிச் சலம்பலவிலதெனக் காணுநரின்றி வீணின்
விளம்பினை - மிகவும்பாத்திரங்களிற் பின்னமொழித் தாதித்தனி
ற் பின்னமில்லையென்றுங் கூவலாழி குளஞ் சிறுகுழி கால் தங்க
ளிற் பின்னமொழித்து ஜலத்திற்பின்ன மில்லையென்றுங் கண்டு
சொல்வார் சிலரையின்றி விருதாவிலேமிகவுஞ் சிறிது வார்த்தை
களை நீசொன்னது இருதிட்டாந்த விரோதமாகையா லதற்குபாகா
து.—ஆழியுணிழல்போற் கூடுதல்கூறில் - கண்ணாடிக்குணிழல்
நோய்வற நின்றாற்போலச் சரீரத்திலேபிரமம் நோய்வற நிற்கு
மென்று நீசொன்னவர்த்தத்துக்கு நான்சொல்லுமிடற்று,— தண்ணி
ழற்கொண்டு தற்பணஞ்சலிக்கின் மன்னிழல் கொண்டுடலிந்த

கன்றிடுமே - தன்னிடத்திலேநிற்கிற பிரதிபிம்பம் பிரதான மா
கக்கொண்டு கண்ணாடியானது சலித்ததாமாயின் பிரமத்தினு
டைய பிரதிபிம்பம் பிரதானமாகக் கொண்டிருந்தவுடல் கூடியும்
பிரிந்தும் நிற்கும் அவையிற்றுக் கில்லாதபடியினாலே யீதத்தம
ன்று,—மன்னயக்காந்தமெனு வுடல் பிரமசந்நிதியளவிற் சலித்தி
டுமாயின்-நிலைபெற்று வாராநிற்கிற விரும்பானது காந்தம்விகார
மறநிற்க வதனுடைய சந்நிதிமாத்திரத்திலே விகாரப்பட்ட தன்
மைபோலப் பரப்பிரமமும் விகாரமறநிற்க வதனுடைய சந்நிதி
மாத்திரத்திலே யுடல்போக்குவரத்தைச் செய்யாநிற்குமாயின்—
அகண்டிதன் சந்நிதியலதிலதெவையு நடந்திடவேண்டுங் கிடந்
திடப்பெறுவே - பரப்பிரமமென்று சொல்லுகிறது கண்டிதமல்
லாமலகண்டிதமாகையாலே யதனுடைய சந்நிதியல்லாத விட
மோரிடமுமில்லையாகையாற் கடபடாதியாயுள்ளவை யெல்லாம்
போக்குவரத்தைச் செய்யவேண்டும். அதன்றியும் உடலானது
சேட்டித்துங் கடபடாதிகள் சேட்டையின்றிக் கிடக்கிறதுஞ் சந்
நிதியிலே யெல்லாங் காரியப்படு மென்கிறதுக்குப்பொருந்தா. இத
ன்றியும்,—காந்தத்திரும்பு காட்டுகற்பெறி லயஞ்சேர்ந்திடுமே-காந்
தமு மிரும்புங் கூடிக்கிடந்த தாமாயினு மதைதாமாகக் காரியப்
படமாட்டாது அவையிற்றை முகமொக்கக் காட்டுவார் சிலரைப்
பெற்றகாலத் திரும்பானது காந்தத்தைச்சென்று பொருந்தாநி
ற்கும், ஆகையாலுன்னுடைய பிரமத்தையு முடலையுங் கூட்டிக்
காரியப்படுத்துகிறது வேறேயொரு முதலுண்டென்று கொள்ளு
வாயாக. இதன்றியும்,—நீக்குஞ்செய லதற்கிலதே - காந்தமிரும்
பைக் கூட்டிக்கொள்ளுமதொழிந்து நீக்கிக்கொள்ளுந் தன்மை
யதற்குண்டாகாது. பிரமத்தின் சந்நிதியிலே யுடல்கூடியும்பிரி
ந்தும் வருகையானீ காந்தமிரும்பென்றது திருஷ்டாந்த விரோத
மாகையா லதுவத்தமன்று. இதன்றியும்,—கருத்தாயா யிற்பர
வெளுச் சிலதொடுத்தனை - சொப்பனத்திலே யுடம்பங்களை யுங்
ளகாரியங்களைக் காண்கிறவன் விழித்தவிடத்து மெய்யானவை தங்

மைபோலவும் இராக்காலம் புற்றின்வாசலிலே கயிறு கிடக்கிற
தைக்கண்டு பாம்பென்று புத்திபண்ணிப் பயப்பட்டவனுக்கு வி
டிந்தவவதரத்துப் பாம்புபொய்யான தன்மைபோலவுஞ் சுகது
க்கங்களாலுண்டாகிய வருபோகங்களு மந்தப்பிரமத்துக் குண்
டாகாதென்று சொன்னாய்,—கனவின் பயனு நனவின்பயனும் வி
னையின்பய னவைபொய்யென வேண்டா - சொப்பனத்திற் சூக்
குமதேகந்தோடுங் கூடிச் சத்தாதிவிடயங்களை யிவன் புசித்துஞ்
சாக்கிரத்திலே தூலதேகத்தைப் பொருந்தித் சத்தாதி விடயங்க
ளைப்புசித்து மீண்டுமிவன்முன்னேசெய்த பிராரத்தம்புசித்தொ
ழிந்து சாக்கிரத்திற்புசித்ததுமெய் சொப்பனத்திற்புசித்தது பொ
ய்யென்று சொல்லவேண்டுவதில்லை,— உடன்மாறுட்டக் கடனா
துகருதுக - சாக்கிரத்துக்குத் தூலதேகத்தோடே கூடி யநுபவி
க்கும் சொப்பனத்துக்குச் சூக்குமதேகத்தோடே கூடி யநுபவிக்
கும் ஆகையால்சரீரவொற்றுமை யுள்ளதென்றறிவாயாக,—உற்ற
புற்றுமற்றதிற்கயிறு முடலுங்கூடச் சடமெனவறிதி - இவன்செ
ன்றிராக்காலத்திலே பொருந்தப்பட்டபுற்றும் அதன் வாசலிலே
கிடக்கிறகயிறு மிவனுடையசரீரமுமாக மூன்றும் ஜடமென்கிற
து நீயுமறிவை,—அறிவுகயிறென் றறியாதன்றே - அறிவாயுள்ள
பிரமங்கயிற்றைக் கயிறென் றறியமாட்டாமற் பிரமிக்குமாகில
தையறிவென்று சொல்லப்படாது,— அச்சமதடைதல் கொச்ச
மையுடைத்தே - பிரமங்கயிற்றைப் பாம்பென்று பயப்படுமாயி
ன் அதைக்கத்தாவென்று சொல்லப்படாது, இதன்றியும்,— இ
ன்னுமக்கனவி லிருளுறுகயிற்றிற் பின்னுநின்பிரமம் பிரமித்திடு
மே-இன்னமொரு குற்றமுண்டு கனவிற்றீங்கு பொய்யென்றறிக்
துங் கங்குலிற்கயிறுபொய்யென் றறிந்து மிருளை [illegible]
ங்கனவைக் கண்டவிடத்துங் கங்குலிலே கயிற்றைப் [illegible]
த்து முன்னுடையபிரமமான தச்சப்படுகிறது [illegible]
விக்குவுடம்போடுகூடி யிப்பாடுபடும் [illegible]
றியும்,—துன்னியபிரம [illegible]

கைக்கமையாலும் - சிவந்த பூவோடுங்கூடியிருக்கிற படிகந்தன்னு
டைய தன்மையிழந் தந்தவன்னமேயா யிருந்த தாமாயினு மதி
லொரு சற்றுந்தோய்வற நின்றாற்போலப் பிரமமுநெருங்கிவருதி
றகன்மங்களைப் புசிக்குமிடத் தந்தவிடயங்கள் தாமாயிருந்தாமா
யினுமதிலொரு சற்றுந்தோய்வற நிற்குமாயின், —மலமென்னொ
ருபயனன்றிப் பலபயன்மரீஇய இருவினைதருபயனென்ன ஊனிலே
ண்டில் - படிகம்பூவோடு கூடியிருந்தபொழுது சிவந்த வன்ன
மொன்றுமேயாயிருந்தாற்போல் வினையோடுகூடினபிரமமுமே
கப்பிரகாரமாயிராமல் நானாவிதமாய்க் கொண்டிருப்பானே னெ
ன்ன வதுபுண்ணிய பாவங்கள் பலவாயிருக்கையினாலே யத்தை
யனுபவிக்கவேண்டி யப்பிரமமும் வெகுபிரகார மாயிருந்ததெ
ன்றுமிகவு முனக்குப்பக்ஷமாயின், —ஆண்டவித்தையு மவித்தை
கொடாக்கையு மீண்டிருவினையு மியம்பினை - இவ்விடத்திவனை-
யடிமையாகவாண்டு மிரக்ஷித்துக்கொள்ளுகிற தொருவிவேகஞா
னமும் அறியாமையோடுங் கூடியிருக்கிற வோர்சரீரமும் பலவி
தமாயிருக்கிற புண்ணிய பாவங்களு மூண்டென்றாய் ஆகையா
ல், —பரத்தைக் கள்வரைப்பிணிக்குங் காவலரெனமுய லுல்வி
னைத் தொடக்கிற்றென் றுடர் சிறையிட்டிருவினையூட்டு மெம்மா
னம்மான் - இவ்விடத்துக் களவுகொண்ட கள்வரைக்கொண்டுவ
ந்து சிறைசெய்ததற்குத்தக்க தண்டங்களையுஞ் செய்கிற விராஜா
க்கினைபோல முன்ஜநநங்களிலே செய்தபழையவினையினாதொ
ந்தனையினாலே யுண்டாகப்பட்ட வுடலாகிய சிறைச்சாலையிலேயு
ன்னுடைய பிரமத்தைவிட்டுப் புண்ணியபாவங்களென்கிறதண்
டங்களைப் புசிப்பிக்கும் சர்வான்மாக்களிடத்துங் கிருபை நிறைந்த
வெம்முடைய கர்த்தாவாயுள்ள சுவாமியென்கிற கர்த்தா, இதன்றி
யும், —அருவினையுடற்க ணவத்தைக ளுரைத்தனை - அரிதாயுள்
ளவினைக்கீடாக கொடுக்கப்பட்டவுடலிலே மூன்றவத்தைப் படு
மென்று நீயுன்மதத்திலே சொன்னாய், —அருளுபவர் பரமகண்டு
நமடங்கார்து - இந்தச்சரீரத் தோடுண்டாகிய மூன்றவத்தையுமு

நுபவிக்கிறதார்தான் பரப்பிரமமோ வென்னில் அது பரிபூரண
மாயிருந்தபடியாலே நனவு கனவு சுழுத்திஎன்கிற வவத்தைகளி
லடங்காது,—ஓர்வில துடல்சடமுரு செறியாதெனின் - உடல்ஜ
டமாயிருந்தபடியாலே யவத்தைப்படுமென்கிற வார்த்தை யதுக்
குண்டாகாது. பின்னையிந்த வவத்தைப்படுகிற செறியாதென்று
கேட்க,—மன்னியகரண மாருட்டத்திற் பன்னினமென்னின்றி
லைபெற்றுவாராநிற்கிற வந்தக்கரணங்கள் பிரிந்தவிடத் துண்டா
கிய மயக்கத்தையுடைய தாயிருக்கும் மியாமவத்தையென்று சொ
ல்லப்பட்டதென்னில்,—இவையோ பரமோமுதலியது - அந்த
க்கரணங்களோ பரப்பிரமமோ விந்தச்சரீரத்துக்கு முதன்மை
யுடையது,—ஆயினிவைபிறழ்வெய்தாது-பரப்பிரம முதன்மை
யுடையதாயி னந்தப்பரப்பிரமநிற்க விந்தவந்தக்கரணங்க ணீங்
கமாட்டாது, அதனுல்,—இவையெனி லுனதுமொழி பழுதா
தே - இந்தவந்தக் கரணங்கள் முதன்மையு முடைய தென்னி
லெல்லா முதன்மையு முடையதீ பரப்பிரமமே யென்று வே
தஞ் சொல்லு மென்று நீசொன்னது பழுதாகவேண்டும், — உ
டற்படு பிரம முறுமெனில் - அப்படியன்று காணும் அவத்தை
யுறுகிற துடலுக் குள்ளே யகப்பட்டு நிற்கிற பிரமமேயாகில்,
— சாளரத் திடத்தகு முறுவிரனுதி யளிசெறி துயரங்குலிதா
னே யருந்திடி லுடற்கட் டங்கியவறிவு தனித்துறுமன்றே - பல்க
ணிவாசலிடத்திலே புறம்பேநின்றுள்ளே யொருவிரலைநீட்ட வந்
தவிரல்நுநியிலே யொருவண்டானது கொட்டவதனு லுண்டாகி
யவிதன மந்தவிரல்தானே யநுபவித்ததாமாயின் இந்த வுடலிலே
பொருந்திநிற்கிற பிரமமவத்தையைத் தனியேயநுபவித்ததென்
றுசொல்லலாம். அந்தவிரனுதியிலே வண்டுகொட்டின கடுப்புப்
பாதாதிகேச மளவுநின்று கடுக்கிறபடியினுலே யுடலிலேநிற்கிறவ
றிவவத்தையைத் தனியேயுறுமென்று நீசொன்னது அத்தமாகா
து இதன்றியும்,—தர்ப்பணநிழற்கட் குற்றியாய்ந்தற்ற நற்கணிற்
றுயாநணுகாத் தகைத்தெனின் - கண்ணுடியி னிடத்திலே தோ

ன்றின நிழலினதுகண்ணிலே கூர்ச்சிகொண்டு கடாவின விடத்
துக் கண்ணுடியுடைந்தொழிந்து கண்ணுக்குலயம்வாராத் தன்
மைபோலச் சுகதுக்கங்களாலுண்டாகிய வநுபோகங்களுமுடலு
க்கொழிந்து பிரமத்துக்கில்லையென்னில்,— நின்மொழி விரோத
மும் காட்சிவிரோதத் தன்மையுமுறுமவை தவறிலவாகா - உன்
னுடையசாத்திரஞ் சுகதுக்கங்களை யநுபவிக்கிறதறிவென்றுசொ
ல்லும் நீ-யிப்பொழு துடலுக்கொழிந்து வறிவுக்கநுபோகமில்லை
யென்கையாற் சாத்திரவிரோதமும் பிரத்தியக்ஷமாக வறிவு சுக
துக்கங்களை யநுபவிக்கையிலே யநுபோகமில்லை யென்கையாற்
பிரத்தியக்ஷ விரோதமு மிவையிரண்டுந்தப்பாம லுண்டாகாநிற்
கும்,—யாமுரைப்பதிவகை யாவரும் பலகலைசொல்லுதலெளித
ரிதத் தொழில்புரிவெனப் புல்லியபழமொழி புதுக்கினையன்றே
நாம்வஸ்து நிர்ணயமாகநாட்டப்பட்டது 'சொல்லுதல் யார்க்கு
மெளியவரியவாஞ்சொல்லிய வண்ணஞ்செயல்.' என்று சொல்லப்
பட்ட திருவள்ளுவப்பயனிற் குறளை நீ யிப்பொழுது புதுக்கின
யாகவேண்டும். (யாமென்ற தாக்ஷேபச்சொல்,) இதன்றியும்,—
திகண்டிதமென நீ பகர்ந்தமை யெனக்குப்பந்தமிதுவெனத் தந்த
மை கருதில் - பரப்பிரமமொன்றுளுங் கண்டிக்கப்படாத வக
ண்டிதமாயிருப்பதென்று நீ முன்னே சொன்னதற்கிப்பொழுது
மாயாவுபாதிகளாலே யிப்படிப் பந்திக்கப்பட்டு நிற்குமென்று
சொன்னதை விசாரித்துப்பார்க்கில்,—வானிடைக்குங் காலினை
ப்பிடித்துப் பருவிலங்கிட்ட வொருவனீயன்றே - ஆகாயத்தின்
கண்ணே வியாபரித்துநடக்கிற காற்றினைப்பிடித் தங்கங் கசை
யாதவண்ணம் பெரியவிலங்கை யிட்டுவைத்தவ னீயாமென்று
சொல்லப்படும்: (இதுபிரமாதாவை மறுத்தது.) (இஃதவனுடை
யபெத்தம்.) (மேலவனுடைய முத்தியை மறுக்கிறார்.) பந்தமது
கலவுந்து விவேகம் வான்வளி யெனத்தனிமுனே நோன்றின்
பிரமமாயாவுபாதிகளாலே பந்திக்கப்பட்டிருக்குமென்று சொன்
னவர்க்குப்பந்தம் பிரமத்துக்கிப்பொழுது நீங்கத்தக்கதாக வந்த

தோன்றின விவேகஞான மாகாசத்தி னிடத்திலே யெழுவாயு
தோன்றி யந்தவாயுவாகாசந்தைமறைத்துநின்ற மேகங்களையொ
துக்கியதனை நின்மலமாக்கின தன்மைபோல விந்தவிவேகஞான
மும் பிரமத்தினிடத்திலேநின்றுந் தானேதோன்றினதாயின்,—
முன்புளதாயின் மயங்காது-இந்தவிவேகஞானம் பிரமத்துக்குமு
தலேயுள்ளதாயின் அதுநிற்கையிலே பிரமத்துக்கு நடுவேமயக்க
ம்வாராது,—இலதெனில் இந்தவிவேகம் பிரமத்துக்குமுதலேயு
ள்ளதல்ல நடுவே யோரவ தரத்திலே வந்துண்டானதென்று நீ
சொல்லில்,—பின்புளதாகாது - முன்பில்லாதது பின்போ ரவத
ரத்திலே யுண்டாகாது,—இலதுளதெனின் - முன்பில்லாதது பி
ன்புண்டாமென்னில்,—வெளிமலராதுநரும் - இல்லாததுண்டா
மென்கிற தாகாசத்திலே யொருபூவுண்டென்கிறதுக் கொக்கும்,
—அப்படியன்றுகாணும். அனல் மரக்கணின்றுகிந் தருவதுத
குமெனில் - அக்கினியினுடையபிரகாச மரத்தினிடத்திலே மு
ன்பு காணப்படாதிருந்து பின்பொரு காலத்திலே காணப்பட்
டாற்போல முன்பில்லாத விவேகஞானம் பின்புண்டாங் காணு
மென்று நீசொல்லில்,— தானேதோன்றுவிறகினிடத்து முன்பி
ல்லாதவக்கினி பின்புண்டாயிடத்து ஒரு அரணியைவைத்துக்க
டைய வுண்டானதொழிந்து தானுகவுண்டாகாது. ஆகையாலுன்
பிரமத்துக்கும் பின்புண்டாகிய விவேகஞானமும் வேறேயொ
ருத்தனுண்டாக்க வுண்டானதென்றுகொள். இதன்றியும்,— விற
கினுதித்த கனறுகுமாயி னவித்தையினுதித்த வித்தை. அநுவயம்.
அவித்தையினுதித்த வித்தைவிறகினுதித்த கனறுகுமாயின் - அறி
யாமையாகிய பெத்தநிலையிலே தோன்றின விவேகம் விறகினி
டத்திலே தோன்றின வக்கினியை யொக்குமாயின்,— அம்மரத்
துதித்த விவேகம் வித்தையென்றுரைத்த வெந்தழலனைய. அநு
வயம் வித்தையென்றுரைத்த விவேகம் அம்மரத்துதித்த வெந்த
ழலனைய - வித்தையென்று சொல்லப்பட்ட விவேகஞானமந்தவி
றகிலேதோன்றினவெவ்வியதழலையொக்கும்,விவேகமுதித்ததிந்த

ணமனையது-விவேகஞானந் தோன்றினதுதானந்த விறகினையெரி
க்கும். ஆகையாலே,--இறையிலன்றற்றே- விவேகஞானந் தோ
ன்றினது பிரமத்திலேயென்று சொல்லப்படாது மாயாவவித்தை
யிலேயாகவேண்டு. இதுதிருஷ்டாந்த விரோதமாகையால்நீசொ
ன்னதத்தமாகாது இதுவன்றியும்,—இற்படப்பிரிப்பின் மெய்ப்
படுமெவற்றையு மிதுவன்றிதுவன்றெனக் கழிகாலையதுவேதா
னே யாயினதென்றனை - வீடானதை யோரோர் வைக்கோலா
கவு மோரோர்கழியாகவு நாளிலேபிடுங்கிப் போட்டபின்பு வீ
டென்கிற சொல்லில்லையாய்ப் போனதன்மைபோலவும் சீலைய
யையோரோரிழையாக வாங்கிப்போட்டாற் சீலையென்கிற தன்
மைபோனதுபோலவும் சக்ரமாகக்கூடிக் கொண்டிருக்கிறவெல்
லாவுபாதிகளையு மிதுநாமல்ல விதுநாமல்லவென்று நியதிபண்ணி
நீங்கினவிடத் தந்தப்பிரமந்தானே யிந்தஜீவனுயிருந்ததென்று நீ
சொன்னாய்,— வித்தைமுன்ன ரவித்தையு மவித்தைமுன் வித்
தையுமில்லா - அறிவாகிய பிரமத்தின்முன்னே யறியாமை யாகி
யதேகாதிபிரபஞ்சந் தோன்றிநில்லாது அறியாமையாகிய தேகா
திபிரபஞ்சத்தின் முன்னே யறிவாகியபிரமந் தோன்றி நில்லாது
அதென்போலவென்னில்,—வியனொளியிருளென - மிக்கபிரகா
சத்தினையுடைய வாதித்தன்முன்னே யந்தகாரநில்லாதாற் போ
லவு மந்தகாரத்தின்முன்னே யாதித்த னில்லாதாற்போலவு மெ
னக்கொள்,—இருளல்வொளிக்கு மொளியல்லிருட்கு மொருகா
லத்து மொருபயனிலது - இருளல்லாத சுத்தவொளிக்குமொளி
யல்லாத சுத்தவிருட்கு மொருகாலத்தினு மிவையிற்றுக் கொருப
யனுமுண்டாகாது,—ஆல் -அப்படியிருக்கையால்,—இரண்டை
யுறுகரு முரண்டருவிழியென - இருளோடுகூடி யிருளை யநுபவி
த்து மொளியோடுகூடி யொளியையநுபவித்து மவையிரண்டுமு
தலுமாகாமற் றனியேயொருமுதலாய் நின்ற பெரியகண்ணினது
தன்மையைப்போலுமென்று சொல்லலாமாகில்,— வித்தையும
வித்தையு முய்த்ததொன்றுளதே - அறிவாயுள்ள பதியோடுகூடி

யிதுபதியென்றறிந்து மறியாமையாயுள்ள பாசத்தோடுகூடி யிது பாசமென்றறிந்து மிரண்டுமெல்லாமற் பசுவென்ெறாருமுதல் தனியேயுண்டென் றறிவாயாக,—தானே தானுமானாற்பயனென்- இந்தப்பிரமந்தானே பிரமமானதானால் இந்தப் பிரமத்துக் குண்டாகிய பிரயோசனமென்னதான்,—தன்னிற்றன்னைத்தானே காணில். இந்தப்பிரமந் தன்னிடத்திலே தன்னுடையவியல்பைத் தானேகாணப்படுமாயின்;— கண்ணிற்கண்ணைக் காணவும்படுமே கண்ணானது தன்னிடத்திலே தன்னுடைய சொரூபத்தைக் காணுமென்று சொல்லவும்படுமே, அதுண்டாகாதாகையால் நீபிரமந்தன்னிலே தன்னைக்காணுமென்றுசொன்ன தத்தமன்று. இதன்றியும்,—தன்னல்மதனைத் தானே நுகருமென்னின் - பிரமந்தன்னிடத்திலே யுண்டாகியசுகத்தைத் தானேயநுபவியா நிற்குமென்று நீசொல்லில்;— முன்னல் மெய்தாதிருந்தெதன் கட்டிபோலெனக் கதறினே - பிரமமிந்தப்பேத முண்டாவதற்குமுன்னே தன்னிடத்திலுண்டாகிய சுகத்தைத் தானநுபவியாம லிருப்பானேனென்று நான்கேட்டதற்குக் கருப்புக்கட்டியானது தன்னிடத்திலுண்டாகிய விரதத்தைத் தானநுபவியாம லிருந்தாற்போலென்று நீ-கத்தினாய்,—இன்பம்வந்தொட்டிடும் வித்தையுடையையாயிடினே - அந்தப்பிரமத்தி லுண்டாகியசுக முனக்கிந்தமுத்தியிலே யநுபோகமானது நீதனியே பசுவென்ெறாரு முதலாயதிலே பாசபந்தியாயிருந்திப்பொழு தப்பாசநீங்கிப்பதியோடுகூடுகையினாலே யெனக்கொள்.—தத்துவமசியென வைத்த முப்பதத்திற்கு-தத் - அது—தொம்-நீ—அசி-ஆகி நின்றாயென்கிற மகாவாக்கியத்துக்கு உண்மை யத்தம் விசாரிக்குமிடத்து,— ஒன்றேபொருளென் றன்றேபகர்வது - நீயொன்றேயா யிருக்குமென்றது பொருளல்லவே, இதற் கத்தமொன் றல்லவென்றே யந்த மகாவாக்கியஞ் சொல்லுவது பின்னையெங்ஙனேயென்னில்,— நீ புலியாயினை யென்றாங்குணரில் - ஒருவ னொருவனுடைய வீரத்தைக்கண்டபோது நீ புலியாயினையென் றவன்சொன்ன சொல்

லை விசாரித்துப் பார்க்கில்.—ஆயினையென்றது தாருவ மைந்தர்
ன் - ஆயினையென்றதாகுவலமைத்தென் றிலக்கணவிதியிற்குந்தி
ரங்கள் சொல்லுகையினலவன் புலியாகின்முனல்லன், இதன்றி
யும்,—நோயாயினமேலாயாய் - ஒருவனெருவனைப் பார்த்து நீயி
ப்படிப்பொல்லா திருப்பானேனென்ன நானேயாய்க் கிடந்தே
னென் றவன்சொன்னசொல்லுக் கத்தம்நீதானே யாராய்ந்து பா
ராய் அவன்கொண்ட வெப்பக்குளி ரவனுகிறதில்லையே,— என்
முல் - அப்படியிருக்கையினலே.— அகமேபிரம மாயினதென
முல் — அகந்தானே பிரமமாகா நின்றதென்று மகா வாக்கியந்
சொல்லுகையினல்,—சகமெயறியத்தான் வேறன்றே - ஒருத்தர
ன்றி இந்தப்பிரபஞ்ச மித்தனையுமறியத் தக்கதாகவிவனந்தப்பிர
மத்துக்கு, வேறென்கிறது தப்பாதென்றறிவாயாக. அன்றியும்,
—உண்மையிற் சலமில உடற்சஞ்சலம் - நம்முடைய உண்மை
யைப் பார்க்குமிடத்திலே நமக்குச்சலனமில்லை இந்த வுடலினிடத்
துண்டாகிய சலனமுடலுக்காயிருக்கும். அதென்போல வென்னி
ல்,...சலமுறும் வெண்மதிபோல - ஜலத்தோடே கூடியிருக்கிற
பிரதிபிம்ப மதியந்தஜல மசைந்தபொழுது தானு மசைந்தாற்
போலே யிருந்ததொழிந் ததனுடைய வுண்மையைப் பார்க்குமி
டத் தந்தமதிக் கசைதலில்லை யானாற்போல,— விளங்கு மென்ற
னை - இங்ஙனமந்த முத்தித்திசையில் விளங்கா நின்றேனென்று
நீ சொன்னாய்,—அசலனுகிச் சஞ்சலமாய்த்துச் சலனமே யினமெ
னமதிகாணவேண்டும் - நாம் சலனமில்லாமலிருப்பா னெருத்தன்
ஆற்றிலேயோடுகிற ஜலத்தினுடைய சஞ்சலங்கொண்டு தானுந்
சஞ்சலித்தாற்போலேயிருந்த தொழிந்து நமக்குச் சஞ்சலமில்
லையென்று கண்டாற்போல வாகாசத்திலிருக்கிற சந்திரமதியானது
காணவேண்டும் அப்பொழுது நீ சொன்ன திருஷ்டாந்தமுமொப்பா
க்கும்;—அதன்றிக் காண்பவர் பிறரேல் - அதொழிந் திந்தப் பிரதி
பிம்பமதிக் கசைவில்லை தண்ணீருக்கே யசைதலென்று தந்தமதி
யையொழிந்து வேறேயொருத்தன் கண்டுசொல்லுந்சொல்லுமவ

மைபோல வந்தப் பிரமத்துக்குச் சலநமில்லை யுடலுக்கேசலநமெ
ன்று அந்தப் பிரமத்தையொழிய வேறேயொருத்தன் கண்டு சொ
ல்லுகையினாலே,— ஈண்டினை தேகமென்செய்த தியம்புக - இவ்
விடத்துப் பிரமமொன்றுமே யுள்ளதென்றுநீ சொன்னசொல் லே
தாய் முடிந்தது சொல்லாய். (இஃதவனுடைய ஜீவன்முத்தியை
மறுத்தது) (மேற்பரமுத்தியை மறுக்கிறார்)—உடல்விடக் கடத்
துட்படுவெளிபோலெனில் - பரமுத்தியானதிந்தச் சரீரத்தினை
விடத் திந்தச் சரீரத்திலே நின்றவறிவு தன்னிலொன்றுபட்டு நி
ன்றது கடத்துக்குள்ளே யகப்பட்டுநின்ற வாகாச மந்தக் கடமு
டைந்த வவதரத் தந்தக் கடத்துக்குள்ளே நின்ற வாகாசமும் ப
ராகாசமுந் தன்னி லொன்றுபட்டு நின்றாற் போலுமென்று நீ
சொல்லின்,—விட்டென்பெற வுடற்பட்டென்பட - ஆகாசங் கு
டாகாசமாய் நின்ற காலத்தொரு துக்கத்தை யநுபவித்தது மில்
லை குடமுடைந்த காலத்தொரு சுகத்தையநுபவித்தது மில்லை ய
துபோலப் பிரமமுடலுக்குள்ளே யகப்பட்டுநின்ற காலத்தொரு
சுகத்தை யநுபவித்தது மில்லையாக வேண்டும் இந்தவுடல்விட்ட
ட காலத்து மொருசுகத்தை யநுபவித்தது மில்லையாகவேண்டும்
இதன்றியும் இந்தவுடலிலே நிற்கிறவறிவுபிரத்தியக்ஷமாக விப்
பொழுது துக்கத்தை யநுபவித்துவிட்ட காலத்துச் சுகத்தை ய
நுபவித்து நிற்கையால் நீ குடாகாச வாகாசம்போலுமென்ற தத்
தமன்று. திருஷ்டாந்த விரோதம்,—மற் றிகலறவொருவனிவ்வ
கைதெளியி லகிலமுமுத்தி யடைந்திடவேண்டும்-இஃதொழிந்
து நீ சொன்ன சாத்திரப் பிரமாணத்திலே மாறுபாடறவொருந்
த ஞன்பிரமமென்று தெளிந்தகாலத் தெல்லாவறிவு மொன்றெ
ன்று சொல்லுகையாற் சர்வான்மாக்களுமுத்தியடையவேண்டும்.
—அறிந்தோர் முத்தி யடைந்தோராயின் - பிரமஞானமுண்டா
னவர்கள் முத்தியடைவர்கள் இல்லாதவர்கள் முத்தியை யடை
யார்களாயின்,—பிறிந்தோ ருயிர்பல வேறுள்ளன்றே - இறிந்தவர்
களென்று மறியாதவர்களென்றுஞ் சொல்லுகையா லந்தப்பிரம

த்தையொழிந்து சொல்லப்பட்ட ஜீவான்மவர்க்கமும் பலபேத மாயிருக்குமென்று கொள்வாயாக. (இதுபரமுத்தியை மறுத்தது)

(மேலிந்த விவேகத்தன்மை கூடாதவர்களுக்குச் சாதந சதுஷ்டயங்களினாலே பிரமஞான முண்டாமென்பதனை மறுக்கிறார்.)

—கன்மகாண்டங் காரணமாகமென்னும் விவேகமென்னில் - இத்தன்மை கூடாதவர்கள் யாகாதிகளாயுள்ள கன்மகாண்டங்களையநுஷ்டிக்க வதுகாரணமாக வவர்களுக்குப் பின்பு விவேகஞானமுண்டாமென்று சொல்லில்,—அவித்தைக் கேதுகாரண மோதினையில்லை - பிரமத்தை மாயாவித்தைகள் வந்தோ ரவதரத்திலேபொருந்தி யத்தை மயக்கிக்கொண்டு நிற்குமென்று நீசொன்னதற்கு இன்னதுகாரணமாகப் பிரமத்தைவந்து பொருந்திற்றென் றொன்றைச் சொன்னாயில்லை,— இதற்குங்காரணம் விதித்தல் வேண்டின்றே - கன்மகாண்டங் காரணமாக விவேகமுண்டா மென்றதுபோலப் பிரமத்துக்கு முன்னேயிப்படி யிருப்பதொரு குற்றமுண்டு அதுகாரணமாக விந்த வவித்தைகள் வந்திப்பொழுது பொருந்திற்றென் றொன்றை காட்டவேண்டும். இப்போது,—அரணியினுதித்த கனலவைகவர்வென விரதத்துதித்த விவேகமழித்தல் - நிக்கடைக்கோலை மரத்தில்வைத்துக் கடைந்தந்தத் தொழிலினாலே யுண்டாகிய வக்கினி யந்தவிரண்டுகாட்டத்தையுஞ்சுட்டுப் போட்டதென்று சொல்லலாமாகக் கன்மங்களைச் செய்வதனாலே யுண்டாகிய விவேகமந்தக் கன்மங்களை யில்லையாக்கிப் போடுமென்கிறது,—வருந்தியாயினுந் திருந்தியவேதநீதியெல்லா நீத்து - சதாசாரங்களையு நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிற வேதவொழுக்க மெல்லாத்தையும் வருந்தியுங் கைவிட்டு,—போதமொன் றறியோர்தாமு மவ்வழிநடத்தல் - பிரமஞானமென்கிற தேகதேசமுங்கூட யறியாதவர்களும் ஓர் பிரமஞானமுண்டாயிற் றெங்களுக் காசாரம் வேண்டுவ தில்லையென் றநாசாரங்களைச் செய்துகொண்டு திரிகிறது,—பொறியோ போதநெறியோ - இவர்களுடைய தலையி லெழுத்தோ அல்ல தறிவீனத்தா

றே,—இதுபவநீங்கிடு நெறிதருப்பாங்கினைப் பழித்தல் - இவனை
விட் டொருகாலத்திலு நீங்காமற் றொந்தித்துக்கொண்டு வருகிற
பிறவித்துன்பங்க ளீங்குகைக் கேதுவாயுள்ள விந்தக் கன்மத்தி
ன் பகுதிகளையெனக் காகாதென் றிதனைக் கைவிட்டு விடுகிறது,
—நன்றி கொன்றலன்றே - "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்
டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்றசொன்ன
செய்ந்நன்றி கொன்றதிதுவாயிருக்கும், விரதத்துதித்த விவேகம
ழித்தல் நன்றிகொன்றலன்றே என்று பொருள்கூட்டுக,— அன்
றியு ஞாலநீதியு நான்மறைநீதியும் - இதன்றியு முலோகாசாரங்க
ளும் வேதஞ்சொல்லப்பட்ட வாசாரங்களுமிவை.—பாலருன்ம
த்தர் பசாசரிலெனவு முறங்கினோன்கை வெறும்பாக்கெனவுந்
தானேதவிராது - யாதொன்றினையும் விகற்பியாமல் நிருவிகற்ப
மாய்க்கொண்டு காண்கிற பாலரைப்போல்வும் வைதாரையும்
வாழ்த்தினாரையுஞ் சுட்டியறியாத மதுபானஞ்செய்தவர்களைப்
போல்வும் ஆகாரமுதலில்லாத பசாசரைப்போலவும் நித்திரை
செய்கிறவன்கையிலே தனியேபிடித்திருந்த பாக்குப் போல்வும்
உனக்குப் பிரமஞான மில்லாதபடியாலே யந்தவாசாரங்களுந்தா
னாகப்போக வறியாது,—ஆறாற் புரியாதொழிந் திடி னிரயத்தழு
ந்துதறிடமே - அவைதானே போகாதென்றால் அவன்றானே
யெனக்கந்த வாசாரங்கள் தேவையில்லையென்று விட்டுவிடிற் றே
காந்தத்திலே மீளாநரகத்திலே போய்க்கிடந்து துக்கங்களையநுப
விப்பானென்கிறது தப்பாது,—உய்த்தோனன்றி முத்தி யுரைத்
தல் பித்தோ-நீயந்தவாசாரத்தினாலே பிரமஞானமுண்டா மென்
றமல் நான்முத்தனென்று சொல்லுகிறவிது பித்து மேலிட்டுக்
கொண்டோ,—பிரமஞ் செத்தோபெறுவது-இவனிருக்கையிலே
பிரமஞானமுண்டாக வேண்டுவதொழிந்து இவன்செத்துபோய்
ப் பிரமஞானத்தைப் பெறப்போகிறதில்லை, அதே தென்னில்,
—உடலையு நீயே சடமெனச்சாற்றினை - இந்தவுடலை நீதானேஜ
டமென்று சொல்லிவைத்தாய்,—வையினும் வாழ்த்தினுங்கொய்

பினுங் கொளுத்தினும் வணங்கினு முதைப்பினும் பிணங்குதல் செய்யாப் பிரமத்தன்மை பெறுவ தெக்காலம் - ஒருவனிவனை வைதவிடத்து மொருவனிவனை வாழ்த்தினவிடத்து மொருவனி வனுடைய கைகாலைத்தறித்த விடத்து மொருவ னிவன்மேலே நெருப்பைக் கொளுத்தினவிடத்து மொருவன் தண்டம்பண்ணி னவிடத்துங் கால்கொண்டு மிதித்தவிடத்து மிதமகிதப்படாமலி ருக்கிற பிரமஞான மிவனிடத் திற்றைவரையாகக் காணப்பட் டதில்லை யந்தப்பிரமஞான மெந்தக்காலத்திலே யுண்டாகப்போ குது,—இருக்குநாள்சில - புருடராயிற்று நூறு, இதிலேபாதி நித் திரையிலேபோம், நின்றவைம்பதிலே வாலிபமாய்ப் பதினைந்து போம், விருத்தனாய்ப்போம் பதினைந்து, நின்ற விருபதிலேநோ யாய்ப்போஞ் சிலநாள், இதிலே யிடையிலே யிறந்துபோகிற கா லமுமிகுதி, இதற்குநடுவே.—எண்ணினூல் கதறித் தருக்கம் பே சித் தலைபறியுற்று - எண்ணிறந்த சாத்திரங்களை யெல்லாங்கற்று அதுகொண் டெல்லார்களோடுந் தருக்கங்கள்பேசி யதனாலே த லைபறியுண்டு, கண்டோரீய்ந்த பிண்டமுண்டலறி - இவர் நல்லவ த்தியான்மியென்று கண்டவர்க ளிடப்பட்ட வசனங்களையும் புசி த்தும் பிரமஞானஞ் சொல்லுகிறேனென்றவர்க ளிடங்களிலே சிவனவயிற்றைக் கூப்பிட்டு,— பன்னோயாக்கை தன்னோயுற்று டல் விடவருமென்றநடுநடுநடுங்கி - பலநோய்களுங்கூடி யொன் றாயெடுக்கப்பட்ட சரீரத்துக்கடைத்த வியாதி யிவனை வந்து பொருந்தினபோதிலிதனாலே நமக்குச் சாக்காடுவருமென்று ப தைபதைபதைத்து,—விட்டோர் தெய்வத்தொட்டின் றன்றியும் - உடல்விடுகிற காலத்து நீ-பயப்படாதே நானுண்டென்று சொ ல்லி யுன்னை யிரக்ஷித்துக்கொள்ளுகைக்கு ஒருதெய்வதொந்தனை யு மில்லையா யிருக்கிறதன்றியும்,—யானே யெவருமானே னென் றலின் - நான்றானே பிரமாவும் விஷ்ணுவும் உருத்திரனும் இந் திரனும் இயமராஜா மற்றுமுள்ளவர்க ளெல்லாருமா யிருந்தே னென்று சொல்லுகையால்,—அவ்வவர்சிறிய வவ்வவர் வாளுட்

செவ்விதினிரயஞ் சேர்த்துவர் - அந்தத்தேவதைகள் நம்மையிவ
ன்குறென்று சொன்னனென் றுன்னேடே கோபித்துக்கொண்
டு தங்களுக்குச் செல்லாநிற்கிற காலங்களெல்லா நன்றாகக்கொ
ண்டழுந்த நரகங்களிலே தள்ளிவிடாநிற்பர்கள்,—அதனுல் மா
யாவாதப்பேயா வுனக்குத் தேவரிலொருவருண்டாகமே வருநரக
ம் விடுத்தலோ வரிதே - அங்ஙனமிருக்கையால் மாயாவாதமென்
கிற பேய்ச்சமயத்தை யுடையவனே யுனக்கெல்லாருஞ் செத்துப்
போய்த் தேவவர்க்கத்திலே யொருத்தரிருந்தாராயினு மொருவ
ராலுங் கிட்டுதற்கரிதா யிருக்கிற நரக முனக்கு நீங்குதலுண்டா
கா தென்றறிவாயாக. (உ)

மாயாவாதிசங்கற்ப நிராகரண-முற்றிற்று.

---

# ஐக்கியவாதிசங்கற்பம்

அரிதேர்ந்துணராப் பெரியோனுரைத்த
பதிபசுபாச விதிமுறைகிளக்கி
லீசனேகனெண்ணிலிபசுக்கள்
பாசமிருவகைப் பரிசினதுலகத்
தாயவனுயிர்க்குமாயையினருளா
லிருவினைத்தொகை யிலுருவினைதருமாற்
கருமுகிலடரவிரிதருகதிர்போன்
றரிவாமுயிரிற்பிறியாதேயு
மீட்டுமிருபயனூட்டிடுநியதிக்
கொருபொழுதிருபய னுகர்வுறமருவுத
லின்மையாதன் முன்னியகாலைச்
சத்திநிபாத முற்றிறையருளா
லுருவுகொடலெரு தெரிவுறமருவி
மாசறுந்நாசு தேசுறவிளக்கும்

தன்மையி லுணர்த்துப் புன்மைகணீங்கி
நீருநீருஞ் சேருந்தகைமையி
னறிவினோடறிவு செறிவுறப்பொருந்தி
யொன்றுமென்பதையுலகோர்
நன்றுமுத்தி யெனநவின்றனரே,

அரிதேர்ந் துணராப் பெரியோனுரைத்த பதிபசுபாச விதி முறைகிளக்கில் - விஷ்ணுவானவன் பூமியைக் கிண்டா ராய்ந்து பார்த்தவிடத் திப்படியிருக்கு மிவனுடைய சொரூப மென்றறியப்படாத பெரியவனென்று சொல்லப்பட்டிருக்கிற சிவனாலேயருளிச் செய்யப்பட்ட பதியினுண்மையினையும் பசுவினுண்மையினையும் பாசத்தினுண்மையினையு முள்ளபடி சொல்லுமிடத்து— ஈசனேகனெண்ணிலி பசுக்கள் பாசமிருவகைப் பரிசினது - பதியென்று சொல்லப்பட்ட பரமேஸ்வரனொருமுதலா யிருப்பதொன்று, பசுவென்று சொல்லப்பட்ட வான்மாக்கள் பலமுதலாயிருப்பதொன்று, பாசமென்று சொல்லப்பட்டது மாயையென்றுங் கன்மமென்று மிருவகைப்பட் டிருப்பதொன்று,—உலகத்தாயவனுயிர்க்கு மாயையினருளா லிருவினைத் தொகையி லுருவினைத்தருமால் - பிரபஞ்சத்திற்கு மாதாபிதாவுமாயுள்ள சிவன்றனது காருண்ணியத்தினாலே யான்மாவுக்குப் புண்ணிய பாவங்களுக்கீடான சரீரங்களை மாயையிலே நின்றுங்கொடாநிற்பன், (ஆல்அசை,) கருமுகிலடர விரிதருகதிர்போன் றறிவாமுயிரிற் பிரியாதேயும் - கறுத்தமேகமானது பிரகாசத்தினையுடைய வாதித்த னிடத்திலேசென்று பொருந்தினவிடத் தந்த வாதித்தனுடைய கிரணங்களெல்லா நீங்கினதன்மைபோல முதலே சுத்தமாயறிவாயிருக்கிற வான்மாவினிடத்திலே யத்தமாயாதேக மொருக்காலுநீங்காமற் பொருந்திவாராநிற்கும்,—மீட்டுமிருபயனூட்டி மியற்றி - முன்னேசெய்த புண்ணியபாவங்களை இந்தச் சரீரத்திலே கர்த்தாவானவ னிவனுக்கெக்காலும் புசிப்பியாநிற்பன்,—ஒருபொழுதிருபய னுகர்வுறமருவுத லின்மையாதன் முன்னியகாலை - புண்

ணியபாவங்களிரண்டுந் துலையொத் தொருஜநநத்திலே யெல்லா க்கன்மங்களும் புசித்துத் தொலையத்தக்கதாக வேதெனினு மொ ரு சிவபுண்ணியம்வந் ததிர்ப்பட்ட வவதரத்து,—சத்திநிபாதமு ற்று - இவனுக்குச் சத்திநிபாதமென்ப தொன்றுண்டா யந்தவவ தரத்திலே,—இறையருளா லுருவுகொடுல்குதெரிவுற மருவி - க த்தாவானவன் றனது காருண்ணியமேதனக்குத் திருமேனியாகக் கொண்டருளி யுலகத்திலுண்டானவர்க ளெல்லாருங் காணத்தக் கதாக வாசாரியருக வெழுந்தருளி வந்து,—மாசறுந்தூசு தேசுற விளக்குந் தன்மையிலுணர்த்தும் - அழுக்கினாலே மிகுத்திருக்கி றபுடவையை நன்றாகவெள்ளாவிவைத் தந்தவழுக்கை நீக்கித் தூ ய்தாக வெள்ளையாக்கின தன்மைபோல் இவனிடத்தி லுண்டாகி ய பாசங்களைத் தீக்ஷைகளைச்செய்து கிரமத்திலே போகத்தக்கதா கவுபதேசங்களை யருளவே,—புன்மைகணீங்கி நீருநீருஞ் சேருந் தகைமையி னறிவினோடறிவு செறிவுறப் பொருந்தி யொன்றும்; இவனிடத் துண்டாகிய குறைகளெல்லா நீங்கச்சுத்தனாகித் தண் ணீருந் தண்ணீருந் தன்னிலேகூடி யைக்கியமா யொன்றுபட்டுநி ன்றதன்மைபோலச் சிவனுடைய வறிவோடே தன்னுடையவறி வுகூடியைக்கியம்பிறந் தொன்றுப்பட்டு நிற்கும்,— என்பதை யுல கோர் நன்றுமுத்தியென நவின்றனரே - என்றிங்ஙனஞ்சொல்ல ப்பட்டதை யுயர்ந்தோரா யுள்ளவர்கள் முத்திக ளெல்லாத்திலும் வைத்துக் கொண் டிதுவே நல்ல முத்தியென்று சொல்லா நிற்ப ர்கள். (௯)

ஐக்கியவாதி சங்கற்ப முற்றிற்று,

—()—

## ஐக்கியவாதி சங்கற்ப நிராகரணம்.

---

முத்தியென்பதை மலஞ்சேத்த
வறிவெனிற்பாசஞ் செறியாமாயை

யுருவிருவினையால் வருமிருவினையு
முருவாலன்றி மருவாதிவற்றின்
முந்தியதேதோ வந்தவினையதற்கோ
ரேதுவேண்டுமதாணியல்பென்னின்
வீடுற்றவரினுங் கூடக்கூடு
மிங்கிவைநிற்கவீங் காக்கருவிகள்
கொண்டறிவறியக்கண்டதுமன்றி
மருவியவுருவதுயில்பெறுங்காலைச்
சிறுபொறித்தறுகட்கறையணற்சுடிகைத்
துத்திக்கடுவட்டுளையெயிற்றரகக்
கொத்தயல்கிடப்பினுங் குறைவறுநவமணி
யொருபாற்றுதையினும் பொருகார்வத்திறே
டச்சமுமணுகாக்கொச்சமையென்னே
கருவியாவும் பிரிவுறுநிலையேற்
பொறிபுலனறி குறைதீறநிறைந்து
காட்சியதனிக்கு மூட்சியின்முன்னர்க்
கொடுத்தோராழிவித்தவர்காடிக்
கொள்வோர்க்காறு தாங்கிமீண்டுழித்
தந்தவர்க்கண்டாங் கத்தமிலதனைத்
தருகவென்னும் பெருமதிபிறங்கும
தறிவிலாமையென்றனையதுமலமாக்
குறிகொளாளரைநருவரன்றே
யறிவிற்கறிவுசெறியவேண்டின்றே
யுண்மையிலிருமையுமொளியேயெனிலொரு
தன்மையாகமுன்சாற்றினிலரே
முன்புநன்றுடனொன்றியகாலை
யின்பமெய்துதற்கிலதுயிராதலி
னியலைபொருதமாயாவாதி
யாயினையமையுமருணிலைகேண்மதி.

இ-ள். முத்தியென்பதேவரே - இதை நீ முத்தியென்று சொன்னதென்னைகாண். அது பின்சொல்லுகிறோம்—சுத்தவறிவெனிற் பாசஞ்சேறியா - ஆன்மா வநாதியிலே சுத்தமாய்அ தறிவுமாயிருக்குமென்று சொல்லின் நடுவே யோரவதரத்திலேசுத்தமாயிருக்கிற வான்மாவைப் பாசம்வந்து பொருந்துகைக்குவழக்கில்லை—மாயையுருவிரு வினையால்வரும் - இந்தமாயாசரீரமானதிவனைவந்து பொருந்துமிடத்திவன் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாகவந்து பொருந்துவ தொழிந்து தானாகவந்து கூடமாட்டாது - இருவினையு முருவாலன்றி மருவாது - அந்தப்புண்ணியபாவங்க டானுண்டாமிடத் தொருமாயா சரீரமுண்டாயதிலுண்டாகிய திரிவித கரணங்களினாலே யிவன்செய்ய வுண்டாவதொழிந்து தானேயுண்டாகா தாகையால், —இவற்றின் முந்தியதேதோ - இந்த மாயாமலங் கன்மமல மிரண்டினும் வைத்துக்கொண்டு இவனைமுந்தி வந்து கூடின பாசமேதுதான். இதன்றியும்—வந்தவினை வதற்கோ ரேதுவேண்டும் - இந்தப்பாசங்கள் நடுவே யோரவதரத்திலே யிவனைவந்து பொருந்துமென்கிறதற் கநாதியிலேயிவனுக்கு மலமென்ப தொன்றுண்டா யதுகாரணமாகவந்து கூடிற்றென்று சொல்லவேண்டும்—தாணியல்பென்னின்- அப்படிமலமென்ப தொன்றில்லை இந்தப் பாசங்கடா னடுவேவந்திவனைப் பொருந்தினது வெள்ளைப்புடவைக் கழுக்கேறினாற்போலே யியல்பாகவந்து பொருந்துமென்று நீசொல்லில்...வீடுற்றவரினுங் கூடக்கூடும் - மாயாகன்மங்களினீங்கி மோக்ஷத்தைப் பெற்றிருக்கிறவர்களிடத்திலு மாயாகன்மங்க ளியல்பாகவந்துபொருந்தப்படும்— ஈங்கிவைநிற்க - இவ்விடத்து நான் சொன்னதற்கொருத்தர முனக்குச்சொல்லப்பட்ட தில்லையாகையா லிவைநிற்க—நீங்காக் கருவிகள்கொண் டறிவறியக் கண்டதுமன்றி- அநாதியிலே யுன்னைவிட்டு நீங்காமனிற்கிற மலசம்பந்தத்தையிந்த மாயாகருவிகள்வந்து நீங்காதக் கருவிகளைக்கொண் டின்று [illegible]

மாகக்கண் டிருக்கையிலேயு மலமென்ப தொன்றில்லை யென்று
ய். இதன்றியும்—மருவிய வுருவு துயில்பெறுங்காலை- அநாதியே
யிவனுக்கு மலமென்பதொன்றில்லை நடுவேயியல்பாகவந்துபொ
ருந்திற்றென்று நீசொன்னவிந்தவுடம்பில் நித்திரைசெய்கிறவவ
தரத்து—சிறுபொறித்தறுகட் கறையுடைநச்சுடிகைத்துத்திக் கட்பு
ட்டுளையெயிற் றரகக்கொத் தயல்கிடப்பினும்- உடம்பிலே சிறி
தாயிருக்கிற பொறிதனையுமுடையதாய்த் தறுகண்ணினையுமுடை
யதாய்த் தலையிலே துத்தியினையு முடையதாயுள்ளே துளையாயிரு
க்கிறபல்லுகளிலே நஞ்சினையுமுடையதாயிருக்கிற பாம்பினது
கூட்ட மொருபக்கத்திலேவந்து கிடந்ததாமாயினும்,— குமைத
ருநவமணி யொருபாற் றுதையினும் - கூட்டங் கூட்டமா யிருக்
கிற நவரத்தினங்க ளொருபக்கத்திலே மிகவுங் கிடந்ததாயினும்
—பெருகார்வந்திறே டச்சமுமணுகாக் கொச்சைமையென்னே யி
ந்த நவரத்தினங்க ளிருக்கிறதைக் கண்டுமிகவும்பிரியம் வாராமலு
ம் இந்தப்பாம்புகள்கிடக்கிறதைக் கண்டுமிகவும் பயம்வாராமலு
மிருந்த வறியாமையென்னதான்—கருவியாவும் பிரிவுறு நிலையி
ல் - எல்லாக்கருவிகளு நீங்குகையினாலே யவ்விடத்துவிருப்புவெ
றுப்புக் காணப்பட்டதில்லையாமோ—பொறிபுலனெறி குறைவறநி
றைந்துகாட்சியதனிக்கு மூட்சியின் - பொறியும்புலனு மறியா
யுள்ள கருவிகளெல்லா மொன்றிற்குறைவற நிறைந்துநின் றிவ
னுக் கறிவைக்கொடுக்க வினையுடையவறிவு சந்நிதிவிடயங்களி
லேமூண்டு ஜீவியாநிற்கிற வவதரத்திலே,— மூடர்களைக் கொடு
த்தோராழிவிடுத்தவர் நாடிக்கொள்வோர்க் காணுறுங்கி டீன்றெடு
த்தத்தவர்க் கண்டாங்கத்தவசனைத் தருகென்றும் பெருமதி
பிறங்கும். அனைகழிவைக்குமுன்றாக வொருத்தன் கையிலே
யொருமோதிரத்தைக் கொடுத்திந்தமோதிரத்தை விற்றுக் கொ
ண்டுவாருமென்று சொல்லிப் போகவிட அந்த மோதிரத்தைக்
கொள்வோ ரொருத்தரையுங் காணாமலிந்த மோதிரத்தை யிரு
டையைகையிலே வைத்துக்கொண் டிருக்கக்கடவோமல்லவென்

று விசாரித்தவனிடத்திலே மீண்டவன்றந்த மோதிரத்தை வாங்
கிவைத்துக்கொண்டு பின்னையு மனைநாழிகைக்குள்ளே யந்த
மோதிரத்தைத் தந்தவரைக்கண்டு நான்முன்னே யும்முடைய
கையிலே விற்கத்தந்தவிலைமதிக்க வொண்ணாத மோதிரத்தைத்
தருவீராகவென்று சொன்ன யுத்திப்பெருமை மிகவுமுண்டானா
தென்னதான். (பெருமதியென்ற தாக்ஷேபச்சொல்.)—அதறிவி
லாமையென்றனை - அப்படியவனுக்கு மயக்கம்வந்த தறியாமை
கொண்டென்று சொல்லில்—அதுமலமாக் குறிகொளா ளறை
குவரன்றே - அப்படியறியாமையென்று நீசொன்னது தன்னை
க்காணும் மலமாகக்கொண்டு திரிபதார்த்த நின்னயம்வந்த பெ
ரியோர்கள் சொல்லுவார்கள். (அன்றென்ற தாமெனக்கொள்க)
(ஈதைக்கியவாதியுடைய பெத்தநிலைமையை மறுத்தது.) (மேல்
முத்திநிலைமையை மறுக்கிறார்.)—அறிவிற் கறிவுசெறிய வேண்டு
ன்றே - ஆன்மா வறிவேயாயிருக்கின் வேறொன்றிவோடே சென்
று கூடவேண்டுவதில்லை. இதன்றியும்.— உண்மையி லிருமையு
மொளியே யெனில் - முத்தியில் நீருநீருங் கூடினாற்போலப்பதி
யும்பசுவு மிரண்டுங்கூடிப் பிரகாசமாயிருக்குமென்று நீசொல்லி
ல்,—ஒருதன்மையாக முன்சாற்றினரிலரே - அவன்சர்வஞ்ஞன்
இவன்கிஞ்சிஞ்ஞன் அவன்பரிபூரணன் இவனேகதேசி அவனி
ன்மலன் இவன்மலசகிதன் அவன்பதி இவன்பசு இப்படி யிருக்
கையாற் சிவனையுமான்மா மாவையு மொருதன்மையாகக் கொ
ண்டிதற்குமுன் னொருவருஞ் சொல்லுவார்களிலர்.—முன்பு நன்
றுடனின்றிப்பாலே யின்பமெய்துதற்கில துயிராதலின் - அநா
திமிற் சுத்தமாயிருக்கிற வான்மாவைப்பின்பு கூடின வசுத்தங்க
ணீங்க முத்தியிற்சிவனோடேகூடி யின்பத்தை யநுபவிக்குமென்
றாய். இந்தமாயாகன்மங்கள் கூடுவதற்குமுன்னே யான்மா சிவ
னோடேகூடி நிற்கையிலே யின்பத்தையநுபவிக்கக் கண்டோமி
ல்லையே ஆகையால்,—நீ யிலைபொருத மாயாவாதியாயினை யமை
யுமருணிலகேண்மதி-நீயும் பிரமத்தானே முடாகாய மாகாயம்

போல நிறைந்துட னிங்கினவைதரத் திரண்டுபிரமமு மொன்றாயிற்கு மென்றுன்னோடேயடித்துக்கொள்ளப்பட்ட மாயாவாதிதானும் விட்டாயாகையால் நீசொன்னதெல்லாமலமையும் மேற்றிருவருணிலைமையை நான்சொல்லுகிறேன் கேட்பாயாக - மதிவயறன்சதனைச்செல். (௫)

## ஐக்கியவாதி சங்கற்பநிராகரண-முற்றிற்று.

—()—

## பாடாணவாதி சங்கற்பம்.

மூலமலத்தாற் சாலுமாயை
கருமத்தளவிற் றருமுருவிறைவன்
செறிந்திருபயனு நுகர்ந்திடுமுயிர்க
ளிருளுறுமலத்திற் பருவரற்படுதலி
னிடையிருநோக்குந் தடைபட்டோரிற்
றுயருறுமதனாற் செயிருறுதுன்பங்
கொத்தைமாந்த ருய்த்துறுந்துயில்போற்
காட்சியென்னக் காணுந்துயர
மாட்சியைமுத்தி யெனவகுத்தனரே.

இ-ள், மூலமலத்தாற் சாலுமாயை - அநாதியே யான்மாக்களுக் காணவமலமென்பதொன்றுண்டு அந்த மலத்தைப்போக்குவது நிமித்தமாக மாயையிவனைவந்து பொருந்தும்,—கருமத்தளவிற் றரு முரு விறைவன் - ஆன்மாமுன்னே செய்த கன்மங்களுக்கிடான சரீரங்களைக் கர்த்தாவானவன் கொடுப்பன்,—செறிந்திருபயனு நுகர்ந்திடு முயிர்கள் - அந்தச்சரீரங்களைப் பொருந்தித்தங்களுக்குண்டான புண்ணியபாவங்களிரண்டையு முயிர்கள் புசித்துவாராநிற்கும்—இருளுறுமலத்திற் பருவரற்படுதலின்-இப்படியநுபவித்து வருமிடத் தாணவமலத்தினாலே மறைப்புண்டாகையினாலே,—இடை யிருநோக்குந்தடை பட்டோரிற்றுயரு

ம் - முன்புகண்டெந்த கண் ணடுவே காசமேலிட்டதினாலே கா
ணாமலிருந்த கண்ணிணையுடையவர் களைப்போல வவத்தைப்படு
ம்,—அதனாற் செயிருறுதுன்பம் - அப்படியவத்தைப்பட்டு வரு
கையினாற் குற்றத்தையுடைத்தாகிய பிறவித்துக்கம் மேன்மேலே
யுண்டாகாநிற்கும்; (இதுபெத்தம்,) (மேன்முத்தி) கொத்தை
மாந்த ருய்த்துறுந் துயில்போல் - அஞ்ஞானிகளாயிருக்கிறவான்
மாக்க ளெல்லாவவத்தைகளுநீங்கி யதீதத்திலே யழுந்தி கிடக்கு
ந்தன்மைபோல;-காட்சியென்னக்காணத் துயரமாட்சியை முத்
தியெனவகுத்தனரே - அவ்விடத்துச் சுட்டிக்காண்கைக் கொரு
காட்சியுமில்லையாய்ச் சுகதுக்கங்களினுடைய வநுபோகங்களுமி
ல்லையாயிருக்கிற வவதரத்தை முத்தியென்று சொல்லாநிற்பர்கள்,

பாடாணவாதிசங்கற்ப-முற்றிற்று.

—()—

## பாடாணவாதிசங்கற்ப நிராகரணம்.

வகுத்துரைபெருகத் தொகுத்திடுமுத்தி
நன்றுநன்றிரு ளொன்றியமலத்தா
முளத்திற்குறுபொறி செறிபுலநுகர்தல்
விளக்கிற்றிகழு மேன்மையதன்றே
கருவிகளைசல்வழி மருவியதுயரமு
மன்றெனலாகுந் துன்றியபடலந்
இடைதடைப்பட்ட சுடர்விழிமாந்தர்
படலநீங்குதல் கடனுதவினே
காட்சியென்னக் காணத்துயர
மாட்சியைமுத்தி யெனவகுத்துரைக்கிற்
கரணுபாவ மரணங்கருமற
மெய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே
யனையகதிக்கோர் முனைவரும்வேண்டா

தனிதருதுயா மெனுமிது விடமே
பாடாணத்திற் கூடாமுத்தி

இ-ள், வருத்துரைபெருகத் தொகுத்திடு முத்திகன்றுகன்
றிருவொன்றியமலந்தாம் - சொல்லைப் பலவாகவகுத்துச் சிலதிரு
ஷ்டாந்தங்களையுஞ் சொல்லிமுடிவில் யான்மலத்தோடுங் கூடிநி
ற்கிற கேவலக்கிடையை முத்தியென்று நீ சொன்னது நல்லது
இப்படியொருத்தருஞ் சொல்வாரில்லை. (நன்றென்ற தாக்ஷேப
ச்சொல்) உளத்திற்குறுபொறி செறிபுலனுகர்தல் விளக்கிற் றிக
ழு மேன்மையதன்றே - சகலத்தி லான்மாவுக்குப் பொருந்தப்
பட்ட விந்திரியங்கள்காட்டாக வந்தவான்மா வெதிரிருக்கிற சத்
தாதிவிடயங்களைப் புசித்துக்கொண்டு வருகிறதுகண்ணுக்கு விள
க்கினது காட்டாகக்கண்டுவருகிற தன்மைபோலுமாகையாற்சக
லங்குற்றமாகச் சொன்னாய்;—கருவிகளகல்வுழி மருவிய துயரமு
நன்றெனலாகும் - விளக்குப்போல விவனுக்குக் காட்டாநிற்கிற
கருவிகணீங்கினவிடத் தாணவமலத்திலே யழுந்திக்கிடக்கிற கே
வலமு முன்னேசொன்ன சகலம்போல நன்றென்றுசொல்லலா
மாகும், அஃதெதுகொண்டெனில்,—துன்றியபடலத் திடை
தடைப்பட்ட சுடர்விழிமாந்தர் படலநீங்குதல் கடனுதலேபோ-
மிக்கபடலத்தினாலே நடுவேகாசவி தடைப்பட்ட கண்ணினையு
டைய வான்மாக்களுக்குப்பின் போரவதரத்திலே யவுஷத பிர
யோகங்களினாலே யந்தக்கண்ணிற் படலநீங்குகிறது முறைமை
யாயிருக்கையினாலெனக்கொள்க, (இது பெத்தந்தைமறுத்தது)
(மேல் முத்தியை மறுக்கிறார்)— காட்சியென்னக்காணுந் துயர
மாட்சியை முத்தியென வகுத்துரைக்கில் - சுட்டிக் காண்கைக்
கொருகாரணமுமின்றிக் கருத்துக்களினுடைய வுபபோகமுமின்
றியிருக்கிற வித்தவஸ்தைத்தை முத்தியென்று நீ-பலவாகவகுத்துச்
சொல்லில்,—காருருபாவ மரணங் கரு மர மேய்த்தவர் முத்திசே
ர்ந்தவரன்றே - கரணங்களினுடைய பிரிவினைப்பொருந்தினவா
ன்மாக்களில் மரணத்தைப் பொருந்தினவர்களுங் கருவைப்பொ

ருந்தினவர்களு மாவர்க்கங்களைப் பொருந்தினவர்களு மிவர்களை த்தனைப்பேரு முத்தியைப் பொருந்தினவர்க ளாகவேண்டும்.— அனையகதிக்கோர் முனைவரும்வேண்டா - அப்படிக்கொத்தமுத் தியைப் பெருகைக்கொராசிரிய னும் வேண்டுவதில்லை,— தனித் துயரமெனுமிது திடமே. - இந்தமுத்தி யெல்லாக்கருவிகளு நீ ங்கி யாணவமலத்தோடுங்கூடி யொன்றுமறியாமற் கிடக்கிற கே வலத்துயரமென்பது தப்பாதாகையால்,—பாடாணத்திற் கூடா முத்தி - கல்லுப்போலே யொன்றுமறியாமற் கிடக்கிறது முத்தி யென்று சொல்லப்படாது.

பாடாணவாதிசங்கற்ப நிராகரண-முற்றிற்று.

## பேதவாதிசங்கற்பம்.

———()———

ஈசனதருளாற் பாசத்தொகுதி
செறிவுறுசெம்பிற்களையுறுகளிம்பு
குளிகைதாக்க வொளிபெற்றாங்கு
நித்தசுத்த முத்தராக
வைத்தனருகிலன் மறைவல்லோரே.

இ-ள். ஈசனதருளாய் பாசத்தொகுதி செறிவுறு செம்பிற்க ளையுறுகளிம்பு குளிகைதாக்க வொளிபெற்றாங்கு. (அந்வயம்.) செறிவுறுசெம்பிற் களையுறுகளிம்பு குளிகைதாக்க வொளிபெற் றாங்கு ஈசனதருளாற் பாசத்தொகுதி - குகைக்குள்ளே செறிந்து கொண்டிருக்கிற செம்பினிடத்துண்டாகிய களிமை பொருந்தியி ருக்கிற களிதமான இரதக்குளிகைசென்று கூடினவிடத் தந்தக் களிதங்கெட்டுப் பத்துமாற்றுப்பொன்றான தன்மைபோலப்ப க்குவப்பட்ட வான்மாக்களுக்குக் கர்த்தாவினுடைய காருண்ணி யத்தினாலே ஆணவமாயை காமியமென்று சொல்லப்பட்ட மூன் றுமலங்களினது கூட்டங்கெட்டு,—நித்த சுத்த முத்தராக வைத்

தன ருலகின் மறைவல்லோரே - அழியாததாய் நின்மலமாயிருக்
கிற முத்தியினைப்பெற்றுப் பெறுவானும் பேறுமாயிருப்பார்களெ
ன்று சொல்லிவைத்தன ருலகத்தின்கண்ணே வேதாந்திநுண்மை
யை நன்றாகப்பொருந்தின பெரியோர்கள். (எ)

பேதவாதிசங்கற்ப-முற்றிற்று.

## பேதவாதிசங்கற்ப நிராகரணம்.

மறைகளாகமத் துறைகண் மற்றவையு
நாசமில்பதிபசு பாசமென்றுரைத்த
லயர்த்தோர்குளிகைச் சயத்தாற்றும்பிரக்
காளிதநாசம் பாசத்தேய்த்தல்
கூடாதன்றியங் குளிகைசேருணை
நீடாதழித்த நிலைநிலையாதலிற்
பேதவாத மோதுதல்பிழையே
யின்னுமின்னுயி ரேமக்குளிகை
தன்னிலங்கியத் தருவனதிடமே
விடித்திறனிற் கூடக்கூடா

இ-ள், மறைகளாகமத் துறைகண் மற்றவையும் - நான்கு வேதங்களு மாகமங்களு மதன்வழிநூலாகிய புராணங்களு மற்று ண்டான சாத்திரங்களும்,— நாசமில் பதிபசுபாச மென்றுரைத்த ல் - பதிபசுபாசங்களுக் கழிவில்லையென்று சொல்லுகின்றன.— அயர்த்தோர்குளிகைச் சயத்தாற்றும்பிரக்காளிதநாசம் - மறந் திப்பொழுதோ ரிரதகுளிகையின் சாமர்த்தியத்தினாலே செம்பி னுண்டான காளிதமானது கெட்டுப்போகின்றது,— பாசந்தேய் த்தல் கூடாது- பாசத்திற்குரியவன்மைகெடுவது [illegible] தும் —அன்றியுங் குளிகை சேருணை நீடாதழித்த நிலைநிலையாத லில்- அதுவல்லாமலும் இரதகுளிகையானது செம்பை [illegible]

வொட்டாம லதையழித்துப் பொன்னாக்கின திருஷ்டாந்த நிலையு
னக்குத்தாஷ்டாந்த நிலையாகையால்,— பேதவாத போதுதல்பி
ழையே - பசுமுதல்கெடாது பெறுவானும் பேருமாயிருக்குமென்
று நீ முன்னேசொன்ன பேதவாதமும் பழுதாம்,—இன்னு மின்
னுயிரேமங் குளிகைதன்னி லங்கியந்தருவது திடமே - இதுவல்
லாமல் செம்பானது தன்னைச்சுத்தமாக்கின குளிகையுமாகாமற்ற
ன்னுடைய தன்மையுங்கெட்டு நடுவேபொன்னான தன்மைபோ
ல இந்தவான்மாவுந் தன்னைச்சுத்தமாக்கின சிவனுடைய சொரூ
பமுமாகாமற் றன்னுடைய தன்மையுங்கெட்டு வேறொருசொரூ
பமாகவேண்டு மாகையாற் குற்றமுண் டென்கிறது தப்பாது,—
வீடுத்திறனிற்கூடக் கூடா - மோக்ஷம் செம்புமிரத குளிகையு
ம்போலு மென்று சொன்ன வகையிற் கூடுமென்கிற துண்டா
காது.                                                                                    (௮)

பேதவாதி சங்கற்ப நிராகரண-முற்றிற்று.

---

## சிவசமவாதி சங்கற்பம்

---

பாசமும்பசுவு மீசனுமென்றிம்
மூவகையுணர்வு தான்முதன்மையவாய்ப்
பாசவைம்புலன் றோசறவுணர்த்தப்
பசுத்தனிஞானம் பரித்திமென்றே
பதியைஞானம் பிரிவறவெரியாச்
செங்குறுநெறி யந்தமிலுயிரு
மறிவாயொன்று மறியாதன்றே
யிவ்வாறொழுகு மேனையுயிர்க்கு
முன்னேறன்றனது முதிரொளிஞான
மெறியப்பச்சைச் சிறுபுழுக்கவர்ந்த
உண்டேனவுயிரைக் கொண்டிடுமுயிரது

வொளியான புழுவத்தைவெட்டு வாளிசெய்யுந் தொழிலுஞ்செய் தத னுடைய சொரூபமுநீங்கா ததனுடைய கூட்டத்தோடுங் கூடியி ருந்த தன்மைபோல வித்தவான்மாவுஞ் சிவனுடைய பஞ்சகிருத் தியங்களுஞ் சர்வஞ்ஞயத்தையுந் தன்னைவிட்டுநீங்காதவாறுபெ ற்று,—கிரியாப் பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே - முன்னே யித் தவறிவுந் தொழிலும் பெற்று நீங்காமலிருக்கிற பெரியோர்கள்கூ ட்டத்தோடுங் கூடிநிற்கும், (௪)

சிவசமவாதிசங்கற்ப முற்றிற்று,

—()—

## சிவசமவாதி சங்கற்ப நிராகரணம்

---

சேர்ந்தமும்மை வாய்ந்தஞானமு
மொருகாலன்றித் தெரிவுறவிற்கி
லொண்பொருள்காணும் பண்பினுக்கொருகாற்
பரிதியுமதிரி மெரிதருவிளக்கும்
வேண்டலின்றே காண்டருகாலை
யொன்றொன்றாக நின்றறிவுறுமெனி
லந்நியமறியா மன்னுயிர்பொறிபுலன்
றன்னேவறியா தலைவர்க்குலகினை
யானுவறிவா லறியவேண்டின்றே
கொழுந்தழறருமெனி லழுந்திடுமவத்தையிற்
றிரியாத்தலைவர் தெரியாத்தன்மைவந்
தெய்தலாகா மெய்யுறுபொருட்கு
முன்னர்க்கிடந் தன்னையெடுத்த
வேட்டுவெளியல்பு கூட்டல்பெறாதே
வண்டிறும்பெடாவுட் கொண்டதுதனக்கு
மந்திரவாதந் தந்தனுபிலதே
யெடுத்திடுமதனு லடுத்ததென்றறையிற்

கருமயிர்க்குட்டி யிருசிறைப்பறவை
யாயினதெடுத்த தாயர்சாற்றினரே
பிறவிப்பேதத் துறையினைவகிக்க
வேயுமித்திற னாயுங்காலை
யோகத்தருநி யாகத்தருமே
ஞானமின்மையென் றோதுவதெவனெனி
னுயிருமுணர்வும் பயிறுதலின்றி
வேட்டுவனுருவ மென்புழுவுணர்வு
கூட்டுதலாலுருக் கூடுதலானு
முத்தியிலிறையிற் பற்றுதலின்றித்
தன்னுருவணைந்த பின்னதனுணர்வு
மாறுதலானு மூறுடைத்தன்றே
யீசனதியல்பரு ளெய்துயிரியற்றல்
பேசுதறவறெனப் பெருமறையறைய
வைந்தொழிலுயிருந் தந்திடற்குமோ
யாவதென்முன்ற னேவலர்பெருமான்
பண்டொருமுதலை யுண்டமைந்தனை
வரவழைத்தனனென் றுய்ப்பிழைப்பிலந்தாத்
தந்திடவேண்டு மென்றனரன்றே
யின்னவைவகிக்க முன்னவன்றன்மை
யெய்தினரெல்லாச் செய்தியுஞ்செய்வா
ரிரும்பெரியெய்தித் தருஞ்செயறகவெனிற்
பொருணிலைகிடக்க வொருதிட்டாந்தப்
பேறேயாயிற் சீறுக்கதுவிய
புனலொருபுடைசேர் கனறுறாயினும்
வேறொருபொருளை நீறுக்கிலதே
நெருப்பெனுமிதனி னுருந்தனிகாட்டிக
வங்கியுமொன்றிற் றங்கினின்றலது
தன்றொழினடத்தா தென்றறியினிச்

யிருட்பணற்செய்தி தரும்பரிசுளதோ
யதுவென்றோரலகை பொதிதருங்காலை
யதன்செயலனைத்து மிவன்செயலாயா
லவனிவனாகி லிவனவன்செய்திக்
கென்னவையென்னிற் பின்னுறுசெயலு
மதன்செயலன்றி யிவன்செயலாகி
லிவன்செயல்பேயின் றன்செயலாகி
யிருந்தவாவெனத் தெரிந்திடவேண்டுந்
தெரியாதாகிற் புரியிற்கடுங்கன
லெரிந்ததென்னு மிதுதருமன்றியு
மவனிவனாகி லிவனவன்செய்தி
யென்றுசெய்வா னென்றியமதத்தா
யெல்லாமறிதல் செல்லாதுயிர்கள்
சிற்றறிவெனுமிச் சொற்றவறாகு
மென்பதெனலகை தன்மதமடைந்தோர்
கொண்டவாறு கண்டனையென்னின்
மூங்கையந்தருற் றேங்கியகுணங்குறி
செய்வதெனின்னும் பௌவமுற்றழுந்தினு
மாழிகொள்ளா தாழியினலைபுண
லதற்றற்கருத்து முதலுளதாக
வேண்டுமென்றே யீண்டினியமையு
மெல்லாமினுமிச் சொல்லாற்பயம்பொரு
ளனைத்துந்தாக்கா தனிப்பரத்துற்றவர்க்
கெவ்வகையுணர்வு செய்வதென்செப்புக
வொன்றினொன்றா மொன்றாதலகி
னின்றபோதுயிர் கேடாமன்றே
முத்தியுற்ற நற்றவரவையிடை
சேர்வரென்றனை சார்தருமுத்தி
சாலோக்கியமோ சாயுச்சியமெனிற்

பந்தமூற்று கந்தலகழிந்த
அறிவினோடறிவு பிரியாப்பெற்றி
வேண்டுமென்றதற் கீண்டிவரிவ்வா
றிருப்பரென்பதற் குருத்தான்வேண்டு
மண்ணலதருளி னண்ணியிருப்பினுஞ்
சீவன்முத்தரென் றோதினாகன்று
நீங்கியுமுருவ நீங்காதாயி
னோங்கியமுத்தி யாவதென்னுரைக்க
செடியுடலணுகாக் குடிலைகொடுக்குமென்
றோதினை நீயே பேதாய்பகட்டுர
வொளிர்சினைமுச்சித் தளிரெனுமிறதரு
மிச்சாரூப நச்சினரென்னின்
மும்மலத்தேது மின்மையதன்றே
யிதுவளர்முத்திப் பதமெனவியம்புவர். (ஈங்கிவைநிற்க)

இ-ள், சேர்ந்த மும்மையாய்த்ஞானமு மொருகாலன்றி த் தெரிவுறநிற்கில் - இங்ஙனங்கூடிவருகிற பதிபசுபாச மூன்றி னுக்கும் பொருந்தப்பட்ட மூவகைஞானமு மொக்கக் கூடிநின் றே யொருமுதல்க ளறியப்பட வேண்டுமாயின்,— ஒண்பொருள் காணும்பண்பினுக் கொருகால் - கண்ணுன தழகியபதார்த்தங்க ளிலே யொன்றைக்காணவேண்டின வொழுங்கிருந்து விசாரித் துப்பார்க்குமிடத்து.— பருதியுமதியு மெரிதருவிளக்கும் - ஆதித் தனுகுதல் சந்திரனுகுதல் எரிகிறவிளக்காகுதல்.— வேண்டலின் றே காண்டருகாலே - ஒன்றுகாட்டக் காணுமதொழிந் திவையூ ன்றுங்கூடி நின்றுகாட்டக் கண்ணென்றைக் காணவேண்டுவதி ல்லை, ஆகையால் மூன்றுஞானமுங்கூடி யறியுமென்ற தக்கதன் று.— ஒன்றென்றாக நின்றறிவதாமெனில் - அப்படியன்று காணு ம் ஒவ்வொன்றாகத் தனித்தனியே நின்றொவ்வொரு விடயங்களை யறியுமென்று நீ-சொல்லில்,— அம்பிய மறியா மன்றுயிர் - நீவ பெற்றவான்மாவுக்குவிடயங்களொன்றுமிருக்கையிற் றெலகனுளை

த்தானாக வொருவிடயங்களை யறியமாட்டாது,— பொறிபுலன்று
ணை யறியா - பாசஞானம் ஜடமாகையினாலே யொரு விடயங்க
ளையுமறியாது,— தலைவர்க்குலகினை யானுமறிவா லறியவேண்டு
ன்றே - பதிஞான மநாதியே யறிவாயிருக்கையினாலே விடய
ங்களைப் புதிதாகச் சுட்டறியவேண்டுவ தில்லை,— கொழுந்தழற
குமேனி லழுந்திமெய்த்தையில் - கருவிகணீங்கி யாணவ மலசத்தி
னாலே மறைக்கப்பட்டிருக்கிற வவத்தையி லான்மாவறியாமற்
கிடக்கிற கொழுவியதழலை யொத்திருக்குமாயின்,— தெரியாத் தலை
வர் தெரியாத்தன்மைவந் தெய்தலாகா - ஒருகாலத்திலு மிவனை
விட்டு நீங்காதகத்தாவை யிவனறியாமலிருக்கிற முறைமை பொ
ருந்துத லிவனுக் குண்டாகாது. (இது பெத்தத்தைமறுத்தது.)
(மேலான்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதை மறுக்கிறார்.) —
மெய்யுறுபொருட்கு முன்னாக்கிடந் தன்னையெடுத்த - சிவ
னோடொன்று பட்டிருக்கிற முத்தித்தன்மைக்கு முன்னே யொ
ன்று மறியாமற்கிடந்த பச்சைப்புழுவைத் தன்னுடைய சொரூப
மாக வேண்டுமென்றெடுத்த, - வேட்டுவெளியல்பு கூட்டல்பெறு
தே - வேட்டுவாளியி னதியல்புவமையாகக் கூட்டிச்சொல்லுகி
றதுபெறுது,— வண்டினும்பெறா வுட்கொண்டதுதனக்கு மந்தி
ரவாதந் தந்தனுமிலதே - இவனிந்த வான்மாக்களுக்கு மந்திரவு
பதேசங்களைச்செய்து தற்சொரூப மாக்கினாற்போல் வேட்டுவா
ளியானது புழுவையெடுத்ததற்கு மந்திரவுபதேசங்களைச்சொல்லி
த் தற்சொரூபமாக்கினதாகச் சொல்லப்படாதாகையால் நீவேட்
டுவாளியையும் புழுவையு முத்திக்குவமைசொன்ன தத்தமாகா
து,—எடுத்திடுமதனை லடுத்ததென்றறையில் - அப்படியன்று கா
ணும் அந்தவேட்டுவாளி சென்றெடுத்ததுதானே யுபதேசமாகவ
ந்தப்புழுதற் சொரூபமானதென்று நீ-சொல்லில்,— கருமயிர்க்கு
ட்டி யிருசிறைப்பறவை யாயினது - கருமைபொருந்திய மயிர்
க்குட்டிப்புழுவானது பெரியசிறகினையுடைய வண்டிப்பறவையா
ய்ப்போனது,— எடுத்த தாயர்சாற்றிலரே - அதற்கொருதாயாய்வ

ந்தெடுத்தது பதேசமாய்ப் பறவையாய்ப்போன தென்றொருவரு
ஞ்சொல்லுவாரில்லை -பிறவிப்பேதத் துறையிலையிடைக்க- துகை
யால்பச்சைப்புழுவு மயிர்க்குட்டியுங் கன்மத்துக்கீடாக வச்சமா
றினது முத்திக்குவமை சொல்லப்படாது இவைகிடக்கட்டும்இது
வன்றியும்,—எயுமித்திற னுயுங்காலை யோகத்தருநி லாகந் தருமே
- புழுவேட்டுவாளியானாற்போல வான்மாவுஞ் சிவசொரூபமான
தை விசாரிக்குமிடத்து யோகத்திற்குச் சொல்லலா மொழித்து
ஞானத்திற்காகாது,—ஞானமின்மையென் றோதுவதெவனெனி
ல் - இது ஞானமார்க்கமாகாதென்றதெதினாலேயென்னில்,—உ
யிருமுணர்வும் பயிலுதலின்றி - ஆன்மாவுஞ் சிவனுங்கூடியொன்
றுபட்டிருக்கிறதே முத்தியென்றிருக்கையிலே வேறுபட்டிருக்கு
மென்று நீசொன்னதன்றியும்,—வேட்டுவனுருவ மென்புழு வுண
ர்வு கூட்டுதலா லுருக்கூட்டுதலானும் - வேட்டுவாளியி னுடைய
சொரூபத்தை மெல்லியபுழுவினுடைய நினைவானது கூடுதலா
லே யுனக்குமுத்தியிலொரு சரீரங்கூடுகையாலும்,— முத்தியிலி
றையிற்பற்றுதலின்றி - மோக்ஷத்திற கத்தாவினிடத்துக் கூடியி
ருத்தலன்றி வேறாயிருக்குமென்று சொன்னதோஷ மன்றியும்—
தன்னுருவணைக்த யின்னதனுணர்வு மாறுதலானும் - புழுவான
து வேட்டுவாளியினுடைய சொரூபத்தைப் பெற்றபின்பு முன்
னுண்டானவறிவதற் கில்லாதபடியினாலும்,—வுறுமடைந் தன்றே
இத்தை ஞானத்தினாலுண்டாகிய முத்தியென்று சொல்லுகிறது
குற்றமுடைத்தாம்,—ஈசனதியல்பரு ளெய்துயிரியற்றல் கருத்தாவு
க்குண்டாகிய பஞ்சகிருத்தியங்களைத் திருவருளைப்பெற்ற வான்மா
க்கள் செய்யுமென்று,—பேசுதறவறெனப் பெருமறை யறைய -
சொல்லுகிறதுங் குற்றமென்றுபெரியவேதமானது சொல்லுகிட
த்து.—முத்தொழி லுயிருக்குத்திடமுறுமோ - கத்தாவினாலேசெய்கி
ற பஞ்சகிருத்தியங்களை யான்மாவினாலே செய்யப்படுமென்று [illegible]
காது,—ஆவதென் முன்னை யறிவன் பெருமான் [illegible]
லேயுண்டென்மந்நினை [illegible]

கிறதென்னதான் முற்காலத்திலே நம்பியாரூரர் முன்னேயொரு
முதலை விழுங்கின பிள்ளையை வரத்தக்கதாகவழைத்தாரில்லை
யோவென்றுசொன்னாய்,—பிழைப்பிலதனுநீ தந்திடவேண்டுமெ
ன்றனரன்றே - அப்படிச்சொன்னது குற்றமில்லை அந்த முதலை
வாயிலேநின்று பிள்ளைமீளவரவழைத்ததும் (திருப்பாட்டு) "உ
ரைப்பாருரையுகந் துள்கவல்லார்தங்களுச்சியா, யரைக்காடரவா
வாதியுமந்தமுமாயினாய், புரைக்காடுசோலைப் புக்கொளியூரவிநா
சியே, கரைக்கான்முதலையைப் பிள்ளைதரச்சொல்லுகாலனையே.
இப்படித்தேவரீரந்தப்பிள்ளையைத்தந் திடவேண்டுமென்றுசொ
ன்னதொழிந்து தாமாகவரவழைத்த தில்லையாதலாற் றிருவருளை
ப்பெற்றவான்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்று நீசொன்னது
ந்தமன்று,—இன்னவைகிடக்க முன்னவன்றன்மையெய்தினர் -
இதுவெல்லா நீர்சொன்னது கிடக்கட்டும் கத்தாவினுடையதிருவ
ருளைப்பெற்றவர்களே,—எல்லாச் செய்தியுஞ்செய்வர் - கத்தா செ
ய்கிற சிருஷ்டிமுதலான கிருத்தியங்களெல்லாஞ்செய்வார்கள். அ
தென்போலவென்னில்,—இரும்பெரியெய்தித் தருஞ்செயறகவெ
னில்-இரும்பான தக்கினியைப்பொருந்தி யதனுடைய சொரூபத்
தையும் பெற்றதனுடைய தொழிலையுஞ்செய்தாற்போல வென்று
நீசொல்லில், பொருணிலைகிடக்க வொருகிட்டாந்தப் பேதையாயி
ன் - திருவருளைப்பெற்ற நம்பியாரூரராலே பஞ்சகிருத்தியங்களை
ச்செய்யப்பட்டதில்லையென்று பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கை
யிலே யதைப்போட்டிரும்பு மக்கினியும்போலேயென்று திருஷ்
டாந்தத்தினாலே யுனக்குச் சாதிக்கலாமாகில்,—சிறுக்கதுவியபுண
லொருபுடைசேர்க நறகுமாயினும் - ஆரவாரி[illegible]றுகிற
தண்ணீரான தக்கினியைப்பொருந்தி யை[illegible]மாயினு
ம்,—வேறொருபொருளை சிறுக்கிலதே - அக்கினியைச்சேர்ந்த வி
ரும்புபோல வித்தவ்வக்கினி வைக்கோல் முதலானவற்றைச் சுட்டு
ப்பொடியாக்க மாட்டாது, அதுதண்ணீரோடே நிற்கையாற்சுட்
டதில்லைதானும் தனித்துநின்றுற் சுடுமென்று நீ-சொல்லில்,—

நெருப்பென்னுமிதனி னுருத்தனிகாட்டுகெ - நெருப்பென்று சொல்
லுகிற விந்தப்பூதரூபந்தனித்துநின்று தன்னுடையதொழிலைச்செ
ய்யமாட்டாது, எங்கேயாயினுந் தனித்துக்காரியப்பட்ட துண்டா
காட்டுவாயாக,—அக்கினி யொன்றிற்றங்கி நின்றல்லது தன்றொ
ழிலைநடத்தாதென் றறியினீ - அக்கினியொன்றைச்சார்ந்து நின்
றல்லது தன்னுடையதொழிலைச் செய்யமாட்டாதென் றறிவாயா
க, ஆகையால்,—இரும்பனற்செய்தி தரும்பரிசுளதோ - அக்கினி
யிரும்பைச்சார்ந்துநின்று தன்னுடைய தொழிலைச் செய்ததொழிந்
து இரும்பக்கினியுடைய தொழிலைச் செய்ததுண்டோ? ஆகையா
ற்றிருவருளைப்பெற்ற வான்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்வார்க
ளென்று நீசொன்னதத்தமன்று,— அதுவென்றேரலகை பொதித
ருங்காலை - ஒருவனையொரு பசாசுபிடித்தவிடத்து,—அதன்செய
லனைத்து மிவன்செயலாமால் - அந்தப்பசாசினுடைய செயலெ
ல்லா மிவனுடையசெயலாக் காணப்பட்டதோ வில்லையோ? ஆ
கையால் அருளைப்பெற்றவர்கள் பஞ்சகிருத்தியஞ்செய்வார்களெ
ன்று நீசொல்லில்,—அவனிவனாகி லிவனவன்செய்திக்கேகன் - அந்
தச்சிவனிந்த வான்மாவாயிருந்து தன்னுடையதொழில்களைச்செ
ய்தானுமாகில் இந்தவான்மா வந்தச்சிவனுடைய தொழிலைச்செய்
வதேதனாலே செய்யும்,—அவையென்னில் - அந்தத் தொழில்க
ளைச்செய்தற் கிந்தவான்மாவுரித்தென்று நீசொல்லில்,— பின்னு
ஞ்செயலு மதன்செயலன்றி யிவன்செயலாகில் - ஒருவனைப்பேய்பி
டித்துவிட்டு நீங்கினபோ திவன்செய்த செயல்களெல்லா மிவனு
டையசெயலாமோ அந்தப்பேயினுடைய செயலாமோ அதெல்
லாம் பேய்ச்செயலாகாதிவனுடைய செயலாமாகில்,—இவன்செ
யல்பேயின்றன்செயலாயிருக்க வாவெளிப்படுத்திடவேண்டும்
அப்படியிவனுக்குப் பேய்பிடித்தபோது செய்த தொழில்களையும
றியவேண்டும் அறியப்படாததென்னென்று நீ, சொல்லில் தெரி
யாதாகில் - அப்படியிவனுக்குப் பேய்பிடித்தபோது செய்ததொழி
ல்களை யறியப்படாதாகில்,—பரியிற்கண்கள வெளிச்சதென் றுமி

றுக்கும்-புரியினிடத்துக் கடிதாயுள்ள வக்கினிகூடி நின்று தன்னு
டையதொழிலைச் செய்தாற்போலச் சிவனுமான்மாவினிடத்திலே
நின்றுதன்னுடைய தொழிலைச்செய்த தொழிற்றான்மாசிவனுடை
யதொழிலைச் செய்யமாட்டாது,...அன்றியுமவனிவனாகி லிவனவ
ன்செய்தி-இதன்றியுமந்தச் சிவனொருகாலத்திலும ஜநந மரணமி
ல்லாதவன் இந்தவான்மா வொருக்ஷணப்பொழுதிலே ஜநநமரண
ப்படுகிறவன் இப்படிக்கொத்தவான்மா வப்படிக்கொத்த சிவனு
டையதொழிலைச் செய்தானுமாயினும்,...என்றுசெய்வானென்றி
யமதத்தாய்-எந்தக்காலத்திலேசெய்து நிறைவேற்றுவான் உன்ம
தத்தோடே கூடியிருக்கிறவனே இதற்குத்தர முண்டாகிற்சொல்
(இஃதான்மாபஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதைமறுத்தது,) (மே
லான்மாவிற்கு சர்வஞ்ஞத்துவ முண்டென்பதை மறுக்கிறார்,)—
எல்லாமறிதல் செல்லாதுயிர்கள்-இதுவன்றியும் சர்வஞ்ஞத்துவமா
ன்மாவுக்குண்டென்று சொன்னாய் எல்லாத்தையுமறியும்பகுதியா
ன்மாக்களுக் குண்டாகாது எல்லாத்தையுமறிந்திருக்கிற திருவரு
ளினிடத்திலே பதிகையினாலே யிவனுமெல்லாத்தையுமறிவனெ
ன்று நீசொல்லில்,...சிற்றறிவெனுமிச் சொற்றவறாகும்- இந்தவா
ன்மா கிஞ்சிஞ்ஞனென்று சொல்லுகிறசொற் பழுதாம்,... என்ப
தெனலகை தன்பதமடைந்தோர் கொண்டவாறு கண்டனமென்
னில்-என்றுநீர் சொல்லுகிறதென்ன பேயினுடைய பதவியைப்
பெற்றவர்களந்தப்பேய்க்குண்டாகிய வருகாலத்தி னிகழ்ச்சிகளை
யெல்லாஞ்சொன்னது கண்டோமேயென்னில்,...மூங்கை யந்த
ருற்றோங்கிய குணங் குறி செய்வதென்-ஊமையுமாய்க் குருடனு
மாயிருக்கிறவ னொருவனை யிவையெல்லாங் குறைவற் றிருக்கிற
பேய்ப்பிடித்தவிடத் தவனொழுங்கிச் சொன்னதுமில்லை கண்டெ
ரிந்தொன்றைக்கண்டதுமில்லை, ஆகையால் பேயின்றன்மையெ
ல்லாம் பிடியுண்டவனுக் குண்டாகாது இன்னும் பௌவமுற்றழு
ந்தினு மாழி கொள்ளாதாழியினலைபுனல் - இதன்றியு மாழியானது
சமுத்திரத்திலே பொருந்தியமிழ்ந்தினாலு மலையையுடையவந்தச்

சமுத்திரநீரையெல்லாங் கொள்ளமாட்டாது,...அதனாற் கருத்து-
முதலுளதாகவேண்டும் - அப்படியிருக்கையினாலே பொறியோடு
ங்கூடியிருந்தாலு மான்மாவுக்குள்ள வறிவுண்டாமொழிந்து கர்த்
தாவுக்குள்ள வறிவெல்லாமுண்டாதாக வேண்டும்,... அன்றேயீ
ண்டினியமையும் அநாதியிலே யிப்படியிருக்கையினாலே நீ யிவ்
விடத்தருளோடுங்கூடின வான்மா வெல்லாத்தையுமறியு மென்று
சொல்லலை யினிவிடுவாயாக. அதேனென்னில்,...எல்லாமெனுமிச்
சொல்லாற்படும பொருளனைத்துந் தாக்கா தனிப்பரத்துற்றவர்க்
கெவ்வகையுணர்வு செய்வதென்செப்புக - சர்வமுமென்றுசொல்
லப்பட்ட சொல்லினாலுண்டாகிய பொருளனைத்திலுந் தோய்வுறு
நிற்கிற வொப்பற்றசிவனிடத்திலே பொருந்தினவர்க் கெந்தமு
றைமை சர்வஞ்ஞியமுண்டான தவ்விடத்துச்செய்யப் போகிற
தொழிலேதுசொல்லுக. ஆகையால் சிவனைப்பெற்றவர்களுக்குச்
சர்வஞ்ஞியத்துவ மென்பதுகூடாது. (இஃதான்மாவுக்குச் சர்வ
ஞ்ஞியத்துவ முண்டென்றதை மறுத்தது.) (மேன் முத்தியைம
றுக்கிறார்.) இதன்றியும்,...ஒன்றினென்று மொன்றுதலினின்
றபோதுயிர் சேராமன்றே - முத்தியிலான்மாவுஞ் சிவனுமொன்
றுமென்னிலொரு முதலில்லையாம் அப்படிப்பரமுத்தியடையாம
ற்சரீரத்தைப்பெற்று ஜீவன்முத்தனா யிருந்தாலென்னில் அப்படி
யிருந்தவான்மா சிவனுக்குச்சமமாகாதே. ஆகையாலீதுமன்று
இதன்றியும்,...முத்தியுற்ற நற்றவரவையினிடை சேர்வரென்றனை
- முன்னே திருவருளைப்பெற்றவர்கள் முத்தியைப்பெற்றிருக்கிற
நல்லதவத்தினையுடைய பெரியோர்களுடைய கூட்டத்திலேபோ
சென்றிருப்பார்களென்று சொன்னாய்,...சார்தரு முத்தி சாலோக்
கியமோ - இப்படிப்பொருந்தினார்களென்று நீ சொன்னமுத்தி
சாலோக்கிய முத்தியைச்சொன்னாயோ,...சாயுச்சியமென்னில் அ
ப்படியன்றுகாணும் நான்சாயுச்சியமுத்தியைச் சொன்னே னென்
னில்,...பந்தமுற்றகந்தலகழிந்தவறிவிற்றடறிவு - ஆன்மாக்களை
ப்பொருந்தின மலங்களைப்போக்கின கர்த்தாவினுடனே யான்மா

கூடினவிடத்து,...பிரியாப்பெற்றிவேண்டு மென்றதற்கு - பிரியா
மலொன்று பட்டிருக்கவேணுமென்ற வியல்பினுக்கு,...ஈண்டிவ
ரிவ்வாரிருப்ப ரென்பதற் குருத்தான்வேண்டும் - இவ்விடத்தந்த
ப் பரமுத்தியைப்பெற்றவர்கள் முன்னேமுத்தியைப்பெற்றிருக்
கிற பெரியோர்களோடுங் கூடியிருப்பார்களென்றுநீசொல்லுகை
யா லிவர்களுக்குமொருசரீர முண்டாகவேண்டும். இதன்றியும்,
...அண்ணலதருளி னண்ணியிருப்பினுஞ் சீவன்முத்த ரென்றே
தினர் - கர்த்தாவினுடையதிருவருளைப்பெற்றுப் பரமுத்தியையடை
யாமலித்தச்சரீரத்தோடேயிருந்தார்களாயினு மவர்களைச்சீவன்மு
த்தரென்று நல்லோர்கள் சொன்னார்கள். அப்படி நல்லோர்கள்
சொல்லப்பட்டிருக்கையிலே,...அகன்றுநீங்கியு முருவ நீங்காதா
யின் - இந்தச்சரீரதொந்தனை விட்டுப்போய்ப்பரமுத்தியைப்பெ
ற்றவிடத்துஞ் சரீரதொந்தனை நீங்காமலிருக்குமாயின்,— ஓங்கி
யமுத்தியாவ தென்னுரைக்க - அதுமேலானபரமுத்தியாவ தெ
ப்படித்தான்சொல்லுக, அப்படியின்றுகாணும்.—செடியுடலணு
காக் குடிலைகொடுக்குமென் றோதினைநீயே - அந்தமுத்தியிந்தவ
சுத்தமாயா தேகம்பொருந்தாது சுத்தமாயா தேகத்தைக்கொடுக்
கவந்தச் சரீரத்தோடுங் கூடியிருப்பார்களென்று நீ சொன்னமு
றைமை,—பேதாய் பகட்டுர லொளிர்சினை முச்சித்தளிரொனுமி
துதரும்-வேம்பினதடிக்கட்டைக் கைக்குமென்றறிந்து விட்டுவி
ளங்காநின்றகொம்பினுனியிற்றளிரைக்கசவாதென்றுகொண்டத
ற்கொக்கும், இதன்றியும்,—இச்சாரூப நச்சினரென்னில் - சுவே
ச்சையினாலேயெடுக்கிற சரீரத்தோடுங்கூடிப் பிரியப் பட்டிருந்
தார்களென்று நீசொல்லின்,—மும்மலத்தேது மின்மையதன்றே
— ஆகையாலேமுத்தியின் மலமாயாகன்மங்களி லொருமலமானு
லுநீங்கின்றில்லையாம்;— இதுவோர்முத்திப் பதமெண வியம்புவர்
—இப்படிச் சரீரத்தோடுங்கூடியிருக்கிற முத்தியைச் சாலோகா
தியாகிய பதமுத்தியென்று நல்லோர்கள் சொல்லுவார்கள்,—ஈங்
கிவைநிற்க - இவ்விடத்து நீபமுதாகச்சொல்லிவந்த பெத்த முத்
திகளைவிட்டு நான்சொல்லுகிறதைக் கேட்பாயாக. (௩)

சிவசமவாதிசங்கற்ப நிராகரணம்-முற்றிற்று.

## சங்கிராந்தவாதிசங்கற்பம்

—()—

(நீங்காதொளிருயிர்)
விளக்கெனநிற்கு மளப்புறமறிவின்
றிறைவர்க்கேது மறியவேண்டின்றே
மன்னுமான்ம சந்நிதியளவிற்
காந்தபசாசத் தேய்ப்பவாய்ந்த
வுயிருடலியக்குஞ் செயலுறுபூட்டைப்
பலவகையுறுப்பு மிலங்கியதொழில்போ
லைம்பொறிபுலன்க ளின்புறமன்றே
யினையவாய்தலி னிகழ்தருபயனவை
யந்தக்கரண முந்தியுணர்ந்திடு
மிவையகல்வுழிஇயைழ் பொறிபுலனிகழா
வுயிர்நீங்கிடி லுடல் செயலிலதன்றே
யிவ்வகைவினையின் செவ்விநிடத்தும்
பழமலநீங்க நிகழுங்காலை
யேற்றோர்முகவொளி தோற்றுங்கலனெனத்
தலைவனதருளுயிர் நிலவிநிலவக்
காட்டத்தங்கி மாட்டத்தங்கிய
தன்மையுமளத்துப் புல்லையினீப்பும்
போன்றதுவாகித் தோன்றிடுமதனாற்
பசுகரணங்கள்சிவகரணங்க ளாகமாறியறிவு
மேகமாமுயி ரியானெனதின்றே,

இ-ள். நீங்காதொளிருயிர் விளக்கெனநிற்கு மளப்புறமறிவின்று - ஆன்மாவானது நீங்காத பிரகாசத்தையுடையவிளக்கைப்போலே சுட்டறநிற்கும். அதுவிதுவென்று சுட்டியறிகிறவறிவிதற்கில்லை,—இறைவற்கேது மறியவேண்டின்றே - கர்த்தாவிகாரமில்லாதவ ராகையாலே யவருக்கொன்றையு மறியவேண்டுவதி

ல்லை,—மன்னுமான்ம சந்நிதியளவிற் காந்தபசாசத்தேய்ப்பவா
ந்தவுயிருடலியக்கும் - காந்தமானது விகாரமறநிற்க வதன்சந்
நிதியிலே யிரும்புகாரியப் படுமாறுபோல நிலைபெற்ற வான்மாவி
காரமறநிற்க வதன்சந்நிதியிலே பொருந்தப்பட்ட பிராண வாயு
வானது டலைக்காரியப்படுத்தும்,—செயலுறு பூட்டைப் பலவகை
யுறுப்பு மிலகியதொழில்போல்-சமைக்கப்பட்ட நீரிறைக்கிறபூட
டையினது பலவகையாகிய வவயவங்களும் விளங்கப் பட்ட
தொழில்களைச் செய்தாற்போல,—ஐம்பொறிபுலன்க ளின்புறுமு
ன்றே - பஞ்சேந்திரியங்களுஞ் சத்தாதிவிடயங்களை யநுபவியாநி
ற்கும்,—இனையவாய்தலி னிகழ்தருபயனவை யந்தக்கரணமுந்தி
யுணர்ந்திடும் - இந்தவிந்திரியங்கள் பொருந்தப்பட்ட விடயங்க
ளையறிவதற்குமுன்னே யந்தக்கரணங்க ளறியாநிற்கும்,— இவை
யகல்வழிஇ யைம்பொறிபுலனிசமா - இந்தவந்தக்கரணங்க ளீங்
கினவிடத்துப் பஞ்சேந்திரியங்க ளோடுஞ் சத்தாதி விடயங்கள்
பொருந்தாது, (இதுசகலம்,)—உயிர்நீங்கிடி னுடல்செயலிலதன்
றே - பிராணவாயு நீங்கினவிடத்துடல் சேட்டையின்றி கிடக்கு
ம். (இதுகேவலம்.)—இவ்வகைவினையின் செவ்விநடத்தும் -
இப்படியான்மாவின் சந்நிதிமாத்திரத்திலே பிராணவாயு வான
து பிராரத்துவத்தைப் புசிப்பித்துக்கொண்டு நிற்கும், (இஃதவ
ன்பெத்தம்) (மேன்முத்தி.)—பழமலநீங்கி நிகழுங்காலை - இப்
படிப்பிராரத்துவ மநுபவித்துவருமிடத் திவனுக்கநாதியாகியவா
ணவமலநீங்க விருவினையொப்புஞ் சத்திநிபாதமும்வந்தவிடத்து,
—எற்றோர்முகவொளி தோற்றுங்கலனென - எடுத்துப்பார்த்தவ
ர்கள் முகத்தினது பிரதிபிம்பம் தோன்றுகிறகண்ணாடியைப்போ
ல்,—தலைவனதருளுயிர் நிலவிடும் - கர்த்தாவினுடைய திருவருளா
ன்மாவிடத்திலேபொருந்தும்.—நிலவக் காட்டத்தங்கி மாட்டத்த
ங்கியதன்மையும் - இப்படித்திருவருள்பொருந்தவே விறகினிட
த்துநெருப்பைக் கொளுத்தினபோ தந்தவிறகுகெட்டக்கினியான
துபோலவும்,— அளந்துப் புல்லைவயினீப்பும் போன்றது வாகித்

தோன்றிடும் :- உப்பளத்திற்போட்ட புல்லும்வைக்கோலுங் கெ
ட்டுப்போனதன்மைபோலவு மிந்தவான்மாவுந் தன்னுண்மைகெ
ட்டுப்போன தன்மைபோலவு மிந்தவான்மாவுந் தன்னுண்மை
கெட்டு அருட்சொரூபமாய்த் தோன்றுநிற்கும்,...அதனாற் பசுக
ரணங்கள் சிவகரணங்களாகமாறி யறிவுமேகமா முயிரியானெ
னதின்றே - அறிவிரண்டாய் நில்லாமலருளோடுங் கூடியொன்
றும் பின்னையிந்தவான்மா விற்கியானென தென்கிறதில்லை.

**சங்கிராந்தவாதிசங்கற்ப-முற்றிற்று.**

## சங்கிராந்தவாதிசங்கற்ப நிராகரணம்.

—()—

இன்றுணை துணையி னன்றியுயிரொளிர்
தீபம்போலத் தாபந்தரினிருள்
செறியுன தன்மையெ னறிவிலதாகி
லொளியெனவுரைத்த தெளிவதற்கேதாஞ்
சந்நிதியளவில் மன்னுஞ்செயலுடல்
காந்தம்போல வாய்ந்ததென்ற
தன்மையுமுணராப் புன்மையதன்றே
யுயிருடலியக்கிற் றுயில்பெறுங்காலைச்
செய்ததென் மறுநி யெய்துயிர்பொறிபுல
னடத்தவாவியுஞ் சடத்தனவாயிற்
பூட்டையிற்பூணி கூட்டல்பெறாதே
புலனைம்பொறியி னிலவிடுமென்றனை
யஞ்சுமொருகாற் றுஞ்சாததற்
கழிவென்றருச் செழுமலரிலைபலங்
கனிதருவதுபோ லிணையவையாக்கு
மொவ்வொன்றாக நின்றதுவுமெனி
லொன்றின்பயனனி யொன்றறியாதா

விதுவேயல்லது கதுமெனவிருசெவி
யிருகூற்றொருகாற் றெரியாத்தன்மையுந்
தெய்வமருவிய மெய்யுயிர்ச்செயலுந்
தனக்கிலதொருவர்க் கெனத்தெளிகிலையே
நோக்குமுகவொளி நீக்காதாமெனக்
கவருந்தன்மை முகுரம்போல
கொடுத்துக்கோடற் கடுத்துண்டன்றே
காட்டத்தங்கி கூட்டக்கூடி
மிந்தனத்தியற்கை வெந்தழலுங்கா
வுப்பளத்தடுத்த புற்பலாலங்கள்
சடத்தவேனுங் கொடுத்துக்கொள்ளுந்
தன்மையாயுண்டுனக் கின்மையதன்றே
யவமுறுகருவி சிவமயமாமெனக்
கூறினையாகம் வேறுருக்கவரா
தென்பதெனவைமுற் றின்பந்துடைக்குந்
திருவருண்மருவ வுரியனவென்னி
லருளுறுமாயா விருளினதாங்கொல்
சத்தப்பரிச ரூபரசகந்த
மெத்திறத்தினதரு ளியம்புகவன்றியு
நிறைந்துநீயாய் நின்றனையேனு
மறைந்தைம்புலனும் வாராவென்றுங்
கரணமெல்லாங் கடந்தனையென்று
மரணமைமையைந்தி னப்புறத்தென்று
முன்னருட்டலைவர் பன்னினரெனவு
மினியவையொழிய வறிகுவதெவ்வா
றென்றறிற்கலிக் கொன்றியவின்பங்
கூறுதற்குமருட் பேறினையன்றே
யேகமுயிரறி வாகமொழிந்தனை
யிருபொருளொருமை மருவியதிலதே
யிவ்வகைகிடக்க மெய்வகைகேண்மதி.

இ-ள், இன்றுணர்ந்தனையாயி னன்றி - இப்பொழுது நீபலவாக ச்சொல்லிவந்த பெத்தமுத்திதன்மையை விசாரிக்கு மிடத்து,— உயிரொளிர்தீபம்போலத் தாபந்தரின் - ஆன்மா பிரகாசத்தைத் யுடைய விளக்கைப்போலத் தாவுதலைச்செய்யுமாயின், இருள்செறி யுந்தன்மையென் - அஞ்ஞானமாகிய விருள்பொருந்தினதன்மை யென்னைதான்,—அறிவிலதாகில் - அறிவில்லாமையாகில்,— ஒ ளியெனவுரைத்ததெனி வதற்கேதாம் - பிரகாசத்தைப் போல வென்றுசொன்னதிடப்பாடு அதெப்படியாரும் விசாரித்துப்பார், —சந்நிதியளவில் மன்னுஞ்செயலுடல் - ஆன்மாவினுடைய சந் நிதியிலே பொருந்தப்பட்ட பிராணவாயுவானது காரியப்படுத்த வுடல்காரியப்பட்டுவரும். அதென்போல வென்னில்,— காந்தம் போலவாய்த்ததென்ற தன்மையுமுணராப் புன்மையதன்றே-கா ந்தத்தின்சந்நிதியிலே யிருப்புகாரியப்பட்டாற் போலவென்று நீ முன்னேசொன்ன தன்மையினையு மிப்போது விசாரியாத சிறு மையினையுமுடையது. அதன்றியும்,— உயிருடலியக்கிற் றுயில் பெறுங்காலெய்வதென் - பிராணவாயுவான துடலைக்காரியப்ப டுத்துமாயின் நித்திரைசெய்கிற வவசரத்துப் பிராணவாயுவுமொ க்க நிற்குமிடத்துடல் காரியப்படக்கண்டோ மில்லையே ஆகையா லான்மாவுடலைக் காரியப்படுத்துமதொழிந்து பிராணவாயுகாரிய ப்படுத்தமாட்டாது. ஆன்மாவவிகாரியா யிருப்பதொழிந் திவை யிற்றைக் காரியப்படுத்தமாட்டாதென்று சொல்லின்,— [illegible] யெய்துயிர் பொறிபுலனடைந்த வாவியுஞ் சடத்தனவாயின் - [illegible] முதலாகிய வந்தக்கரணங்கள் பொருந்தப்பட்ட பிராணவாயுவிந் திரியங்கள் விடயங்களிவையெல்லாத்தையுங் காரியப் படுத்துந் தான்மாவும் ஜடமாயிருக்குமாயின்,— பூட்டையிற் [illegible] கட்ட ல்பெறுதே-நீரிறைக்கிறபூட்டைபோலவெனில் பூணியாகிய [illegible] றுலே பூட்டையினிடத்துண்டாகிய வசைவு [illegible] காரியப்பட் டுவருகையால் நீசெயற்படுத்துகிறபூணியை யான்மாவிற் [illegible] சொன்னது திருஷ்டாந்தவிரோதம், [illegible]

தன்றியும்,...புலனைம்பொறியி னிலவிடுமென்றனை - சத்தாதிவி
டயங்களைப் பஞ்சேந்திரியங்களானது பொருந்தியநுபவிக்கு மெ
ன்றுசொன்னாய்,—அஞ்சுமொருகாற்றுஞ் சாதறிதற்கழிவென்-
த்தாதிவிடயங்களைப் பஞ்சேந்திரியங்க ளநுபவிக்குமாயின் பஞ்
சேந்திரியங்களு மொக்காலத்திலேயறியாம லொன்றறிந்தது மற்
றநாலு மறியாலிருப்பதற்குக் குறையென்;...தருச்செழுமல ரிலை
ப்பயங் கனிதருவதுபோல் - நல்லமரமான தொருகாலத்திலேயிலை
யையு மொருகாலத்திலே பூவையு மொரு காலத்திலே காயையு
மொருகாலத்திலே பழத்தையுந்தோற்றுவித்து நின்றதன்மைபோ
ல,—இவையனைத்து மொன்றொன்றாக நின்றறிவுறுமெனில்.
இந்தவிந்திரியங்களையு மொவ்வொருவிடயங்களாக வறியுமென்று
சொல்லின்,...ஒன்றின்பய னபரியொன்றறியாதா லிதுவே யல்லா
து-ஓரிந்திரியத்தின் விடயத்தை மிகவுமோரிந்திரிய மறியாது: இ
தல்லாமலும்,—கதுமெனவிருசெவி யிருகூற்றொருகாற் றெரியா
த்தன்மைவந்தெய்தும் - ஓரிந்திரியமாயிருக்கிற விரண்டு செவியி
லுஞ்சடக்கென விரண்டுபேர்சத்த மொருகாலத்திலே சொல்ல
வொருவன் சொன்னதையறிந்து மொருவன்சொன்னதையறியா
மலு மிருக்குந்தன்மைவந்து பொருந்துகையினாலே யந்த விந்திரிய
த்தின்றொழில்க ளதற்கின்றி யான்மாவிற்கானாற்போல,— மறு
தியுமெய்யுயிர்ச்செயலுந் தனக்கில தொருவர்க்கெனத் தெளிகிலை
யே-அந்தக்கரணங்களுக்குஞ் சரீரத்திற்கும் பிராணவாயுவுக்குமு
ண்டானதொழில்களு மவையிற்றுக்கில்லை யான்மாவிற்கே யென்
றறிவாயாக. எனவே யான்மாவவிகாரியல்ல விகாரியென்பதுகரு
த்து. (இஃதவன் பெத்தத்தைமறுத்தது.) (மேன்முத்தியை மறு
க்கிறார்.) இதன்றியு நீமுத்தித்தன்மை சொல்லுகிறவிடத்திலே க
ண்ணாடியிலே பார்த்தவர்களுடைய முகத்தினொளி யந்தக் கண்
ணாடியிலே தோன்றினாற்போலக் கத்தாவினுடைய திருவருளுமி
ந்தவான்மாவிலே பிரகாசிக்குமென்று சொன்னாய்,—நோக்குமுக
வொளிரீக்கா தானெனக்கவருந் தன்மையுமுண்டாம்போல். கண்ணா

டியானது பார்த்தவர்களுடைய முகத்திலுண்டாகிய வொளியை
த்தள்ளிவிடாமற் றானேயென்னைத் தக்கதாகத் தன்னிடத்திலேசு
வீகரித்துக்கொண்டு நின்றார்போல்,—கொடுத்தது கோடற்கதி
த்துண்டன்றே - கொடுத்தது கொள்ளுந்தன்மை யுனக்கடுக்கும
தொன்றன்று. இதன்றியும்,—காட்டத்துக்கி கூட்டக்கூடியிந்தன
த்தியற்கை வெந்தழலுங்கா - விறகினிடத்துண்டாகியநெருப்பை
யான்மாவினோடுங் கூடிநிற்கிறவருளிற் குவமையாகச் சொல்லப்
படுவது நெருப்புவிறகைச் சுட்டுப்போடாமற்கொண்டிருந்தால
ம், அன்றி நெருப்புவிறகைச் சுட்டுப்போட்ட விகையினு லதத்த
மன்று. இதன்றியும், உப்பளத்தடுத்த புற்பலாலங்கள் சடந்தவே
னும் - அளத்திலேகூடின புல்லும்வைக்கோலும் ஜடமா யிருந்த
தாயினும்,—கொடுத்தது கொள்ளுந்தன்மையுண்டு னக்கின்மைய
தன்றே - அதுதற்சொரூபத்தைக் கொடுத்ததனுடைய சொரூப-
த்தை முன்னுருப்போலப் பெறுந்தன்மையதற்குண்டு. உனக்கத
னுடைய முறைமைதானுமில்லை. இதன்றியும்,— அம்முறுகருவி
சிவமயமாமெனக்கூறினை - அஞ்ஞானங்களுக் கேதுவா யிருக்கி
றகருவிகளைச் சிவரூபமென்றுன் மதத்திலேசொன்றாய்;... யாகம்
வேறுருக்கவராது - அதினந்தச் சரீரத்தோடேயுண்டாகிய வாசை நீ
சொன்னதொழிந் திந்தச்சிவசொரூபஞ் சுத்தநின்மலமாயிந்தமா
யாசொரூப மசுத்தமலமாயுமிருக்கையா லிதுவதுவாகாது,—என்
பதனை முற்றுன்பந்துடைக்குந் திருவருண்மருவ லரியனவெ
ன்னில்- என்றுநீர்சொன்னதென்ன அந்தமாயா கருவிகடொன்று
தொட்டுவருகிற பிறவித்துன்பத்தைநீக்கித் திருவருளைப் பொருந்
தியதனுடைய சொரூபமாகைக் குரியதென்று நீசொல்லில்;...அ
ருளுரு மாயாவிருளினதாங்கொல் - அப்பொழுதுதிருவருளு மா
யையாகிய வஞ்ஞானமாகவேண்டும், (கொல்துரை) சுத்தபரிசுரு
பாச னுறையெத்திற தினதருளியம்புக சத்துப்பரிசுருப ரகாசகத்து
ங்களோடுங்கூடி யறிந்து வருகிற மாயாகருவிகளுக்குந் திருவரு
ளுத்தனைதூரம் இதற்குத்தாமுண்டாகிற் சொல்வாயாக;...அன்

றியுநிறைந்து நீயாய்நின்றனையேனு மறைந்தைம்புலனாய் வா
யென்றுங் கரணமெல்லாங் கடந்தனையென்று மரணமையைய்
ணப்புறத்தென்று. முன்னருட்டலைவர் பன்னினரெனவு மினை
வையொழிய வறிருவதெவ்வாரென்ற நிற்கலிக்கொன்றியவின்
ங்கூறுதற்கும் - இதன்றியும் காளத்தியந்தாதி. "நிறைந்தெங்
நீயேயாய் நின்றாலுமென்று, மறைந்தைம்புலன்காண வாராய்,—
சிறந்த, கணியாருந்தண்சோலைக் காளத்தியான்வாய், பணியாவே
லென்னுண்பரிசு,, என்றும். திருவாசகம். "கரணங்களெல்லாங்
கடந்து நின்றகறைமிடற்றன். சரணங்களேசென்று சார்தலுமே
தானெனக்கு மரணம்பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக்கடலுக்கே சென்றூதாய்கோத்தும்பி,, என்றும். தேவா
ரத்திருப்பாட்டு, "பையஞ்சுடர்விடுநாகப் பள்ளிகொள்வா னுள
த்தானுங், கையஞ்சுநான்குடையானைக் கால்விரலா லடர்த்தானு
ங், பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப் புகழ்புரிந்தார்க்கருள் செய்யு
மையஞ்சினப்புறத்தானு மாரூரமர்ந்தவம்மானே,, என்றும் முற்
காலத்திலே திருவருளைப்பெற்ற பெரியோர்களருளிச் செய்தார்க
ளென்று நான்சொல்லவு மிந்திரியங்களைவிட்டா லிவனுடைய வறி
வு ஜீவியாதாகையாலிந்த விந்திரியங்களன்றித் திருவருளையறியும்
பகுதி யெப்படியென்றுகேட்கிற வுனக்குச்சொல்லுகிறது ஒருவ
னுமொருத்தியுங் கூடியநுபவித்த வின்பத்தைத் தானநுபவியாத
வலியாயுள்ளவனுக்குச் சொல்லுகிறதையொக்கும்,— அருட்பேறி
னையன்றே-மாயைக்குள்ளே மயக்கப்பட்டுவருகிற பொருள்களை
யறிகிறதுதானே பெருகக்கொண்டா யாகையாலிது வுந்தமன்று.
இஃதன்றியும்,—ஏகமுயிரறிவாக மொழிந்தனை - அருளு மான்
மாவுங் கூடினவிடத் திரண்டுமொன்றாய் விடுமென்றுசொன்னாய்
—இருபொரு ளொருமை மருவியதிலதே - இரண்டுமுதல் கூடி
யொருமுதலாய் நிற்குமென்பதுண்டாகாது. இவ்வகைகிடக்கமெ
ய்வகைகேண்மதி—இவ்வணம் பலவாகச்சொன்ன வந்தங்களைப்
போட்டு நாம்சொல்லப்போகிற சத்தியத்தைப் புத்திபண்ணிக்கே
ட்பாயாக. (மதி-அசை.)

(கஉ)

சங்கிராந்தவாதி சங்கற்ப நிராகரணம்-முற்றிற்று.

கையில்,—அவ்வப்புலன்கட் கவ்வப்பொறிகள் - இந்தவான்ம
தனக்குக்கொள்ளவேண்டின விடயங்களுக்குற்ற வந்தவிந்திரி
யங்களை,—செவ்விதினிறுவிச் சேர்ந்தணைந்துநுகரும்-மாறுபாடறநி
த்தியமைவயிற்றிலே பொருந்தப்பட்டுவருகிற விடயங்களைப் பு
யாநிற்கும், (இதுபெத்தம்) (பின்முத்தி.) மூலமலத்தின் பாசட
வந்தவழிஇ - இப்படிக்கன்மத்தைப் புசித்தாருமிடத்துவாண
வமலநீங்கிப் பாகம்வந்தவிடத்து,—இருட்குடிற்புக்கொரு பொ
ன்கவர-இருட்டுவீட்டிலே விளக்கைமுன்னிட்டுக் கொண்டொ
ருபதார்த்தத்தை யெடுக்கவேண்டினவிடத்து —தீபமேவேண்டுமா
ணவர்போல - ஒருவிளக்கை முன்னிட்டுக்கொண்டு சென்றந்தப்
பதார்த்தத்தை யெடுத்ததன்மைபோல மோசயாமலம்போக-அ
ஞ்ஞானவிருளாகிய வாணவமலநீங்க,—ஞானவிளக் கரனருளாற்
றுளக்கறப்பொருந்தி-ஞானமாகியதீபத்தைச் சிவனுடையவநுக்கி
ரகத்தாலே யசைவறப்பெற்று,—நீர் நிழலனைய சீர்பெறுகடவுளை
- தண்ணீரைப்போலவு நிழலைப்போலவு மொருவரளவிலும் ப
க்ஷப்பிரதிபக்ஷ மின்றியிருக்கிற சிறப்பினையுடைய கர்த்தாவை,—
சலமிலனாகிச் சார்ந்தவர்க்கென்றும் - அப்படிப்பக்ஷ மில்லாதவ
னாயிருக்கையிலேயுந் தன்னையடைந்தவர்களுக் கெப்பொழுதும்
—நலமிக நல்கு நாதனையணைந்து - நன்மைப்பகுதிகளை மிகவுங்
கொடுக்குஞ் சுவாமியைக்கூடி,—பூழிவெம்மை பொருந்தா துயர்
ந்தநீழல் வாழுநினைவினர்போல - மத்தியானத்திலே வழிநடந்த
வர்களுக் கந்தவழியிலேயுண்டாகிய பொடிச்சூடு நீங்கத்தக்கதா
கவுயர்ந்த மரத்தினிழலிலேவந்து பிரியப்பட்டிருக்கிற நினைவை
யுடையவர்களைப்போல,—திருவடிநீழல்சேர்ந்து கருவறுதுயரங்க
ளைந்திருந்திடுமே-இந்தவான்மாவுங் கர்த்தாவினுடைய திருவடிநி
ழலைப்பொருந்தித் தனக்குண்டாகிய ஜநநதுக்கங்களை யெல்லாநீக்
கிக் கொண்டிருக்கு மென்றறிவாயாக, (௧௫)

ஈஸ்வர அவிகாரவாதி சங்கற்ப முற்றிற்று.

—()—

# ஈஸ்வர அவிகாரவாதி சங்கற்ப நிராகரணம்

இருந்தான் கேள்வி திருந்தமொழிக
னறிவெனில்வாயிற் பொறிபுலனென்னை
மற்றவைபற்றி யுற்றறிந்திடுதலி
னறிவெனவழங்கு முயிரெனவுரைத்தல்
காணுங்கண்ணிலான் கைகொடுதடவிப்
பூணும்பொருளின் பெயர்பலபுகற
லென்னுங்கிளவி தன்னொடுதருமே
யவ்வப்புலன்கட் கவ்வப்பொறிகளைச்
செவ்விதினிறைவி னறிவினைச்செப்பினை
யறிவிலாமைகண் டனையினைபுலற்குப்
பொறிகளேவழி னறிவொடுபொருந்தில்
கண்டதோர்பொறியாற் கொண்டிடவேண்டு
முதவியதொன்றாற் கதுமெனவியற்றின
ருண்டோவென்னிற் கண்டனமேனாட்
கடவுளர்கடிமலர் முடிபமைதன
னங்கமாங்கத் தங்கிடக்கிடந்து
னையின்றிரளிற் செய்யசிறுபொறி
மாட்டிமூட்டின தன்றேமீட்டுத்
தேனமர்தவிசி னான்முகனுச்சி
யறுத்ததுங்கருவி பொருந்தோவன்றே
யீசனதியல்பு பேசுதுமவிர்க
காழிமாநகர்க் கவுணியர்கடவுள்
ஞானமாகிய நற்பதிகங்க
ளெழுதுறுமன்பர்த மின்புறுமொழியாற்
களிறெனவிணைந்த கன்மனப்புத்தன்
முருட்டுச்சிரமொன் றுருட்டினரன்றி

வாய்ந்தவாளொன் றேந்தினரிலரே
யென்றதுமிர்வாள் கொன்றதென்பதுபோற்
றனித்துணையருளாற் றணித்தனரென்ப
வாதலின்வாயி லளவினிலறிதலி
லேதமில துவியிர்க் கெய்துதலிலதே
யிருட்குவிளக்கொன் றேந்தினர்போல
மருட்குஞான மன்னுதலுளதே
யென்றனைகருவிக ளியாவுமசேதனந்
துன்றியவுயிருந் துரியத்தன்மைய
ருதலினந்த ரனைவருங்கூடித்
திதறவருநெறி தெரியுமென்றற்றே
நீர்நிழலனைய சீர்பெறுகடவுளைச்
சேர்ந்தவர்க்கின்பம் வாய்ந்திடுமென்றனை
பாதவமென்றுஞ் சேதனமின்மையி
னினைத்தோர்வம்மி னென்பதூந் துன்பம்
வினைத்தோர்தம்மில் வெறுப்புமொன்றிலதே
பொடித்திடுகொப்புள் வெடித்திடுபாதம்
வெய்யபூழியி னுள்ளுறவழுங்கி
யாற்றுதலின்றி யாறியங்கினர்முன்
றேற்றிடுமென்று சொல்லவுமிலதா
லிவ்வகைகடவுட் கியைபுதறவறே
பாசஞானப் பழிவழிமொழிக
வீசனதருள்வழியியம் புவன்கேண்மதி,

இ ள், இருக்குன் கேள்வி - இப்படியிருந்தது நீகேட்டகேள்வி நான்சொன்னதற்குக் குற்றமென்ன,—இருந்திடுமுயிர்களறிவெனில். வாயிற்பொறிபுலனென்னை - திருத்தமுண்டாகிய வான்மாக்கள் அறிவோடுங்கூடி யிருந்ததாமாயிற் சத்தாதி விடயங்களை யறிதற்கிந்திரியங்கள் வேண்டுவதில்லை, இந்த விந்திரியங்களைக் கொண்டறிகையினுலே யான்மாவுக் கறிவில்லையென்பது தவ

வொப்பில்லாத கர்த்தாவினுடைய வநுக்கிரகத்தினாலே புத்தனு
டைய தலையைத்துண்டித்துப் போட்டார்களென்று பெரியோர்க
ள்சொல்லுவார்கள் - ஆதலின் வாயிலளவினிலறிதலி லேதமிலறி
வுயிர்க்கெய்துதலிலதே - ஆகையாலிந்த விந்திரியங்களுடையவெ
ல்லையிலே நின்றறிந்துவருகையினாலே குற்றமற்றிருக்கிறவா
ன்மாவிற்குண்டாகாது, திருவருளறிவிக்க வேண்டும். (இது
பெத்தசத்தைமறுத்தது.) (மேன்முத்தியை மறுக்கிறார்.)— இருட்
கு விளக்கொன்றேந்தினர்போல - இருளிடத்திலே யொருப
ண்டத்தை யெடுக்கவேண்டினவர்கள் கையிலே விளக்கைப்பிடி
த்துக்கொண்டந்தப் பண்டத்தை யெடுத்தாற்போல,— மருட்கு
ஞானமன்றுதலாதே யென்றனை - இவனுடைய வஞ்ஞானமா
கிய விருளிருக்கைக்கு ஞானவிளக்கிலேபெற்று நிற்கத்தக்கதா
கக் கர்த்தாவநுக்கிரகஞ் செய்யுமென்று நீசொன்னாய்,— கருவிக
ளியாவு மசேதனந்தானறியவுயிருந் தூரியந்தன்மையன் - தத்துவ
ங்கள்முப்பத்தாறும் ஜடம் ஆணவமலத்திலே செறியப்பட்ட வா
ன்மாவுந் தூரியத்திலே நிற்பானொருத்தன்,- ஆதலி னந்தரனைவ
ருங்கூடித் தேறவருநெறி தெரியுமன்றே- ஆகையால் இதுத
ன்னிற்கூடித் திருவருளைப்பெற்றது தமக்குக்காட்டாகச் சிவனை
ப்பெறுமென்றது அநேகங்குருடர் தம்மிற்கூடிக் குற்றமற்றிருக்
கிறதொருபெரிய வழியைக்கண்டந்த வழியேபோயோ ரூரிலே
சென்றார்களென்று சொல்லுதற்கொக்கும், இதன்றியும்,— நீர்நி
ழலனைய சீர்பெறுகடவுளைச் சேர்ந்தவர்க் கின்பம்வாய்ந்திடு மென்
றனை- நீரைப்போலவு நிழலைப்போலவும்பக்ஷப்பிரதிபக்ஷமில்லா
மலிருக்கிற சிறப்பினையுடைய கர்த்தா தன்னைவந்துகூடின பக்கு
வான்மாக்களுக்குப் பேரின்பமுண்டாக வநுக்கிரகஞ்செய்வனெ
ன்றுநீசொன்னாய்,... பாதகமென்னைச் சேதனமின்மையின் - மா
மானதெப்பொழுதும் அறிவில்லாமல் ஜடமாயிருக்கையினாலே,
—இணைந்தோர் வம்பினென்பதுந் துன்பம்விளைந்தோர் தம்மில்
வெறுப்பொன்றிலதே - வெயிலினாலே யிளைத்துப்போகிறவர்க

லை யாருங்கொன்று பிரியபட்டழைந்துந் தன்னை வெட்டிட போட்டவர்கள்பேரிலே யகிதப்படுத்துவது மில்லை. இதன்றியும் —பொடித்திடு கொப்புள் வெடித்திடுபோதம் வெய்யபூமியி னுள் ளுறவமுங்கி யாற்றுதலின்றி - பொடியினுலே யுள்ளங்காலிலே கொப்புளங்கொண்டதுடைந்து சுடுகிறபடியு, முள்ளே பட்டழுங் கியதனாலே யாற்றமாட்டாமல்,—அறியங்கிட முன்னேற்றிடுமெ ன்றுசொல்ல வுமிலதால் - வழிநடந்துவருகிறவர்கள் முன்னேய ரமானதுசென்றுதோன்றி யவர்கள் விதனத்தைத்தீர்த்திடுமென்கிற சொல்லு மதற்கில்லாதபடியாலே,—இப்படிக் கடவுடங்கிய புத றவரே - நீருநிழலும்போலுமென்கிற அவிகாரவாதங்கர்த்தாவிற் குச்சொன்னது மிகவும்பழுதாம். ஆதலால் —பாசஞானப் பழிவ ழியொழிக வீசனதருள்வழி யியம்புவன் கேண்மதி - இனி சரீரச ம்பந்தமுநீக்காமற் கர்த்தாவையும் அவிகாரவாதஞ்சொன்ன குற் றத்தையுமுடைத்தாய் முத்திநெறியைவிட்டுக் கர்த்தாவினுடைய திருவருளின்வழி சொல்லுகிறேன் புத்திபண்ணிக் கேட்பாயாக (மதி - அசை.) (கரு)

ஈஸ்வரவவிகாரவாதிசங்கற்பநிராகரண-முற்றிற்று.

—()—

## நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்.

புவனமியாவையும் புனிதனதுருவாஞ்
சிவமுஞ்சத்தியு மெனத்தெளியவற்று
ளசேதனமென்றொன் றறைதற்கிலததுஞ்
சேதனனுகர்பொரு ளிரண்டுமோர்திறத்தே
யிதுவெனுமொன்றை யதுவாய்ப்படுத்துப்
பொதுமையினிற்கும் போதமென்றறிக
பொற்பணிப்பேதம் புரைவழியொருவழி
நற்பொளிற்றிகழ்வென வயப்பதொன்றன்று

லாவதுமாகா தொழிவதுமெனுமிப்
பாவகமுண்மை பாராதோர்க்கே
பாராதோரெனம் பல்லுயிர்பகர்தலி
ஞாய்ந்துணாக்கி னவைபிறவல்ல
பலபலபேத மிலவென் போருமில்
கண்ணினதொளியைக் கண்ணினதெனிலது
திண்ணியவிருளிற் செறிபொருடெரித்தனு
மின்மைமின்மினி யெனவிருகண்மணித்
தன்மைதானுந் தாவிலததற்
கண்ணினதுருவ மதிற்கதிரொளியு
நண்ணருஞ்சத்தி சத்தர்கணடிப்பே
யுலகேழெனத்திசை பத்தெனவொருவன்
பலவாய்நின்ற படியிதுவென்று
மூறுயிரா யுணர்வாயென்று
மானக்கண்ணே மணியேயென்றுந்
தாமேதாறாய் செய்தனரென்று
நாமேசிவமாய் நண்ணினமென்றுங்
காயாய்ப்பழமாய்ச் சுவையாய்நுகர்வு
மோயாதுண்போன் றானேயென்று
மறிவோன்றானு மறிவிப்போனு
மறிவாயறிகின் றேனுமறிவுறு
மெய்ப்பொருடானும் வியந்திதுவெனப்படு
மப்பொருளியாவு மவனேயென்றுந்
தாய்தலைப்பட்டங் கொன்றாய்த்தென்று
மேதமதறநான் கெட்டேனென்று
மின்னுமின்னு மிறையோனளித்தவை
பன்னிலெண்ணரும் பான்மைத்தாதலிற்
றருபொருள்கொள்பொரு டருவோன்கொள்வோ
ரொருபொருளிவ்விய லுவப்பெனவுணர்க

நகர்பொருள்சத்தி நகர்வோன்சத்தனென்
றிகலறவுணர்வாய் தெய்வுலகிதே
நானவனெனுமிது நவைவழிக்கழி
ஞானவுருவாகை யிதுசாயுச்சியம்
மித்திரன்றெளிய வுய்த்திடுமளவு
மிப்பாதொருவகையி னிதியநாகந்
தனையீவழியெ தலைநின்றென்று
மூலுயிர்சத்தி யொடுங்கிடநடத்தி
மூடுமும்மலம் வீநிங்காலைக்
கருவிகளளவிற் புரிகருமறிவு
சாக்கிரங்கனவு நீக்கமில்சுழுனை
துரியமென்றவை யயிருமறிவு
துரியதீதந் திரியாதன்மையி
லிறையருளுதவுங் கறையறமாறி
யறிவேயாகும் பிறியாக்கருவிக
ணிரைமுதலவத்தையி லறிவிலதாகத்
துரியாதீதத் தோற்றந்
திரியாதநாற் சிவகதித்திறனே.

(இ-ள்) புவனமியாவையும் புனிதனதுருவாஞ் சிவமுஞ்ச த்தியுமெனத்தெளி - இந்தப்பிரபஞ்சமெல்லாஞ் சிவசொரூபமா யிருக்கும் இதிலருவமாயிருக்கிறது சிவமு முருவமாயிருக்கிறது ச த்தியுமென்று தெளிவாயாக,—அவற்று ள சேதநமென் றொன்ற றைதற்கிலது - அந்தவிரண்டிவகைக்குள்ளு மசேதமாகச் சொல் லப்பட்டதொரு பொருளுமில்லை,...அதுசேதநனுகர் பொழுதிர ண்டுமோர்திறத்தே - அரூபமாயறிவாயிருக்கிற வனநுபவிக்குமி டத்தந்த விரண்டுபகுதியு மொன்றாயிருக்கும்,... இதுவெனுமொ ன்றை யதுவாய்ப்படுத்துப் பொதுமையினிற்கும் போதமென் றறிக - இதுவென்றுசுட்டப்பட்ட தொருவிடயத்தையநுபவிக்கு மிடத் தந்தவிடயந்தானேயாய் அந்தவறிவென்றும் விடயமென்று

மிரண்டாகாமற் பொதுமையிலே நிற்குமென்றறிவாயாக. இதன்
றியும்,...பொற்பணிப்பேதம் புரைவழியொருவழி - பொன்னொ
ன்றாயிருக்கையிலே பொன்னுக்கும் பணிக்கும் பின்னஞ் சொன்
னாற்போலவறிவிக்கும் பிரபஞ்சத்திற்கு மொருபக்ஷமிப்படியுஞ்
சொல்லலாம்,—நற்பொனிற்றிகழ்வன வைப்பதொன்றன்றால்-
நல்லபொன்னினுண்டாகிய மாற்றப்பணியிடத்துங்காண்கையா
ற் பொன்னும்பணியுமொரு தன்மையாகவிருக்கப் பொன்னையும்
பணியையுமறிவிக்கும் பிரபஞ்சத்திற்கு மிரண்மையாகச் சொன்ன
தென்னதாமென்று கேட்கில்,—ஆவது மாகாதொழிவது மெனு
மிப்பாவகமுண்மை பாராதோர்க்கே-இத்தவுவமையாம்பகுதி யி
த்தவுவமையாகாப் பகுதியென்று சொல்லுகிற விந்தப்பாவக மு
ண்மையைத் தரிசியாதவர்களுக்காயிருக்கும், உண்மைபார்த்தவ
ர்களொன்றும் பாராதவர்களென்றுஞ் சொன்னதுகொண்டே யறி
விலே பின்னமுண்டெனில்,— பாராதோரெனப் பல்லுயிர்பக
ர்தலின் - உண்மையைத் தரிசியாதவர்களென்று நான் சொன்ன
துகொண்டே நீயான்மாக்களைத் தனித்தனியே யொருமுதலென்
றுசொல்லில் பலவாகச் சொல்லப்பட்டிருக்கிற வான்மாக்கள்,—
ஆராய்ந்தனைத்தினைவை பிறவல்ல-அந்தன்மையை விசாரித்துச்
சொல்லுமிடத் ததவான்மாக்கள் சிவனுக்கு வேறாயிருப்பதொ
ன்றன்று எல்லாஞ்சிவமுதலேயென்றறி, இதன்றி,—பலபல வே
தமிலவென்போருமில் - சிவமுமான்மாக்களும் பிரபஞ்சமுந்தனி
த்தனி யொவ்வொருமுதலென்று பலபேதங்களாகச் சொல்லுவா
ர்களுமுண்டு அதாதிந்தியமென்று, கண்ணென்றொருமுதல் கண்டு
வருமாபோல வான்மாவென்றொருமுதல் தனித்தறிந்து வருமிட
த்தினையில்லை யென்பானே னென்னில்,— கண்ணின தொளி
யைக் கண்ணினதெனிலது-கண்ணொன்றைக்கண்டுவருகிறகாக்ஷி
யைத் தன்னுக் குண்டாயினபடிக் காண்கிறதன்,—இன்னியவிரு
ளிற் செறிபொருடெரிந்துழியின்மை-நெருங்கியிருக்கிறவிருளுக்
குள்ளே பொருந்தியிருக்கிற பொருளின்ன பொருளென் றுண்

றைக்காணும்பகுதி யுண்டோவில்லையோ. இதன்றியு,... மின்மி
னியென விருகண்மணித்தன்மை தானுந்தாவிலது -ஒருமின்மினி
யிருளை நீக்கினமரியாதியிரண்டு கண்மணியுங்கூடி யிருளை நீக்கிக்
கண்டோமில்லை,... அதனாற் கண்ணினதுருவு மதிற்கதி ரொளி
யு நன்னருஞ் சத்திசத்தர்கண்டிப்பே - கண்ணுடையவடிவு மத
னிடத்தாதித்தப் பிரகாசத்தாலுண்டாகிய காக்ஷியுமிவையெல்லா
மனதினாலே யெட்டுதற்கரிய சிவசத்திகளுடைய நாடகமென்றறி
வாயாக. ஈதெங்கே காணப்பட்டதென்னில்.—உலகேழெனத்தி
சைபத்தென வொருவன்பலவாய்நின்ற படியிதுவென்றும் - திரு
வாசகத்தில். "நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்,பு
லனாயமைந் தனனோடெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான், உலகே
ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே, பல்வாகிநின்ற வாதோ
ணோக்கமாடாமோ, என்றும்....ஊனுயிரா யுணர்வாயென்றும் -
தேவாரத்தில். "ஊனாகி யுயிராகியதனுணின்ற வுணர்வாகிப்பி
றவனைத்து நீயேநின்றாய், நானேதுமறியாமே யென்னுள்வந்து ந
ல்லனவுந் தீயனவுங்காட்டாநின்றாய், தேனாருங்கொன்றையனே
நின்றியூராய் திருவானைக்கா விலுறைசிவனே ஞான, மானாய் நின்
பொற்பாதமடையப் பெற்றாலல்ல கண்டங்கொண் டடியேனெ
ன்செய்கேனே., என்றும்,—மானக்கண்மணியே யென்றும்-திரு
வாவடுதுறை தேவாரத்தில். "திருவேயென் செல்வமேதேனே
வானோர்செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற்சோதிமிக்க, வுருவேயெ
ன்னுறவேயென்னூனே யூனின்னுள்ளமே யுள்ளத்தினுள்ளேநின்
ற, கருவேயென்கற்பகமே கண்ணேகண்ணிற் கருமணியே மணி
யாடு பாவாய்காவா, யருவாயவல்வினை நோயடையாவண்ணமாவ
டுதண்டுறை யுறையுமமரரேறே. ;, என்றும்,...தாமேதானாய் செ
ய்தனரென்றும் - திருக்கடைக்காப்பில். "பத்திப்போர் வித்திட்
டேப்பரந்த வைம்புலன்கள்., என்னும் திருத்தாளச்சதியில், "தா
மேதானாகச்செயுமவன்., என்றும்,— நாமேசிவமாய் நண்ணின
மென்றும்-திருவாசகத்தில், "அவமாய தேவரவகதியி லழுந்தா
மே, என்கிறதிருப்பாட்டில் "நாமொழிந்துசிவமான,, என்றும்;

—காயாய்ப்பழமாய்ச் சுவையாய் நுகர்வுமோயாதுஞ் யோன்று னேயென்றும் - தேவாரத்தில். "நியாகி நீ ராகித் தின்மையாகி,, திருப்பாட்டில் "காயாகிப்பழமாகிப் பழத்தினின்ற விரதங்களு கர்வானுந்தானேயாகி,, என்றும்,—அறிவோன்றானு மறிவிப் போனு மறிவாயறிகின்றானு மறிவுறுமெய்ப்பொருடானும் விய ந்திதுவெனப்படு மப்பொருளியாவு மவனேயென்றும்—அந்தாதி யில் அம்மைவாக்கு. "அறிவானுந்தானே யறிவிப்பான்றானேய றி வாகின்றான் றானே - யறிகின்ற மெய்ப்பொருளுந்தானே விரி சுடர்ப்பாராகாயம், அப்பொருளுந்தானேயவன்,, என்றும்,—தா ய்தலைப்பட்டாங் கொன்றாய்த்தென்றும்-திருவிசைப்பாவில்."மோ துலைப்பட்டகடல்,, என்னும்திருப்பாட்டில் "தாய்தலைப் பட்ட ங்குருகியொன்றாய்,, என்றும்,—எதமதறநான் கெட்டேனென் றும் - திருவாசகத்தில், "வான்கெட்டுமாருதம்,, என்னும் திருப் பாட்டில், நான்கெட்டேன்,, என்றும்,—இன்னு மின்னுமிறை யோனளித்தவை பன்னிலெண்ணரும் பான்மைத்து - முதலே சொல்லிவந்த திருவாக்குகளன்றியின்னமு மேலுமநுக்கிரகம்பெ ற்றதம்பிரான்க ளருளிச்செய்த செயல்களைச்சொல்லுமிடத்தெண் ணிறந்த பகுதியினையுடையது,— ஆதலிற் றருபொருள் கொள் பொருடருவோன்கொள்வோ னொருபொரு ளிவ்விய லுவப்பெ னவுணர்க - ஆகையாலே யொருவனொருத்தனுக்குக் கொடுக்கிற பொருள் தான்கொள்கிறபொரு ளொருபொருளினைக் கொடுக்கி றவ னந்தப்பொருளைக் கொள்கிறவ னெல்லாமொருபொருளாயி ருக்கு மிந்தமுறையுள்ளதாகிய வத்தயென்றறிந்து பிரியப் படுவா யாக, ஆகையால்,—நுகர்பொருள் சத்தி நுகர்வோன்சத்தனென் றிகலறுமுணர்வு மடைதந்துத லரிதே - இதனாற்புசிக்கப்பட் டிரு க்கிற சத்தாதிவிடயங்களு மந்தவிடயங்களைப் புசிக்கிறவிவனுஞ்ச த்திசிவமாகிய சைதன்னியம் இவையிரண்டும் வேறல்ல வென்று மாறுபாடறவறிகிற வறிவொருவனுக் குண்டாகிறது மிகவுமரிது, (இதுபெந்தம்,) (மேல்முத்தி) நானவனெனுமிது நவைவழி-ஆ

ஸ்மாவுந்தனியே யொருமுதல் சிவமுந்தனியே யொருமுதலாமெ
ன்றிவ்வனந் துவிதபாவகமாகச் சங்கற்பித்துக்கொண்டு நிற்கிற
து குற்றத்தையுடைத்தாகிய வழியாயிருக்கும்,... நல்வழி நானெ
ன்னுகையிது சாயுச்சியம் - நல்வழியானது நானொருமுதலறச் சிவ
முதலேயாய் நின்றவருகைக் சாயுச்சியமென்று சொல்லப்படும்—
இத்திறன் றெளியவுயர்த்தியளவும்-இப்படியினாற் குண்டாகத்
தக்கதாக வியன்போதத்தெழுந்துமளவும். — யாதொருவகையி
னீதியதாகத் தானறிவழியே நிலைநின்று - சஞ்சாரத்தோடுங்கூடி
யிருந்தவன் அவற்றைவிட்டுத் தானின்றனு நிதியாக விதுதமக்கு
முத்திக்குவழியென்று தன்னுடைய போதத்துக்குத் தோன்றின
வழியிலே நிலைநின்று,—என்று ஆனுயிர் சிவத்தி லொடுங்கிடட
த்தி - கனவினனவிது மிக்கவுடம்பையுமுயிரையுஞ் சிவத்திற்கு
ள்ளே பொருந்தத்தக்கதாகச்செலுத்தி,—மும்மலம் வீடுங்கா
லை-ஒன்றையுமறியவொட்டாமற்பொருந்திக் கொண்டிருக்கிறவா
ணவமல நீங்குமவதரத்து,—கருவிகளைவிற் புரிதருமறிவுசாக்கிர
ங் கனவு நீக்கமில்சுழுனை துரியமென்றவையிற்றுமறிவு - சாக்
கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியமென்றுசொல்லப்பட்ட நாலவ
தரத்திலு மறிகிறவவதரம் அறிகருவிகளின்தவத்தைகடோறு
மேற்றக்குறைச்சல்களாக நிற்கிறதாகவிருக்கும். ஆகையால் இத்
தக்கருவிகளெல்லாங்கழன் றொன்றுமறியாமற்கிடக்கிற வவதரந்
துரியாதீதம். (இதுகேவலம்)— துரியாதீதந் துரியாத்தன்மையி
லிறையருளுதவும் - இந்தத்துரியாதீதத்தை விட்டுநீங்காமனிற்கி
றவவதரத்திலேகர்த்தாவினுடைய திருவருளானது கருவிகளைகூட்
டியிவனுடையபெந்தத்தைஜீவிக்கப்பண்ணும்பொழுது,—உடற
யறமாறியறிவேயாகும் ஆணவமல் நீங்கிகருவிகளோடுங்கூடியறி
வாகிநிற்கு (இதுசகலம்(மேற்சுத்தாவத்தை,)—பிறியாக்கருவிக
ளிறை முதலவத்தையில் - இவனைவிட்டுநீங்காமனிற்கிற கருவி
முப்பத்தாறும் நிறைந்துநிற்கிற சாக்கிராவத்தையிலே,—அறிவி
லதாகத் துரியாதீதத்தோற்றந்துரியாதனுமஞ்சியத நிற்கிறனே-என்

லாக்கருவிகளுங்கழன்றிருக்கிற துரியாதீதந்தோன்றினவிடத் து, தவவதா நீங்காமனிலே பெற்றுநிற்கிறதே யிவனுடையசிவகதி எ-று.

நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப-மு ற்றிற் று.



## நிமித்தகார ண பரிணாமவாதி நிராகரணம்.

—()—

திறம்பெறநீயிங் கறைந்தமைகருதிற்
புவனமியாவையும புனிதனதுருவெனி
லவன்முதற்காரண மன்றுமென்னி
னிமித்தகாரண நிகழ்த்துகவென்னி
யவனேகாரண மனைத்துமென் றறைந்தனை
மண்டனிக்குலாலன் றண்டசக்கராதி
காரணமூன்று மோர்பேராணைந்த
இத்தாரணிதனிற் கண்டதுசாற்றுக
வத்தனியற்று மித்தொழில்பிறர்க்கோ
தனக்கோவீன்றே வெனக்கிதியம்புக
வீணெனிற்பித்தர் மாண்பறுந்தொழில்போற்
றலைமையுமறிவு மிலதெனவிகழ்வர்
தனக்கெனிலவ் துமு னிற்பதொன்றன்றே
தன்போலறிஞருந் தலைவருமிலரான்
மின்போனிலைமையை வேண்டலும்பழுதே
பிறர்க்கெனிற்பிறரும் பிறர்க்காம்பொருளும்
பொருட்கமைகருவியு மதற்குபாதானமுஞ்
செய்கையுமென்றோ ரைவகைத்தாறுடு
மாறுச்சைவர் கூறுமென்று
னிச்சித்தாந்த மவசித்தாந்த
மென்சித்தான்ற வசித்தைமற்றீன

துசித்திலதென்னி லசித்ததென்னுலகில்
உலகாயிதனும் பூதக்கூட்டஞ்
சலமேற்கொப்புட் டகுமெனச்சாற்றினன்
றீயகருமச் சினர்சாவகர்பிறர்
ஞேயமில்லென நிகழ்த்தினரிலரே
காண்டல்விரோத நிற்பிறர்கணித்தில
ரீண்டுணைதுலைக்குமற் றியார்கரியுடனுஞ்
சித்தோசித்தின் சேர்வாற்சித்தெனிற்
கடபடாதியுமுடற் கட்சிதைதவென்
தாபரவுயிர்போற் றனுவொழிந்திவற்றின்
மேவியவுணர்வு விரவிடுமென்னிற்
சடத்துயிர்போலெனச் சாற்றினையாகலி
னுடற்குயிரிறையை யொழிந்துண்டன்றே
தருநிட்டாந்தமுந் தாட்டாந்திகமு
மொருபொருளாகி லுவமைபெறாதே
யொன்றேயாகி லுடற்கிறைதாபரத்
தோன்றியநிலையில் விசேடமென்னுரைக்க
பூதச்சேர்வைப் பேதமென்றறையிற்
சேர்வைப்பேத மென்கொடுசெப்புக
கருமத்தளவில் வருமெனிற்பித்த
ருரையிற்றிகழு முணர்வொழிந்தனையே
கருமஞ்செய்வோன் கடவுளன்றுடனு
மருவிநின்றிருவினை வளராதுகரா
கடவுளுமுடலின் கண்படாதுஞ்ச
விடர்கலமுறாத விறங்குதலேறாத
லெவ்வகையேனுஞ் செய்கையின்றாதலும்
பலகலையுலகி னிலவுதலானு
மெண்ணரும்பொருளு மிரவியுமொழியக்
கண்ணெனவொன்று காண்கையின்றாலும்

பாசப்பகுதியு மீசனுமொழியப்
பசுவுமுண்டென் றிசையவேண்டின்றே
யிதுவெனுமொன்றை யதுவாய்ப்படுத்துப்
பொதுமையினிற்கு மாயையின்பொற்பெனப்
பொற்பணிபாவும் பொன்றன்மையி
னிட்களசகளத் திருவுருவிலையு
மீசனையெனப் பேசுவரன்றி
யருவுருவாகி வருமுலகென்னி
லனைத்துமாயை யெனத்தெளிகிலையே
யாவதுமாகா தொழிவதுமிலதெனு
பாவகமுலகா யினதுபான்மை
கட்கொலைவெகுளி காமங்களவுக
ளுட்படுமிவைவிட மொழியாதாரிலர்
சோமபானஞ் சுராபானங்க
ளாமெனமறைக ளார்செவிப்பறைந்தன
மறையோன்புலைச்சியை மருவுமென்பனு
முறையோவெனிலது புனைமொழியென்னிற்
சாதிபேதந் தீதிதுவெறினு
மேதியையேறு விழையாவிரும்புங்
கண்ணினதுருவு மதிற்கதிரொளியு
நண்ணுருஞ்சத்தி நாடகமெனிலதற்
கேதுவும்பயனு மோதவேண்டு
மின்மொழிவிரோதமு நீடுலகியற்கையுந்
தன்மசாத்திரமுஞ் சகலமுமென்செயு
முலகேழனவிறை பலவாந்தன்மை
கடமொடுசார்வன் கலசமாதிக
ளடலுறுகுயவ னாயினனென்றற்
றனேயாகா வலைவதானாகா
னாயினனென்ப தாக்கினனெனவே

யார்க்குமென்ப தனைத்துமவ்வகை
தானுகாமையைச் சாற்றிடுமென்க
தாமேயெனுமித் தனியேகார
மழிற்கிலாதவே யாய்த்திலாதவிட்
டொழிற்கிலர்பிரிவில ரெனுமிவையுணர்த்துங்
காயும்பழமுஞ் சுவையுநுகர்வ
தாயவன்றனு மவன்முதற்றென்னு
மகிலமுந்தெளிய வறிவோன்றனு
மகிலமுமறிஞரை யறிவிப்போனு
மறிஞர்க்கறிவா யறிகின்றோனு
மறிவிற்கறிபொரு ளாவோன்றனு
மகிலமுமேனி யானவனென்னுந்
தருபொருள்கொள்பொரு டருவோன்கொள்வோ
னொருபொருளாயி னுவப்புண்டென்க
நுகர்வோன்றனக்கு நுகர்பொருள்வேண்டிற்
றிகலறக்கிடையா திருந்ததெனிரையமும்
வேண்டாராயினு மெய்யுறுவியாதிக
ளீண்டாதொழியா திறைக்கிசையீடல
சத்தியுஞ்சிவமுந் தாமேறுகருமென்
றித்திறனுணர்வுவந் தெய்துவதெவர்க்கோ
தமக்கேயென்னிற் றமுணராமையு
மமைப்பறவுணர்தலு மவர்க்கடைவன்றே
நாணுமவனு நவையுலனுந்
தானவனைகையு நின்சாதனத்தில்
சகயோகத்தைச் சாயுச்சியமெனப்
பகர்வதுபதிபசு பாசத்தவர்க்கே
யாதொருவகையென வோதியதிறைநூல்
சொன்னவற்றொன்றன் றென்னில்வீடெனிதே
தானறிவழியே தலைப்பொருள்பிடித்து

மேனிகழ்பலமும் வீடளித்திடுமே
நிலையாக்கருவினை நிலையாக்கருதிப்
புலையாடுதலு முலகாயிதன்பொருள்
ருட்டியமின்றிசற் கோலமெழுந
விட்டமதாயிற் கருவியுமிடங் கருங்
கருந்துறவுரைக்கத் தெரித்திடுமதித்
தறிவொன்றில்லோர்க் கிறையருளுதவுதல்
பிறிவறிவரியச் செறியிருளிடத்தோ
ரந்தகர்காண வந்தோரெம்மை
நீவிருங்காண வேணுமென்றாங்
கெடுத்தோர்தியங் கொடுத்ததையொக்கு
மிச்செயற்கிறைவன் கொச்சயனன்றே
கருவிவசத்திற் றெரிவறக்காண
வேண்டினிலரா லீண்டறிவியாவுஞ்
சிவமேயென்று செப்பினையவமுறு
பொறிபுலனறியா வறிவதுபிரம
மென்றோர்க்குன்போ லிடர்ப்படலிலதே
யேற்றங்கருவி யிருபதோடிரண்டும்
போற்றுமைந்தவத்தையும் புகறிரிமலமு
மீசனுமுயிரும் பேசினையஃதொழிந்
தொன்றேயாகு மென்றநின்னியல்பு
தாயர்மனைவியர் தாதியர்தவ்வைய
ராயவரெவரையு மோர்மையிற்காணுங்
கோகழிநார்த்தர் கொடுந்தொழிறகுமே
யாகமற்றத னருணிலைதன்னிலை
யேகநாயக னிசையவிறைநிலை
நாசமில்பாசம் வீசியவியனிலை
யினையவையொன்று நினைவினுமின்றி
யுண்டெனுமுணர்விற் கண்டது கருதி

ற்றதாகச்செய்து வருகிருனே இதனையெனக்குந் தெளியச்சொல்
வாயாக, சொல்மாட்டாயாயின் நான்சொல்லக்கேட்பாயாக—
வினையிற் பித்தர்மாண்பறுந் தொழில்பொற்றலையு மறிவுமி
லதென விகழ்வர்-சும்மா பயனற்றதாகச் செய்தானுமாகிற்பித்தரா
யுள்ளவர்கள்செய்கிற மாகூதிமையற்ற தொழில்போல விருக்கை
யாற்கர்த்தாவிற்குச் சர்வமுதன்மையுஞ் சர்வஞ்ஞத்துவமு மில்லை
யென்றுசொல்லிப் பெரியோர்களிகழ்வார்கள். ஆகையால்வீணு
கச்செய்தானென்று சொல்லவொண்ணுது,—தனக்கெனி லஃது
முனிற்பதொன்றன்றே-தன்னிமித்தமாகச் செய்தானென்னிலது
வுமுன்சொன்னது போலப்பொருந்தவ தொன்றன்று அதேதென்
ன்னில்,—தன்போல விருக்கிலைவருமிலரான் மின்போனிலைமை
யைவேண்டலும்பழுதே - தன்னைப்போலச் சர்வஞ் ஞத்துவமு
ஞ் சர்வமுதன்மையும் பிறரொருவருக்கு மில்லாதபடியிருக்கில மி
ன்போலத்தோன்றி மறைந்துபோகிற பிரபஞ்ச வியற்கைகளைத்
தனக்குவேண்டிச் செய்தானென்னுமிது மிகவும்பழுதாம் ஆகை
யாற்றன்னிமித்தமாகச் செய்தானென்று சொல்லவொண்ணுது
—பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காம்பொருளும்-இந்தத் தொழி
லகர்த்தா பிறர்நிமித்தமாகச் செய்தானென்னில் தன்னை யொழிந்
தபிறரென்றொருமுதலும் அந்தப்பிறரென்று சொல்லப்பட்டவ
ர்களுக்கு வேண்டினவிடயமும்,—பொருட்களைகருவியு மதற்கு
பாதாநமும் - அந்தவிடயங்களைப் புசிக்கத்தக்கதாக வதற்கேற்ற
கருவியு மந்தக்கருவிகடோன்று கைக்கோருபாதாநமும்,—செய்
கையுமென்றோரை வகைத்தானெடு மாருச்சைவர்கூறுர்-இந்த
வுபாதாநத்திலேநின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிற சிவனே
டுங்கூட விந்தவைந்துவகைக்கு மாறுபாடாகச் சைவராயுள்ளவர்
கள்சொல்லார்கள்,—என்று னின்சித்தாந்த மவசித்தாந்தமென்-
என்றிப்படியிருக்கையால்நீகொண்டிருக்கிறசித்தாந்தஞ்சித்தாந்த
மல்லவென்று நீதானேசொல்-இதன்றியும்,—சித்தான்றவசித்தை
மற்றீனுஞ்சித்தாயுள்ளசிவம்அசித்தாயுள்ளபிரபஞ்சத்தைத்தல்னி

டத்திலேநின்றுந்தோற்றுவியாது அசித்தில்தென்னில் அசித்தென்
றவசரம்பிரபஞ்சத்திற்கில்லை. எல்லாஞ்சிற்சொரூபமேயென் னி
ல், அசித்ததென்னுலகில் இந்தவுலகத்தின் கண்ணேபிரபஞ்சம் ஜட
மாயிருப்பதென்று சாத்திரங்கள்சொல்லுவானேன். இதன்றியும்
—உலகாயிதனும் பூதக்கூட்டஞ் சலமேற்கொப்புட்டரு மெனச்
சாற்றினன்-உலகாயிதன் முதலாய்ப் பூதக்கூட்டமாயிருக்கிற பிர
பஞ்சத்தை நீ யெற்றுமிற்போறு நிலைநிற்பதல்லவென்று சொன்
னான். அப்படியிருக்கையிலே நீயிந்தப்பிரபஞ்சத்தைச் சிற்சொ
ரூபமென்றுசொன்னது வுண்மையன்று. (மேலவனுன்மாவில்லை
யென்னவுண்டென்கிறார்.)—நியகருமச் சினர் சாவகர் பிறர்ரேய
மில்லென நிகழ்த்தினரிலரே-பொல்லாத தொழிலுக் கேதுவாயி
ருக்கிற புத்தர்கள் சமணர்கள் மற்றுண்டான சமயிகளனைவருமித்
தச்சரீரத்திலே யோரறிவுண்டென்று சொல்லுவார்கள், அதனை
யொழிந் தன்னைப்போல வான்மாவில்லையென்று சொல்லுவார்
களில்லை;—காண்டல்விரோதநிற்பிறர்கணித்திலர் - பிரத்தியக்ஷ
விரோத நீகாட்டினாற்போலப் புறச்சமயத்திலுள்ளவர்களு மிப்ப
டிச்சொன்னவர்களில்லை—என்னினுரைக்கு மற்றியார்களி-இவ்
விடத்து நீயான்மாவில்லையென்று சொல்லுகிறதற் கியார்தான்சா
க்ஷி. இன்றொன்றொருவரைநாட்டு இதன்றியும்,...உடலுஞ்சித்
தோ - இந்தச்சரீரமு மறிவோவறிவல்லவோ,—சித்தின்சேர்வாற்
சித்தெனில் - அறிவோடுங்கூடி வாதனைப்பட்டு வருகையினாலே
யிந்தவுடலுமறிவென்று நீசொல்லில்,...கடபடாதிய முடற்கட்சி
ரையென்-கடபடாதிகளு மிந்தவுடலைப்போல வவையுமோருட
ல்களாயிருக்கையிலே யிந்தவுடலைப்போலச் சஞ்சாரமின்றிக் கிட
ப்பானேன்.—தாபரவுயிற்போற் றனுவொழிந்திவற்றின் மேவிய
வுணர்வுவிரவிடுமென்னில் - அந்தக்கடபடாதிகளிலே பொருந்தி
நிற்கிறபேரறிவு எல்லாரூபங்களிலுங் கலந்து நிற்குமிடத்துயிர்
கூடிநிற்கிறவுடம்பிலே தாக்கினாற்போல மற்றக்கடபடாதி களி
லேதாக்கி நில்லாதென்று நீசொல்லில்,—சடத்துயிர் போலெனச்

சாற்றினையாகலி னுடற்குயி ரிறைமையெய்திந் தன்னுடனே உ
யிர்நிற்கிறவுடம்புபோல வுயிரில்லாத வுடம்புகளிலிந்தப்பேரறிவு
பொருந்தாதென்று சொன்னுயாகையா லிந்தவுடற்குக் கர்த்தாவை
யொழிந் தொருயிண்டாகவேண்டும். நான் திருஷ்டாந்தஞ் சொ
ன்னதுகொண்டே யெப்படிச்சொல்லுகிறோமென்று நீசொல்லில் —
திருஷ்டாந்தமுந் தார்ஷ்டாந்திகமு மொருபொருளாகி லுவமையெ
ழுதே - ஒன்றிற்குவமையாகச் சொல்லப்பட்ட திருஷ்டாந்தமு
முவமைப்பற்றிநின்ற தார்ஷ்டாந்திகமு மொருபொருளா யிருக்கு
மாயின் பொன்போலுங் கொன்றையென்கிற வுவமையிந்த வுல
கின்கணுண்டாகாது, — ஒன்றேயாகிய வுடற்கிலை தாபரத்தொ
ன்றிய நிலையில்விசேடமென்னுரைக்க பசுமுதலின்றிப் பதிமுத
லொன்றுமேயாகி லிந்தப்பதிமுதலெங்கு நிற்குமிடத்துந் தாபரங்
களைப்பார்க்க லிந்தவுடலிற்கு விசேடமுண்டானதென்னே நீசொ
ல்லு, — பூதச்சேர்வைப் பேதமெய்த் தறையில் - பூதக்கூட்டுறவினை
ற்றக்குறைச்சலென்று நீசொல்லில், — சேர்வைப்பேதமென் கொ
டுசெப்புக - பூதங்கள் கூடுகிறவிடத்திலே பேதந்தான்வந்ததேது
கொண்டென்று சொல்லுவாயாக, - கருமத்தளவில் வருமெனில் -
கன்மத்துக்கீடாகப் பேதமுண்டாமென்று நீசொல்லில், — பித்த
ருரையிற்றிகழு முணர்வொழித்தனையே - நீகன்மத்துக்கீடாய்வ
ருமென்றுசொன்னது பித்தர்சொல்லுகிற சொல்லைப்போலே விள
ங்குகின்றது நீயுமறிவுகெட்டு விட்டதாயிருந்தது. — கருமஞ்செ
ய்திவான் கடவுளன்று - யாதொருகருமத்தைச் செய்து வருகிறவ
னைக் கர்த்தாவென்று சொல்லப்படாது ஆகையா லிந்தக்கன்மஞ்
செய்தது சிவமல்ல. - உடலுமருவி னின்றிருவினைவளரா துசரா உட
லும் ஜடமாகையாலே சேதநமின்றிக் கன்மத்தை யுண்டாக்கி
க்கொள்ளவுமாட்டாது பிராரத்தகன்மத்தைத் தானுகப் புசிக்கவு
மாட்டாது, சிவன்கூடிநின்று புசித்தானென்னில், — கடவுளு முட
லின்கண்படாறுஞ்சல் - வாக்குமனாதீதனாயிருக்கிற சிவன் கன்மத்
துக்கீடாக வோருடலினிடத்தகப்பட்டு பொருந்துதல் பிராரத்தக்

ருக்குமென்றசிவமு மாயையென்று தெளிகின்றாயில்லையே. (எனவேபிரபஞ்சத்திற் குபாதானஞ்சிவமல்லமாயையென்பதுகருத்து) இதன்றியும்,—ஆவதுமாகாதொழிவது மிலதெனும்பாவகமூலகாயிதனதுபான்மை - இதாம்பகுதி இதாகாப்பகுதி இவையிரண்டுமில்லையென்கிற பாவகமூலகாயிதனுடைய பக்ஷமாயிருக்கும். அந்தமுறைமைகள் ஞானவான்களுக் கில்லையென்னில்,—கட்கொலை வெகுளி காமங் களவுக ளுட்படமிவைவிட மொழியாதாரிலர் - மதுபானஞ்செய்கிறது கொன்றுபறிக்கிறது கோபித்துச்சொல்லுகிறது பரதாரகமனஞ்செய்கிறது பிறது கோபித்துச் சொல்லுகிறது பரதாரகமனஞ்செய்கிறது பிறருடையபொருளைக் களவுகொள்ளுகிறது இப்படிப்பின்னையுஞ் சொல்லுகிற பொல்லாங்குகளெல்லாத்தையுமாகாது இவையிற்றைவிட்டு விடுங்கோளென்றுசொல்லாதிருப்பா ரொருவருமில்லை இப்படிக்கொத்தவையெல்லாஞ் செய்தாலும் ஞானவான்களுக்குத்தோஷமில்லை தோஷமேறுமென்று சாத்திரஞ்சொல்லுமென்னில்,— சோமபானஞ் சுராபானங்களாமென மறைகளார்செவிப்பறைந்தன - சோமபானஞ் செய்கிறது சுராபானஞ்செய்கிறது இவையிரண்டுங் கொள்ளலாமென்றெருத்தருமறியாமல் வேதங்களாருடைய செவியிலே சொல்லிற்று இதன்றியும்,— மறையோன்புலைச்சியை மருவுமென்பது முறையோ - பிராமணன் பறைச்சிக்காசைப்பட்டவளோடே கூடுகிறது முறைமையோ முறைமையின்மையோ,—எனிலதுபுனைமொழியென்னில்-பிராமணன் பறைச்சியைப் பரிசிக்கலாகாதென்று சொல்லுகிறது ஒருவரம்பு கூடிச்சொன்னதொழிந்து அவளிடத்திலேகூடினவிடத் தின்பம்விளைந்த தில்லையோவென்று நீசொல்லில்,—சாதிபேதநீதி தேவறிலுமேதியை யேறுவிழையா விரும்பும்-பிராமணனென்றுஞ் சண்டாளனென்றும் வழங்கிவந்தசாதித்தன்மையை நீயிப்போது தவிர்ந்துவிட்டாயினு மெருமையை விருஷபமானதுவிரும்பாது பசுவைவிரும்பும். ஆதலால் ஞானவான்களுக்கெல்லாமா மென்கிறதுந்தமாகாது,—கண்ணினதுருவு மதி

ற்கதிரொளியு கண்ணாகுஞ்சத்தி நாடகமெனில் - கண்ணினுடைய
பிரகாசமு மதிற்கூடி நிற்கிற வாதித்தனுடையதாகிய ககனமும்
பொருந்துதற்கரிய சிவசத்தியினுடைய நாடகமாயிருக்குமென்று
நீசொல்லில்,—அதற்கேதுவும் பயனு மோதவேண்டும்-அப்படிச்
சிவனொரு வுருவத்தைக்கொண்டானாகில் அவனுக்கிப்படி யொரு
குற்றமுங் கிடையென்று மனுச்சிக்கிக்கொள்ளுகைக்குப் படிப்பு கிட்டா
னென்றுஞ் சொல்லவேண்டும்,...நின்மொழி விரோதமுற்கெதி
யற்கையும் - விசுவாதிதனாயிருக்கிற சிவனிப்படிப் புசிக்குமவனா
னென்று நீசொல்லுகிறசொல் விரோதமா கல்லவனின்றும் பொ
ல்லாதவனின்றனென் றுலகிலுள்ளவர்களெல்லா மங்கீகரித்துக்
கொண்டுவருகிற முறைமையும்,—தன்மசாத்திரமுஞ் சகலருமே
ன்செய்யும் - புண்ணியபாவங்களின்னதென்றும் பாவஞ்செய்தவ
ர்களை ராஜாதண்டஞ்செய்யக்கடவனென்றுந் தன்மசாத்திரங்களி
ற்சொல்லுகிற முறைமையுமிப்படிச் சொல்லப்பட்டவையெல்லா
மான்மாவொன்றில்லையாமாயின வையெல்லா மென்னபிரயோஜ
னத்தைச்செய்யும். இதன்றியும்,—உலகேழெனவிறை பல்லாத்த
ன்மை - "உலகேழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே,,
என்ற திருவாசகத்தின்றன்மை,—கடமொடு சார்வங் கலசமாதி
களடலுறு குயவனுயினனென்றல் - குடங்கள் சட்டிகள்கலசங்க
ளிவையாதியாகச் சொல்லப்பட்ட பாத்திரங்களெல்லாம் விரை
விலேபொருந்திச் செய்யப்பட்ட குயவனுயினனென்று சொன்னா
ல்,—காணெயாகா வவைதாநுகான் - அந்தக்குயவனந்தப்பாத்தி
ரங்களாகான் அந்தப்பாத்திரங்க ளிந்தக்குயவனுகாது,—ஆயினா
னென்பதாக்கின னென்பதாக்கின னெனவே-ஆயினனென்னுந்தா
க்கினனென் றிலக்கணங்களிற் சூத்திரஞ்சொல்லுகையினால்,...ஆ
னுயென்பதினைத்து மவ்வகைதானுகாமையைச் சாற்றுமென்க
வானுமண்ணுமென்று சொல்லப்பட்டதெல்லா மந்தச்சிவ
னந்தவாறு மல்லனுமாகா னென்பதைச் சொல்லுமென்றறிக,—
தாமேயெனு மிந்தவிரியேகாரம் - தாமேதானுகச்செய்யு மென்கிற

மெய்யில்லாத வேகாரத்தோடுங் கூடியிருக்கிற திருவாக்கு,— அழுந்தில ரநுவேயாய்த்திலர்-தாங்களழிந்தார்களுமில்லை யந்தச் சிவமுதலானோர்களுமில்லை,— அநுவிட்டொழிந்திலர் பிரிவிலரெ னுமிவையுணர்த்தும் - அந்தச்சிவமுதலையின்றிக் காரியப்பட்டா ர்களுமில்லை யந்தமுதலிற்கு வேறாயிருந்தார்களு மில்லையென்றிப் படியிருக்குமென்னு சொல்லும்,—காயும் பழமுஞ் சுவையுநுகர்வ தாயவன்றானு மவன்முதற்றென்னும் - "காயாகிப் பழமாகிப் பழுத்தினிய ரசதங்களுநுகர்வானுந் தானேயாகி, என்றதிருவாக் கு காயும் பழமுமவற்றுணின்ற ரசமு மவையிற்றைப்புசிக்கிற வனு மந்தக்கத்தாவாலே யுண்டானவையா மிவையெல்லாஞ்சிவமு தலாகவுண்டான தென்றுசொல்லும்.... அகிலமுந் தெளிய வறி வோன்றானும் - பிரபஞ்சமெல்லாத்தையு மாக்கமற வறிகிறவனு ம்,...அகிலமுமறிநரை யறிவிப்போனும் - அறியும்பகுதியுள்ளவ ர்களுக் கெல்லாத்தையு மறிவிப்போனும்,—அறிஞர்க்கறிவாயறி கின்றோனும் - அறியும் பகுதியு...ளவர்களுக் கவர்களுடைய வறி வாய்நின்றறியும் பகுதியையுடையவனும்,— அறிவிற்கறி பொரு ளாவோன்றானும்-முத்தான்மாக்களுக் கறிபொருளா யிருக்கிறவ னும்....அகிலமுமேனியானவனென்னும் - பிரபஞ்சமெல்லாமவ னுக்குத் திருமேனியாமையா லித்தமுறைமைகளை யுடையவனெ ன்று சொல்லாநிற்கும்,—தருபொருள் கொள்பொரு டருவோன் கொள்வோன் - ஒருவன்கொடுக்கப்பட்ட பொருள்தான் கொள் ளப்பட்டபொருள் ஒருவன்பொருளைக் கொடுக்கிறவன் அந்தப் பொருளை வாங்கப்பட்டவன் இவையெல்லாம்,...ஒருபொருளாயி னுவப்புண்டெங்க - ஒருபொருளாயிருக்குமாயின் மிகவும்பிரியம் வருமென்கை இப்படியுஞ் சொல்லுவார்களோ,— நுகர்வோன்றனா க்கு நுகர்பொருள்வேண்டிற்று புசிப்பானொருவனுக் கொருபொ ருளைப் புசிக்கவேண்டினவிடத்து,... இகலறக்கிடையா திருந்த தெனினாயமும் - அந்தப்பொருளிவனுக்கு மாறுபாடின்றி வந் தபொருந்தாதிருப்பானேன், எல்லாமொருபொருளா யிவனிவனை

த்தபொழுது புசிக்கக்கண்டோமில்லையே ஆகையா லெல்லாமொ
ன்றாயிருக்குமாயின் நரகமுண்டாகாது. அதேதெனென்னில்,—வே
ண்டாராயினு மெய்யுறவியாதிக ளுண்டாதொழியாது - குன்மகு
லைமுதலானவியாதிகளை யநுபவிக்கவேண்டா மென்றவர்களிருந்
தாலுஞ் சரீரத்திலேயுண்டாயிருக்கிற வியாதிக ளிவர்களை வந்து
பொருந்தி யநுபவியாமல்விடாது, ஆகையா லெல்லா மொன்றெ
ன்றுசொன்ன தத்தமன்று. ஆன்மாவில்லை யெல்லாஞ் சிவமநுப
விக்குமென்றாய்,—இறைக்கிலை யிடல - வேண்டின பொருள்
இட்டாமலும் வேண்டாதவியாதிகள் கிட்டியும் இவையிற்றிலுண்
டாகியவருந்த மான்மாவுக்கேயல்லது சிவனுக்குண்டாகாதிப்ப
டியிருக்கையிலே,...சத்தியுஞ் சிவமுந் தாமேதாகுமென்றிந்திற
னுணர்வு வந்தெய்தவதெவர்க்கோ-ஆன்மாவில்லை சத்தி சிவங்க
ளே யெல்லாச்சநுக்களையு மநுபவிக்குமென்று சொன்னவி
ந்தப்பகுதியி லுண்டாகிய ஞானமித்தப்பிரபஞ்சத்திற்குள்ளே யா
ர்க்குத்தான் வந்துண்டாவது. (சிற்றுரையாயம்,)— தமக்கே
யென்னிற் றுழனாமையும் - சத்திசிவங்களுக்கேயித்தவநுபோ
கமென்னில் அந்தச்சத்திசிவங்க ளித்தப்பிரபஞ்சத்தை யறியா
தபடியாலும்;—அ ஙையப்பறவுணர்தலு மவர்க்கடைவன்றே- அறி
யமிடத்துச் சுட்டியறியாமற் றடையறவெல்லாத்தையு மொக்கவ
றிகையாலுஞ் சநுக்கண்மான்மா விற்கொழிந்துசிவசத்திகளுக்
குண்டாவதல்லவே. (இதுபெத்தத்தை மறுத்தது.) (மேன்முத்தி
யைமறுக்கிறார்.) நாமொருமுத லவனொருமுதலென்கிறது குற்ற
த்தையுடைய வழியென்று மிவனைவருல்கிறது நல்லவழியாகிய
சாயுச்சியமென்றுஞ் சொன்னாய்,—நானுமவனு நவையு நலனும்-
நானென்கிறவான்மாவும் அவனென்கிற சிவமு நவையென்கிற கு
ற்றமு நலனென்கிறநன்மையும்,— தானவனாகையு நின்சாதனத்
தில் - இந்தவான்மா வந்தச்சிவனாகவேண்டு மென்னையும் நீயெ
ல்லாமொன்றென்கிறவ னாகையாலுன்னுடைய சாதனத்திற்குட்
பட்டதல்ல, இதன்றியும், சகயோகத்தைச் சாயுச்சியமெனப் பக

ர்வது பதிபசுபாசத்தவர்க்கே - சிவனோடொன்றாய்க்கூடிப்போ
கிறதைச் சாயுச்சியமென்று சொல்லுகிறவிது திரிபதார்த்த நிண்
ணயம் வந்தவர்கள் கொள்ளும்பகுதியாமே. இதன்றி,... யாதொ
ருவகையெனவோதிய இறைநூல் சொன்னவற்றொன்றன்று - இ
ந்தமுத்தித்தன்மை கூடுமெனவுஞ் சஞ்சாரத்தோடே கூடியிருக்கி
றவனையிற்றைவிட்டு நின்றதே நிலையாகக்கொண் டுபசரித்து
வரக்கடவனென்று நீசொன்னது சிவாகமம் மோக்ஷத்துக் கேது
வாயுள்ளவர்கள் சரிக்கவேண்டியமுறைமை பலவழியுஞ் சொல்லு
ம் அவையிற்றிலே யொருவழியுங் கூடப்பட்டதல்ல,... என்னில்
வீடெளிதே - அப்படிச்சரிக்கிறதுதானே முத்திசாதனமென்னி
ன் மோக்ஷத்தையரிதென்று சொல்லவேண்டுவதில்லை, எல்லார்க்
குமெளிதாய்ப் பெற்றுவிடலாமென்றுசொல். இதன்றியும்,...தா
னறிவழியே தலைப்பொருள்பிடித்து - ஆசாரியர் கற்பித்தவழியே
யொழுங்கில்வாராமல் தன்னுடைய போதத்திற்குத் தோன்றின
வழியே தலைபானவழியாகப்பிடித்து,... மேனிகழ்பலமும் வீடெளி
த்திடுமே - அந்தவழியே யொழுகிவர வதனாலுண்டாகிய பலமும்
வீட்டின்பத்தைத் தருமேல்,—நிலையாக்கருதி நிலையில்லாமைக்கு
ச்சாக்ஷியான தேகாதிபிரபஞ்சத்தை நிலை நிற்குமென்றுகருதி—
புலைபாடுதலு முலகாயிதன்பொருள் - செய்யாத காரியத்தைச் செ
ய்துகொண்டுவருகிற துலகாயிதன்கொள்ளும் பொருளாமொழிக்
து சைவர்கொள்ளும் பொருளல்ல, குட்டியன்றி நற்கோலமெ
ழுதத விட்டமதாயில் - சுவரில்லாமற் சித்திரமெழுதுகிற தொரு
வருக்குங்கூடாதது உனக்கிஷ்டமா யிருக்குமாயின்,— கருவியுமி
டங்களுங் கருத்துறவுரைக்க - தனுகரண புவனபோகங்க ளான்
மாவிற்கேயென்று சாத்திரஞ்சொல்லுமிடத்து,—தெரித்திடு மதித
த்து. அநுவயம். அதிதத்துதெரித்திடும் - சிவன்விசுவா தீதனாயி
ருக்கையினாலே யவனுக்கிவை வேண்டுவதில்லை இவையெல்லா
மான்மாவிற்கு வேண்டியிருக்கையிலே யான்மாவிற்கில்லைஇவை
யந்தரத்தே நிற்குமென் றுன்னுடையபோத மென்றுங் கூசாயனி

னைந்துச்சொல்லிடும், இதன்றியும்,—அறிவொன் றில்லோர்க்கி
றையருளுதவுதல் - சற்றுமறிவில்லாத வான்மாக்களுக்குக்கர்த்தா
வினுடைய வருளறிவைக் கொடுக்குமென்றாய் அவ்வணமனுசெய்
தல்.-பிறிவறிவரியச் செறியிருளிடத்து - ஒருகாற்று நீக்கங்காணும
ற்செறிந்த விருளிடத்திலேயிருக்கிற,—ஒருகர்காணவந்தோமெ
ய்மை நீயிருக்காணமே றுமென் றுக்கெடுத்தோர்தீபங்கொடுத்
ததையொக்கும் - அந்தகரைக்காணவந்த வொருவர்விளக்கை
க்கொண்டுவந்து கண்டுக்கவிளக்கையந்தகர்கையிலே கொடுத்தெ
ன்னை நீயிருக்காணவேண்டுமென்று சொல்லுமவரை யந்தகர்க
ண்டாரென்கிறதற்கொக்கும் அறிவில்லாத வான்மாக்களுக்குக்க
ர்த்தா வறிவைக்கொடுக்க வந்ததென்றும் நீசொன்னது,...இச்செய
ற்கிறைவன் கொச்சயனன்றே - அறிவில்லாத வான்மாவிற்குத்த
ன்னுடைய வருளைக்கொண்டறியக்கொடுத்தா னென்கிறதுக
ர்த்தாவு மித்தவான்மாவைப்போல வறிவில்லாதவ னுகவேண்டும்.
இதன்றியும்,—கருவியசத்தம் தெரிவுறக்காண வேண்டுன னிலரா
ல் - கருவிகளைக்கொண்டு தேகாதிபிரபஞ்சத்தை நன்றாகக்காண்
கிறகாசுவியைய சிவஞானிகளொருவரு மதனைவேண்டி யிருப்பாரி
ல்லை அப்படியிருக்கையிலே - கண்டவிவையாவுஞ் சிவமேயென்று
செப்பினை - இவ்விடத்துக் கருவிகளைக்கொண்டறியு மறிவெல்
லாஞ் சிவமேயென்று நீசொன்றாய்,—அவமுறுபொறிபுல னறியா
- இந்திரியங்கள் ஜடமாகையினாலே விடயங்களை யறிய மாட்டா
து,...அறிவது பிரமமென்றோர்க் குன்போ லிடர்ப்படலிலதே -
எல்லாத்தையுமறிகிறது பரப்பிரமமென்றுசொன்ன மாயாவாதிக்
குமுன்னைப்போலக் குற்றஞ்சொல்லத் தக்கதில்லை அதேதென்
னில் அவன்பிரமத்தையறிவென்றும் பிரபஞ்சத்தை ஜடமென்று
ஞ்சொன்னான். நீயெல்லாத்தையுஞ் சித்தென்றுசொல்லுகையினா
லே குற்றம். இதன்றியும்,...எற்றல் கருவியிருடைதோ டிரண்டும்—
அந்தமாயாவாதி பதினாலுகருவியு முன்றகத்தையுஞ் சொன்னான்
நீயவனினும்பார்க்க வேறிருபத்திரண்டு கருவியும்,...யொத்தனை

ந்தவத்தையும் புகறிரிமலமு மீசனுமுயிரும்பேசினை - சைவரும்
சரித்துக்கொண்டுவருகிற வஞ்சவத்தையு மவர்களாற்சொல்லப்ப_
ட்ட மூன்றுமலமுங் கர்த்தாவு மான்மாவுமென்றென்றுசொன்னாய்
...அஃதொழிந் தொன்றேயாகுமென்றதின்னியல்பு - அவையிற்
றையெல்லாம் விட்டிப்பொழுதெல்லா மத்தச்சிவமொன்றுமேயெ
ன்று நீசொல்லுகிறவியல்பு எத்தோடொக்குமென்றால்,...தாயர்ம
னைவியர் தாதியர் தவ்வையர் - தாயையுந் தன்னுடைய பெண்சா
தியையும் வெள்ளாட்டியையுந் தமக்கையையும், ஆயவரெவரை
யுமோர்மையிற்காணும் - அப்படிச்சொல்லப்பட்ட வெல்லாரை
யும் விடயப்பார்வையாய்ப் பார்க்கும்,...கோகழி தூர்த்தர் கொ
டுந்தொழிற்கே - கோவினுற்கழியுண்டு போர்த்தொழிலைக்கொ
ண்டு அவர்களைக்கண்டு தன்னெல்லையிலே நில்லாமலப்பாற் பட்
டுக்கொண்டுவருகிற தூர்த்தனுடைய கொடுந்தொழிலையொக்கும்..
ஆக மற்றதன்-நீ சொல்லிவந்த ஞானத்தினது தன்மை இப்படித்
வருகைக்கிடக்க,—அருணிலைநன்னிலை யேகாயகனாகிய விறைநி
லை - அருளான்மாக்களை யுபகரித்து நிற்கிறமுறைமையான்மாவி
ற்குத் தனக்கெனவோர் சுதந்தரமில்லாமையா நிற்குமுறைமைகத்
தா சர்வத்திலுநிறைந்து நிற்குமிடத் தொன்றிலுந்தாக்கற்று நிற்கி
றமுறைமையில்லை, யாசமின்மையாகம் விசேடியமாகிலே-அழிவின்றியிரு
க்கிறபாசத்தி சர்வான்மாக்களையும் பந்தித்துநிற்கிற முறைமை,—
இனையவையொன்று நினைவினுமின்றி - இப்படிச்சொல்லப்பட்
டவையொன்று முன்னுடைய நினைவிலுங்கூடவில்லாமல்,... உ
ண்டெனுமுணர்வி, ற் கண்டது கருதில் - ஆன்மாவிற் கறிவில்லை
அறிகிறது சிவனேயென்று நீ காட்டப்பட்டவழிவிலுலே நீ யதா
சாரமாகச்சொன்னதை விசாரிக்கில்,—இழுக்கெனும் புலன்வழி
யொழுக்கமு மதுவாய்க்கொண்டு - இந்திரியவாதனை பொல்லா
தென்றுசொல்லுமிடத் தந்தவிந்திரிய வாதனையை நீயாசாரமாக
க்கொண்டு,—பண்டையி லெண்டருமடங்கு வந்தவர்செய்தத்தை
யையன்றே - பெத்ததிசையிற்செய்து வந்த அநாசாரத்திலும் பார்

க்க முத்தத்திசையி லெட்டுமடன் கராசாரஞ்செய்ய மயக்கத்தை த்தந்த வஞ்ஞானத்தை வெறுக்கிறதல்லது உன்னைவெறுக்க வழக்கில்லை,—புன்மைகளீங்க வுண்மை கேண் மதி-இப்படிக்கொந்தவஞ்ஞான முனக்கு நீங்கத்தக்கதாக நான்சத்திய ஞானத்தைச்சொல்லுகிறேன் அதைபுத்தி பண்ணிக்கேட்பாயாக, எ-று. (மதி-அசை,) (க௫)

நிமித்தகாரணபரிணாமவாதிசங்கற்பநிராகரணமுற்றிற்று

## சைவவாதி சங்கற்பம்.

—()—

அறிவாயறியு மறிவுயிர்கேவலத்
தருவிலனிருளொடும் பிரிவிலனன்னல்
கலைமுதலாக நிலவியகருவிகள்
விளக்கெனவுதவுந் துளக்கறப்பொருந்தி
யிருவினைநுகர்வில் வருவினைசெய்து
மாறிப்பிறந்து வருநெடுங்காலத்
திருண்மலபாகமுஞ் சத்திநிபாதமு
மருவுழியருளுருமன்னவனணைந்து
செல்கதியாய்ந்து பல்பிணிபடுத்திக்
கருவியுமலமும் பிரிவுறப்பிரியா
ஞானநல்கலுந் தானதுநோக்கித்
தன்னையுமதனையுந் தன்முதற்பொருளையு
மின்னவென்றறியா விருவருமுயங்கி
யொன்றாயுறுபயனுவப்பு
மின்றாய்நிற்கு மிதுசிவகதியே.

(இ-ள்) அறிவாயறிவு மறிவுயிர் = அநாதியே சகலத்திலறிவாயறிந்து கொண்டுவருகிற வறிவாயிருக்குமான்மா,— கேவலத்

தறிவில னிருளொடும் பிரிவிலன் - கேவலாவத்தையிலே யொன்றையுமறியான் அறிவில்லாம லவ்விடத் தாணவமலத்தையும் விட்டுநீங்கான்,—அண்ணல் கலைமுதலாக நிலவிய கருவிகள் விளக்கெனவுதவும் - இப்படிக்கேவலப் பட்டுக்கிடக்கிறவவசரத்திலே யான்மாவிற்குக் கர்த்தாவானவர் கலைமுதலான தத்துவங்களைக்கண்ணுக்குக் காட்டான விளக்கினது தன்மைபோலக் காட்டாகக்கூட்டுவன்;...துளக்கறப்பொருந்தி யிருவினைநுகர்வில் வருவினைசெய்து - அந்தக்கருவிகளோடு மசைவறக்கூடிப் பிராரத்தகன்மமான புண்ணியபாவங்களைப்புசித்துவருமிடத் தாகாமியத்தையார்ஜித்துக் கொள்ளும்.—மாறிப்பிறந்துமரு நெடுங்காலத்து-இந்தக்கன்மத்துக்கீடாக நெடுங்காலமச்சுமாறிப்பிறந்துவருமிடத்துச் சிவபுண்ணிய முண்டாய் அதனாலே,—இருண்மலபாகமுஞ் சத்திநிபாதமுமருவுழி - மலபரிபாகமுஞ் சத்திநிபாதமும்பொருந்தினவிடத்து,(இதுபெத்தம்.)(மேன்முத்தி.)—அருளுருமன்னவ னணைந்து - அருளேதிருமேனியாகிய கர்த்தாவாசாரியமூர்த்தமாகவந்து,—செல்கதியாய்ந்து பல்பணிபடுத்தி - இவன்பொருந்தப்பட்டமோக்ஷத்திற்கேதுவையாராய்ந்து பல்பணியாகியசரியைகிரியாயோகங்களிலே நிறுத்தி — கருவியுமலமும்பிரிவுறப் பிரியாஞானநல்கலும் - அந்தச் சரியைகிரியாயோகங்களை முற்றச்செய்கையினாலே கேவலசகல மிரண்டையுநீக்கி யநாதியே யிவனையுபகரித்துக்கொண்டு வருகிறவுண்மை ஞானத்தைக்கொடுப்பன். அப்படிச்செய்த மாத்திரத்திலே,—தானதுநோக்கித் தன்னையுமதனை தன்முதற்பொருளையும் - இந்தவான்மா வுண்மை ஞானத்தைத்தெரிசித்து ஞானருவாகியதன்னையும் ஞானமாகிய வுண்மைஞானத்தையும் பத்தஞானத்திற்கு முதலாயுள்ளஞேயத்தையுமிந்தமூன்றுமுதலையும்,—இன்னவென்றறியா விருவருமுயங்கி - அவ்விடத்திற் சுட்டியறியாமலிந்தவான்மாவுஞ் சிவமுந்தம்மிலே கூடி,—ஒன்றா யுறுபய னுவப்புமின்றாய் நிற்குமிதுசிவகதியே - இரண்டுமொருமுதலாகி யவ்விடத்துற்ற தொருபயனும் பிரியமு

மிரண்டு மில்லையாயிருக்கிற வவஸ்தைத்தைச் சிவசாயுச்சிய மென்று சொல்லப்படுவது, எ-று, (௧௭)

சைவவாதி சங்கற்ப-முற்றிற்று.

---

## சைவவாதி சங்கற்ப நிராகரணம்.

இதுகதியாக முதலறிவுயிரேற்
பொறிபுலனீங்க வறிவுயிரன்றே
யடைகாயநூறி னிடைசேர்சிவப்பென
விந்தியத்தொகையின் வந்தறிவொன்றின்
றின்றுமென்ற லன்றேயெந்தை
யறிவிலனதிதச் செறிவிலென்றுரைத்த
நின்மொழிவிரோதமும் பின்முன் மலைவு
மன்வயினிகழா மலமிருணிறையொளி
யான்மாவிளக்கிற் றருமருட்கலாதிக
ளீனமிலிவனிடத் தெவ்வாறிசைந்தன
விசைந்ததாயினு மிசையாதாயினு
மசைந்திடுமுத்தி சாதகமவமே
சத்திநிபாதமோ தருமலபாகமோ
வுய்த்தகாரண காரியமோதுக
பாகங்காரணமாகின் மற்றது
காலாவதியிற்காயாவதியின்
மேலாமென்னும் வினையுறுமவதியிற்
றுயரெனவுயிர்க்குத் தோன்றிடுமவதியி
னயமிகுமிறைவ னல்கிடுமவதியி
லேதிற்கூடு மோதுகவிருவினை
யொத்துவெல்லையில் வைத்தனரென்னி
லருவினைதாக்க வருவினைநில்லா

வொருவினைபுரிகா லிருவினையாகா
வொப்புறுமாறு செப்புகதேசிக
னருளுருவென்ற பொருளினையாயின்
மாயாவுருவன் மாயாவுருவினை
யேயானேய்ந்தவ ரெம்மனோரே
பல்பணிஞான் காரணமென்னிற்
றொல்பணிதொறும்பயன் றொடுப்பதனாலு
மொருபணிசெய்யாச் சிரபுரச்சிறுவரு
மரசராய தருணைத்தலைவரு
முதிர்பர சமயத்திதமுறுமரசரு
ஞானம்பெற்ற நன்மையினாலு
மினமில்பணியருட் கேதுவன்றென்றான்
ஞானோற்பத்தி நிமித்தமித்தொழிலென
வேறோர்கிறைநூ வியம்பிற்றென்றாங்
கருவியுமலமும் பிரிவுறவருடரு
மென்றனைகேவலத் தேதுமறிவின்
றன்றியசகலத் தருணிலைதோன்று
வெவ்வவத்தையி லிறையருள்பெறுகுவம்
செவ்வியஞான தரிசமாவது
நால்வகைமாயைப் பால்வருஞானம்
பண்டைஞான மிதுவறிதாவரக்
கண்டஞான மிதுவாக்காணி
லீனஞானிக ளென்போர்யாருமின்
ஞானவேற்றுமை நாடலுமரிதே
தானுஞானமுந் தலைவனுமென்றனை
யானபினிவனு மிவனதுஞானமும்
பாசமும்பாச ஞானமுமென்றிவை
பேசவொன்றாப் பெற்றியவாகலின்
மும்மைப்பொருட்கு மும்மைத்தன்மை

செம்மைத்தென்னிற் செலவுநெறியுநாக
விருவருக்கூடி யொருப்பயனாய்த்தென்
றருளினையிவ்வா றபேதிகணிலையே
பதிபசுபாச முதிரறிவுகளுட
னுறுமுன்னர்க் கூறுப்பின்னை
யிருபொருணித்துமற் றொருகால்வகையு
மீனமில்ஞாதுரு ஞானஞேயமென்
றிசையமூன்றுப் பசுபதியென்றவற்
றிரண்டாயிரண்டு மொன்றிரென்றாகத்
திரண்டாம்பயனெனுந் திருவருடெளிவிற்
சென்றுசென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந்தொன்று
மென்றிறைமையற்கை யியம்புதற்குமே
யொன்றுமென்ற லன்றியுமுவப்பு
மின்றுமென்ற லென்பயனியம்புக
வென்றனைவிருவு மியாவும்விளங்க
வென்றிகொள்கருத்தின் விரும்பினையாயி
னதிக்கரையானனக் கொதித்தலமாந்து
வெண்ணெயம்பதிதிகழ் மெய்கண்டவனரு
ளுண்ணிலையுடையோ னொருவனுரைத்த
தவப்பிரகாசத் தன்மையில்விரித்த
சிவப்பிரகாசச் செழுந்தமிழுண்மையை
யருளுடனாய்ந்து கொள்ளத்
திருவருள்வினவுறிருந்திமொழிந்தே,

(இ-ள்.) இதுகதியாக முதலெடுவுயிரேல் - நீயிப்பொழுது சொல்லிமுடிந்தவிது முத்தியாகட்டும் அதுபின்பு சொல்லுகிறோம் ஆன்மாவநாதியிலே யறிவாயிருக்குமாயின்,...பொறிபுல னிங்க வறி வுபிரன்றே - இந்திரியங்களு மதனுலறியப்பட்ட விடயங்களு நீங்கினவிடத் தான்மாவிற்கறியும் பகுதியுண்டாமோ அவ்வி

ந்திரியங்கள் கூடினபொழுதறிந்து மவைநீங்கினபொழு தறியா மையுமாயிருப்ப தான்மாவிற்குள்ள சுபாவமென்று நீ-சொல்லில்,—அடை காய் நூறினிடைசேர் சிவப்பென பாக்கு வெற்றிலை சுண்ணாம்பு கூடி மத்திதத்விடத்திலே யவையிற்றினது தன்மையின்றி நடுவேயொரு சிவப்பெழுந்தாற்போல,— இந்தியத் தொகையின்வந் தறிவொன்று நின்றின்றுமென்ற லன்றே யென்னை- இந்திரியங்களினுடைய கூட்டத்தினடுவே யோரறிவுதோன்றியுடனேயழியுமென்று கணபங்கஞ்சொல்லுகிற புத்தனாமே யப்பா நீ யீதன்றியும்,—அறிவில வனீதச்செறிவிலென் றுரைத்த - அறிவாயறிந்துவருகிறவான்மாவிற்கு மலத்தினாலே நெருங்கியிருக்கிற வனீதத்தானத்திலறிவில்லையென்றுசொன்ன,—நின் மொழிவிரோதமும் பின்முன்மலைவு மன்வயி னிகழா - உன்னுடையசொல்விரோதமுமொருக்காலறிவில்லையென்று மொருக்காலறிவென்று நீ முன்னொடுபின்மலையச்சொன்ன விலைவு நிலைபெற்ற நல்லோர்களுடைய கூட்டத்தினிடத்துஞ் சொல்லிக்கொள்ளப்படாது. இதன்றியும்,— மல மிருள் - ஆணவமலமோவென்றால் சத்தவிருளாயிருப்பதொன்று... இறையொளி - கர்த்தாதானோவென்னின் மகாபிரகாசமாயிருப்பானொருத்தன்,...ஆன்மா விளக்கிற்றகுமருட்கலாதிகள்-ஆன்மாவிற்குத்தான் விளக்கைபோலே காட்டாயுள்ள கலைமுதலானதத்துவங்களு மாயாகாரியமாயிருக்கையினாலேமயக்கமாயிருப்பதொன்று. ஆகையாலந்தக்கருவிகள் - ஈனமில்வனிடத்தெவ்வாறிசைந்தன-இருளாயிருக்கிறகேவலத்தானத்திலேயறிவின்றியிருக்கிற வான்மாவிற்கு மகாபிரகாசமாயிருக்கிற கருவிகள் சென்றுபொருந்தினபடியெப்படி;...இசைந்தாயினு மிசையாதாயினும்-அந்தக்கருவிகள் கூடியறிந்தாலும் அந்தக்கருவிகள் கூடாமற்கேவலத்திலே கிடந்தாலும்போகட்டும்,...அசைந்திடு முத்திசாதனவமே நீநிலைநிற்கமாட்டாமல் முத்திசாதனஞ்சொன்னது மிகவுநன்றாயிருந்ததில்லை. (இதுபெத்தத்தைமறுத்தது.) (மேன்முத்தியைமறுக்கிறார்,)... சத்திநிபாதமோ தருமலபாகமோவுய்த்த

காரண்காரிய மோதுக-முன்னேயிருண்மலபாகமுஞ் சத்திநிபாத
முமருவழியென்றாய் அதிற்சத்திநிபாதங்காரணமாக மலபரிபாக
முண்டாயினதோ மலபரிபாகங்காரணமாகச் சத்திநிபாதமுண்
டாயினதோ இவையிற்றிற்செலுத்தப்பட்டகாரணகாரியமியாதெ
ன்றுசொல்லுவாயாக.... பாகங்காரணமாகின் - மலபாகங்கார
ணமாகச் சத்திநிபாதமுண்டாயிற்றென்னின்,...மற்றது காலாவ
தியிற் காலாவதியின்-அந்தமலபாகமென்றுசொன்னது எண்ணி
றந்த சரீரமெடுத்துப்போட்டு வருகிறதற்குள்ளே யின்னசரீரத்தி
லே முத்தியென்றிருக்குமோ வந்தச்சரீரத்தினுடைய வெல்லையி
லே யெண்ணிறந்த காலஞ்செல்லுகையிலே யதிலே யின்னகால
த்திலே யிவனுக்கு முத்தியென்றிருக்குமோ,மேலாமென்னும் வி
னைபுறுமவதியில்-அந்தக்காலத்தினெல்லையிலே யொன்றுக்கொன்
றுமேலாகவருகிற புண்ணியபாவங்களிரண்டுந்துலையொப்புவந்த
வெல்லையிலேயோ,... தூயரெனவுயிர்க்குத் தோன்றிடு மவதியில் -
எண்ணிறந்தகாலம் பிறந்திறந்துவருகிற வான்மாவிற்கு ஜநநந்து
க்கமென்று தோன்றின வெல்லையிலேயோ,...நயமிகுமிறைவனவ
ணிடு மவதியிலேதிற்கூடு மோதுக-ஆன்மாக்கள்பேரிலே மிகவும்
பிரியத்தையுடைய கர்த்தா அவனை யின்னவவதரத்திலே யிரக்ஷி
ப்பனென்றுண்டே யந்தவெல்லையோ இவையிற்றுளெந்தவவதர
த்திலே கூடுமென்று சொல்லுவீராக... இருவினையொத்த வெல்
லையில்வைத்தன ரென்னில் - புண்ணியபாவ மிரண்டுந்துலையொ
த்தவவதரத்தில் மலபாகமுண்டாமென்று பெரியோர்கள் சொல்
லுவார்களென்று நீசொல்லில்,...அருவினை யாக்க மருவினை யில்
லா - கன்மமருவாயிருக்கையினாலே புண்ணியமொரு தட்டிலும்
பாவமொரு தட்டிலும்போட் டிரண்டுமொத்ததோவென்று தூ
க்கிப்பார்க்கைக்கு உருவாகக்காணப்படாது, இதன்றியும்,... ஒரு
வினைபுரிகா லிருவினையாகா - ஒருபுண்ணியத்தைச் செய்யுமிடத்
துப் பாவம்பாதியாகப் பகுத்ததில்லாது ஒருபாவத்தைச்செய்யுமி
டத்துப் புண்ணியம்பாதியாகப் பகுத்தது மில்லாது புண்ணியம்பு

ண்ணியமாகவும் பாவம் பாவமாகவும்வரும்,—ஒப்புறுமாறுசெப்பு
க - புண்ணியம் பாவமிரண்டுந் துலையொக்கிறபடி யெப்படியெ
ன்று நீர்சொல்லவேண்டும். இதன்றியும்,... தேசிகனருளுருவென்
றபொருளினையாயின்-ஆசாரியனுடைய வடிவு அருள்வடிவாயிரு
க்குமென்று நீசொன்னதனுடைய வர்த்தத்தை விசாரிக்குமிடத்து
...மாயாவுருவன் மாயாவுருவினையேயான் - அழியாத் திருமேனி
யினையுடைய கர்த்தா வழிந்துபோகிற மாயாசரீரத்தைப் பொருந்
தான். அப்படியன்றுகாணும் ஆன்மாக்களை யிரக்ஷிக்கைப் பொ
ருட்டாகப் பொருந்தவெனன்று சொல்லில்,— எய்ந்தவ ரெம்ம
னோரை-யொருத்தர் மாயாசரீரத்தைப் பொருந்தினவர்க ளெ
ம்மைப்போல வான்மவர்க்கத்திலே யொருத்தர், அதனையொ
ழித்து வேறென்றாகச்சொல்லப்படாது. இதன்றியும்,—பல்பணி
ஞானகாரணமென்னில் - பல்பணியாகச்சொல்லப்பட்ட சரிதை
கிரியாயோகங்களைச் செய்வது காரணமாக ஞானமுண்டாமென்னி
ல்,—தொல்பணிதொறும் பயன்றெருடப்படுதலும் - பழையதாக
ச்சொல்லப்பட்டுவருகிற சரிதைகிரியா யோகங்களைச்செய்வதுகா
ரணமாகச் சாலோகசாமீப சாரூபங்களுண்டாயநுபவித்துப்போ
மென்பது இருவாக்குச்சொல்லி யிருக்கையினாலும்,— ஒருபணி
செய்யாச் சிரபுரச்சிறுவனும் - ஒருதொழிலுஞ் செய்யாத சீகாழித்
தலைவராய் திருஞானசம்பந்தரும்,—அரசராய தருவைத்தலைவரும்
- இராஜகுமாரராகிய வாலிபத்திற்கெல்லாந் தலைவராகிய சுந்தர
ப்பெருமானாயனாரும்,—முதிர்பரசமயத் திருமுனைவரும் - மிக்
கவமணசமயத்திலேநின் றவையிற்றைச் சமயமல்லவென்றுசைவ
சமயமேசமயமென்றறுதி யிட்டுவந்த திருநாவுக்கரையரும்,— ஞான
ம்பெற்ற நன்மையினாலு மிப்பணியருட்கேதுவன்று - குற்ற
மற்றிருக்கிற சரிதை கிரியாயோகங்களென்னுந்தொழில்களைச்செ
ய்யாமல் ஞானத்திற்குக்காரணம் பதியேயல்ல தவை காரணமெ
ன்றுசொல்லப்படாது,-என்றால் - அல்லவென்று சொல்லி யிருக்
கையிலே நீயுள்ளதென்று சொல்வதென் ஞானோற்பத்தி நிமித்த

மித்தோலென-ஞானவுற்பத்தி நிமித்தமித் தொழிலென்று,—
ஞோர்க்கிறை நூலியம்பிற்றென்னும் - உன்னையொழிந் தன்றே
ரெல்லார்க்குங்கர்த்தா நூல்களிலே யருளிச்செய்து வைத்திரு
ஞானத்தைப்பெறுதற்கு நிமித்தமன்றி ஞானங் கொடுப்பதற்கு
சரிதைமுதலாகியது நீகாரணமென்ற தென்னமாய்முடியும். (
ன்னவே ஞானம்பெற நிமித்தந் தானாமென்பது கருத்து.) இ,
ன்றியும்,...கருவியுமலமும் பிரிவுற வருட்டருமென்றனை - அவ்வ
இயகருவியு மறியாமையாகிய மலமுநீங்கத்தக்கதாக வருட்பிரக
சமுண்டாமென்று நீசொன்னாய்,...கேவலத்தேதுமறிவிலன்-கே
வலத்தையிலே யான்மாவொன்று மறியாமற்கிடக்கையினாலவ்வ
டத்தருட் பிரகாசமுண்டாகாது,—தன்றியசகலத் தருணிலேதே
ன்று - கருவிகளெனருங்கியிருக்கிற சகலாவத்தையிலு மருட்பிரக
சமுண்டாகாது,—எவ்வவத்தையி லிறையருள்பெறுகுவம் - முன்
சொன்னவிரண்டவ தரத்திலுமருட்பிரகாச முண்டாகாதென்று
ற்பின்னைந்த வவதரத்திலேதான் கர்த்தாவினுடைய திருவருளைப்
பெறுவோம்,—செவ்விய ஞானதரிசனமாவது - மயக்கமற நீதரிசி
த்த ஞானமாவது,— நால்வகைமாயைப்பால் வருஞானம் - தனு
கரணபுவன போகமென்கிற நால்வகையோடுங் கூடியிருக்கிறமா
யையின் பகுதியிலே நின்றறிந்துவருகிற ஞானமெப்பொழுது மு
ள்ள ஞானமாகவேண்டும்,— பண்டைஞான மிதுவறிதாவாக்க
ண்டஞான மிதுவாக்காணில் - இந்தமாயையினாலே யறிந்துவரு
கிறஞான மெப்பொழுதுமுள்ளஞானம் இதுநீங்கத்தக்க தாகவே
வருகிறஞானம் இந்தத்தனுகரணபுவன போகங்களைக்காணப்ப
டின், எனஞானிக ளென்போர் யாருமில் - அஞ்ஞானிகளென்று
சொல்லத்தக்கதாக வொருத்தருமில்லை நீசொன்னவசனத்தினாலே
யெல்லாரு ஞானவான்களாகவேண்டும்,...ஞானவேற்றுமை காட
லுமரிதே - ஞானத்தினுடைய வேறுபாடறியும் பொழுதரிதாயிரு
க்கும். இதன்றியும்,—தானுஞானமுந் தலைவனுமென்றனை-ஆன்
மாவுஞ் சிவஞானமுஞ் சிவமுமென்று மூன்றுகச்சொன்னாய்—அ

னபினிவனு மிவனதுஞானமும் - சிவனுஞ் சிவனுடையஞானமு
மென்கையினலே ஆன்மாவு மான்மாவினுடைய ஞானமும்.—
பாசமும் பாசஞானமுமென் றிவைபேசுவர் - பாசமும் பாசத்தி
னுடைய ஞானமுமென் றிந்தமூன்று முதலிற்கு மூன்றுஞானமு
ண்டென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்,—ஒன்ருப்பெற்றிய
வாகலின் - இதுஒன்ருகாத முறைமையினலே. - மும்மைபொ
ருட்டுமும்மைத்தன்மை செம்மைத்தென்னிற் செலவுகளெழுதுக
இந்தமூன்றுமுதலிற்கு மூன்றுஞானமுள்ள தென்கையா லான்
மாவொன்ருமிடத் தந்தப்பசுஞானமும் பாசஞானமும்போனபடி
யெப்படியென்று சொல்லவேண்டும், இதன்றியும்,... இருவருங்
கூடி யொருபயனைத் தென்றருளினை-ஆன்மாவுஞ் சிவனுங்கூடி
யொருமுதலாயிற் றென்றுசொன்னய்,— இவ்வாற பேதிகணிலே
யே - இப்படிப்பெத்தத்தி லிரண்டாய் முத்தியிலொன்ருயிருக்கு
மென்றுசொல்லுகிறது மாயாவாதியுடைய மதமாயிருக்கும்,...பதி
பசுபாச முதாறிவுகளுடனுரு மூன்னர்க்கூறு - பதிபசு பாசங்க
ளுமவையிற்றினுடைய ஞானங்களு மாறுவகையாக முன் சொல்
லி,—பின்னாிருபொருணீத்து மற்றெருநால்வகையும்- அந்தவா
றினும் பாசமும் பாசஞானமென்ற விரண்டையும்விட்டுப் பின்பு
நால்ாக்கி யந்தநால்வகையும்,—ஈனயில் ஞாதுருஞானஞேயமென்
றிசையமூன்ருய் - இதிலேபசுஞானமொன்றையும்விட்டுக் குற்ற
மில்லாத ஞாதுருஞானஞேயமென்று பொருந்தப்பட்டமூன்ருய்
—பசுபதியென் றவற்றிரண்டாய் - அதிலே ஜீவஞானத்தை நீக்
கியான்மாவென்றுஞ் சிவமென்று மிரண்டாய்,...இரண்டுமொன்
றினென்ருகத் திரண்டாம்பயனெனுந் திருவருடெளியில் - இந்த
விரண்டிலே யான்மாவானதந்தச் சிவனிடத்திலேகூடி யிரண்டு
மொருபயனய் நிற்குமென்று நீசொல்லும் நிர்மலசாக்கிராதிதஇரு
வருட்பகுதியைச் சொல்லுமிடத்து,— சென்று சென்றணுவாய்த்
தேய்ந்து தேய்ந்தொன்ருமென் றிறையியற்கையியம்புத றகும்-தி
ருவாசகத்தில் ''இன்றெனக்கருளி,, என்றதிருவிருத்தத்தில் திரு

வாதவூர்நாயனார் பேரின்பம்வேண்டிக் கத்தாவினுடையதன்
மையையருளிச்செய்தது நீர்சொன்னவத்தந்திற்குத் தகும். (என்ற,
என்னத்தகாதென்பது கருத்து.) (ஒன்றுமல்லவிரண்டுமல்லவெ
ன்றுமிரண்டு மின்றுமல்ல வென்பதுண்மை,) இதன்றியும், ஒ
ன்றுமென்றலன்றியு முவப்பமின்றுமென்று லென்பயன் - பதி
ம்பசுவுமொன்றுமென்று சொன்னதன்றியு மிவ்விடத்தோரின்
றுமதனு லுண்டாகிய பிரியமுமின்றுதலினு லுனக்குப் பிரயோ
ஜனமென்ன (என்னவே பெறுவானில்லையென்பது கருத்து.)—இ
யம்புக - நான்சொன்னவத்தை யல்லவென்று சொன்னீரேயின்
னையிந்தச் சித்தாந்தவத்து மிப்படியிருப்பதென்று நீர்சொல்லுவ
ராக,—என்றனை வினுவுமியாவும்விளங்க வென்றிகொள் கருத்தி
ன்விரும்பினையாயின் - பின்னையெப்படி யிருப்பதென்றென்னை
நீகேழ்க்கிறதாக வுன்னுடைய இடமுறுகருத்திலே விருப்பமுண்
டாயின்.—நதிக்கரையானெனக் கொதித்தலமாந்து - ஆற்றங்க
ரைப்பசுப்போல் அங்காமோ விங்காமோவென்று நீபதறிக்கொ
ண்டுதிரிகிறதெல்லாந் தெரியத்தக்கதைவிட்டு வெண்ணெயம்பதி
திகழ்மெய் கண்டவனரு ளுண்ணிலையுடையோ னொருவனுரைத்
த - திருவெண்ணெய் நல்லூரிலேவிளங்கப்பட்ட மெய்கண்டதே
வனுடைய வநுக்கிரகத்தி லுண்மையைப் பெற்றமறைஞானசம்
பந்தநாயனார் எனக்கருளிச்செய்த வத்தத்தைக்கொண்டு,— தவப்
பிரகாசத்தன்மையில் விரித்த சிவப்பிரகாசச் செழுந்தமிழுண்
மையை - முன்ஜநநத்திலே செய்ததவங்களினது மிகுதிகொண்
டுநான்செய்யப்பட்ட சிவப்பிரகாசமாகிய செழுவியதமிழினுடை
யவத்தத்தை,—அருளுடனாய்ந்து கொள்ள - ஆசாரியருடனேகூ
டியாராய்ந்துகொள்ளவே,—இருவருள்வினை நிருந்திமென்றே

மூலமும்-உரையும்.

பின்னையிந்தத் திருவருளின்பகுதி யெப்படியிருப்பதென்றுக் கேட்ட சந்தேகங்களெல்லா நன்றாயுமக்கு விளங்காநிற்கும். எ-று.

சைவவாதி சங்கற்பநிராகரண-முற்றிற்று.

சங்கற்பநிராகரணமூலமும் - உரையும் - முற்றிற்று.

பாயிரமுட்பட அகவல் - உ௰.

திருச்சிற்றம்பலம்.

---

## தனியன்;

---

சற்றவன்கருணைகூரக் கலந்துயிர்சிவமாய்வாழப்
பற்றவன்பரமேயாகப் பரிவினாற்சிவப்பிரகாசஞ்
சொற்றவன்பொருட்சுபாபக் துலக்கியதூயோன்றுல்லோன்
கொற்றவன்குடியானந்தங் குடிமுழுதாண்டகோவே.

இந்நூலுரையாசிரியர் பெயர் பிரதிகளிற்
காணப்படவில்லை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி

உமாபதிசிவாசாரியரருளிய

# நெஞ்சுவிடுதூது மூலம்.

அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய பதவுரையும்,

இஃது,

காஞ்சிபுரம்

மகாவித்வான்

கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

கா சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கன்னிகைப்பேர்

முருகேச முதலியாரால்

சென்னை

ஸ்ரீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1898 ௵

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# சிறப்புப்பாயிரம்

—()—

வெண்பா.

நெஞ்சுவிடு தூதினுக்கு நேரா முறையொன்று
விஞ்சையுறக் காட்டி விளக்கினான்—கஞ்சனிக
ரட்டாவ தானகலி யாணசுந்த ரக்கவிஞ
னெட்டாமெய்ஞ்ஞானத்தை யேய்ந்து.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சுவிடு தூது

மூலமும் உரையும்.

—()—

* காப்பு.

வேதாந்தஞ் சொற்ற வியனுருவ மூன்றினையுஞ்
சாதாக்கியமைந்திற் சான்றாக்கு-மேதாவா
மஞ்சு முகத்தா னருளு மானை முகத்தா னருளா
னெஞ்சுவிடு தூதுசினை.

(இதன்பொருள்.) வேதாந்தம் - உபநிடதங்கள், சொற்ற - சொல்லிய, வியன் - பெருமைபொருந்திய, உருவமூன்றினையும் - (அருவமுருவமருவுருவமென்னு) மூன்றுருவங்களையும், சாதாக்கியமைந்தில்- (சிவசாதாக்கியம்அமூர்த்திசாதாக்கியம்மூர்த்திசாதாக்கியம் கர்த்திருசாதாக்கியம் கன்மசாதாக்கியம்மென்னும்) ஐந்துசாதாக்கியங்களுள், சான்றாக்கும்-(அருவமானது சிவசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியங்களிலும், உருவமானது கன்மசாதாக்கியம் கர்த்திருசாதாக்கியங்களிலும், அருவுருவமானது மூர்த்திசாதாக்கியத்திலும்) நிலைபெறக்காட்டும், மேதாவாம்- பேரறிஞனும், அஞ்சுமுகத்தான்-(ஈசானம் தற்புருடம் அகோரம்வாமதேவம் சத்தியோசாதமென்னும்)ஐந்துதிருமுகங்களையுடைய சதாசிவனாய

---

* இக்காப்புவெண்பா கொற்றவன்குடி முதலியார் கூறியதன்று; இந்நூலுரையாசிரியர் புரிவிற்சொற்றது.

றார், அருளும் - தந்தருளிய, ஆனைமுகத்தான் - யானைமுகக்கடவுளது; அருளால் - திருவருளாலே, நெஞ்சுவிடுதூது - (கொற்றவன்குடி உமாபதிசிவம் திருவாய்மலர்ந்தருளிய) நெஞ்சுவிடுதூது என்னும் ஞானசாத்திரத்தினை விளை - மனமே தியானம்பண்ணுவாயாக, எ-று.

நூல்.

கலிவெண்பா.

பூமேவு முந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் - தாமேவிப்
பன்றியு மன்னமுமாய்ப் பாரிடந்தும் வான்பறந்து
மென்று மறியா வியல்பினான் —

(இ-ள்.) பூமேவுமுந்தி - தாமரைப்பூவினையொத்த கொப்பூழினைவாய்ந்த, புயல்வண்ணன் - மேகநிறத்தினையுடைய நாராயணமூர்த்தியும், பொற்பமைந்த - அழகுபொருந்திய, நாமேவும் நாவினிடத்தமரும், மாது - சரஸ்வதி, புணர் - சேரும், நான்முகத்தோன் - நான்குமுகங்களைவாய்ந்த பிரமாவும், பன்றியுமன்னமுமாக - முறையே பன்றியும் அன்னமுமாயும், தாமேவி - தாங்கள்வடிவெடுத்து, பாரிடந்தும் - பூமியைக்கீண்டும், வான்பறந்தும் - ஆகாயத்திற்பறந்தும், என்றும் - எக்காலத்திலும், அறியா - அறியவொண்ணாத, இயல்பினான் - தன்மையினையுடையவன்.

அன்றியு
மிந்திரனும் வானோரு மேனோரு மெய்புவியு
மந்தர வெற்பு மதியுடனு - மந்திரமும்
வேதமும் வேத முடிவும்விளை விந்துவுட
னாதமுங் காணா நலத்தினான் —

(இ-ள்.) அன்றியும் - அல்லாமலும், இந்திரனும் - தேவேந்திரனும், வானோரும் - தேவர்களும், ஏனோரும் - மற்றையோரும்,

எப்புவியும் - எந்தவுலகத்தவரும், மந்தரவெற்பும் - மந்தரமலைமுதலிய மலைகளும், மறி - அலைமடங்கும், கடலும் - சமுத்திரவாசிகளும், மந்திரமும் - சப்தகோடிமகாமந்திரங்களும், வேதமும் - நான்கு வேதங்களும், வேதமுடிவும் - முப்பத்திரண்டு உபநிடதங்களும் விளைவிந்துவுடன் - சுத்தமாயையிலுண்டாகிய விந்துவுடன், நாதமும் - அம்மாயையின் காரியமாகிய நாதமும், காணு - இவைகளால் காணப்படாத, நலத்திறன் - நன்மையையுடையவன்,

ஓத

அரியா னெளியா னளவிறந்து நின்ற
பெரியான் சிறியானெம் பெண்பாகன் —

(இ-ள்,) ஓத - எடுத்துச்சொல்ல, அரியான் - (உழுவலன்பின்றலைப்படாத அயன்முதலியதேவர்கட்கு.) அருமையானவன் எளியான் -(அன்பின்றலைப்பட்ட அடியருக்கு) எளிமையானவன், அளவிறந்து - (வைகரியாதி நால்விதவாக்கின் பகுதியவாகிய வேதமுதல் நாதமீறானவைகளுக்கு அதீதமாய்ச் சுட்டுணர்வுக்கெட்டாது யாங்கணும் பிரிவின்றி சமவேதமாய் நின்ற) வியாபகமாய், நின்ற - எழுந்தருளிய, பெரியான் - (அளவின்றிப்பரந்த அண்டங்கள்யாவும் தன்னுள்வியாப்பியமாகத் தான்வியாபகமாயெங்குநிறைந்துநின்ற) பெரியவன், சிறியான் - (மலபாகம்வருவித்தருளுதற்பொருட்டு அணுக்களாகிய உயிர்கட்குள்ளிருந்து அதிசூக்கும ஐந்தொழில்நடத்தும்) சிறியவன், பெண்பாகன் - (நிஷ்களசிவம் ஆன்மாக்களின் பேரந்தகாரமாகிய ஆணவத்தை நீக்கும்பொருட்டும் ஆகமங்களைக் குருசந்தானத்தில் வைக்கும்பொருட்டும் அறுவகைச்சமயத்த வருமவரவர் தியானவண்ணம் அருளுதற்பொருட்டும் அருள்வடிவாகிய சத்தியின்வழியேசங்கற்பித்துநின்ற) அம்மையாரை வாமபாகத்திலுடையவன்,

தெரியா

வருவா னுருவா னருவுருவு மில்லான்
மரியான் மரிப்பார் மனத்தான்—

(இ-ள்) தெரியா - ஒருவராலுமறியப்படாத; அருவான் - (சிவம் சத்தி நாதம் விந்து என) அருவமானவன், உருவான் - (மகேச்சுரன் உருத்திரன் திருமால்அயன் என) உருவமானவன், அருவுருவம்-(சதாசிவமென்னும்) அருவுருவமாகி, இல்லான் - (நவந்தருபேதமுநாடக மாத்திரையானடிக்கும்) இவையாவுமில்லாதவன், மரியான் - இறவாதவன், மரிப்பார் - இறக்கும்பிரம விஷ்ணுக்களுடைய; மனத்தான் - மனத்திலிருப்பவன்,

பரிவான

மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினான்
பொய்யர்க்குப் பொய்யாய்ப் பொய்யாயினான்—

(இ-ள்.) பரிவான - பக்குவப்பட்ட, மெய்யர்க்கு - உண்மையடியார்க்கு, மெய்யன் - உண்மையாய் விளங்குபவன், வினைக்கு - பிரபஞ்சகாரியங்கட்கு, வினையாயினான் - நிமித்தகாரணனாயினான், பொய்யர்க்கு - உண்மையில்லார்க்கு, பொய்யாய் - இன்மையாய், பொய்யாயினான் - தோன்றுதவனுவான்.

ஐயன்

படநாகம் பூண்ட பரமன் பசுவி
னிடமாய் நிறைந்த விறைவன்—

(இ-ள்,) ஐயன் - சர்வான்மாக்களுக்கும்பிதாவானவன், படநாகம் (தாருகாவனத்தர் விசாரவோமத்துண்டாக்கியேவிய) படங்களோடுங்கூடியபாம்புகளை, பூண்ட - ஆபரணங்களாகத்தரித்த, பரமன் மேலானவன், பசுவின் - எண்ணிறந்தவான்மகோடிகளின், இடமாய் - இடமாகி, நிறைந்த - பூரணமாய்த்தங்கிய, இறைவன் - கடவுள்.

சுடரொளியா
னென்றுமுள னன்றளவு மியானு முளனாகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற்—

(இ-ள்) சுடரொளியான் - சோமசூரியாக்கினி சொரூபனாயு ள்ளவன், என்றுமுளன் - இத்தகையமுதல்வன் எக்காலத்துமுள்ள னே, அன்றளவும் - அக்காலமுதல், யானும் - பசுவாகிய நானும், உளனாகி, இருப்பவனாகி, நின்றநிலையில் - ஆன்மாவினது உண்மை ச்சொரூபமாயுள்ள தன்மையில், தரித்து-நிலைபெற்று, நில்லாமல்-வாழாமல்,

சென்றுசென்று
தோற்றியிடும்அண்டஞ்சுவேதசங்கண் மண்ணின்மேற்
சாற்றுமுற் பீசஞ் சராயுசங்கட்-கேற்றபிறப்
பெல்லாம் பிறந்து மிறந்து மிருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன்—

(இ-ள்.) சென்றுசென்று - படைப்புகடோறும் போய்ப்போய், தோற்றியிடும்-முதல்வனாலுண்டாக்கப்பட்டு, மண்ணின் மேல் - பூமியின்மீது, சாற்றும் - சொல்லும்-அண்டம் - முட்டையிற்றோ ன்றுவன, சுவேதசங்கள் - வியர்வையிற்றோன்றுவன, உற்பீசம் - விதையிற்றோன்றுவன, சராயசங்கட்கு-கருவிற்றோன்றுவனவாகி யவிவைகட்கு, ஏற்ற-சம்பந்தமாகிய, பிறப்பெல்லாம் - எழுவகை ப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிரயோனிகடோறும், பிறந்தும் சனித்தும், இறந்தும்-மறுபடிமரித்தும், இருவினையின்-அந்தந்தச் சென்மங்கடோறும்உண்டான புண்ணியபாவங்களின், பொல்லா ங்கு - தீமையை, துய்க்கு-அனுபவிக்கும், பொறியிலியேன் - அ றிவிலியேன்.

கல்லா
வுணர்வின் மிசையோ டெலகாயிதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு—

(இ-ள்.) கல்லா-படிக்கவொண்ணாக் கல்லாதும்: உணர்வின், பாசவறி வினால், மிசையோடு - மிகுந்தநிகரித்த, உலகாயிதனை-சாருவாக னை, புணர்வதொரு - கலந்ததொரு, புல்லறிவு-சிற்றறிவு, பூண்டு கொண்டு.

கணையிற்

கொடிதெனவே சென்று குடிபழுதே செய்து
கடிய கொலைகளவு காமம்-படியின்மிசை
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி யிடையு மனந்தனக்கு—

(இ-ள்.) கணையின்-அம்பினைக்காட்டிலும், கொடிதெனவே-கொடுமையாகவே, சென்று-வேகமாகப்போய், குடிபழுதேசெய் து - பிறனில்விழைந்து, கடிய - அச்சமான, கொலை-பிறவுயிரை க்கொல்லல், களவு-திருடல், காமம்- அன்னியமாதர் மேலிச்சை முதலியன, படியின்மிசை - இவ்வுலகில், தேடியுழன்று - முயன் று திரிந்து, தெரிவை-முதல்வனதிருவருளை, தெரியாமல் -நாடா மல், வாடி-சோம்பி, இடையும் - சோர்தலையடையும், மனந்தனை க்கு (கருவிகளிற்றலைமையாய்) மனத்துக்கு.

நாடியது

போன வழியோடும் புந்திக்கும் புந்தியுட
னான திறலா ரகந்தைக்கும்—

(இ-ள்) நாடி - மனமானது விடயங்களைப்பற்றி, அது- அம் மனம், போனவழியோடும் - சென்றவிதத்திலே செல்லும், புந்தி க்கும்-ஒன்றை நிச்சயம்பண்ணும் புத்திக்கும், புந்தியுடன்-அப் புந்தியுடன், ஆன - பொருந்திய, திறலார், வல்லமை பொருந்தி ய, அகந்தைக்கும் - சித்தத்திற்கும்,

மேனி

பயா வயா வழிய வழியு
முயிரின் றுயா முணாயேன்

(இ-ள்,) மேனி-தேகமானது, அயர அயர - நாளுக்கு நா ளாகதளர; அழிய அழியும் - அக்கருவிகளுடன் அம்மேனியழி ம்போது, உயிரினை - ஆன்மாவின் துயரம் - அக்காலத்து டாகுந் துன்பத்தினை, உரையேன் - இவ்வளவெனக் கூறேன்

வயிரமே

கொண்டதொருகாமனுக்குங் கோபனுக்குமோகனுக் மண்டு மதமாச் சரியனுக்கும்—

(இ-ள்,) வயிரமே விரோதமே, கொண்டதொரு, பெற் தொரு, காமனுக்கும் ஆசையென்பவனுக்கும், கோபனுக்கும் சிறிதுஞ்சாந்தமில்லாத கோபமென்பவனுக்கும், மோகனுக்கு நன்மைதீமை பகுத்தறியாது மயக்கஞ்செய்யும் மோகனென்ப —னுக்கும், மண்டு - மிகுந்த, மதம் - செருக்கினையுடைய, மாச்ச யனுக்கும் - பொறாமையனுக்கும்,

திண்டிறல்சே

ரிந்திரியம் பத்துக்கு மீரைந்து மாத்திரைக்கு மந்தமிலாப் பூதங்க ளைந்தினுக்கும்—

(இ-ள்,) திண்டிறல்சேர், வல்லமையே வெற்றியாக் வுடைய இந்திரியம் பத்துக்கும் மெய் வாய் கண் மூக்கு செவியாகிய ஞா னேந்திரியமைந்து வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தமாகியக ன்மேந்திரியமைந்து ஆக பத்துக்கும், ஈரைந்து மாத்திரைக்கும் சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் வசனம் கமனம் தானம் விசர்க் கம் ஆனந்தமாகிய பத்துக்கும், அந்தமிலா - முடிவில்லாத, பூதங் களைந்தினுக்கும் பிரிதிவு அப்பு தேயு வாயு ஆகாயமாகியவைந்து க்கும்,

சிந்தைகவர்

மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றுமல மூன்றவத்தை யென்றுநின்று செய்யு மிருவினைக்கும்—

